***மலைவளர்சந் தனமகிலும் தேக்கும் உந்தி மலர்ப்பிறங்கல்***
***வண்டிரைப்பச் சுமந்து பொங்கி,***
***அலைபெருகி ஆள்இயங்கா வண்ணம் ஆறு பெருகுதலால்***
***அத்துறையில் அணையும் ஓடம்,***
***நிலைபுரியும் ஓடக் கோல் நிலையி லாமை நீர்வாழ்நர் கரையின்கண்***
***நிறுத்திப் போகக்,***
***கலைபயிலுங் கவுணியர்கோன் அதனைக் கண்(டு)அக் கரையின்கண்***
***எழுந்தருளி நின்ற காலை. 897***

(இ - ள்.) மலைகளில் வளர்கின்ற சந்தனமரங்களையும் அகில் மரங்களையுந் தேக்க மரங்களையும் (அலைக் கரங்களால்) தள்ளிக் கொண்டு, வண்டுகள் சப்திக்க மலர்க்கு வரவு செய்யாதபடி (காவிரியின் கிளையாகிய குடமுருட்டியென்னும்) நதி பெருகுதலால், அந்நதித் துறையிலிருக்கும் ஓடங்களை நிலைக்கச் செய்யும் ஓடக்கோல்கள் (நீர்ப் பெருக்கினால்) நிலையாமையால் ஓடக்காரர்கள் அவ்வோடங்களைக் கரையில் நிறுத்தி விட்டுப்போக, அதனை வேதாகம முதலிய சகல சாஸ்திரங்களையு மோதாதுணரர்ந்த திருஞானசம்பந்தப் பிள்ளையார் பார்த்தருளி, அந்நதிக்கரையி லெழுந்தருளி நின்றபொழுது. - எ - று.

***தேவர்பிரான் அமர்ந்ததிருக் கொள்ளம் பூதூர் எதிர்தோன்றத்***
***திருவுள்ளம் பணியச் சென்று,***
***மேவுதலால் ஓடங்கள் விடுவார் இன்றி ஒழிந்திடவும் மிக்கதோர்***
***விரைவால் சண்பைக்,***
***காவலனார் ஓடத்தின் கட்ட விழ்த்துக் கண்ணுதலான்***
***திருத்தொண்டர் தம்மை ஏற்றி,***
***நாவலமே கோலாக அதன்மேல் நின்று நம்பர்தமைக் "கொட்டம்" என***
***நவின்று பாட, 898***

(இ - ள்.) தேவர்கள் நாயகராகிய சிவபெருமானெழுந் தருளிய திருக்கொள்ளம்பூதூரென்னும் க்ஷேத்திரமானது எதிரில் தோன்ற அதனை வணங்க வேண்டுமென்று தமது திரு வுள்ளத்தில் ஆசைபொருந்தததுதலால், ஓடங்களை விடுகின்றவர் அங்கொருவருமில்லா தொழியவும் திருஞானசம்பந்தப்பிள் ளையார் மிக்க விரைவினால் ஓடத்தின் கட்டுகைள யவிழ்த்துச் சிவனடியார்களை யவ்வோடத்திலேற்றித் தமது நாவின்றிறமே ஓடக்கோலாக அதன்மே லெழுந்தருளிச் சிவபெருமானைக் "கொட்டம்" என்று முதலெடுத்துத் திருப்பதிகம் பாடியருள. - எ - று.

***உம்பருய்ய நஞ்சுண்டார் அருளால் ஓடம் "செலச் செல்ல உந்து" தலால்***
***ஊடு சென்று,***
***செம்பொன்நேர் சடையார்தங் கொள்ளம் பூதூர் தனைச்சேர***
***அக்கரையில் சேர்ந்த பின்பு,***
***நம்பரவர் தமை வணங்க ஞானம்உண்ட பிள்ளையார் நற்றொண்ட***
***ருடனி ழிந்து,***
***வம்பலரு நறுங்கொன்றை நயந்தார் கோயில் வாயிலின்முன்***
***மகிழ்ச்சிகொடு வந்து சார்ந்தார். 899***

(இ - ள்.) தேவர்களுய்யும்பொருட்டு விஷத்தை யுண்டருளிய சிவபெருமான் திருவருளினால் ஓடம், அக்கரை செல்லும்படி ஆற்றுநீர் இடங்கொடுத்துத் தள்ளுதலினால் அதன் நடுவே சென்று, சிவந்த பொன்போலுஞ் சடைமுடியை யுடைய சிவபெருமானெழுந்தருளிய திருக்கொள்ளம்பூதூரை யடையும்படி ஓடம் அக்கரையில் சேர்ந்த பின்பு, திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிவபெருமானை வணங்கி நல்ல அடியார்களோடும் அவ்வோடத்தினின்று மிறங்கியருளி, நறுமணங்கமழுங் கொன்றை மலர் மாலையை யணிந்த சிவபெருமானது திருக்கோயிற் றிருவாயிலின் முன்பு மகிழ்வோடும் வந்து சேர்ந்தருளினார். - எ - று.

***நீணிலைக்கோ புரமதனை இறைஞ்சிப் புக்கு நிகரிலாத் தொண்டருடன்***
***நெருங்கச் சென்று,***
***வாணிலவு கோயிலினை வலங்கொண்டெய்தி மதிச்சடையார்***
***திருமுன்பு வணங்கி நின்று,***
***"தாணுவே! ஆற்றின்கண் ஓடம் உய்க்குந் தன்மையால் அருள் தந்த***
***தலைவா! நாகப்,***
***பூணினாய்! களிற்றுரிவை போர்த்த முக்கட் புனிதனே!" எனப் பணிந்து***
***போற்றி செய்தார். 900***

(இ - ள்.) உயர்ந்த நிலைகளையுடைய திருக்கோபுரத்தை வணங்கி யுள்ளே புகுந்து ஒப்பற்ற அடியார்களோடு நெருங்கச் சென்று ஒளிபொருந்திய திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ் செய்து, சந்திரசடாதரராகிய சிவபெருமான் சந்நிதியில் வணங்கி நின்று, ஓர்காலத்துஞ் சலியாத நிலைமையையுடைய பெருமானே! ஆற்றில் ஓடத்தை நடத்துவிக்குந் தன்மையால் திருவருளைத் தந்த முதல்வரே! சர்ப்பாபரணத்தை யணிந்த அருளாளரே! (கயாசுரனென்னும்) யானையின் றோலையுரித்து ஆடையாகப் போர்த்தருளிய மூன்று கண்களையுடைய பரிசுத்தரே! என்று வணங்கித் துதித்தருளினார். - எ - று.

***போற்றிசைத்துப் புறம்போந்தங் குறையும் நாளில் பூழியன்முன்***
***புன்சமயத் தமணர் தம்மோ,***
***டேற்றபெரு வாதின்கண் எரியின் வேவாப் பதிகமுடை இறையவரை***
***இறைஞ்ச வேண்டி,***
***ஆற்றவும்அங் கருள் பெற்றுப் போந்து முன்னம் அணைந்தபதி***
***களும்இறைஞ்சி அன்பர்சூழ,***
***நாற்றிசையும் பரவுதிரு நள்ளா றெய்தி நாடுடைநா யகர்கோயில்***
***நண்ணினாரே. 901***

(இ - ள்.) அவ்வாறு துதித்துப் புறத்திற்சென்று அத்திருப்பதி யிலெழுந்தருளியிருக்கும் நாள்களில், பாண்டியராசனுக்கு முன்பு புல்லிய சமயத்தை யுடைய சமணர்களோடு எதிர்த்த பெரிய வாதில் (அக்கினியிலிட்டபோது) வேகாத திருப்பதிகத்தை யுடைய (திருநள்ளாற்றி லெழுந்தருளிய) சிவபெருமானை வணங்க விருப்பங் கொண்டு அங்கு வில்வவனேசரது திரு வருளை மிகுதியாகப் பெற்று அங்கு நின்று மெழுந்தருளி, முன்னே பொருந்திய திருப்பதிகளையும் வணங்கி அடியார்கள் சூழும்படி நான்கு திக்கிலுள்ளவர்களுந் துதிக்குந் திருநள்ளாற் றையடைந்து நாடுடைய நாயகரென்னுஞ் சிவபெருமானது திருக்கோயிலை யடைந்தருளினார். - எ - று.

***நீடுதிருத் தொண்டர்புடை சூழ அங்கண் நித்திலயா னத்திடைநின்***
***றிழிந்து சென்று,***
***பீடுடைய திருவாயில் பணிந்து புக்குப் பிறையணிந்த சென்னியார்***
***மன்னுங் கோயில்,***
***மாடுவலங் கொண்டுள்ளாமல் மகிழ்ந்து புக்கு மலர்க்கரங்கள்***
***குவித்திறைஞ்சி வள்ள லாரைப்,***
***பாடகமெல் லடி"எடுத்துப் பாடி நின்று பரவினார் கண்ணருவி பரந்து***
***பாய. 902***

(இ - ள்.) மிகுந்த திருத்தொண்டர்கள் அருகில் சூழ்ந்துவர அங்கு முத்துச் சிவிகையினின்று மிறங்கிச் சென்று பெருமை பொருந்திய திருவாயிலைப் பணிந்து உள்ளே புகுந்து இளம் பிறையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானெழுந் தருளிய திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ் செய்து மகிழ்ந்து உள்ளே சென்று, தாமரை மலர் போன்ற திருக்கரங்களைச் சிரமேற் குவித்து வணங்கிச் சிவபெருமானைப் "பாடக மெல்லடி" என்று முதலெடுத்துத் திருப்பதிகம்பாடி நின்று கண்களினின்றும் ஆனந்த பாஷ்பம் பரவியொழுகத் துதித் தருளினார். - எ - று.

***தென்னவர்கோன் முன்னமணர் செய்த வாதில் தீயின்கண் இடும்ஏடு பச்சை யாக்கி,***
***என்னுள்ளத் துணையாகி ஆல வாயில் அமர்ந்திருந்த வாறென்கொல் எந்தாய்! என்று,***
***பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பரவிப் போந்து பண்பினிய தொண்டருடன் அங்கு வைகி,***
***மன்னுபுகழ்ப் பதிபிறவும் வணங்கச் சண்பை வள்ளலார் நள்ளாறு வணங்கிச் செல்வார். 903***

(இ - ள்.) எமது தந்தையே! பாண்டியராசனுக்கு முன்னே சமணர்கள் செய்த வாதில் நெருப்பிலிட்ட திருவேடு வேவாமல் பச்சென்றிருக்கச் செய்து, என்னுயிர்த் துணையாய்த் திருவால வாயிலெழுந்தருளியிருந்த வண்ணம் யாது? என்று தமிழ்த் திருப்பதிகம்பாடி யருளித் துதித்துப் புறத்திற் சென்று, நற்குணங் களையுடைய திருத்தொண்டர்களோடு அத்திருப்பதியிலெழுந் தருளித் திருஞானசம்பந்தப்பிள்ளையார் நிலைபெற்ற புகழை யுடைய மற்றைத் திருப்பதிகளையும் வணங்கும் பொருட்டுத் திருநள்ளாற்றை வணங்கிச் செல்வாராயினார். - எ - று.

***சீர்நிலவு திருத்தெளிச்சே ரியினைச் சேர்ந்து சிவபெருமான் தனைப்பரவிச் செல்லும் போது,***
***சார்வறியாச் சாக்கியர்தம் போதி மங்கை சார்தலும்மற் றதுஅறிந்த சைவர் எல்லாம்,***
***ஆர்கலியின் கிளர்ச்சிஎனச் சங்கு தாரை அளவிறந்த பல்லியங்கள் முழக்கி ஆர்த்துப்,***
***பார்குலவு தனிக்காளஞ் சின்னம் எல்லாம் "பரசமய கோளரிவந் தான்"என் றூத. 904***

(இ - ள்.) சிறப்புப் பொருந்திய திருத்தெளிச்சேரி யென்னுந் திருப்பதியை யடைந்து அங்குப் பார்வதீசரை வணங்கிச் செல்லும் பொழுது, நற்சார்பினையுணராத பௌத்தர்கள் வாழும் போதி மங்கையென்னு மூரானது சமீபிக்கவும், அதனை யுணர்ந்த சைவர்களெல்லாரும் சமுத்திர முழக்கம் போலச் சங்கு களையும் தாரைகளையும் அளவில்லாத பல வாத்தியங்களையு முழக்கி யாரவாரித்து உலகத்தில் விளங்கும் ஒப்பற்ற காளம் சின்னம் முதலிய எல்லா வாத்தியங்களையும் பரசமயகோளரி யெழுந்தருளினாரென்று ஊத. - எ - று.

**புல்லறிவிற் சாக்கியர்கள் அறிந்தார் கூடிப் புகலியர்தம் புரவலனார் புகுந்து தங்கள்,**
**எல்லையினில் எழுந்தருளும் பொழுது தொண்டர் எடுத்தஆர்ப் பொலியாலும் எதிர்முன் சென்று,**
**மல்கிஎழுந் திருச்சின்ன ஒலிக ளாலும் மனங்கொண்ட பொறாமையினால் மருண்டு தங்கள்,**
**கல்வியினில் மேம்பட்ட புத்த நந்தி முதலான தேரர்க்குங் கனன்று சொன்னார். 905**

(இ - ள்.) சிற்றறிவினையுடைய புத்தர்கள் அதனை யுணர்ந்து ஒன்றாகக் கூடி, சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் வந்து தங்கள் எல்லையில் எழுந்தருளும்பொழுது அடியார்கள் அரகரவென்றெடுத்த ஆரவாரத்தினாலும், எதிரே சென்று நிறைந்தெழுகின்ற திருச்சின்ன வொலிகளாலும் மனதிற் கொண்ட பொறாமையினால் மயங்கித் தங்கள் பிடகநூலு ணர்ச்சியிற் சிறந்த புத்தநந்தி முதலிய பௌத்தர்களுக்குங் கோபித்துச் சொன்னார்கள். - எ - று.

**மற்றவர்கள் வெவ்வுரையும் பிள்ளை யார்முன் வருசின்னப் பெருகொலியும் மன்னுந் தொண்டர்,**
**பொற்புடைய ஆர்ப்பொலியுஞ் செவியி னூடு புடைத்தநா ராசம்எனப் புக்க போது,**
**செற்ற மிகும் உள்ளத்துப் புத்த நந்தி செயிர்த் தெழுந்து தேரர்குழாஞ் சூழச் சென்று,**
**"வெற்றிபுனை சின்னங்கள் வாதில் எம்மை வென்றன்றோ பிடிப்ப"தென வெகுண்டு சொன்னான். 906**

(இ - ள்.) புத்தர்கள் சொல்லிய கடுஞ்சொல்லும், பிள்ளை யாருக்கு முன்னே ஊதிவருகின்ற திருச்சின்னங்களின் பேரோசை யும், நிலைபெற்ற அடியார்கள் அரகரவென்று ஆரவாரிக்குஞ் சிறந்த ஓசையும் காதில் (காய்ச்சி) அடித்த நாராசம் போலச் சென்றபொழுது, கோபமிகுகின்ற மனத்தினையுடைய புத்தநந்தி யானவன் கோபித்தெழுந்து புத்தர் கூட்டங்கள் சூழச்சென்று, நீங்கள் எம்மை வாதில் வென்றபின்னல்லவோ? வெற்றி பொருந்திய சின்னங்களைப் பிடித்துச் செல்ல வேண்டுவது என்று கோபித்துச் சொல்லினான். - எ - று.

**புத்தரினம் புடைசூழப் புத்த நந்தி பொருவில்ஞா னப்புனிதர் திருமுன் பூதும்,**
**மெய்த்தவிறற் சின்னங்கள் விலக்குங் காலை வெகுண்டெழுந்த திருத்தொண்டர் வெறுத்து நோக்கி,**
**"இத்தகைய செயற்கிவரைத் தடித்தல் செய்யா திதுபொறுக்கில் தங்கள்நிலை ஏற்ப" என்று,**
**முத்துநிரைச் சிவிகையின்மேல் மணியை வந்து முறைபணிந்து புகுந்தபடி மொழிந்து நின்றார். 907**

(இ - ள்.) புத்தர் கூட்டங்கள் தன்பக்கங்களிற் சூழும்படி புத்தநந்தி யென்பவன் ஒப்பற்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருமுன்னே ஊதிவருகின்ற மெய்ம்மையான வெற்றிபொருந்திய திருச்சின்னங்களைத் தடுத்தபொழுது அவனைக் கோபித் தெழுந்த அடியார்கள் வெறுத்துப் பார்த்து, இத்தன்மையான கொடுஞ் செய்கைக்கு இவர்களைக் கொல்லாமல் இதனைப் பொறுத்தால் தங்கள் நிலைமையை மேற்கொள்வார்களென்று முத்துச் சிவிகையின் மேலெழுந்தருளிவருந் திருஞானசம்பந்தப் பிள்ளையாரை யடைந்து முறைமையாக வணங்கி (புத்தநந்தி முதலியோர் வந்து) தடுத்த செய்கையை விண்ணப்பஞ்செய்து நின்றார்கள். - எ - று.

**வருமிடத்தில் அழகிதாம் நமக்கு வாதில் மற்றிவர்தம் பொருள் நிலைமை மறாத, வண்ணம்,**
**பொருமிடத்தில் அறிகின்றோம் புத்த நந்தி பொய்ம்மேற்கோள் எனப்புகலி வேந்தர் கூற,**
**அருமறைசொல் திருப்பதிகம் எழுதும் அன்பர் ஆளுடைய பிள்ளையார் திருவாக் காலே,**
**உரும்இடித்து விழப்புத்தன் உத்த மாங்கம் உருண்டுவீழ் கெ"னப்பொறா உரைமுன் விட்டார். 908**

(இ - ள்.) நாம் வருமிடத்தில் இது அழகாகவிருந்தது; புத்த நந்தி கூறும் பொய் மேற்கோளாகிய இப்பௌத்தர்களது பொருளின் நிலைமையானது மறுக்கப்படாதிருத்தலை வாது செய்யுமிடத்தி லறிவோமென்று திருஞானசம்பந்தப்பிள் ளையார் கூறியருள, அரிய தமிழ் வேதமாகிய திருப்பதிகங்களை எழுதும் அடியாராகிய சம்பந்தசரணாலயர் திருஞானசம்பந்தப் பிள்ளையாரருளிச் செய்த தேவாரத்திருவாக்காலே இடி யிடித்து விழ இப்புத்த நந்தியினுடைய தலை யுருண்டு விழக் கடவதென்று மனஞ்சகியாமல் கோபவாக்கை முன் விட்டருளி னார். - எ - று.

***ஏறுயர்த்தார் சைவநெறி ஆணைஉய்க்க எதிர்விலக்கும் இடையூற்றை***
***எறிந்து நீக்கும்,***
***மாறில்வலி மந்திரமாம் அசனிபோல வாய்மைஉரைத் திருத்தொண்டர்***
***வாக்கி னாலே,***
***வேறுமொழிப் போரேற்பான் வந்தபுத்தன் மேனியையும் தலையினையும்,***
***வெவ்வே றாகக் கூறுபட நூறியிடப் புத்தர் கூட்டம் குலைந்தோடி***
***விழுந்துவெருக் கொண்ட தன்றே. 909***

(இ - ள்.) இடபக்கொடியை யுயர்த்திய சிவபெருமானது சைவ சமயத்தினாணையை யுலகமெங்கும் நடத்த அதற்கு எதிராக வந்தடையு மிடையூறுகளை வேரறக்களைந்து ஒழிக்கும் ஒப்பற்ற வலிய மந்திரமாகிய இடியைப்போல உண்மையுரை யாகிய (தேவாரத்தோடு கூடிய) சம்பந்த சரணாலயர் திருவாக் கினால், தர்க்க மொழியால் வாதுப்போர் செய்ய வந்த புத்தநந்தி யினது உடம்பையுந் தலையையுந் தனித்தனிக் கூறாகும்படிச் சிதைக்க (அதனால் அவனுடன் வந்த) புத்தர் கூட்டம் நிலை குலைந்தோடி விழுந்து அச்சங்கொண்டது. - எ - று.

***மற்றவர்கள் நிலைமையையும் புத்த நந்தி வாக்கின்போ ரேற்றவன்***
***தன்தலையும்,***
***மெய்யும் அற்றுவிழ அத்திரவாக் கதனால் அன்பர் அறுத்ததுவும்***
***கண்டஅரன் அடியார் எல்லாம்,***
***வெற்றிதரும் பிள்ளையார் தமக்குச் சென்று விண்ணப்பம் செய***
***"எதிர்ந்த விலக்கு நீங்க,***
***உற்றவிதி அதுவேயாம்; அர!என் றெல்லாம் ஓது"கென***
***அவ்வொலிவான் உற்ற தன்றே. 910***

(இ - ள்.) அவ்வாறு அச்சமுற்றோடிய பௌத்தர்களது நிலைமையையும், வாதுப்போர் செய்யவந்த புத்தநந்தியினுடைய தலையும் உடலுஞ் சிதறிவிழும்படி (பிள்ளையார் அருளிச் செய்த பஞ்சாட்சரத்திருப்பதிகத்துப் பத்தாவது திருப்பாசுரத் தில்) "அத்திரமாவன வஞ்செழுத்துமே" என்னுந் திருவாக்கால் சம்பந்தசரணாலயர்அறுத்ததையும் பார்த்த சிவனடியார்க ளெல்லாம் வெற்றி பொருந்திய திருஞானசம்பந்தப்பிள்ளையா ரிடத்திற் சென்று விண்ணப்பஞ் செய்துகொள்ள, பிள்ளையார் அவன் நம்மிடத்திலெதிர்த்தலாலாய குற்றம் நீங்கும்படி பொருந் திய விதி அதுவேயாகும்; நீங்களனைவரும் அரகரவென்று ஆரவாரியுங்களென்று கூறியருள, (அவ்வாறு கூறும் அரகர வென்னும்) அவ்வோசை விண்ணுலகளவுஞ் சென்றது. - எ - று.

***அஞ்சிஅகன் றோடியவப் புத்த ரெல்லாம் அதிசயித்து மீண்டும் உடன்***
***அணைந்து கூடி,***
***"வஞ்சனையோ? இதுதான்மற் றவர்தஞ் சைவ வாய்மையே!"***
***எனமருண்டு மனத்திற் கொள்வார்"***
***எஞ்சலின்மந் திரவாதம் அன்றி எம்மோ டெதிர்ந்து பொருள் பேசுவதற்***
***கிசைவ"தென்று,***
***தஞ்செயலின் மிக்குள்ள சாரி புத்தன் தன்னையே முன்கொண்டு***
***பின்னுஞ் சார்ந்தார். 911***

(இ - ள்.) (அங்கு நின்றும்) பயந்தோடிய அப்புத்தர்க ளெல்லாரும் ஆச்சரியமடைந்து மீளவும் ஒருங்கு வந்து கூடி, புத்தநந்தி இறந்தது வஞ்சனையோ! அல்லது, அவர்கள் அனுசரித்தொழுகும் சைவ சமயத்தின் உண்மையோ! என்று மயங்கித் தங்கள் மனத்தில் நினைத்துக் குறைவில்லாத மந்திரவாதமில்லாமல் எம்முடனெதிர்த்துப் பொருளின் நிலைமையைக் குறித்து வாதுபேசுவதற்கு வாருங்களென்று தங்கள் சமயக் கொள்கையிற் சிறந்த சாரிபுத்த னென்பவனை முன்னே கொண்டு பின்னும் வந்து சேர்ந்தார்கள். - எ - று.

***அத்தன்மை கேட்டருளிச் சண்பை வந்த அடலேறு திருவுள்ளத் "தழகி"***
***தென்று,***
***மெத்தமகிழ்ச் சியினோடும் விரைந்து சென்று வெண்டரளச்***
***சிவிகையின்நின் றிழிந்து வேறோர்,***
***சத்திரமண் டபத்தின் மிசை ஏறி நீடு சைவருடன் எழுந்தருளி இருந்து***
***"சாரும்,***
***புத்தர்களை அழைக்க" எனத் திருமுன் நின்றார் புகலிகா வலர்ஏவல்***
***போற்றிச் சென்றார். 912***

(இ - ள்.) சீகாழிப்பதியி லவதரித்தருளிய வலிய ஆண் சிங்கம் போன்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் அவர்கள் சொல்லிய தன்மையைக் கேட்டுத் தமது திருவுள்ளத்தில் இது நன்றென்று கருதி மிக்க மகிழ்ச்சியுடன் விரைந்து சென்று வெள்ளிய முத்துச் சிவிகையினின்று மிறங்கி, அங்குள்ள வேறொரு சத்திரமண்டபத்தின் மேலேறிச் சிறந்த அடியார் திருக்கூட்டத்தோடு மெழுந் தருளியிருந்து (அங்குள்ள அடியார்களைப் பார்த்து) வாது செய்யவந்த புத்தர்களை இங்கு அழையுங்களென்று கூறியருள, தமது திருமுன்னின் அடியார்கள் திருஞானசம்பந்தப்பிள்ளையா ரது பணிவிடையைச் சிரமேற்கொண்டு சென்றார்கள். - எ - று.

**சென்றவர்கள் தேரர்குழாம் அணைந்து "நீங்கள் செப்பிவரும்**
**பொருள்நிலைமை தெரிக்க எங்கள்,**
**வென்றிமழ இளங்களிறு சண்பையாளி வேதபா ரகன்மும்மைத்**
**தமிழின் வேந்தன்,**
**நன்றுமகிழ்ந் தழைக்கின்றான்; ஈண்ட நீரும் நண்ணும்" எனக்**
**கூறுதலும் நன்மை சாராத்,**
**தன்தகைமைப் புத்தருடன் சாரி புத்தன் சத்திரமண் டபமுன்பு சார**
**வந்தான். 913**

(இ - ள்.) (திருஞானசம்பந்தப்பிள்ளையாரது கட்டளையை மேற்கொண்டு) சென்ற அடியார்கள் பௌத்தர் கூட்டத்தை யடைந்து, நீங்கள் சொல்லி வருகின்ற பொருணிலைமையைக் குறித்து வாதுசெய்ய, எங்கள் வெற்றி பொருந்திய இளங்களிறு போல்பவரும், சீகாழித்தலைவரும், வேதபாரகரும், (இயலிசை நாடகமென்னும்) முத்தமிழ்த் தலைவருமாகிய திருஞான சம்பந்தப்பிள்ளையார் (உமது வருகையை) நன்றாக மகிழ்கூர்ந்து அழைக்கின்றா ராதலால், நீங்களெல்லாரும் நெருங்க வாருங்க ளென்று கூறவும், சாரிபுத்த னானவன் நன்மையடையாத அற்பத் தன்மையை யுடைய பௌத்தர்களோடு சத்திரமண்டபத்தின் முன்பு வந்தான். - எ - று.

**அங்கணைந்து மண்டபத்துப் புத்த ரோடும் பிள்ளையார் அருகணைய**
**நின்ற போதில்,**
**எங்குநிகழ் திருச்சின்னந் தடுத்த புத்தன் இருஞ்சிரத்தைப்**
**பொடியாக்கும் எதிரில் அன்பர்,**
**பொங்குபுகழ்ப் புகலிகா வலர்தம் பாதம் போற்றிஅரு ளாற்சாரி புத்தன்**
**தன்னை,**
**"உங்கள்தலை வனும்பொருளும் உரைக்க!" என்ன உற்றவா**
**தினைமேற்கொண் டுரைசெய் கின்றான். 914**

(இ - ள்.) சாரிபுத்தன் அம்மண்டபத்தில் வந்து சேர்ந்து பௌத்தர்களோடு பிள்ளையாருக்குச் சமீபத்தில் நின்ற பொழுது, எங்கும் விளங்கியொலிக்கின்ற திருச்சின்னவோசை யைத் தடுத்த புத்தநந்தியினது பெரிய தலையைச் சிதறச் செய்த ஒப்பற்ற சம்பந்தசரணாலயர் மிக்க புகழையுடைய சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவடி களைத் துதித்து, அவரது திருவருளினால் சாரி புத்தனைப் பார்த்து உங்கள் கடவுளையும், (நீங்கள் கூறும் பஞ்சகந்த

முதலிய) பொருளின் நிலைமையையும் சொல்லுமென்று கூற, அவன் தான் செய்யவந்த வாதத்தை மேற்கொண்டு சொல்லு கின்றான். - எ - று.

***"கற்பங்கள் அனைத்தினிலும் பிறந்து வீந்து கதிமாறுங் கணபங்க இயல்பு தன்னில்,***
***பொற்புடைய தானமே தவமே தன்மை புரிந்தநிலை யோகமே பொருந்தச் செய்ய,***
***உற்பவிக்கும் ஒழிவின்றி உரைத்த ஞானத் தொழியாத பேரின்ப முத்தி பெற்றான்,***
***பற்பலரும் பிழைத்துய்ய அறன் சொன்ன பான்மையான் யாங்கள் தொழும் பரமன்" என்றான். 915***

(இ - ள்.) கற்பங்கள் தோறும் (பிறர்க்குறுதி செய்யும் பொருட்டுப்) பிறந்து இறந்து அக்கதியினின்று மாறி முத்தியை யடையும் கணபங்கவியல்பு கூறும் புத்த மதத்தில் (ஆதிபுத்தன்) அழகிய தானம் - தவம் பண்புமிக்க யோகம் இவைகளைத் தான் பொருந்தச் செய்ய, அதனால் தோன்றுகின்ற நீங்கா நிலைமை யாற் கூறிய ஞானத்தால் கெடாத பேரின்பத்தைக் கொடுக்குங் கந்த வீட்டையடைந்தான்; (அவனே) தேவர் முதலிய பலரும் (பிறவித் துன்பத்தினின்று நீங்கிப்) பிழைத்துய்யும் பொருட்டு அறத்தை முன்னே சொல்லிய அருளுடையோன், யாங்கள் வணங்குங் கடவுளென்று கூறினான். - எ - று.

***என்றுரைத்த சாரிபுத்தன் எதிர்வந் தேற்ற இருந்தவத்துப் பெருந்தன்மை அன்பர் தாமும்,***
***"நன்றுமது தலைவன்தான் பெற்றான்என்று நாட்டுகின்ற முத்திதான் யாவ" தென்றார்;,***
***"நின்றவுரு வேதனையே குறிப்புச் செய்கை நேர்நின்ற ஞானமென நிகழ்ந்த ஐந்தும்,***
***ஒன்றியகந் தத்தவிவே முத்தி" என்ன உரைசெய்தான் பிடகத்தின் உணர்வு மிக்கான். 916***

(இ - ள்.) இவ்வாறு கூறிய சாரிபுத்தனோடு எதிர்வந்து வாது செய்யக்குறித்த மிக்க தவத்தினையுடைய பெருந்தன்மை பொருந்திய சம்பந்தசரணாலயரும் (அவனைப் பார்த்து) நீ கூறியது நன்றாயிருந்தது; உமது கடவுள் முத்திபெற்றானென்று நீ நாட்டுகின்ற முத்தியினியல்பு யாதென்றுவினாவினார்; (அதற்குப்) பிடக நூலுணர்ச்சியில் சிறந்த சாரிபுத்தனானவன்

நிலைபெற்ற உருவம் - வேதனை - குறிப்பு - பாவனை - விஞ்ஞானம் என்று கூறும் ஐந்துஞ் சேர்ந்த கந்தங்களின் அழிவே முத்தியென்று கூறினான். - எ - று.

**ஆங்கவன்தான் உரைத்தமொழி கேட்ட அன்பர் அதனைஅனு**
**வாதஞ்செய் தவனை நோக்கித்,**
**"தாங்கிய ஞானத்துடனாங் கந்தம் ஐந்தும் தாம்வீந்து கெட்டனவேல்**
**தலைவன் தானும்,**
**ஈங்குளன்"? என்றவனுக்கு விடய மாக "யாவையும்முன் இயற்றுதற்கு**
**விகார மேசெய்,**
**தோங்குவடி வமைத்துவிழ வெடுக்கும் பூசை கொள்வார்ஆர்?**
**உரைக்க!" என உரைக்க லுற்றான். 917**

(இ - ள்.) அந்தச் சாரிபுத்தன் சொல்லிய வார்த்தையைக் கேட்ட சம்பந்த சரணாலயர் அவன் கூறியதைத் தாம் அனுவதித்து அவனைப் பார்த்து, பொருந்திய ஞானத்தோடு கூடிய ஐந்து கந்தங்களும் (உங்கள் கடவுளுக்கு) ஒருங்கேயழிந்து கெட்டனவாயின், அக்கடவுளும் இவ்வுலகத்திலிருக்கின்றா னென்று அவனறியும்படி (பூசை நைவேத்தியங்கள் முதலிய) எல்லா உபசாரங்களையும் அவன் முன் செய்தற்கு மனோவிகார மான பாவனை செய்து பெரிய உருவத்தை யமைத்து விழாக் கொண்டாடும் பூசனையை யேற்றுக் கொள்பவர் யாவரென்று வினாவ, அச்சாரிபுத்தன் சொல்லத் தொடங்கினான். - எ - று.

**"கந்தமாம் வினையுடம்பு நீங்கி எங்கோன் கலந்துளன்முத் தியில்"**
**என்றான்; என்னக் "காணும்,**
**இந்திரியங் கண்முதலாங் கரணந் தானும் இல்லையேல்**
**அவன்உணர்ச்சி இல்லை" என்றார்,**
**"முந்தையறி விலனாகி உறங்கி னானை நிந்தித்து மொழிந்துடல்மீ**
**தாடி னார்க்கு,**
**வந்தவினைப் பயன் போல வழிபட் டார்க்கும் வருமன்றோ**
**நன்மை?" என மறுத்துச் சொன்னான். 918**

(இ - ள்.) பஞ்சகந்தங்களாலாகிய வினையுடம்பு அழிந்து எமது முதல்வன் முத்தியில் சேர்ந்திருக்கின்றான் என்று கூற, (அதற்கு அவர், முத்தியிற் சேர்ந்த உமது கடவுளுக்கு) விடயங் களை யுணருங் கருவியாகிய கண் முதலிய கரணங்களுமில்லாத தொழியில் அவனுக்கு உணர்ச்சியில்லை யென்று மறுத்தருளி னார்; முற்பட்ட விஞ்ஞானமானது கெட்டு (ஆலயவிஞ்ஞான

மடைந்து) உறங்குகின்றவனை நிந்தித்துக்கூறி அவனுடம்பின் மீது மிதித்தாடின வொருவனுக்கு அதனால் வந்த தீவினைப் பயன்போல (கந்தமைந்துங் கெட்டு முத்தியடைந்த நமது தலைவனை) வழிபட்டவர்க்கும் நல்வினைப் பயன்வருமென்று அதனை மறுத்து (உத்தரங்) கூறினான். - எ - று.

***சொன்னஉரை கேட்டருளி அன்பர் தாமும் "தொடர்ந்தவழி பாடு***
***பலகொள்கின் றானுக்,***
***கன்னவற்றின் உடன்பாடும் எதிர்வும் இல்லை யானபோ தவன்பெறுதல்***
***இல்லை" என்றார்;,***
***"முன்னவற்றல் உடன்பாடும் எதிர்வும் இன்றி முறுகுதுயில் உற்றானை***
***முனிந்து கொன்றால்,***
***இன்னுயிர்போய்க் கொலையாகி முடிந்த தன்றோ! இப்படியால்***
***எம்மிறைவற் கெய்தும்" என்றான். 919***

(இ - ள்.) சம்பந்தசரணாலயரும் சாரிபுத்தன் சொல்லிய வார்த்தையைக் கேட்டருளி, நீங்கள் செய்யும் பல வழிபாடுகளை யும் ஏற்றுக் கொள்ளும் உமது கடவுளுக்கு (அவைகளை யுணர்தற்குரிய கருவிகளின்மையால்) அவ்வழிபாட்டில் விருப்பும் வெறுப்பு மில்லையாம்; அவ்வாறான பொழுது, அவன் அப் பூசையை யேற்றுக் கொள்ளுத லில்லையென்று மறுத்துக் கூறினார்; அதற்கு அவன் தம்முன்புள்ள விடயங்களில் விருப்பும் வெறுப்புமின்றி மிக்க துயிலுற்றவனை ஒருவன் கோபித்துக் கொன்றால், (கொல்லப்பட்டவனுக்கு) இனிய உயிர்நீங்கி, கொன்றவனுக்குக் கொலைப்பாவமாகி முடிந்ததுபோல இவ்வாறாக எமது கடவுளுக்கு (இவ்வழிபாடுகள்) அடையு மென்று கூறினான். - எ - று.

***"இப்படியால் எய்தும்"; என இசைந்து "நீஇங் கெடுத்துக்காட்***
***டியதுயிலும் இயல்பி னான்போல்,***
***மெய்ப்படிய கரணங்கள் உயிர்தாம் இங்கு வேண்டுதியால் நும்இறைவற்***
***கானபோது,***
***செப்பியஅக் கந்தத்தின் விளைவின் றாகித் திரிவில்லா***
***முத்தியிற்சென் றிலனும் ஆனான்;***
***அப்படி அக்கந்தத்துள் அறிவுங் கெட்டால் அம்முத்தி யுடன்இன்பம்***
***அணையாதென்றார். 920***

(இ - ள்.) இவ்வாறு வருமென்று கூறி, நீ இங்கு எடுத்துக் காட்டிய (உடன்பாடு மெதிர்வுமின்றித்) துயில்பவனைபோல,

மெய்ம்மை பொருந்திய இந்திரியங்களையு முயிரையும் இங்கு (உமது கடவுளுக்கு) விரும்புகின்றாய்; அவைகள் உமது கடவுளுக்கு வரும்போது, நீ முற்கூறிய பஞ்சகந்தங்களுங் கெட்டு அழிவில்லாத முத்தியில் செல்லாதவனு மாயினான்; அவ்வாறு அப்பஞ்சகந்தத்துள் உணர்வுங்கெட்டால், அம்முத்தியோடு பேரின்பத்தையுமடையாது என்று மறுத்தருளினார்.

**அவ்வுரைகேட் டெதிர்மாற்றம் அறைவ தின்றி "அணைந்துடன்அம்**
**முத்தியெனும் அதுவும் பாழம்",**
**கவ்வையில்நின் றவனைஎதிர் நோக்கி ஞானக் கடலமுதம்**
**அனையவர்தங் காதல் அன்பர்,**
**"பொய் வகையே முத்தியினிற் போனான் முன்பே பொருளெல்லாம்**
**உணர்ந்துரைத்துப் போனான் என்றாய்;**
**எவ்வகையால் அவன்எல்லாம் உணர்ந்த தீதும் இல்லதுரைப்**
**பாய்எனினும் ஏற்போம்" என்றார். 921**

(இ - ள்.) (சாரிபுத்தன் சம்பந்த சரணாலயர் கூறிய) அவ் வார்த்தையைக் கேட்டு அதற்கு எதிருத்தரஞ் சொல்லாதிருந் தான்; தான் கூறிய முத்தியும் பாழயினவென்று வருந்தி நின்ற அச்சாரி புத்தனை மெய்ஞ்ஞானக் கடலிற்றோன்றிய ஞானா முதத்தை யுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது அன்பராகிய சம்பந்த சரணாலயர் பொய்வழியே முத்தியிற் சென்ற நுமது கடவுள் அவன் முத்தியடைதற்கு முன்னமே எல்லாப் பொருள்களையு முழுதுணர்ந்து அறமுரைத்துப் போனா னென்று கூறினாய், அக்கடவுள் எவ்வாறு முழுதொருங் குணர்ந் தது; இதுவும் பொருந்தாதாகும்; அதற்கு உத்தரங் கூறுவாயெனி னும் அதனை யாம் அங்கீகரிப்போமென்று கூறியருளினார்.எ-று

**"உணர்வுபொதுச் சிறப்பென்ன இரண்டின் முன்ன துளவான**
**மரப்பொதுமை உணர்த்தல் ஏனைப்,**
**புணர்சிறப்பு மரங்களில்வைத் தின்ன தென்றல் இப்படியால்**
**வரம்பில்லாப் பொருள்கள் எல்லாம்,**
**கொணரும்விற கினைக்குவைசெய் திடினும்வேறு குறைத்தவற்றைத்**
**தனித்தனியே இடினும் வெந்தீத்,**
**துணர்கவிச் சுடவல் வாறுபோலத் தொகுத்தும்விரித் தும்தெரிக்கும்**
**தொல்லோன்" என்றான். 922**

(இ - ள்.) (அதற்குச் சாரிபுத்தன்) பொதுவுணர்ச்சி - சிறப்புணர்ச்சி யென்று கூறு மிரண்டில், பொதுவுணர்ச்சி

(தூரத்தில்) தோன்றுவனவாகிய மரங்களின் பொதுமையை யுணர்தலாம்; மற்றைய சிறப்புணர்ச்சியாவது (அம்மரங்களின் அருகடைந்து) அம்மரங்களைக் குறித்து, இஃது இன்னமரம் இஃது இன்னமரம், என்று பிரித்துக் கூறுதலாம்; இவ்வாறு, அளவற்ற எல்லாப் பொருள்களையும், கொண்டுவந்த விறகைக் குவித்து நெருப்பிடினும் தனித்தனிவெட்டி வெவ்வேறாக இடினும் கொடிய தீக்கொழுந்து பற்றிச் சுடத்தக்க தன்மைபோல எமது கடவுள் தொகுத்தும் விரித்தும் பொருளியல்புகளையும் அறங்களையுங் கூறியருளுவன் என்று கூறினான். - எ - று.

***எடுத்துரைத்த புத்தன்எதிர் இயம்பும் அன்பர், "எரியுணர்வுக்***
***கெடுத்துக்காட் டாகச் சொன்னாய்;***
***அடுத்தவுணர் வுருவுடைய தன்று சொன்ன அனல்வடிவிற் றாம்அதுவும்***
***அறிதி நுங்கோன்,***
***தொடுத்த நிகழ் காலமே அன்றி ஏனைத் தொடர்ந்தஇரு***
***காலமும்தொக் கறியுமாகில்,***
***கடுத்தளரி நிகழ்காலத் திட்ட தல்லால் காணாத காலத்துக் கதுவா"***
***தென்றார். 923***

(இ - ள்.) இவ்வாறு எடுத்துக்கூறிய சாரிபுத்தனுக்கெதிரே சம்பந்தசரணாலயர் கூறுவார், நீ இருவகையுணர்வுக்கும் நெருப்பைத் திருட்டாந்தமாகக் கூறின், அத்திருட்டாந்தத்தை யேற்ற தாட்டாந்தமென்னு மறிவானது உருவமுடையதன்று; நீ உவமை கூறிய நெருப்பு ரூபமுடையதாம், அதனையு மறிவாயாக; நுமது கடவுள் நிகழ்காலமேயன்றி மற்ற இறந்தகாலம் எதிர்காலங்களையும் பொருந்தி யறியுமாயின், கொடிய நெருப்பு நிகழ்காலத்திலிட்ட விறகினைச் சுடுதலன்றி இறந்தகாலத்தும் எதிர்காலத்தும் கழிந்தனவும் வருவனவுமாகிய விறகினைச் சுடமாட்டாதென்று கூறியருளினார். - எ - று.

***"ஆதலினால் உன்னிறைவன் பொருள்கள் எல்லாம் அறிந்ததுநும்***
***முத்திபோல் ஆயிற் றன்றே;***
***ஏதமாம் இவ்வறிவால் உரைத்த நூலும்" என்றவனுக் கேற்குமா***
***றருளிச் செய்ய,***
***வாதமா றொன்றின்றித் தோற்றான் புத்தன்; மற்றவனை வென்றருளிப்***
***புகலி மன்னர்,***
***பாததா மரைபணிந்தார் அன்பர்; தங்கள் பான்மையழி புத்தர்களும்***
***பணிந்து வீழ்ந்தார். 924***

(இ - ள்.) ஆகையினால் உமது கடவுள் எல்லாப் பொருளையு மறிந்தது உமது முத்திபோலப் பாழாயிற்று; இவ்வகை யறிவினால் உணர்ந்துரைத்த பிடக நூலும் குற்றமுடையதா மென்று அச்சாரிபுத்தனுக்குப் பொருந்தும் வண்ணம் அருளிச் செய்ய, சாரிபுத்தன் யாதொரு வாதமுமின்றித் தோல்வி யடைந் தான்; அன்பராகிய சம்பந்த சரணாலயர் அச்சாரிபுத்தனை வென்று சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது திருவடிகளை வணங்கினார்; தங்கள் சமயநிலை குலைந்த சாரிபுத்தன் முதலிய புத்தர்களும் (பிள்ளையாரது) திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார்கள். - எ - று.

***புந்தியினால் அவருரைத்த பொருளின் தன்மை பொருளன்றாம்***
***படிஅன்பர் பொருந்தக் கூற,***
***மந்தவுணர் வுடையவரை நோக்கிச் "சைவம் அல்லாது மற்றொன்றும்***
***இல்லை" என்றே,***
***அந்தமில்சீர் மறைகள்ஆ கமங்கள் ஏனை அகிலகலைப்***
***பொருளுணர்ந்தார் அருளிச் செய்யச்,***
***சிந்தையினில் அதுதெளிந்து புத்தர் சண்பைத் திருமறையோர்***
***சேவடிக்கீழ்ச் சென்று தாழ்ந்தார். 925***

(இ - ள்.) புத்தர்கள் தங்கள் புத்தியினால் கருதியுரைத்த பொருளின் தன்மையைப் பொருளல்லவென்று அவர்க ளுருணம்படி சம்பந்த சரணாலயர் பொருந்தக் கூறியருள, முடிவில்லாத சிறப்பினையுடைய வேதாகமங்களையும் மற்றெல் லாக் கலைஞானங்களையு மோதாதுணர்ந்த திருஞானசம்பந்தப் பிள்ளையார் மந்தபுத்தியையுடைய அப்பௌத்தர்களைப் பார்த்துச் சைவசமயமே யல்லது வேறு எச்சமயங்களும் மெய்ப்பொருளு ளுடையனவல்லவென்று அருளிச் செய்ய, பௌத்தர்களனைவரும் அதனைத் தமது சிந்தையில் தெளிந்து திருஞானசம்பந்தப்பிள்ளையாரது சிவந்த திருவடிக் கீழடைந்து வணங்கினார்கள். - எ - று.

***அன்றவர்க்குக் கவுணியர்கோன் கருணை நோக்கம் அணைதலினால்***
***அறிவின்மை அகன்று நீங்கி,***
***முன்தொழுது விழுந்தெழுந்து சைவரானார் முகைமலர்மா***
***ரியின்வெள்ளம் பொழிந்த தெங்கும்;***
***நின்றனவும் சரிப்பனவும் சைவ மேயாம் நிலைமையவர்க் கருள்செய்து***
***சண்பை வேந்தர்,***
***சென்றுசிவ னார்பதிகள் பணிய வேண்டித் திருக்கடவூ ரதன்மருங்கு***
***சேர வந்தார். 926***

(இ - ள்.) அப்பொழுது அப்புத்தர்களுக்குத் திருஞான சம்பந்தப்பிள்ளையாரது திருவருட்பார்வையானது வந்து பொருந்துதலினால் அஞ்ஞானமொழிந்து பிள்ளையார் திருமுன்னே வீழ்ந்து வணங்கி யெழுந்து சைவர்களானார்கள்; எவ்விடத்தும் அரும்பவிழ்ந்த பூமழை பொழிந்து; சீகாழித் தலைவராகிய பிள்ளையார் உலகத்திலுள்ள தாவரசங்கமங்க ளனைத்தும் சிவசம்பந்தமேயாமென்னு நிலைமையை அவர் களுக்கருள்செய்து சிவபெருமானெழுந்தருளுந் திருப்பதிகளை வணங்க விரும்பித் திருக்கடவூரென்னும் க்ஷேத்திரத்தின் சமீபத்து வந்தருளினார். - எ - று.

***அந்நகரில் அடியார்கள் எதிர்கொள்ளப் புக்கருளிக்***
***கொன்னவிலும் கூற்றுதைத்தார் குரைகழல்கள் பணிந்தேத்தி***
***மன்னிஅமர்ந் துறையுநாள் "வாகீச மாமுனிவர்***
***எந்நகரில் எழுந்தருளிற்" றென்றடியார் தமைவினவ. 927***

(இ - ள்.) அத்திருக்கடவூரிலுள்ள அடியார்கள் தம்மை எதிர்கொள்ளும்படி அத்திருப்பதியிற் புகுந்தருளி, அச்சத்தைத் தருகின்ற இயமனை யுதைத்தருளிய அமுர்தகடேசரது சப்திக் கின்ற வீரக்கழலையணிந்த திருவடிகளை வணங்கித் துதித்து அங்கு எழுந்தருளியிருக்கும் நாள்களில், (அப்பிள்ளையார்) திருநாவுக்கரசு சுவாமிகள் எந்தத் திருப்பதியில் எழுந்தருளி யிருக்கின்றாரென்று அடியார் திருக் கூட்டத்தை வினாவியருள.- எ - று.

***அங்கவரும் அடிபோற்றி ஆண்டஅர செழுந்தருளிப்***
***பொங்குபுனற் பூந்துருத்தி நகரின்கண் போற்றிசைத்துத்***
***தங்குதிருத் தொண்டுசெயும் மகிழ்ச்சியினால் சார்ந்தருளி***
***எங்குநிகழ்ந் திடஇருந்த படிஎல்லாம் இயம்பினார். 928***

(இ - ள்.) அவ்வடியார்களும் பிள்ளையாரது திருவடிகளைத் துதித்து; திருநாவுக்கரசு சுவாமிகளெழுந்தருளி மிக்க நீர்வளம் பொருந்திய திருப்பூந் துருத்தி யென்னுந் திருப்பதியில் சிவ பெருமானைத் துதித்துப் பொருந்திய திருத்தொண்டு செய்யும் மகிழ்ச்சியினால் அங்குச் சேர்ந்தருளி எவ்விடத்தும் புகழ் விளங்கும்படி இருந்த வண்ணமெல்லா மெடுத்துக் கூறினார்கள். - எ - று.

***அப்பரிசங் கவர்மொழிய ஆண்டஅர சினைக்காணும்***
***ஒப்பரிய பெருவிருப்பு மிக்கோங்க ஒளிபெருக***
***மைப்பொருவு கறைக்கண்டர் கழல்வணங்கி அருள்பெற்றுச்***
***செப்பரிய புகழ்ப்புகலிப் பிள்ளையார் செல்கின்றார். 929***

(இ - ள்.) அடியார்கள் அவ்வாறு கூற, திருநாவுக்கரசு சுவாமிகளைக் காண வேண்டுமென்னும் ஒப்பற்ற பெருவிருப்பமானது அதிகரிக்க ஒளிமிகுந்த மேகம் போலுங் காளகண்டராகிய அமுர்த்த கடேசரது திருவடிகளை வணங்கித் திருவருள் பெற்றுச் சொல்லுதற்கரிய புகழையுடைய சீகாழியிலவதரித்த திருஞானசம்பந்தப் பிள்ளையார் அத்திருக்கடவூரினின்று மெழுந்தருளுவாராயினார். - எ - று.

***பூவிரியும் தடஞ்சோலை புடைபரப்பப் புனல்பரக்கும்***
***காவிரியின் தென்கரைபோய்க் கண்ணுதலார் மகிழ்ந்தஇடம்***
***மேவிஇனி தமர்ந்திறைஞ்சி விருப்புறுமெய்த் தொண்டரொடு***
***நாவரச ருழைச்சண்பை நகரரசர் நண்ணுவார். 930***

(இ - ள்.) பூக்கள் மலர்கின்ற பெரிய சோலைகளின் பக்கங்களில் நிறையும்படி நீர் பரவிய காவிரி நதியின் தென்கரை வழியாகச் சென்று சிவபெருமானெழுந்தருளிய திருப்பதிகளை யடைந்து அன்பு கூர்ந்து வணங்கிப் பேரன்பு பொருந்திய அடியார்களோடு திருநாவுக்கரசு சுவாமிகளிடத்துச் சீகாழித் திருப்பதிக்கரசராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் செல்கின்றவராயினார். - எ - று.

***அந்தணர்சூ ளாமணியார் பூந்துருத்திக் கணித்தாக***
***வந்தருளும் பெருவார்த்தை வாகீசர் கேட்டருளி***
***"நந்தமையா ளுடையவரை நாமெதிர்சென் றிறைஞ்சுவது***
***முந்தை வினைப்பயன்" என்று முகமலர அகமலர்வார். 931***

(இ - ள்.) வேதியர் சிரோன்மணியாகிய பிள்ளையார் திருப்பூந்துருத்திக்குச் சமீபமாக எழுந்தருளுகின்ற பெருவார்த்தையைத் திருநாவுக்கரசு சுவாமிகள் கேள்விப்பட்டு, நம்மையாளாகவுடைய பிள்ளையாரை நாம் எதிர்கொண்டு வணங்குவது பூர்வத்தில் செய்த நல்வினைப் பயனென்று முகமலர்ச்சி யடைய மனமகிழ்வாராயினார். - எ - று.

***"எதிர்சென்று பணிவன்"என எழுகின்ற பெருவிருப்பால்***
***நதிதங்கு சடைமுடியார் நற்பதங்கள் தொழுதந்தப்***
***பதிநின்றும் புறப்பட்டுப் பரசமயஞ் சிதைத்தவர்பால்***
***முதிர்கின்ற பெருந்தவத்தோர் முன்னெய்த வந்தணைந்தார். 932***

(இ - ள்.) எதிர்கொண்டு வணங்குவேனென்று அதிகரித்தெழுகின்ற பெருவிருப்பினால் கங்கை நதி பொருந்திய சடை

முடியையுடைய சிவபெருமானது நல்ல திருவடிகளைத் துதித்து, அந்தத் திருப்பூந் துருத்தியினின்று மெழுந்தருளிப் புறச் சமயங்களை யழித்தருளிய திருஞாசம்பந்தப்பிள்ளையாரிடத்து முதிர்ந்த பெருந் தவத்தினையுடைய திருநாவுக்கரசு சுவாமிகள் அவர் திருமுன்பு வந்தடைந்தருளினார். - எ - று.

***திருச்சின்னம் பணிமாறக் கேட்டநாற் றிசையுள்ளோர்***
***பெருக்கின்ற ஆர்வத்தால் பிள்ளையார் தமைச்சூழ்ந்த***
***நெருக்கினிடை யவர்காணா வகைநிலத்துப் பணிந்துள்ளம்***
***உருக்கிஎழும் மனம்பொங்கத் தொண்டர்குழாத் துடன்அணைந்தார். 933***

(இ - ள்.) (திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருநாமங் களைக் கூறித்) திருச்சின்ன மூதக் கேட்ட நான்கு திக்கிலுள்ள வர்களும் மிக்க மகிழ்ச்சியினால் திருஞானசம்பந்தப்பிள் ளையாரை (த் தரிசிக்கும்படி) சூழ்ந்திருக்கும் நெருக்கில் அப் பிள்ளையார் தம்மைக் காணாத வண்ணம் பூமியில் விழுந்து வணங்கி மனதையுருக்கி யெழுகின்ற அன்பானது அதிகரித் தோங்க அடியார் திருக்கூட்டத்துடன் சென்றருளினார். - எ - று.

***வந்தணைந்த வாகீசர் வண்புகலி வாழ்வேந்தர்***
***சந்தமணித் திருமுத்தின் சிவிகையினைத் தாங்கியே***
***சிந்தைகளிப் புறவந்தார் திருஞான சம்பந்தர்***
***புந்தியினில் வேறொன்று நிகழ்ந்திடமுன் புகல்கின்றார். 934***

(இ - ள்.) இவ்வாறு வந்து சேர்ந்த திருநாவுக்கரசு சுவாமிகள் சிறந்த சீகாழிப்பதியில் வாழுந்தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது அழகிய முத்துச் சிவிகையைத் தாங்கிக் கொண்டு மனமகிழும்படி வந்தருளினார்; திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருவுள்ளத்தில் (திருநாவுக்கரசர் எங்கிருக்கின்றாரென் னும்) ஒரு ஐயமுண்டாகத் தமக்கு முன்னிற்கும் அடியார்களைப் பார்த்து வினாவுவாராயினார். - எ - று.

***"அப்பர்தாம் எங்குற்றார் இப்பொழு(து)" என் றருள்செய்யச்***
***செப்பரிய புகழ்த்திருநா வுக்கரசர் செப்புவார்***
***"ஒப்பரிய தவஞ்செய்தேன் ஆதலினால் உம்மடிகள்***
***இப்பொழுது தாங்கிவரப் பெற்றுய்ந்தேன் யான்" என்றார். 935***

(இ - ள்.) இப்பொழுது அப்பர் எங்கிருக்கின்றாரென்று அடியார்களை வினாவியருள, (அப்பொழுது) சொல்லுதற்கரிய புகழையுடைய திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச் செய்கின்றார்.

அடியேன் ஒப்பற்ற பெருந்தவத்தைச் செய்தேனாகையால், இப்பொழுது தேவரீரது திருவடிகளைத் தாங்கிவரப் பெற்றுக் கடைத்தேறினேனென்று கூறியருளினார். - எ - று.

***அவ்வார்த்தை கேட்டஞ்சி அவனியின்மேல் இழிந்தருளி***
***"இவ்வாறு செய்தருளிற் றென்னாம்?" என் றிறைஞ்சுதலும்***
***செவ்வாறு மொழிநாவர் "திருஞான சம்பந்தர்க்(கு)***
***எவ்வாறு செயத்தகுவ(து)" என்றெதிரே இறைஞ்சினார். 936***

(இ-ள்.) திருநாவுக்கரசுசுவாமிகள் கூறிய அவ்வார்த்தையைத் (திருஞானசம்பந்தப் பிள்ளையார்) கேட்டு அச்சமுற்று (முத்துச் சிவிகையினின்றும்) பூமியிலிழிந்தருளித் தேவரீர் இவ்வாறு செய்தருளியது என்னவென்று அவரை வணங்கவும், செவ்விய திருநாவுக்கரசு சுவாமிககள் (அடியேன் இச்சிவிகையைத் தாங்குதலேயன்றி) வேறு பணி யாது செய்யத்தக்கதென்று கூறி திருஞாசம்பந்தப் பிள்ளையாருக்கு எதிரே வணங்கவும். -எ-று.

***சூழ்ந்துமிடைந் தருகணையும் தொண்டரெல்லாம் அதுகண்டு***
***தாழ்ந்துநிலம் உறவணங்கி எழுந்துதலை கைகுவித்து***
***வாழ்ந்துமனக் களிப்பினராய் "மற்றிவரை வணங்கப்பெற்று***
***ஆழ்ந்தபிறப் புய்ந்தோம்" என் றண்டமெலாம் உறஆர்த்தார். 937***

(இ - ள்.) சூழ்ந்து நெருங்கி அருகில் வருகின்ற அடியார்களெல்லாம் அதனைக் கண்டு பூமியிற் பொருந்த விழுந்து வணங்கிச் சிரசின்மேற்கைகளைக் குவித்துச் சிவானந்தப் பெருவாழ்வடைந்து மனமகிழ்ச்சியுடையவர்களாய் இத்திருநாவுக்கரசரை நாம் வணங்கப் பெற்று (அதனால்) மிக்க பிறவித் துன்பதினின்றுங் கடைத் தேறினோமென்று கூறி அண்டங்களெல்லா நிறையும்படி (அரகரவென்று) ஆரவாரித்தார்கள். - எ - று.

***திருஞான சம்பந்தர் திருநாவுக் கரசர்தமைப்***
***பெருகார்வத் தொடும் அணைந்து தழீஇக்கொள்ளப் பிள்ளையார்***
***மருவாரும் மலரடிகள் வணங்கியுடன் வந்தணைந்தார்***
***பொருவாரும் புனற்சடையார் மகிழ்ந்ததிருப் பூந்துருத்தி. 938***

(இ - ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருநாவுக்கரசு சுவாமிகளை மிக்க விருப்பத்தோடு மணைந்து தழுவிக் கொள்ள, (திருநாவுக்கரசு சுவாமிகள்) திருஞானசம்பந்தப்பிள்ளையாரது வாசனை பொருந்திய தாமரை மலர் போன்ற திருவடிகளை

வணங்கி அவருடன் அலைமோதுகின்ற கங்கைநதியை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளிய திருப்பூந் துருத்தியை யடைந்தருளினார். - எ - று.

**அன்பர்குழாத் தொடுஞ்செல்வார் ஆனேற்றார் மகிழ்கோயில்**
**முன்பணித்தா கச்சென்று கோபுரத்தை முன்னிறைஞ்சித்**
**துன்பமிலாத் திருத்தொண்ட ருடன்தொழுது புக்கருளி**
**என்புருக வலங்கொண்டு பணிந்தேத்தி இறைஞ்சினார். 939**

(இ - ள்.) அடியார் திருக்கூட்டத்துட னெழுந்தருளுந் திருஞானசம்பந்தப்பிள்ளையார் இடபவாகனத்தையுடைய பொய்யிலிநாதர் மகிழ்ந் தெழுந்தருளிய திருக்கோபுரத்தை முன்னே வணங்கிச் சிறிதுந் துன்பமில்லாத திருத்தொண்டர்களுடன் தொழுது உள்ளே புகுந்தருளி எலும்புருகும்படி பிரதக்ஷணஞ் செய்து வணங்கித் துதித்தருளினார். - எ - று.

**பொய்யிலியா ரைப்பணிந்து போற்றியே புறத்தணைவார்**
**செய்யசடை யார்கோயில் திருவாயில் முன்னாக**
**மையறுசீர்த் தொண்டர்குழாம் வந்துபுடை சூழஉல(கு)**
**உய்யவரு வார்தங்க ளுடன்மகிழ்ந்தங் கினிதிருந்தார். 940**

(இ - ள்.) திருப்பூந்துருத்தியி லெழுந்தருளிய பொய்யிலி நாதரை வணங்கித் துதித்துப் புறத்தி லெழுந்தருளுந் திருஞான சம்பந்தப்பிள்ளையார் சிவந்த சடை முடியையுடைய அவ்வெம் பெருமானது திருக்கோயிற்றிருவாயிலின் முன்பு குற்றமற்ற சிறப்பினையுடைய அடியார் திருக்கூட்டங்கள் தம்பக்கங்களில் வந்து சூழ, உலகத்தார் கடைத்தேறும் பொருட்டு அவதரித் தருளிய அப்பிள்ளையாருந் திருநாவுக்கரசு சுவாமிகளுந் தங்களோடு கலந்து மகிழ்கூர்ந்து அங்கு இனிதாக எழுந்தருளி யிருந்தார். - எ - று.

**வாக்கின் தனிமன்னர் வண்புகலி வேந்தர்தமைப்**
**போக்கும் வரவும் வினவப் புகுந்ததெல்லாந்**
**தூக்கின் தமிழ்விரகர் சொல்லிறந்த ஞானமறை**
**தேக்குந் திருவாயாற் செப்பி அருள்செய்தார். 941**

(இ - ள்.) ஒப்பற்ற திருநாவுக்கரசு சுவாமிகள் வளவிய சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் மதுரைக் கெழுந்தருளிய தன்மையையும், அங்கு நின்றும் மீண்டுவந்தருளிய தன்மையையும் வினவியருள, சிறந்த முத்தமிழ்

விரகராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அங்கு நிகழ்ந்த செய்திகளையெல்லாம் சொல்லுதற்கரிய ஞானமயமாகிய வேதங்களைத் திருநெறித் தமிழ் வேதமாக அருளிச் செய்யுந் திருவாயினால் சொல்லியருளினார். - எ - று.

***காழியினில் வந்த கவுணியர்தம் போரேற்றை***
***ஆழிமிசைக் கல்மிதப்பில் வந்தார் அடிவணங்கி***
***"வாழிதிருத் தொண்டென்னும் வான்பயிர்தான் ஓங்குதற்குச்***
***சூழும் பெருவேலி யானீர்" எனத்தொழுதார். 942***

(இ - ள்.) சமுத்திரத்தில் (சமணர்கள் கட்டியிட்ட) கற்றூணாகிய தெப்பத்தில் மிதந்து வந்து கரையேறிய திருநாவுக்கரசு சுவாமிககள் சீகாழிப்பதியிலவதரித்தருளிய கவுணியர்குலத் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவடிகளை வணங்கி (த்தேவரீர்) பேரின்பவாழ்க்கைத் தரத்தக்கதாகிய சிவபெருமானது திருத்தொண்டென்னும் பெரிய பயிர் தழைப்பதற்குச் சூழ்ந்துள்ள பெரிய வேலியாயி னீரென்று (கைகூப்பித்) தொழுதார். - எ - று.

***பிள்ளையார் தாமுமவர் முன்தொழுது பேரன்பின்***
***வெள்ள மனையபுகழ் மானியார் மேன்மையையும்***
***கொள்ளும் பெருமைக் குலச்சிறையார் தொண்டினையும்***
***உள்ள பரிசெல்லாம் மொழிந்தங்(கு) உவந்திருந்தார். 943***

(இ - ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் அத்திருநாவுக்கரசு சுவாமிகளை முன்னே வணங்கிப் பேரன்பின் வெள்ளம் போலும் நிறைந்த புகழையுடைய மங்கையர்க்கரசியாரது மேன்மையையும், பெருமை பொருந்திய குலச்சிறை நாயனாரது திருத்தொண்டையும் உள்ளபடியே எல்லாவற்றையுங் கூறியருளி அங்குச் சந்தோஷித்தெழுந்தருளியிருந்தார். - எ - று.

***தென்னற் குயிரோடு நீறளித்துச் செங்கமலத்(து)***
***அன்னம் அனையார்க்கும் அமைச்சர்க்கும் அன்பருளித்***
***துன்னுநெறி வைதிகத்தின் தூநெறியே ஆக்குதலால்***
***மன்னுபுகழ் வாகீசர் கேட்டு மனமகிழ்ந்தார். 944***

(இ - ள்.) (சுரநோயினாலிறவாமல்) பாண்டியராசனுக்கு உயிருடன் விபூதியைக் கொடுத்தருளி, செந்தாமரை மலரில் வாழும் இலட்சுமியை யொத்த பாண்டிமாதேவியாருக்கும், மந்திரியாராகிய குலச்சிறைநாயனாருக்கும் அன்பின் தன்மையை யருளிச் செய்து, பொருந்திய முத்திநெறியானது வைதிக

சம்பந்தமாயுள்ள சைவநெறியேயாகச் செய்தலால், நிலைபெற்ற புகழையுடைய திருநாவுக்கரசு சுவாமிககள் கேட்டு மனமகிழ்ச்சி யடைந்தார். - எ - று.

***சொல்லின் பெருவேந்தர் தொண்டைவள நாடெய்தி***
***மல்கு புகழ்க்காஞ்சி ஏகாம் பரமன்னும்***
***செல்வர் கழல்பணிந்து சென்றதெல்லாஞ் செப்புதலும்***
***புல்குநூல் மார்பரும்போய்ப் போற்ற மனம்புரிந்தார்.*** **945**

(இ - ள்.) சிறந்த திருநாவுக்கரசு சுவாமிகள் வளப்பம் பொருந்திய தொண்டை நாட்டையடைந்து நிறைந்த புகழையுடைய ஸ்ரீ காஞ்சிபுரத்தில் ஏகாம்பரமென்னுந் திருக்கோயிலிலெழுந்தருளிய திருவேகம்பநாதரது திருவடிகளை வணங்கி அங்கு நிகழ்ந்த செய்திகளை யெல்லாம் கூறியருளவும், முப்புரி நூலணிந்த திருமார்பினையுடைய திருஞானசம்பந்தப் பிள்ளையாரும் அத்திருப்பதியிற் சென்று வணங்கத் திருவுள்ளங் கொண்டருளினார். - எ - று.

***அங்கணரைப் போற்றிஎழுந் தாண்ட அரசமர்ந்த***
***பொங்கு திருமடத்தில் புக்கங் கினிதமர்ந்து***
***திங்கட் பகவணியும் சென்னியர் சேவடிக்கீழ்த்***
***தங்கு மனத்தோடு தாள்பரவிச் செல்லுநாள்.*** **946**

(இ - ள்.) அருட்கண்ணராகிய பொய்யிலிநாதரைத் துதித்து எழுந்து திருநாவுக்கரசு சுவாமிகளெழுந்தருளிய சிறந்த திருமடத்திற்சென்று அங்கு மகிழ்ந்திருந்தருளி, இளம்பிறை யணிந்த சடைமுடியையுடைய பொய்யிலிநாதரது திருவடிக் கீழ்ப்பொருந்திய திருவுள்ளத்துடன் அவரது திருவடிகளைத் துதித்துச் செல்லு நாள்களில். - எ - று.

***வாகீச மாமுனிவர் மன்னுதிரு வாலவாய்***
***நாகம் அரைக்கசைத்த நம்பர் கழல்வணங்கப்***
***போகும் பெருவிருப்புப் பொங்கப் புகலியின்மேல்***
***ஏகும் பெருங்காதல் பிள்ளையார் ஏற்றெழுவார்.*** **947**

(இ - ள்.) திருநாவுக்கரசு சுவாமிகள் நிலைபெற்ற திருவால வாயிலெழுந்தருளிய பாம்பை யரைக்கச்சாகக் கட்டிய ஸ்ரீ சுந்தரேசரது திருவடிகளை வணங்கும் பொருட்டுச் செல்லும் பெருவிருப்பமானது அதிகரிக்க, திருஞானசம்பந்தப்பிள் ளையார் தாம் சீகாழிக்குச் செல்லும் பெருவிருப்பத்தை மேற்கொண்டு செல்கின்றவராயினார். - எ - று.

***பூந்துருத்தி மேவும் புனிதர்தமைப் புக்கிறைஞ்சிப்***
***போந்துதிரு வாயிற் புறத்தணைந்து நாவினுக்கு***
***வேந்தர் திருவுள்ளம் மேவவிடை கொண்டருளி***
***ஏந்தலார் எண்ணிறந்த தொண்டருடன் ஏகினார்.*** ***948***

(இ - ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருப்பூந்துருத்தி யிலெழுந்தருளிய பொய்யிலிநாதரை யடைந்து வணங்கித் திருவாயிலின் புறத்திற் சென்று சேர்ந்து திருநாவுக்கரசுவாமிகள் திருவுள்ளத்திற்குப் பொருந்த விடைபெற்றுக் கொண்டு அளவற்ற அடியார்களுடன் எழுந்தருளினார். - எ - று.

***மாடுபுனற் பொன்னி இழிந்து வடகரையில்***
***நீடுதிரு நெய்த்தானம் ஐயாறு நேர்ந்திறைஞ்சிப்***
***பாடுதமிழ் மாலைகளும் சாத்திப் பரவிப்போய்***
***ஆடல் புரிந்தார் திருப்பழனஞ் சென்றணைந்தார்.*** ***949***

(இ - ள்.) அருகிலுள்ள நீர்மயமாகிய காவிரிநதியிலிறங்கி அந்நதியின் வட கரையிலுள்ள சிறந்த திருநெய்த்தானத்தையுந் திருவையாற்றையுஞ் சென்று வணங்கிப் பாடுகின்ற திருநெறித் தமிழ்ப் பாமாலைகளைச் சாத்தித்துதித்துச் சென்று, திரு நடனஞ் செய்தருளும் ஆப்தசகாயரெழுந்தருளிய திருப்பழன மென்னுந் திருப்பதியைச் சென்று சேர்ந்தருளினார். - எ - று.

***செங்கண் விடையார் திருப்பழனஞ் சேர்ந்திரைஞ்சிப்***
***பொங்கிய காதலின்முன் போற்றும் பதிபிறவும்***
***தங்கிப்போய்ச் சண்பைநகர் சார்ந்தார் தனிப்பொருப்பின்***
***மங்கை திருமுலைப்பால் உண்டருளும் வள்ளலார்.*** ***950***

(இ - ள்.) பர்வத ராசபுத்திரியாகிய உமாதேவியாரது திருமுலைப் பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள் ளையார் சிவந்த கண்ணையுடைய இடபத்தை யடைந்து வணங்கி மிக்க விருப்பத்தோடு முன்னே துதித்த மற்றத் திருப்பதிகளிலும் வசித்துச் சென்று சீகாழித்திருப்பதியை யடைந்தருளினார். - எ - று.

***தென்னாட் டமண்மா சறுத்துத் திருநீறே***
***அந்நாடு போற்றுவித்தார் வந்தணையும் வார்த்தைகேட்டு***
***"எந்நாள் பணிவ(து)?" என ஏற்றெழுந்த மாமறையோர்***
***முன்னாக வேதம் முழங்க எதிர்கொண்டார்.*** ***951***

(இ - ள்.) பாண்டி நாட்டிலிருந்த சமணர்களாகிய குற்றத்தை யறுத்து, அந்நாட்டிலுள்ளவர்க ளனைவரும் விபூதி சாதனத் தைப் போற்றச் செய்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந் தருளும் வார்த்தையைக் கேள்வியுற்று (ப்பிள்ளையாரை) எப் பொழுது வணங்குவதென்று எதிர்கொண்டெழுந்த வேதியர்கள் (திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு) முன்னே வேதங்க ளொலிக்கும்படி எதிர்கொண்டார்கள். - எ - று.

***போத நீடுமா மறையவர் எதிர்கொளப் புகலிகா வலருந்தம், சீத***
***முத்தணிச் சிவிகைநின் றிழிந்தெதிர் செல்பவர் திருத்தோணி,***
***நாதர் கோயில்முன் தோன்றிட நகைமலர்க் கரங்குவித் திறைஞ்சிப்போய்***
***ஓத நீரின்மேல் ஓங்குகோயி லின்மணிக் கோபுரஞ் சென்றுற்றார். 952***

(இ - ள்.) ஞானமிக்க சிறந்த வேதியர்களெதிர் கொண்டு வரத் திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் குளிர்ந்த அழகிய முத்துச் சிவிகையினின்று மிறங்கி யெதிர் செல்பவர் ஸ்ரீ தோணி யப்பரது திருக்கோயில் தம்முன்னே தோன்ற, ஒளிபொருந்திய தாமரை மலர் போன்ற திருக்கரங்களைக் குவித்து வணங்கிச் சென்று, பிரளய வெள்ளத்தி லழியாமல் மிதந்தோங்கிய திருக் கோயிலினது அழகிய திருக்கோபுரத்தைச் சென்றடைந் தருளினார். - எ - று.

***அங்கம் மாநிலத் தெட்டுற வணங்கிப்புக் கஞ்சலி முடிஏறப்,***
***பொங்கு காதலிற் புடைவலங் கொண்டுமுன் பணிந்துபோற்***
***றெடுத்தோதித்,***
***துங்க நீள்பெருந் தோணியாங் கோயிலை அருளினால் தொழுதேறி,***
***மங்கை யோடுடன் வீற்றிருந்தருளினார் மலர்க்கழல் பணிவுற்றார். 953***

(இ - ள்.) பெரிய பூமியில் அஷ்டாங்கமாக விழுந்து வணங்கி யுள்ளே புகுந்து அஞ்சலியாகக் குவித்த திருக்கரங்கள் சிரசின் மேற்செல்ல மிக்க அன்போடும் பக்கத்திற் பிரதக்ஷணஞ்செய்து, திருமுன்னே வணங்கிப் போற்றுதல் செய்து உயர்ந்த பெரிய திருத்தோணியென்னும் ஆலயத்தைத் திருவருளினால் வணங்கி மேலேறிப் பெரியநாயகியாரோடு அங்கு வீற்றிருந்தருளுந் தோணியப்பரது தாமரை மலர் போன்ற திருவடிகளை வணங்கினார். - எ - று.

***"முற்று மெய்யெலாம் புளகங்கள் முகிழ்த்தெழ முகந்துகண் களிகூரப்***
***பற்றும் உள்ளம்உள்ளலைத்தொழும் ஆனந்தம் பொழிதரப் பணிந்தேத்தி,***
***உற்றுமை சேர்வ(து)" எனுந்திரு வியமகம் உவகையால் எடுத்தோதி,***
***"வென்றி யாகமீ ளவன்அவை எதிர்நதி மிசைவரு கரன்" என்பார். 954***

(இ - ள்.) திருமேனி முழுவதும் புளகாங்கிதமரும்பித் தோன்றவும், திருக்கோலத்தைத் தரிசித்துக் கண்கள் களிப்படையவும், (அப்பெருமானது திருவடிகளில்) பற்றிய திருவுள்ளத்தை யுள்ளே யலைத்து அதனாலெழுகின்ற ஆனந்த வெள்ளமானது பெருகவும் வணங்கித் துதித்து "உள்றுமை சேர்வது" என்னு முதலையுடைய திருஇயமகத் திருப்பதிகத்தைத் மகிழ்ச்சியாக எடுத்துத் துதித்துப் பாண்டியராசனது சபைக்கு எதிரே ஜெயமுண்டாகும்பொருட்டு "நதியிடைமிசைவருகரன்" எனத் திருக்கடைக் காப்பிற் பாடி யருளுவாராயினார். - எ - று.

***சீரின் மல்கிய திருப்பதி கத்தினில் திருக்கடைப் காப்பேற்றி***
***வாரின் மல்கிய வனமுலை யாளுடன் மன்னினார் தமைப்போற்றி***
***ஆரும் இன்னருள் பெற்றுமீண் டணைபவர் அங்கையால் தொழுதேத்தி***
***ஏரின் மல்கிய கோயில்முன் பணிந்து போந் திறைஞ்சினர் மணிவாயில்.***
***955***

(இ - ள்.) சிறப்பு மிகுந்த திருப்பதிகத்தில் தொடங்கிய திருக்கடைக்காப்பை வைத்து, வாரோடு பொருந்திய அழகிய திருத்தனங்களையுடைய பெரிய நாயகியாரோ டெழுந்தருளிய தோணியப்பரைத் துதித்து நிறைந்த திருவருளைப் பெற்று மீண்டு வந்தருளுந் திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது அழகிய திருக்கரத்தினால் வணங்கித் துதித்து, அழகில் மிக்க திருக்கோயிலின் முன்னே வணங்கிச் சென்று அழகிய திருவாயிலைப் பணிந்தருளினார். - எ - று.

***தாதை யாரும்அங் குடன்பணிந் தணைந்திடச் சண்பையர் தனிஏறு,***
***மூதெ மில்திரு வாயிலைத் தொழுதுபோய் முகைமலரக் குழலார்கள்***
***ஆத ரித்துவாழ்த் துரைஇரு மருங்கெழ அணிமறு கிடைச்சென்று***
***காத லித்தவர்க் கருள்செய்து தந்திரு மாளிகைக் கடைசார்ந்தார். 956***

(இ - ள்.) அங்குத் தந்தையாராகிய சிவபாதவிருதயரும் தோணியப்பரை வணங்கித் தம்மோடுவர, சீகாழியிலுள்ளவர் களது இளஞ்சிங்கம் போன்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் பழைய மதில் சூழ்ந்த திருவாயில் வணங்கிச் சென்று அரும்பாகிய மலரை யணிந்த கூந்தலையுடைய பிராமணஸ்திரீகள் விரும்பி வாழ்த்துதல் செய்யும் வாழ்த்துரைகள் இருபக்கங்களிலும் அதிகரிக்க அழகிய திருவீதியிற் சென்று தம்மை விரும்பியடைந்த வர்களுக்குத் திருவருள் செய்து தமது திருமாளிகையின் தலைவாயிலை யடைந்தருளினார். - எ - று.

***நறவம் ஆர்பொழிற் புகலியில் நண்ணிய திருஞான சம்பந்தர்***
***விறலி யாருடன் நீலகண் டப்பெரும் பாணார்க்கு மிகநல்கி***
***உறையு ளாம்அவர் மாளிகை செலவிடுத் துள்ளணை தரும்போதில்***
***அறலின் நேர்குழ லார்மணி விளக்கெடுத் தெதிர்கொள***
***அணைவுற்றார். 957***

(இ - ள்.) தேன் பொருந்திய சோலைசூழ்ந்த சீகாழிப்பதியி லவதரித்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் மதங்கசூளாமணி யாரோடு திருநீலகண்டயாழ்ப்பாண நாயனாருக்கு மிக்க பேரருள் செய்து அவரிருக்கையாகிய திருமாளிகைக்குச் செல்லும்படி விடைகொடுத்துத் தமது திருமாளிகைக் கெழுந் தருளும் பொழுது, கருமணல் போன்ற கூந்தலையுடைய பார்ப்பன மாதர்கள் மாணிக்கத் தீபமேந்தி யெதிர்கொள்ளும் படி வந்தார்கள். - எ - று.

***அங்க ணைந்தரு மறைக்குலத் தாயர்ந் தடிவணங்கிடத் தாமும்,***
***துங்க நீள்பெருந் தோணியில் தாயர்தாள் மனங்கொளத் தொழுவாராய்த்***
***தங்கு காதலின் அங்கமர்ந் தருளுநாள் தம்பிரான் கழல்போற்றிப்***
***பொங்கும் இன்னிசைத் திருப்பதிகம் பல பாடினார் புகழ்ந்தேத்தி. 958***

(இ - ள்.) அரிய மறையவர் குலத்தாயாராகிய பகவதி யம்மையார் அங்கு வந்து (பிள்ளையாரது) திருவடிகளை வணங்க, தாமும் மிகவு முயர்ந்த திருத்தோணியி லெழுந்தருளிய திருத்தாயாராகிய பெரிய நாயகியாரது திருவடிகளைத் தமதுள்ளத்திற் பொருந்தும்படி தொழுபவராய்ப், பொருந்திய விருப்பத்தோடு அத்திருமாளிகையி லெழுந்தருளியிருக்கு நாள்களில் தோணியப்பரது திருவடிகளைத் துதித்து, புகழ்ந்து மிக்க இசையினை யுடைய பல திருப்பதிகங்களைப் பாடி யருளினார். - எ - று.

***நீல மாவிடந் திருமிடற் றடக்கிய நிமலரை நேரெய்தும்,***
***காலமானவை அனைத்தினும் பணிந்துடன் கலந்தஅன் பர்களோடும்,***
***சால நாள்கள்அங் குறைபவர் தையலாள் தழுவிடக் குழைகம்பர்,***
***கோல மார்தரக் கும்பிடும் ஆசைகொண் டெழுங்குறிப் பினரானார்.***
***959***

(இ - ள்.) நீலநிறம் பொருந்திய மிக்க ஆலாகல விடத்தைக் கண்டத் திற்றரித்த தோணியப்பரை நேரே தரிசித்தற் குரிய காலங்கடோறுஞ் சென்று வணங்கித் தம்முடன் சேர்ந்த

அடியார்களோடும் அங்கு நெடுநாள் வசிக்குந் திருஞானசம் பந்தப்பிள்ளையார் ஸ்ரீ காமாட்சியம்மையார் தழுவக் குழைந்த திருவேகம்ப நாதரது திருக்கோலத்தை நிரம்பத் தரிசிக்கும் விருப்ப மேற்கொண்டு செல்லுங் குறிப்பினராயினார். - எ - று.

***"தாண்ட கத்திரு நாட்டினைச் சார்ந்துவந் தெம்பிரான் மகிழ்கோயில்,***
***கண்டு போற்றிநாம் பணிவ"தென் றன்பருக் கருள்செய்வார்***
***காலம்பெற்,***
***றண்ட ருக்கறி வரும்பெருந் தோணியில் இருந்தவர் அருள்பெற்றுத்,***
***தொண்டர் சூழ்ந்துடன் புறப்படத் தொடர்ந்தெழுந் தாதையார்க்***
***குரைசெய்வார். 960***

(இ - ள்.) தொண்டை நாட்டை யடைந்து எமது திருவேகம்ப நாதர் மகிழ்ந்து வீற்றிருந்தருளுந் திருவேகம்பத்தைத் தரிசித்துத் துதித்து நாம் வணங்குவோமென்று அடியார்களுக் கருள் செய்யும் பிள்ளையார் வணங்குதற்குரிய காலத்தைப் பெற்றுத் தேவர்களுக் கறிதற்கரிய தோணியப்பரது திருவருளை யடைந்து அடியார்கள் சூழ்ந்து தம்முடன் புறப்படத் தம்மைத் தொடர்ந்து வருகின்ற தந்தையாராகிய சிவபாதவிருதயருக்கு அருளிச் செய்வாராயினார். - எ - று.

***"அப்பர்! நீர்இனி இங்கொழிந் தருமறை அங்கிவேட் டன்போடும்***
***துப்பு நேர்சடை யார்தமைப் பரவியே தொழுதிரும்" எனச் சொல்லி,***
***மெய்ப்பெ ருந்தொண்டர் மீள்பவர் தமக்கெலாம் விடைகொடுத்***
***தருளிப்போய்,***
***ஒப்பி லாதவர் தமைவழி யிடைப்பணிந் துருகும்அன் பொடுசெல்வார்.***
***961***

(இ - ள்.) அப்பரே! நீர் இனி எம்மோடு வருதலை யொழிந்து, அரிய வேதவிதிப்படி யாகங்களைச் செய்து அன்புடன் பவளம் போலுஞ் சிவந்த சடைமுடியையுடைய தோணியப்பரைத் துதித்து வணங்கி இவ்விடத்திலேயே யிருமென்று கூறி, தம்முடன் வராமல் திரும்புகின்ற மெய்ம்மை பொருந்திய அடியார்களுக்கெல்லாம் விடைகொடுத்துச் சென்று, தாம் செல்லும் வழிகளி லெழுந்தருளிய ஒப்பற்ற சிவபெருமானை வணங்கி உருகுகின்ற அன்போடுஞ் செல்வராயினார். - எ - று.

***செல்வம் மல்கிய தில்லைமூ தூரினில் திருநடம் பணிந்தேத்திப்,***
***பல்பெ ருந்தொண்டர் எதிர்கொளப் பரமர்தந் திருத்தினை நகர்பாடி,***
***அல்கு தொண்டர்கள் தம்முடன் திருமாணி குழியினை அணைந்தேத்தி,***
***மல்கு வார்சடை யார்திருப் பாதிரிப் புலியூரை வந்துற்றார். 962***

(இ - ள்.) பலவகைச் செல்வங்களு நிறைந்த பழமை பொருந்திய ஸ்ரீ சிதம்பரத்தில் (ஸ்ரீ நடராசப் பெருமானது) பஞ்சகிருத்தியத் தாண்டவத்தை வணங்கித் துதித்து, சிறந்த பல திருத்தொண்டர்க ளெதிர்கொண்டு வணங்கச் சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருத்தினை நகரை யடைந்து திருப்பதிகம் பாடியருளி, நிறைந்த அடியார் திருக்கூட்டங்களோடு திருமாணிகுழி யென்னுந் திருப்பதியையடைந்து துதித்து, நிறைந்த நீண்ட சடைமுடியையுடைய தோன்றாத் துணையீச ரெழுந்தருளிய திருப்பாதிரிப்புலியூரென்னுந் திருப்பதியை வந்தடைந்தருளினார். - எ - று.

***கன்னி மாவனங் காப்பென இருந்தவர் கழிலிணை பணிந்தங்கு,***
***"முன்ன மாமுடக் கான்முயற் கருள்செய்த வண்ணமும்" மொழிந்தேத்தி,***
***மன்னு வார்பொழில் திருவடு கூரினை வந்தெய்தி வணங்கிப் போய்,***
***பின்னு வார்சடை யார்திரு வக்கரை பிள்ளையார் அணைவுற்றார். 963***

(இ - ள்.) கன்னிவனமே தமக்குக் காவலாக இருந்தருளிய அவ்வெம்பெருமானது இரண்டு திருவடிகளையும் வணங்கி, அங்கு முன்பு பெருமை பொருந்திய முடங்கிய காலையுடைய முயலுக்குத் திருவருள் செய்ததன்மையையும் தமது திருப்பதி கத்தில் லருளிச் செய்து துதித்து, நிலைபெற்ற நீண்ட சோலை சூழ்ந்த திருவடுகூரென்னுந் திருப்பதியை வந்தடைந்து வணங்கி அங்குநின்றுஞ் சென்றருளி, பின்னலாகிய நீண்ட சடைமுடியை யுடைய சிவபெருமானெழுந்தருளுந் திருவக்கரை யென்னுந் திருப்பதியைத் திருஞானசம்பந்தப்பிள்ளையா ரடைந்தருளி னார். - எ - று.

***வக்க ரைப்பெரு மான்தனை வணங்கஅங் கமருநாள் அருளாலே,***
***செக்கர் வேணியார் இரும்பைமா காளமுஞ் சென்றுதாழ்ந் துடன் மீண்டு,***
***மிக்க சீர்வளர் அதிகைவீ ரட்டமும் மேவுவார் தம்முன்பு,***
***தொக்க மெய்த்திருத் தொண்டர்வந் ததிர்கொளத் தொழுதெழுந் தணைவுற்றார். 964***

(இ - ள்.) திருவக்கரையி லெழுந்தருளிய சிவபெருமானை வணங்கி அங்கு எழுந்தருளியிருக்கு நாள்களில் அவ்வெம் பெருமான் திருவருளினாலே சிவந்த சடைமுடியையுடய சிவபெருமானது திருவிரும்பை மாகாளத்தையுஞ் சென்று வணங்கி உடனே திரும்பி, மிக்க சிறப்பு வளர்கின்ற திருவதிகை வீரட்டானத்தை யடையுந் திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு முன்னே கூட்டமாகிய மெய்யடியார்கள் வந்து எதிர்கொண்டு வணங்கத் தாமு மெதிரே வணங்கி யெழுந்து அங்கடைந் தருளினார். - எ - று.

***ஆதி தேவர்அங் கமர்ந்தவீ ரட்டானஞ் சென்றணை பவர்முன்னே,***
***பூதம் பாடநின் றாடுவார் திருநடம் புலப்படும் படிகாட்ட,***
***வேத பாலகர் பணிந்துமெய் யுணர்வுடன் உருகிய விருப்போடும்,***
***கோதி லாஇசை குலவு "குண்டைக்குறட் பூதம்"என் றெடுத்தேத்தி. 965***

(இ - ள்.) முதற்பெருங் கடவுளாகிய சிவபெருமான் எழுந் தருளிய திருவீரட்டானத்தைச் சென்றடையுந் திருஞான சம்பந்தப்பிள்ளையாருக்கு முன்னே பூதகணங்கள் பாடும்படி நின்று திருநடனஞ் செய்தருளுஞ் சிவபெருமான் தமது திரு நடனத்தை அவருக்குத் தெரியும்படி காட்டியருள, வேதமாகிய கடலின் கரையை யடைந்த பிள்ளையார் வணங்கி, மெய் யுணர்ச்சியோடு திருவுள்ளமுருகிய விருப்பத்துடன் குற்றமில் லாத இசை பொருந்திய "குண்டைக் குறட்பூதம்" என்று திருப் பதிக முதலெடுத்துத் துதித்து. - எ - று.

***பரவி ஏத்திய திருப்பதி கத்திசை பாடினார் பணிந்தங்கு***
***விரவும் அன்பொடு மகிழ்ந்தினி துறைபவர் விமலரை வணங்கிப்போய்***
***அரவநீர்ச்சடை அங்கணர் தாம்மகிழ்ந் துறைதிரு வாமாத்தூர்***
***சிரபுரத்துவந் தருளிய திருமறைச் சிறுவர்சென் றணைவுற்றார். 966***

(இ - ள்.) வணங்கித் துதித்து, திருப்பதிகத்தை இசை பொருந்தப் பாடிப் பணிந்து அங்கு நிறைந்த அன்புடன் மகிழ்ந்து இனிதாக எழுந்தருள்பவராகிய சீகாழிப்பதியி லவதரித்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் மலரகிதராகிய அவ் வீரட் டேசரை வணங்கி அங்குநின்று மெழுந்தருளி, ஒலிபொருந்திய கங்காநதியை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளுந் திருவாமாத்தூ ரென்னுந் திருப்பதியைச் சென்று சேர்ந்தருளினார். - எ - று.

***சென்ற ணைந்துசிந் தையின்மகிழ் விருப்பொடு திகழ்திரு வாமாத்தூர்ப்,***
***பொன்ற யங்குபூங் கொன்றையும் வன்னியும் புனைந்தவர் அடிபோற்றிக்,***
***"குன்ற வார்சிலை!" எனுந்திருப் பதிகமெய் குலவிய இசைபாடி,***
***நன்றும் இன்புறப் பணிந்துசெல் வார்திருக் கோவலூர் நகர்சேர்ந்தார். 967***

(இ - ள்.) சென்றடைந்தருளி மனதில் நிறைந்த விருப்பத் தோடும் விளங்குகின்ற திருவாமாத்தூரில் பொன்போல் விளங்குங் கொன்றை மாலையையும் வன்னி மாலையையு

மணிந்த சிவபெருமானது றிருவடிகளைத் துதித்து "குன்றவார் சிலை" என்னு முதலையுடைய திருப்பதிகத்தைப் பொருந்திய இசையோடு பாடியருளி, நன்மையு மின்பமும் பொருந்த வணங்கிச் செல்லும் பிள்ளையார் திருக்கோவலூரென்னுந் திருப்பதியை யடைந்தருளினார்.- எ - று.

**கோவல் நீடிய வீரட்டம் அமர்ந்தவர் குரைகழல் பணிந்தேத்தி**
**ஆவின் ஐந்துகந் தாடுவார் அறையணி நல்லூரை அணைந்தேத்திப்**
**பாவ லர்ந்தசெந் தமிழ்கொடு பரவுவார் பரவுசீர் அடியார்கள்**
**மேவும் அன்புறு மேன்மையாந் தன்மையை விளங்கிட அருள்செய்தார்.**
**968**

(இ - ள்.) சிறந்த திருக்கோவல் வீரட்டத்திலெழுந்தருளிய சிவபெருமானது சப்திக்கின்ற வீரக்கழலை யணிந்த திருவடிகளை வணங்கித் துதித்து, பசுவினிடத்துள்ள பஞ்ச கௌவியங்களையும் விரும்பி யபிஷேகங் கொண்டருளுஞ் சிவபெருமானெழுந்தருளுந் திரு அறையணி நல்லூரென்னுந் திருப்பதியை யடைந்து துதித்துச் செந்தமிழ்த் திருப்பதிகம் பாடியருளும் பிள்ளையார் (யாவரும்) வணங்குஞ் சிறப்பினையுடைய அடியார்கள், பொருந்திய அன்பால் வரும்மேன்மைத் தன்மையை விளங்கவைத்துப் பாடியருளினார். - எ - று.

**சீரின் மன்னிய பதிகமுன் பாடிஅத் திருஅறை யணிநல்லூர்,**
**வாரின் மல்கிய கொங்கையாள் பங்கர்தம் மலைமிசை வலங்கொள்வார்,**
**பாரின் மல்கிய தொண்டர்கள் இமையவர் நாடொறும் பணிந்தேத்தும்,**
**காரின் மல்கிய சோலை அண்ணாமலை அன்பர்காட் டிடக்கண்டார்.**
**969**

(இ - ள்.) சிறப்போடு பொருந்திய திருப்பதிகத்தைத் திருமுன்னே பாடி யருளி அத்திருவறையணி நல்லூரென்னுந் திருப்பதியில், கச்சணிந்த தனங்களையுடைய உமாதேவி பாகரான அறையணி நாதரது திருமலையின்மேல் பிரதட்சணஞ் செய்யும் பிள்ளையார், உலகத்தில் நிறைந்த அடியார்களும் தேவர்களும் நாள்தோறும் வணங்கித் துதிக்கும் மேகங்கள் நிறைந்த சோலைசூழ்ந்த திருவண்ணாமலையை அடியார்கள் காட்ட அதனைத் தரிசித்தருளினார். - எ - று.

**அண்ணா மலைஅங் கமரர்பிரான் வடிவு போன்று தோன்றுதலும்**
**கண்ணால் பருகிக் கைதொழுது கலந்து போற்றுங் காதலினால்**
**"உண்ணா முலை"யாளெனும் பதிகம் பாடித்தொண்ட ருடன்போந்து**
**தெண்ணீர் முடியார் திருவண்ணமலையைச் சென்று சேர்வுற்றார். 970**

(இ - ள்.) அத்திருவண்ணாமலையானது அங்கெழுந்தருளுந் தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது திருவுருவைப் போலத் தோன்றவும், தமது கண்களால் தரிசித்துக் கைகூப்பி மனங் கலந்து துதிக்கும் பெருவிருப்பினால் "உண்ணாமுலை யுமையாள்" என்னு முதலையுடைய திருப்பதிகத்தைப் பாடி யருளி, அடியார்களோடும் சென்று, தெளிந்த கங்கை நீரை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமா னெழுந்தருளிய திருவண்ணாமலையைச் சென்று சேர்ந்தருளினார். - எ - று.

***அங்கண் அணைவார் பணிந்தெழுந்து போற்றி செய்தம் மலைமீது***
***தங்கு விருப்பில் வீற்றிருந்தார் தாட்டா மரைகள் தம்முடிமேல்***
***பொங்கும் ஆர்வத் தொடும்புனைந்து புளகம் மலர்ந்த திருமேனி***
***எங்கு மாகிக் கண்பொழியும் இன்ப அருவி பெருக்கினார்.*** 971

(இ - ள்.) அத்திருப்பதியையடையும் பிள்ளையார் வணங்கி யெழுந்து துதித்து, அத்திருமலையின்மேல் வசிக்கும் விருப்பத் தோடு வீற்றிருந்தருளிய ஸ்ரீ அருணாசலேசரது திருவடித் தாமரைகளைத் தமது திருமுடியின்மேல் மிக்க விருப்பத்தோடுந் தரித்துப் புளகாங்கிதங்கொண்ட தமது திருமேனி முழுதும் ஆனந்தக் கண்ணீராகிய அருவியைப் பெருக்கியருளினார். -எ-று.

***ஆதி மூர்த்தி கழல்வணங்கி அங்கண் இனிதின் அமருநாள்***
***பூத நாத ரவர்தம்மைப் "பூவார் மல"ராற் போற்றிசைத்துக்***
***காத லால்அத் திருமலையிற் சிலநாள் வைகிக் கமழ்கொன்றை***
***வேத கீதர் திருப்பதிகள் பிறவும் பணியும் விருப்புறுவார்.*** 972

(இ - ள்.) முதற்கடவுளாகிய அண்ணாமலையாரது திருவடி களை வணங்கி அங்கு மகிழ்வோடு எழுந்தருளியிருக்கு நாள் களில், பூதகணங்கட்கு நாதராகிய அவ்வெம்பெருமானை "பூவார் மலர்" என்று தொடங்கித் திருப்பதிகம் பாடியருளி, அத் திருமலையின்மேல் விருப்பத்தோடு சில நாள்கள் வசித்து, வாசனை வீசுகின்ற கொன்றை மாலையை யணிந்த சிவ பெருமான் எழுந்தருளும் மற்றத்திருப்பதிகளையும் வணங்கும் விருப்பங் கொள்வாராயினார். - எ - று.

***மங்கை பாகர் திருவருளால் வணங்கிப் போந்து வடதிசையில்***
***செங்கண் விடையார் பதிபலவும் பணிந்து புகலிச் செம்மலார்***
***துங்க கரைகள் கான்பலவும் கடந்து தொண்டைத் திருநாட்டில்***
***திங்கள் முடியார் இனிதமருந் திருவோத் தூரைச் சேர்வுற்றார்.*** 973

(இ - ள்.) சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் உமாதேவிபாகராகிய ஸ்ரீ அருணாசலேசரது திருவருளினால் அத்திருவண்ணாமலையை வணங்கி அவ்விடத் தினின்று மெழுந்தருளி வடதிசையிலுள்ள சிவந்த கண்ணை யுடைய இடபத்தை வாகனமாகக் கொண்டருளுஞ் சிவ பெருமான் வீற்றிருந்தருளிய பல திருப்பதிகளையும் வணங்கி, உயர்ந்த பல மலைகளையுங் கடந்து, செல்வங்கணிறைந்த தொண்டை நாட்டில் சந்திரசேகரராகிய சிவபெருமான் மகிழ் வுற்றெழுந்தருளிய திருவோத்தூரென்னுந் திருப்பதியை யடைந் தருளினார். - எ - று.

***தேவர் முனிவர்க்(கு) ஓத்தளித்தார் திருவோத்தூரில் திருத்தொண்டர்***
***தாவில் சண்பைத் தமிழ்விரகர் தாம்அங் கணையக் களிசிறந்து,***
***மேவுங் கதலி தோரணங்கள் விளக்கு நிரைத்து நிறைகுடமும்,***
***பூவும் பொரியும் சுண்ணமும்முன் கொண்டு போற்றி எதிர்கொண்டார்.***
***974***

(இ - ள்.) (சிவபெருமான் அந்தணர் வடிவங் கொண்டு) தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் வேதத்தை யோதுவித்தருளிய திருவோத்தூரிலிருக்கும் அடியார்கள், குற்றமற்ற சீகாழிப்பதியி லவதரித்த திருநெறித் தமிழ்த் தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் அங்கு எழுந்தருளுதலால் மகிழ்ச்சி யடைந்து, சிறப்புப் பொருந்திய வாழைகளையும், தோரணங்களையும் மணிவிளக்குகளையும், வரிசையாக வைத்து, பூரணகும்பங்களை யும், பூவையும், பொரியையும், பொற்சுண்ணங்களையும் முன்னே தாங்கிக் கொண்டு துதித்து எதிர் கொண்டார்கள். - எ - று.

***சண்பை வேந்தர் தண்டரளச் சிவிகை நின்றும் இழிந்தருளி***
***நண்பின் மிக்க சீரடியார் சூழ நம்பர் கோபுரஞ்சூழ்***
***விண்பின் னாக முன்னோங்கும் வியன்பொற் புரிசை வலங்கொண்டு***
***பண்புநீடிப் பணிந்தெழுந்து பரமர் கோயி லுள்ளடைந்தார். 975***

(இ - ள்.) சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள் ளையார் குளிர்ந்த முத்துச் சிவிகையினின்று மிறங்கியருளித் தம்மிடத்து நேசமிகுந்த சிறந்த அடியார்கள் அருகிற்சூழ்ந்துவர, சிவபெருமானது திருக்கோபுரத்தைச் சூழ்ந்த மேகமண்டலமும் பின்னிடும்படி முன்னிட்டோங்கிய பெரிய பொன்மயமாகிய திருமதிலைப்பிரதட்சணஞ் செய்து அன்புமிகுந்து வணங்கி யெழுந்து சிவபெருமானது திருக்கோயிலினுள்ளடைந்தருளி னார். - எ - று.

***வார ணத்தின் உரிபோர்த்த மைந்தர் உமையாள் மணவாளர்***
***ஆரணத்தின் உட்பொருளாய் நின்றார் தம்முன் அணைந்திறைஞ்சி***
***நார ணற்கும் பிரமற்கும் நண்ணற் கரிய கழல்போற்றும்***
***கார ணத்தின் வரும்இன்பக் கண்ணீர் பொழியக் கைதொழுதார். 976***

(இ - ள்.) (கயாசுரனென்னும்) யானையினது தோலைப் போர்த் தருளிய வலியாளரும், உமையவள் நாயகரும், வேதத் தினுட் பொருளாய் நின்றவருமாகிய சிவபெருமான் திருமுன்னே யடைந்து வணங்கி, திருமால் பிரமனென்னு மிருவராலு மடைதற்கரிய திருவடிகளைத் துதிக்குங் காரணத்தினால் வருகின்ற ஆனந்தக் கண்ணீர் பொழியும்படிக் கை கூப்பி வணங்கினார். - எ - று.

***தொழுது விழுந்து பணிந்தெழுந்து சொன்மா லைகளால் துதிசெய்து***
***முழுதும் ஆனார் அருள்பெற்றுப் போந்து வைகி முதல்வர்தமைப்***
***பொழுது தோறம் புக்கிறைஞ்சிப் போற்றி செய்தங் கமர்வார்முன்***
***அழுது வணங்கி ஒருதொண்டர் அமணர்திறத்தொன் றறிவிப்பார். 977***

(இ - ள்.) கை கூப்பிப் பூமியில் விழுந்து வணங்கி யெழுந்து திருப்பதிகங்களாற் றுதித்து. சராசரங்களாகிய எல்லாந் தாமே யாகிய சிவபெருமானது திருவருளைப் பெற்றுப் புறத்திற் சென்று (அங்குள்ள திருமடத்தில்) வசித்தருளி, முதற் பெருங் கடவுளாகிய சிவபெருமானைக் காலங்கள் தோறுஞ் சென்று வணங்கித் துதித்து அங்கு எழுந்தருளியிருக்குந் திருஞான சம்பந்தப்பிள்ளையாருக்கு முன்னே ஒரு சிவனடியார் அழுது அவரது திருவடிகளில் வணங்கிச் சமணர்களால் தமக்கு நேர்ந்த ஒரு செயலை அறிவிப்பாராயினார். - எ - று.

***"அங்கை அனலேற் றவர்க்கடியேன் ஆக்கும் பனைக ளானவெலாம்***
***மங்கு லுறநீண் டாண்பனையாய்க் காயாவாகக் கண்டமணர்***
***'இங்கு நீரிட் டாக்குவன காய்த்தற் கடைவுண் டோ?'என்று***
***பொங்கு நகைசெய் திழித்து ரைத்தார் அருள வேண்டும்"எனப்புகல. 978***

(இ - ள்.) அழகிய திருக்கரத்தில் மழுப்படையை யேந்திய சிவபெருமானுக்கு அடியேனாகிய யான் வைத்து வளர்த்த பனைமரங்களெல்லாம் மேகமண்டலமளவு முயர்ந்து ஆண்பனைகளாய்க் காயாதிருக்க அதனைச் சமணர்கள் கண்டு, இங்கே நீர் வைத்து வளர்த்த ஆண்பனைகள் காய்த்தற்கு

ஒருபாய முண்டோவென்று மிக்க அவமதிப்பாகச் சிரித்து இழிவு செய்து பேசினார்கள்; அவ்விழிவு தீர அருள் செய்ய வேண்டுமென்று வேண்டிக் கொள்ள. - எ - று.

***பரம னார்தந் திருத்தொண்டர் பண்பு நோக்கிப் பரிவெய்தி***
***விரவு காத லொடும்விரைந்து விமலர் கோயில் புக்கருளி***
***அரவும் மதியும் பகைதீர அணிந்தார் தம்மை அடிவணங்கி***
***இரவு போற்றித் திருப்பதிகம் இசையிற் பெருக எடுத்தருளி. 979***

(இ - ள்.) (அவ்வாறு கூறி வேண்டிக் கொண்ட) சிவனடியா ரது ஆராமைக் குணத்தைப் பார்த்து அவர் மேலிரக்கங் கொண்டு மிக்க பெருவிருப்போடும் விரைந்து சென்று சிவ பெருமானது திருக்கோயிலுட் புகுந்தருளி, பாம்பையுஞ் சந்திர னையும் பகை நீங்கும்படி யணிந்தருளிய சிவபெருமானது திருவடி களை வணங்கி இரவின்கண் துதித்துப் ("பூத்தேர்ந்தாயன") என்னு முதலையுடைய திருப்பதிகத்தை இசையினாற் பெருகும் படி யெடுத்துப்பாடியருளி. - எ - று.

***விரும்பு மேன்மைத் திருக்கடைக்காப் பதனில் விமலர் அருளாலே***
***"குரும்பை ஆண்ப னைஈனும்" என்னும் வாய்மை குலவுதலால்***
***நெருங்கும் ஏற்றுப் பனையெல்லாம் நிறைந்த குலைக ளாய்க்குரும்பை***
***அரும்பு பெண்ணை யாகியிடக் கண்டோ ரெல்லாம் அதிசயித்தார். 980***

(இ - ள்.) (யாவரும்) விரும்புகின்ற மேன்மையையுடைய திருக்கடைக்காப்பில் சிவபெருமானது திருவருளினால் "குரும்பை யாண்பனையீனும்" என்னும் வாய்மை விளங்கு தலால் நெருங்கிய ஆண்பனைகளெல்லாம் நிறைந்த குலைகளை யுடையனவாய்க்குரும்பைகளை யரும்புகின்ற பெண்பனையாக, அதனைக் கண்ட யாவரும் அதிசயமடைந்தார்கள். - எ - று.

***சீரின் மன்னுந் திருக்கடைக்காப் பேற்றிச் சிவனார் அருள்பெற்றுப்***
***பாரில் நீடும் ஆண்பனைமுன் காய்த்துப் பழுக்கும் பண்பினால்***
***நேரும் அன்பர் தங்கருத்து நேரே முடித்துக் கொடுத்தருளி***
***ஆரும் உவகைத் திருத்தொண்டர் போற்ற அங்கண் இனிதமர்ந்தார்.***
***981***

(இ - ள்.) சிறப்புப் பொருந்திய திருக்கடைக்காப்பில் வைக்கப் பெற்று, அதனால் சிவபெருமான் றிருவருளை யடைந்து, உலகத்தில் வளர்ந்த அவ்வாண்பனைகள் முன்னே பெண்பனை களாய்க் காய்த்துப் பழுக்குந் தன்மையினால், தம்மைக் குறை-

கூறியிருந்த அடியாரது மனக் கருத்தைத் தடையின்றி முடித்துக் கொடுத்தருளி, நிறைந்த மகிழ்ச்சியையுடைய அடியார்கள் துதிக்கும்படி அத்திருப்பதியில் இனிதாக எழுந்தருளியிருந்தார்.- எ - று.

***தென்னாட் டமண்மா சறுத்தார்தஞ் செய்கை கண்டு திகைத்தமணர்***
***அந்நாட் டதனை விட்டகல்வார் சிலர்தங் கையிற் குண்டிகைகள்***
***"என்னா வனமற் றிவை?" என்று தகர்ப்பார்; "இளைவன் ஏறுயர்த்த***
***பொன்னார் மேனிப் புரிசடையான் அன்றே!" என்று போற்றினார். 982***

(இ - ள்.) பாண்டி நாட்டிலுள்ள சமணர்களாகிய குற்றத்தை யறுத்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது செய்கையைக் கண்டு சமணர்கள் திகைத்து அத்திருவோத்தூரை விட்டு நீங்குவாராயினார்; சிலர் தங்கள் கையிலுள்ள கமண்டலங்களை (எடுத்து) இவை யாது பயன் கொடுப்பன வென்று உடைப்பவர் களாய், முதற்கடவுளாயுள்ளவர் இடபக் கொடியையுயர்த்திய பொன்போலுந் திருமேனியையும், முறுக்காகிய சடைமுடியை யுமுடைய சிவபெருமானன்றோவென்று அவ்வெம்பெருமா னைத் துதித்தார்கள். - எ - று.

***பிள்ளையார்தந் திருவாக்கிற் பிறத்தலால்அத் தாலமும்முன்(பு)***
***உள்ளபாசம் விட்டகல ஒழியாப்பிறவி தனையொழித்துக்***
***கொள்ளுநீர்மைக் காலங்கள் கழித்துச் சிவமே கூடினவால்***
***வள்ளலார்மற் றவரருளின் வாய்மைகூறின் வரம்பென்னாம்? 983***

(இ - ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவாக்கி லமைத்துப் பாடப்பட்டதனால் அப்பனைகளும் முன்புள்ள (ஆணவாதி) பாசங்கள் தம்மைவிட்டு நீங்க, தம்மை நீங்காதிருந்த பிறவியையொழித்து, தாம் உலகத்தில் பொருந்தியப் பிராரத் துவம் புசிக்குங் காலத்தைக் கழித்து, பின்பு சிவத்தையடைந்தன. (அதனால்) அருள் வள்ளலாகிய திருஞானசம்பந்தப்பிள் ளையாரது திருவருட் பெருமையை யெடுத்துச் சொல்லப்புகின் அதற்களவு எவ்வாறாம். - எ - று.

***அங்கண் அமரர் பெருமானைப் பணிந்துபோந்தா டரவினுடன்***
***பொங்குகங்கை முடிக்கணிந்தார் மகிழும்பதிகள் பலபோற்றி***
***மங்கைபாகர் அமர்ந்தருளும் வயல்மாகறலை வழுத்திப்போய்க்***
***கொங்குமலர்நீர்க் குரங்கணின்முட் டத்தைச்சென்று குறுகினார். 984***

(இ - ள்.) அத்திருப்பதியிலெழுந்தருளிய தேவர்கள் நாயக ராகிய வேதநாதேசரை வணங்கிச் சென்று, படம் விரித்தாடு கின்ற பாம்புடன் பொங்குகின்ற கங்கை நதியைச் சடைமுடியி லணிந்த சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளும் பல திருப்பதி களைத் துதித்து, உமாதேவியை வாமபாகத்திலுடைய கலகங் காத்த வரதேசரெழுந்தருளிய வயல் சூழ்ந்த திருமாகறலென்னுந் திருப்பதியைத் துதித்துச் சென்று, வாசனை பொருந்திய மலர் களையுடைய நீர் சூழ்ந்த திருக்குரங்கணின் முட்டமென்னுந் திருப்பதியைச் சென்று சேர்ந்தருளினார். - எ - று.

***ஆதிமுதல்வர் குரங்கணின்முட் டத்தைஅணைந்து பணிந்தேத்தி***
***நீடுவாழுந் திருத்தொண்டர் போற்றநிகரில் சண்பையினில்***
***வேதமோடு சைவநெறி விளக்கவந்த கவுணியனார்***
***மாதொர்பாகர் தாம்மன்னும் மதில்சூழ்காஞ்சி மருங்கணைந்தார். 985***

(இ - ள்.) வேதங்களுடன் சைவ சமயம் விளங்கும்படி ஒப்பற்ற சீகாழிப்பதியிலவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் முதற் பெருங்கடவுளாகிய வாலீசரெழுந்தருளிய திருக்குரங் கணின் முட்டமென்னுந் திருப்பதியையடைந்து வணங்கித் துதித்து, நல்ல நீதியோடு வாழ்கின்ற திருத்தொண்டர்கள் தம்மைச் சூழ்ந்து துதிக்க, பார்வதிபாகராகிய ஸ்ரீ ஏகாம்பரநாத ரெழுந்தருளிய மதில் சூழ்ந்த ஸ்ரீ காஞ்சிபுரத்தின் சமீபத்தி லடைந்தருளினார். - எ - று.

***நீடுகாஞ்சி வாணம் நிலவுமெய்மை அன்பரும்***
***மாடுசண்பை வள்ளலார் வந்தணைந்த ஓகையால்***
***கூடுகின்ற இன்பநேர் குலாவுவீதி கோலினார்***
***காடுகொண்ட பூகம்வாழை காமர்தோர ணங்களால். 986***

(இ - ள்.) பெருமை பொருந்திய ஸ்ரீகாஞ்சிபுரத்தில் வாழ்பவர் களும் விளங்குகின்ற மெய்ம்மை பொருந்திய சிவனடியார்களும், சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அத் திருப்பதியின் சமீபத்தில் வந்தடைந்தருளிய மகிழ்ச்சியினால், தங்களிடத்துண்டாகிய சந்தோஷத்தைப்போல, காடாக நிறைந்த கமுகு - வாழை - அழகிய தோரண முதலியவைகளால் விளங்குகின்ற திருவீதியை அலங்கரித்தார்கள். - எ - று.

**கொடிநிரைத்த வீதியில் கோலவே திகைப்புறம்**
**கடிகொள் மாலை மொய்த்தபந்தர் கந்தநீர்த் தசும்படன்**
**மடிவில்பொன் விளக்கெடுத்து மாதர்மைந்தர் மல்குவார்.**
**படிவிளக்கும் அன்பரும் பரந்தபண்பில் ஈண்டுவார். 987**

(இ - ள்.) கொடிகளை வரிசையாக நிறுத்திய திருவீதியிலுள்ள அழகிய வேதிகையின் புறத்தில், மணம் பொருந்திய பூமாலைகள் கட்டிய பந்தலினிடத்து பெண்களும், ஆண்களும் வாசனை பொருந்திய நீர் நிறைந்த பூரணகும்பங்களுடன் கெடுதலில்லாத பொன்மயமாகிய விளக்குகளை யேந்திக் கொண்டு நிறைந்திருப்பார்கள், பூமியில் விளங்குகின்ற அடியார்களும் நிறைந்த பேரன்போடு நெருங்குவார்கள். - எ-று.

**கோதைமார் ஆடலும் குலாவுதொண்டர் பாடலும்**
**வேதகீத நாதமும் மிக்கெழுந்து விம்மவே**
**காதல்நீடு கஞ்சிவாணர் கம்பலைத் தெழுந்துபோய்**
**மூதெயிற் புறம்புசென் றணைந்துமுன் வணங்கினார். 988**

(இ - ள்.) பூமாலையை யணிந்த தேவதாசிகள் செய்யும் நடனமும், விளங்குகின்ற சிவனடியார்களது பாடலும், வேதங்களையோதுதலாலுண்டாகிய பேரோசையும் அதிகரித்தெழுந்து எங்கும் பரவ, விருப்பமிகுந்த ஸ்ரீ காஞ்சிபுரத்தில் வாழ்கின்றவர்கள் (அரகரவென்று) ஆரவாரித்தெழுந்து சென்று, பழைமை பொருந்திய திருமதிலின் புறத்து வந்தடைந்து பிள்ளையார் திருமுன் வணங்கினார்கள். - எ - று.

**சண்பையாளும் மன்னர்முன்பு தொண்டர்வந்து சார்தலும்**
**பண்புநீடி யானமுன் பிழிந்திறைஞ்சு பான்மைக்கண்(டு)**
**எண்பெருக்கு மிக்கதொண்டர் அஞ்சலித் தெடுத்தசொல்**
**மண்பரக்க வீழ்ந்தெழுந்து வானமுட்ட ஆர்த்தனர். 989**

(இ - ள்.) சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு முன்னே அடியார்கள் வந்து சேரவும், அப்பிள்ளையார் குளிர்ச்சி மிகுந்த முத்துச் சிவிகையினின்று மிறங்கித்தம்மை வணங்குதலைக்கண்டு, அளவில்லாத சிறந்த அடியார்கள் அஞ்சலி கூப்பித்தொழுது அரகரவென்றெடுத்த வோசையானது உலகத்திற் பரவ, வீழ்ந்து வணங்கி யெழுந்து, ஆகாயத்தை முட்டும்படி ஆரவாரித்தார்கள். - எ - று.

***சேணுயர்ந்த வாயில்நீடு சீர்கொள்சண்பை மன்னனார்***
***வாணிலாவு நீற்றணி விளங்கிட மனத்தினில்***
***பூணுமன்பர் தம்முடன் புகுந்திடப் புறத்துள்ளோர்***
***காணும் ஆசை யிற்குவித்த கைந்நிரை எடுத்தனர்.*** ***990***

(இ - ள்.) நெடுந்தூரமுயர்ந்த வாயில்கள் மிக்க சிறந்த சீகாழித்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் ஒளி விளங்கும் விபூதியி னழகைப் பிரகாசப்படுத்த, மனத்திற் பொருந் திய மெய்யன்பினையுடைய அடியார்களோடு (அக்காஞ்சி நகரத்தினுள்ளே) சென்றருள, அந்நகர்ப்புறத்திலுள்ள சனங்கள் பிள்ளையாரைத் தரிசிக்க வேண்டுமென்னும் ஆசையினால் குவித்த கைகளை வரிசையாக எடுத்தார்கள். - எ - று.

***விடுநெடுந் தெருவினூடு மிக்கதொண்டர் ஆர்ப்பெழக்***
***கயல்நெடுங்கண் மாதரும் காதல்நீடு மாந்தரும்***
***புயல்பொழிந்த தாமெனப் பூவினோடு பொற்சு(ண்)ணம்***
***இயலுமாறு வாழ்த்தெடுத் திருமருங்கும் வீசினார்.*** ***991***

(இ - ள்.) மிக்க விசாலமுடைய திருவீதியினிடத்து மேன்மை பொருந்திய அடியார்கள் செய்யும் (அரகரவென்னும்) ஆரவார மானது அதிகரிக்க, கயல்மீன் போலும் நீண்ட கண்களையுடைய மாதரும் விருப்பமிகுந்த புருஷர்களும் மழை பொழிந்தாற்போல மலர்களையும் பொற்சுண்ணங்களையும் பிள்ளையாருக்கு ஏற்ற முறைமைப்படி வாழ்த்தொலி கூறி இரண்டு பக்கங்களிலும் வீசினார்கள். - எ - று.

***இன்னவண்ணம் யாவரும் இன்பமெய்த எய்துவார்***
***பின்னுவார் சடைமுடிப் பிரான்மகிழ்ந்த கோயில்கள்***
***முன்னுறப் பணிந்துபோய் மெய்வரைத் திருமகள்***
***மன்னுபூ சனைமகிழ்ந்த மன்னர்கோயில் முன்னினார்.*** ***992***

(இ - ள்.) இவ்வாறு அக்காஞ்சி நகரத்திலுள்ள யாவரும் மகிழ்வடையும்படி யெழுந்தருளுகின்ற திருஞானசம்பந்தப்பிள் ளையார், பின்னலாகிய நீண்ட சடை முடியையுடைய சிவ பெருமான் மகிழ்ந்தெழுந்தருளும் (அவ்வீதியின் பக்கங்களி லுள்ள) ஆலயங்களை முன்னே வணங்கிச் சென்று, நெருங்கிய சிகரங்களையுடைய பர்வத ராசபுத்திரியாகிய பார்வதி தேவியார் செய்த பூசையை மகிழ்ந்தேற்றருளி ஸ்ரீஏகாம்பர நாதரது திருக்கோயிலை யடைந்தருளினார். - எ - று.

***கம்பவாணர் கோயில்வாயில் கண்டுகை குவித்தெடுத்(து)***
***உம்பரோங்கு கோபுரத்தின் முன்னிறைஞ்சி உள்ளணைந்து***
***அம்பொன்மா ளிகைப்புறத்தின் அன்பரோடு சூழவந்(து)***
***இம்பர்ஞாலம் உய்யவந்த பிள்ளையார் இறைஞ்சுவார். 993***

(இ - ள்.) ஸ்ரீ ஏகாம்பரநாதரது திருக்கோயிலின் திருவாயிலைக் கண்டு திருக்கரங்களைச் சிரசின் மேற் குவித்தெடுத்து ஆகாயமளவாக உயர்ந்த திருக்கோபுரத்தின் முன்னே வணங்கி உள்ளே சென்று, அழகிய பொன்மயமாகிய திமாளிகையின் பக்கத்தில் அடியார்களோடு பிரதட்சணமாக வந்து, இந் நிலவுலக முய்யும்படி அவதரித்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் வணங்குவாராயினார். - எ - று.

***செம்பொன்மலைக் கொடிதழுவக் குழைந்தருளுந் திருமேனிக்***
***கம்பரைவந் தெதிர்வணங்குங் கவுணியர்தங் காவலனார்***
***பம்புதுளிக் கண்ணருவி பாய்ந்துமயிர்ப் புளகம்வரத்***
***தம்பெருகு மனக்காதல் தள்ளநில மிசைத்தாழ்ந்தார். 994***

(இ - ள்.) சிவந்த இமயபர்வத ராசபுத்திரியாகிய காமாட்சியம்மையார் தழுவுதலால் (முல்லைத் தழும்பும் வளைத்தழும்பும் பெற்றுக்) குழைந்த திருமேனியையுடைய திருவேகம்பநாதரை யடைந்து எதிரே வணங்குங் கவுணியர் குலத்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அதிகரித்துத் துளிக்கும் ஆனந்தக் கண்ணீராகிய அருவியானது திருமேனியிற் பாய்தலால் மயிர்ப்புளக முண்டாகத் தமது திருவுள்ளத்திலுண்டாகிய பெரு விருப்பமானது பரவசப்படுத்தப் பூமியில் வீழ்ந்து வணங்கினார்.- எ - று.

***பலமுறையும் பணிந்தெழுந்து பங்கயச்செங் கைமுகிழ்ப்ப***
***மலருமுகம் அளித்ததிரு மணிவாயால் "மறையான்" என்று***
***உலகுய்ய எடுத்தருளி உருகியஅன் பென்புருக்க***
***நிலவுமிசை முதற்றாளம் நிரம்பியநீர் மையில்நிகழ. 995***

(இ - ள்.) பலதரம் சாஷ்டாங்கமாக வணங்கி யெழுந்து, தாமரை மலர்போன்ற சிவந்த திருக்கரங்கள் சிரசின்மேற்குவிய, மலர்ந்த திருமுகத்திற்றோன்றிய அழகிய திருவாக்கினால் "மறையான்" என்று உலகத்தாருய்யும்படி முதலெடுத்தருளி, மனமுருகுகின்ற பேரன்பானது எலும்பையுருகச் செய்ய, விளங்குகின்ற சப்தசுரங்களோட முதன்மை பொருந்திய தாளமும் நிறைந்த இயல்போடு பொருந்தும்படி. - எ - று.

**பாடினார்; பணிவுற்றார்; பரிவுறும்ஆ னந்தக்கூத்(து)**
**ஆடினார் அகங்குழைந்தார்; அஞ்சலிதஞ் சென்னியின்மேல்**
**சூடினார்; மெய்ம்முகிழ்த்தார்; சூகரமும் அன்னமுமாய்த்**
**தேடினார் இருவருக்குந் தெளிவரியார் திருமகனார். 996**

(இ - ள்.) பன்றியாகவும் அன்னமாகவும் உருவங்கொண்டு திருவடியையுந் திருமுடியையுந் தேடிய திருமால் பிரமனென்னு மிருவர்க்குங் காணுதற்கரிய ஸ்ரீ சிவபெருமானது திருக்குமார ராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருப்பதிகம் பாடினார்; நமஸ்காரஞ் செய்தார்; அன்பு பொருந்திய ஆனந்தக் கூத்தாடி னார்; திருவுள்ளங் குழைந்தார்; திருக்கரங்களை யஞ்சலியாகக் குவித்துத் தமது சிரசின்மேற் சூடினார்; திருமேனியிற் புளகமுற் றருளினார். - எ - று.

**மருவியஏ ழிசைபொழிய மனம்பொழியும் பேரன்பால்**
**பெருகியகண் மழைபொழியப் பெரும்புகலிப் பெருந்தகையார்**
**உருகியஅன் புள்ளலைப்ப உமைதழுவக் குழைந்தவரைப்**
**பருகியமெய் யுணர்வினொடும் பரவியே புறத்தணைந்தார். 997**

(இ - ள்.) பெரிய சீகாழியிலவதரித்தருளிய திருஞான சம்பந்தப்பிள்ளையார் பொருந்திய ஏழிசைகளும் அதிகரிக்க மனத்தினின்றுந் தோன்றிய பேரன்பினால் பெருகிய ஆனந்தக் கண்ணீர் சொரிய, மனமுருகுதற்குக் காரணமாகிய அன்பானது தமதுள்ளத்தை யலையச்செய்ய, ஸ்ரீகாமாட்சியம்மையார் தழுவக்குழைந்தருளிய ஸ்ரீஏகாம்பரநாதரைத் தியானிக்கின்ற மெய்யுணர்ச்சியோடும் துதித்துப் புறத்து வந்தருளினார். - எ-று.

**புறத்தணைந்த தொண்டருடன் போந்தமைந்த திருமடத்தில்**
**பெறற்கரும்பே றுலகுய்யப் பெற்றருளும் பிள்ளையார்**
**மறப்பரிய காதலுடன் வந்தெய்தி மகிழ்ந்துறைவார்**
**அறப்பெருஞ்செல் வக்காமக் கோட்டம்அணைந் திறைஞ்சினார். 998**

(இ - ள்.) யாவரும் பெறுதற்குரிய சிவஞானத்தை யுலகத்தா ருய்யும்படி பெற்றருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தம்முடன் ஆலயத்தின் புறத்தில் வந்த அடியார்களோடு எழுந் தருளி அங்குள்ள திருமடத்தில் மறத்தற் கரிய பெருவிருப்போடு வந்து சேர்ந்து மகிழ்ந்து வசித்தருள்பவராய்ப் பின்பு, (முப்பத் திரண்டு) தருமங்களையும் வளர்ந்தருளிய மிக்க செல்வத்தை யுடைய (ஸ்ரீகாமாட்சியம்மை யாரெழுந் தருளிய) திருக்காமக் கோட்ட மென்னுந் திருக்கோயிலை யடைந்து வணங்கியருளி னார். - எ - று.

**திருவேகம் பத்தமர்ந்த செழுஞ்சுடரைச் சேவடியில்**
**ஒருபோதும் தப்பாதே உள்ளுருகிப் பணிகின்றார்**
**மருவுதிரு இயமகமும் வளர்இருக்குக் குறள்மற்றும்**
**பெருகும் இசைத் திருப்பதிகத் தொடைபுனைந்தார் பிள்ளையார். 999**

(இ - ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவேகாம்பர மென்னுந் திருக்கோயிலிலெழுந்தருளிய செழுமை பொருந்திய சோதிசொரூபராகிய ஸ்ரீ ஏகாம்பரநாதரைச் சிவந்த திருவடி களில் ஒரு காலமுந் தவறாமல் மனமுருகி வணங்குகின்றவராய், மேன்மை பொருந்திய திருஇயமகமும் இசைவளர்கின்ற திருவிக்குக் குறளும் இவையல்லாத பிறவுமாகிய இசைபெருகு கின்ற திருப்பதிகமாலைகளைப் பாடியருளினார். - எ - று.

**நீடுதிருப் பொழிற்காஞ்சி நெறிக்காரைக் காடிறைஞ்சிச்**
**சூடுமதிக் கண்ணியார் துணைமலர்ச்சே வடிபாடி**
**ஆடுமவர் இனிதமரும் அனேகதங்கா வதம்பரவி**
**மாடுதிருத் தானங்கள் பணிந்தேத்தி வைகுநாள். 1000**

(இ - ள்.) உயர்ந்த சோலை சூழ்ந்த ஸ்ரீ காஞ்சி நகரத்திலுள்ள திருநெறிக்காரைக்காட்டை வணங்கி, இளம்பிறையைக் கொண்டை மாலையாகத் தரித்த காரைத் திருநாதரது இரண்டு தாமரை மலர் போன்ற திருவடிகளைத் துதித்து, திருநடனஞ் செய்தருளுஞ் சிவபெருமா னெழுந்தருளிய கச்சியநேகதங்காவத மென்னுந் திருப்பதியைத் துதித்து அக்காஞ்சிபுரத்தினருகி லுள்ள மற்றத் திருப்பதிகளையும் வணங்கித் துதித்து அங்கெழுந் தருளியிருக்கும் நாள்களில். - எ - று.

**எண்டிசையும் போற்றிசைக்குந் திருப்பதிமற் றதன்புறத்துத்**
**தொண்டருடன் இனிதேகித் தொல்லைவிடம் உண்டிருண்ட,**
**கண்டர்மகிழ் மேற்றளியும் முதலான கலந்தேத்தி**
**மண்டுபெருங் காதலினால் வணங்கிமீண் டினிதிருந்தார். 1001**

(இ - ள்.) எட்டுத் திக்கிலுள்ளவர்களும் போற்றுதல் செய்யும் அக்காஞ்சிபுரத்தின் அருகிலுள்ள ஸ்தலங்களில் அடியார் திருக் கூட்டத்தோடு இனிமையாகத் துதித்து, முன்னாளில் ஆலாகல விடத்தை யுண்டு அதனால் இருண்ட கண்டத்தையுடைய சிவ பெருமான் மகிழ்ந்தெழுந்தருளிய திருமேற்றளி (திருவோணகாந் தன்றளி) முதலிய பல திருப்பதிகளை யடைந்து துதித்து, நெருங்கிய பெருவிருப்பினால் வணங்கி மீண்டு முன்போலத் திருமடத்தை யடைந்து எழுந்தருளியிருந்தார். - எ - று.

**அப்பதியில் விருப்பினொடும் அங்கணரைப் பணிந்தமர்வார்**
**செப்பரிய புகழ்ப்பாலித் திருநதியின் தென்கரைபோய்**
**மைப்பொலியுங் கண்டர்திரு மாற்பேறு மகிழ்ந்திறைஞ்சி**
**முப்புரஞ்செற் றவர்தம்மை மொழிமாலை சாத்தினார். 1002**

(இ - ள்.) அக்காஞ்சிபுரத்தில் விருப்பத்தோடும் அருட் கண்ணராகிய ஸ்ரீஏகாம்பரநாதரை வணங்கி அங்கெழுந்தருளி யிருக்குந் திருஞானசம்பந்தப்பிள்ளையார், சொல்லுதற்கரிய புகழையுடைய பாலிநதியின் தென்கரைவழியே சென்று, காளகண்டராகிய மால்வணங்கீசரெழுந்தருளிய திருமாற்பேறு என்னுந் திருப்பதியை மகிழ்ந்து வணங்கித் திரிபுரதகனராகிய அவ்வெம்பெருமானைத் திருப்பதிக மாலைகளால் துதித் தருளினார். - எ - று.

**திருமாற்பே றுடையவர்தந் திருவருள்பெற் றெழுந்தருளிக்**
**கருமாலுங் கருமாவாய்க் காண்பரிய கழல்தாங்கி**
**மருஆற்றல் மழவிடையார் திருவல்லம் வணங்கித்தம்**
**பெருமாற்குத் திருப்பதிகப் பெரும்பிணையல் அணிவித்தார். 1003**

(இ - ள்.) திருமாற்பேற்றி லெழுந்தருளும் மால்வணங்கீசரது திருவருளைப் பெற்று அங்கு நின்று மெழுந்தருளிக் கருநிறத்தை யுடைய திருமாலும் பன்றிவடிவமெடுத்துக் காணுதற்கரிய திருவடிகளைச் சுமந்து வருகின்ற வல்லமை பொருந்திய மழ விடையையுடைய வல்லநாதரெழுந்தருளிய திருவல்லமென்னுந் திருப்பதியை வணங்கித் தமது முதல்வராகிய அவ்வெம்பெருமா னுக்குத் திருப்பதிகமாகிய பெரிய பாமாலையைச் சாத்தியருளி னார். - எ - று.

**அங்குள்ள பிறபதியில் அரிக்கரியார் கழல்வணங்கிப்**
**பொங்குபுனற் பால்யாற்றின் புடையில்வாட பாலிறைவர்**
**எங்குமுறை பதிபணிவார் இலம்பையங்கோட் டூர்இறைஞ்சிச்**
**செங்கண்விடை உகைத்தவரைத் திருப்பதிகம் பாடினார். 1004**

(இ - ள்.) அப்பக்கங்களிலுள்ள மற்றத் திருப்திகளிலெழுந் தருளிய விஷ்ணுவினால் காணுதற்கரிய சிவபெருமானது திருவடிகளை வணங்கி, பொங்குகின்ற நீர் நிறைந்த பாலிநதியின் வடபக்கத்தில் சிவபெருமானெழுந்தருளிய திருப்பதியெங்கும் வணங்குங் கருத்துடையவராய்த் திருஇலம்பையங் கோட்டூரென் னுந்திருப்பதியை வணங்கிச் சிவந்த கண்களையுடைய இடபத்தை வாகனமாகக் கொண்டருளிய ஸ்ரீசந்திரசேகரரைத் திருப்பதிகத்தால் பாடியருளினார். - எ - று.

***திருத்தொண்டர் பலர்சூழத் திருவிற்கோ லமும்பணிந்து***
***பொருட்பதிகத் தொடைமாலை புரம்எரித்த படிபாடி***
***அருட்புகலி ஆண்டகையார் தக்கோலம் அணைந்தருளி***
***விருப்பினொடும் திருவூறல் மேவினார் தமைப்பணிந்தார். 1005***

(இ - ள்.) திருவருள் நிறைந்த சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் பலதிருத்தொண்டர்கள் சூழும் படி திருவிற்கோலமென்னுந் திருப்பதியை வணங்கிப் பொருள மைந்த திருப்பதிகமாலயைத் திரிபுரமெரித்த தன்மையை யமைத்துப் பாடியருளி, பின் தக்கோலத்தையடைந்து விருப்பத் தோடும் திருவூறலி லெழுந்தருளிய உமாபதீசரை வணங்கி யருளினார். - எ - று.

***தொழுதுபல முறைபோற்றிச் சுரர்குருவுக் கிளையமுனி***
***வழுவில்தவம் புரிந்தேத்த மன்னினார் தமைமலர்ந்த***
***பழுதில்செழுந் தமிழ்மாலைப் பதிகஇசை புனைந்தருளி***
***முழுதும்அளித் தவர்அருளால் போந்தனர்முத் தமிழ்விரகர். 1006***

(இ - ள்.) முத்தமிழ்த் தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் வணங்கிப் பலமுறை துதித்துத் தேவகுருவாகிய பிரகஸ்பதி பகவானுக்குத் தம்பியாகிய சம்வர்த்த முனிவர் குற்ற மற்ற தவஞ்செய்து துதிக்கும்படி வீற்றிருந்தருளிய உமாபதீசரை விளங்குகின்ற பழுதில்லாத செந்தமிழ்த் திருப்பதிகமாலையால் இசையோடு சாத்தியருளி, சராசரங்களாகிய எல்லாப் பொருள் களையுமளித்தருளிய அவ்வெம்பெருமானது திருவருளினால் அங்குநின்றும் எழுந்தருளினார்.- எ - று.

***குன்றநெடுஞ் சிலையாளர் குலவியபல் பதிபிறவும்***
***நின்றவிருப் புடன்இறைஞ்சி நீடுதிருத் தொண்டருடன்***
***போன்றயங்கு மணிமாடப் பூந்தராய்ப் புரவலனார்***
***சென்றணைந்தார் பழையனூர்த் திருவாலங் காட்டருகு. 1007***

(இ - ள்.) பொன்மயமாக விளங்குகின்ற அழகிய மாடங் களையுடைய சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள் ளையார் மேருமலையாகிய நீண்ட வில்லையுடைய சிவ பெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகள் பிறவற்றையும் பொருந்திய விருப்பத்தோடு வணங்கிச் சிறந்த அடியார் திருக் கூட்டங்களோடு பழையனூரிலுள்ள திருவாலங்காடென்னுந் திருப்பதியினருகில் சென்றடைந்தருளினார். - எ - று.

**"இம்மையிலே புவியுள்ளோர் யாருங் காண ஏழுலகும் போற்றி சைப்ப எம்மை ஆளும்,**
**அம்மைதிருத் தலையாலே நடந்து போற்றும் அம்மையப்பர் திருவாலங் காடாம்" என்று,**
**தம்மையுடை யவர்மூதூர் மிதிக்க அஞ்சிச் சண்பைவரும் சிகாமணியார் சாரச்சென்று,**
**செம்மை நெறி வழுவாத பதியின் மாடோர் செழும்பதியில் அன்றிரவு பள்ளி சேர்ந்தார். 1008**

(இ - ள்.) இப்பிறப்பிலே பூமியிலுள்ளோர் யாவருங் கண்ணாற் காணவும், ஏழுலகத்திலுள்ளவர்களுந் துதிசெய்யவும், எம்மை யடிமையாகக் கொண்டருளிய காரைக்காலம்மையார் திருத்தலையாலே நடந்து துதிக்கும் அம்மையப்பராகிய சிவ பெருமானெழுந்தருளிய திருவாலங்காடு இதுவாமென்று சீகாழிலவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தம்மை யடிமையாகவுடைய அம்வெம்பெருமானது பழமை பொருந்திய திருப்பதியைத் தமது திருவடிகளால் மிதிப்பதற்கு அச்சங் கொண்டு அத்திருப்பிதயின் சமீபத்திற் சென்று, நன்னெறியினின் றும் வழுவாத (மெய்யன்பர்கள் வாழுகின்ற) அத்திருப்பதியி னருகிலுள்ள ஓர் செழுமை பொருந்திய ஊரில் அன்றிரவு பள்ளி கொண்டருளினார். - எ - று.

**மாலையிடை யாமத்துப் பள்ளிகொள்ளும் மறையவனார் தம்முன்பு கனவி லேவந்(து),**
**ஆலவனத் தமர்ந்தருளும் அப்பர் "நம்மை அயர்த்தனையோ பாடுதற்(கு)?" என்ற ருளிச்செய்ய,**
**ஞாலம்இருள் நீங்க வரும் புகலி வேந்தர் நடுஇடை யாமத்தின்இடைத் தொழுதுணர்ந்து,**
**வேலைவிடம் உண்டவர்தங் கருணை போற்றி மெய்யுருகித் திருப்பதிகம் விளம்ப லுற்றார். 1009**

(இ - ள்.) திருவாலங்காட்டில் வீற்றிருந்தருளுஞ் சிவ பெருமான் மாலைக்காலத்தோடு கூடிய நடுயாமத்தில் பள்ளி கொண்டருளுந் திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு முன்னே கனவிலெழுந்தருளி நம்மைப் பாடுதற்கு மறந்தனையோவென்று அருளிச் செய்ய, உலகத்திலுள்ளவர்கள் அஞ்ஞானமாகிய இருளினின்று நீங்கும்படி அவதரித்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் மிக்கவிருள் பொருந்திய நடுராத்திரியில்

துயிலுணர்ந்து வணங்கிச் சமுத்திரத்திற்றோன்றிய ஆலகால விடத்தையுண்டருளிய அச்சிவபெருமானது திருவருளை துதித்து அன்பால் திருமேனி குழைந்து திருப்பதிகம் பாடத் தொடங்கினார். - எ - று.

***"துஞ்சவரு வார்" என்றே எடுத்த ஓசைச் சுருதிமுறை வழுவாமல் தொடுத்த பாடல்,***
***எஞ்சிலா வகை முறையே பழைய னூரார் இயல்பு மொழி காத்தகதை சிறப்பித் தேத்தி,***
***அஞ்சனமா கரியுரித்தார் அருளாம்" என்றே அருளும் வகை திருக்கடைப் காப்பமையச் சாத்திப்,***
***பஞ்சுரமாம் பழையதிறங் கிழமை கொள்ளப்பாடினார் பாரெல்லாம் உய்ய வந்தார். 1010***

(இ - ள்.) "துஞ்சவருவார்" என்று முதலெடுத்தவோசை யோடு சுருதியின் முறைவழுவாமல் தொடுத்த திருப்பதிகப் பாடலில், குறைவில்லாத வண்ணம் பழையனூர் வேளாளர்கள் வணிகனுக்குக் கூறிய உறுதி மொழியைத் தவறாமற்காத்த சரித்திரத்தைச் சிறப்பித்துத் துதித்து, கருமை நிறம் பொருந்திய பெரிய (கயாசுரனென்னும்) யானையை யுரித்தருளிய சிவ பெருமானது திருவருளாமென்று அவர் தமக்குச் சொப்பன நிகழ்த்திப் பாடச் செய்த வகையையுந் திருக்கடைக்காப்பில் பொருந்தப் பாடியருளி, பண்ணமைந்த திருப்பதிகவிசையா லாகிய பழமை பொருந்திய பயனை உரிமையாகப் பொருந்த உலகத்தாரெல்லாரும் உய்யும் வண்ண மவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் பாடியருளினார். - எ - று.

***நீடும்இசைத் திருப்பதிகம் பாடிப் போற்றி நெடுங்கங்குல் இருள் நீங்கி நிகழ்ந்த காலை,***
***மாடுதிருத் தொண்டர்குழாம் அணைந்த போது மாலையினில் திருவால வனத்து மன்னி,***
***ஆடுமவர் அருள்செய்த படியை எல்லாம் அருளிச்செய்(து) அகமலரப் பாடி ஏத்திச்,***
***சேடர்பயில் திருப்பதியைத் தொழுது போந்து திருப்பாசூர் அதன் மருங்கு செல்ல லுற்றார். 1011***

(இ - ள்.) மிக்க இசை பொருந்திய திருப்பதிகம் பாடித் துதித்து, நீண்ட நடுயாம விருள்நீங்கி விடிந்தகாலத்தில்

திருத்தொண்டர் திருக்கூட்டங்க ளருகில் எதிர்கொள்ள அணைந்த பொழுது, இராப்பொழுது திருவாலங்காட்டி லமர்ந்து திருநடனஞ் செய்தருளும் ஊர்த்ததாண்டவேசர் அருளிச் செய்த வகைகளை யெல்லாம் அவ்வடியார்களுக்குக் கூறியருளி மனமகிழப் பாடித் துதித்து, பெரியோர்கள் வசித்தற்கிடமாகிய அத்திருப்பதியை வணங்கி அவ்விடத்தி னின்று மெழுந்தருளித் திருப்பாசூரென்னுந் திருப்பதியை யடைந்தருளினார். - எ - று.

**திருப்பாசூர் அணைந்தருளி அங்கு மற்றச் செழும்பதியோர்**
**எதிர்கொள்ளச் சென்று புக்குப்,**
**பொருப்பரையன் மடப்பாவை இடப்பாகத்துப் புராதனர்வேய்**
**இடங்கொண்ட புனிதர் கோயில்,**
**விருப்பினுடன் வலங்கொண்டு புக்குத் தாழ்ந்து வீழ்ந்தெழுந்து**
**மேனியெலாம் முகிழ்ப்ப நின்றே,**
**அருட் கருணைத் திருவாளன் நாமஞ் "சிந்தை இடையார்"**
**என்றிசைப்பதிகம் அருளிச் செய்தார். 1012**

(இ - ள்.) திருப்பாசூரரென்னுந் திருப்பதியை யடைந்தருளி, அவ்விடத்தில் அந்தச் செழுமைபொருந்திய திருப்பதியிலுள்ள வர்கள் எதிர்கொள்ளும்படி சென்று சேர்ந்து பர்வதராஜபுத்திரி யாகிய உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய புராதனராகிய மூங்கிலிடங் கொண்டருளிய சிவபெருமானது திருக்கோயிலை விருப்பத்தோடு பிரதட்சணஞ் செய்து உள்ளே புகுந்தருளி பூமியில் விழுந்து வணங்கி யெழுந்து திருமேனி முழுவதும் மயிர்ப்புளகங்கொள்ள நின்றருளித் திருவருட் பெருஞ் செல்வ ராகிய ஸ்ரீ பாசூர் நாதரது திருப்புகழை "சிந்தை யிடையார்" என்று முதலெடுத்துத் திருப்பதிகம் பாடியருளி னார். - எ - று.

**மன்னுதிருப் பதிகஇசை பாடிப் போற்றி வணங்கிப்போந்தப்பதியில்**
**வைகி மாடு,**
**பிஞ்ஞகர்தம் வெண்பாக்கம் முதலாயுள்ள பிறபதிகள்**
**பணிந்தணைவார் பெருகும் அன்பால்,**
**முன்னிறைந்த திருவாய்மஞ்சனநீ ராட்டும் முதல்வேடர் கண்ணப்ப நாய**
**னாரை,**
**உன்னியொளிர் காளத்தி மலைவ ணங்க உற்றபெரு வேட்கையுடன்**
**உவந்து சென்றார். 1013**

(இ - ள்.) நிலைபெற்ற திருப்பதிகத்தை இசை பொருந்தப் பாடித் துதித்து வணங்கிப் புறத்திற்சென்று, அத்திருப்பதியி லெழுந்தருளி, அதனருகிலுள்ள சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருவெண்பாக்க முதலிய மற்றத் திருப்பதிகளையும் வணங்கி யெழுந்தருளுந் திருஞானசம்பந்தப்பிள்ளையார் மிக்க அன்பினால், முன்பு, திருவாயில் நிறைந்த திருமஞ்சனநீரை ஸ்ரீகாளத்திநாதருக்கு அபிஷேகஞ் செய்தருளிய முதன்மை பொருந்திய வேடர் குலத்தி லவதரித்த கண்ணப்பநாயனாரைச் சிந்தித்து விளங்குகின்ற திருக்காளத்திமலையைத் தாம் வணங்க, பொருந்திய பெருவிருப்பத்தோடு மகிழ்ந்து செய்தருளினார். - எ - று.

***மிக்கபெருங் காதலுடன் தொண்டர்சூழ மென்புனல்நாட் டினையகன்று வெற்பும் கானும்,***
***தொக்கபெரு வன்புலக்கான் அடைந்து போகிச் சூலகபா லக்கரத்துச் சுடருமேனி,***
***முக்கண்முதற் றலைவனிட மாகியுள்ள முகில்நெருங்கு காரிகரை முன்னர்ச் சென்று***
***புக்கிறைஞ்சிப் போற்றிசைத்(து)அப் பதியில் வைகிப் பூதியரோ டுடன்மகிழ்ந்தார் புகலிவேந்தர். 1014***

(இ - ள்.) சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள் ளையார் அதிகரித்த பெருவிருப்பத்தோடு அடியார்கள் சூழ்ந்துவர, மேன்மை பொருந்திய நீர்வளமிக்க பாலிவடகரை நாட்டை யகன்று, மலைகளுங் காடுகளுநெருங்கிய பெரிய குறிஞ்சி நிலக்காட்டை யடைந்து சென்று, சூலத்தையும் கபாலத்தையுமணிந்த திருக்கரத்தையும், எரிபோல் விளங்குகின்ற திருமேனியையும், மூன்று கண்களையுமுடைய முதற் கடவு ளாகிய சிவபெருமானுக்கு இடமாகவுள்ள மேகங்கள் நெருங்கிய திருக்காரிகரை யென்னுந் திருப்பதியை யடைந்து திருக்கோயி லுட் புகுந்து (சிவபெருமானை) வணங்கித் துதித்து, அத்திருப்பதி யில் வசித்தருளி விபூதியை யணிந்த அடியார்களோடு மகிழ்ந் தருளினார். - எ - று.

**இறைவர்திருக் காரிகரை இறைஞ்சி அப்பால் எண்ணில்பெரு வரைகளிரு மருங்கும் எங்கும்,**
**நிறையருவி நிரைபலவாய் மணியும் பொன்னும் நிறைதுவலை புடைசிதறி நிகழ்ப வாகி,**
**அறைகழல்வா னவர்க்கிறைவன் குலிசவேற்றால் அற்றசிறை பெற்றவன்மேல் எழுவதற்குச்,**
**சிறகடித்துப் பறக்கமுயன் றுயர்ந்த போலும் சிலைநிலத்தில் எழுந்தருளிச் செல்லா நின்றார். 1015**

(இ - ள்.) சிவபெருமான் வீற்றிருந்தருளிய திருக்காரிகரை யென்னுந்திருப்பதியை வணங்கி, அதற்கப்பால், அளவில்லாத பெரிய மலைகள் வழியினிருபக்கங்களெங்கும் நிறைந்த அருவி யாற்றின் வரிசைகள் பல வுடைத்தாய், மணிகளும் பொன்னும் நிறைந்த நீர்த்திவலைகளை யருகிற்சிந்திப் பெருகுதலுடைத்தாய், சப்திக்கின்ற வீரக்கழலையணிந்த தேவர்களுக் கிறைவனாகிய இந்திரன் தனது வச்சிராயுதத்தினால் அறுக்கப்பட்டு நீங்கிய சிறகைத் (தாம்) பெற்று, அவ்விந்திரன்மேல் போர் செய்ய வெழு தற்குச் சிறகுகளை யடித்துப் பறக்க முயற்சி செய்தாற்போலு முள்ள குறிஞ்சி நிலத்தி லெழுந்தருளிச் செல்கின்றவராயினார்.- எ - று.

**மாதவர்கள் நெருங்கு குழாம் பரந்து செல்ல மணிமுத்தின் பரிச்சின்னம் வரம்பின் றாகப்,**
**பூதிநிறை கடலணைவ தென்னச் சண்பைப் புரவலனார் எழுந்தருளும் பொழுது சின்னத்,**
**தீதிலொலி பலமுறையும் பொங்கி எங்கும் "திருஞான சம்பந்தன் வந்தான்" என்னும்,**
**நாதம் நிறை செவியினவாய் மாக்க ளெல்லாம் நலமருவு நினைவொன்றாய் மருங்கு நண்ண. 1016**

(இ - ள்.) அடியார்களது நெருங்கிய திருக்கூட்டங்கள் பரவிச் செல்லவும், அழகிய முத்துச் சின்னங்கள் அளவின்றி நெருங்கவும், விபூதியால் நிறைந்த வோர் சமுத்திரம் வந்தாற் போலச் சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளியபொழுது திருச்சின்னங்களின் குற்றமற்ற ஒலி யானது பல தரமு மதிகரித்து எவ்விடங்களிலும் திருஞான சம்பந்தப்பிள்ளையா ரெழுந்தருளினாரென்று (தெரிவிக்கும்படி யூதுகின்ற) நாதத்தால் நிறைந்த காதை யுடையனவாய் மிருகங்க ளெல்லாம் நன்மைமிக்க தங்க ளெண்ணங்க ளொன்றுபட்டு அருகிற் சூழ - எ - று.

**கானவர்தங் குலம்உலகு போற்ற வந்த கண்ணப்பர் திருப்பாதச்**
**செருப்புத் தோய,**
**மானவரிச் சிலைவேட்டை ஆடும் கானும் வானமறை நிலைபெரிய**
**மரமும் தூறும்,**
**ஏனைஇமை யோர்தாமும் இறைஞ்சி ஏத்தி எய்தவரும் பெருமையவாம்**
**எண்ணி லாத,**
**தானமும்மற் றவைகடந்து திருக்கா ளத்தி சாரஎழுந் தருளினார்**
**சண்பை வேந்தர். 1017**

(இ - ள்.) சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் வேடர்குலத்தில் உலகத்தாரனைவருந் துதிக்கும்படி அவதரித்தருளிய கண்ணப்பநாயனார் தமது திருவடிகளிலணிந்த செருப்புத்தோயும்படி வலிமை பொருந்திய வரிந்து கட்டிய வில்வேட்டையாடுகின்ற காடும், ஆகாயத்தை மறைக்கத் தக்க உயர்ந்த பெரிய மரங்களும், புதர்களும், தேவர்களும் வணங்கித் துதித்து அடைதற்கரிய பெருமையை யுடைய எண்ணிறந்தவிடங்களுமாகிய அவ்விடங்களை நீங்கித் திருக்காளத்தி மலையைப் பொருந்த வெழுந்தருளினார். - எ - று.

**"அம்பொன்மலைக் கொடிமுல்லைப்பால் குழைத்த ஞானத் தமுதுண்ட**
**பிள்ளையார் அணைந்தார்" என்று,**
**செம்பொன்மலை வில்லியார் திருக்கா ளத்தி சேர்ந்ததிருத்**
**தொண்டர்குழாம் அடைய ஈண்டிப்,**
**பம்புசடைத் திருமுனிவர் கபாலக் கையர் பலவேடச் சைவர்குல வேடர்**
**மற்றும்,**
**உம்பர்தவம் புரிவார்அப் பதியில் உள்ளோ ருடன்விரும்பி எதிர்கொள்ள**
**உழைச்சென்றுற்றார். 1018**

(இ - ள்.) அழகிய இமயபர்வதராசபுத்திரியாகிய உமாதேவியார் திருமுலைப்பாலோடு குழைத்த சிவஞானமாகிய அமுதத்தை யுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளினாரென்று, சிவந்த பொன்மயமாகிய மேருவை வில்லாகவுடைய ஸ்ரீ காளத்திநாத ரெழுந்தருளிய திருக்காளத்தி யென்னுந் திருப்பதியில் வாழும் அடியார் திருக்கூட்டங்கள் ஒருங்குகூடி, நெருங்கிய சடைமுடியை யுடைய சைவமுனிவர் களும், கபாலத்தை யேந்திய கையையுடைய காபாலிக்களும், பலவாகிய மாவிரதவேடம் - வைரவவேடம் பூண்ட சைவர் களும், வேடர் குலத்தி லுயர்ந்தவர்களும், அவர்களன்றி,

அம்மலையின்மேல் தவஞ் செய்கின்றவர்களும் அத்திருப்பதி யிலுள்ளாருடன் விரும்பி யெதிர்கொள்ளும்படியாக அத்திருப் பதியினுள்ளே சென்றருளினார். - எ - று.

***திசைஅனைத்தும் நீற்றினொளி தழைப்ப மண்மேல் சிவலோகம்***
***அணைந்ததெனச் சென்ற போது,***
***மிசைவிளங்கும் மணிமுத்தின் சிவிகை நின்றும் வேதபா லகர்இழிந்து***
***வணங்கி மிக்க,***
***அசைவில் பெருந் தொண்டர்குழாம் தொழுது போற்றி "அர" எனும்ஓ***
***சையின்அண்டம் நிறைப்ப அன்பால்,***
***இசைவிளங்குந் தமிழ்விரகர் "திருக்கா ளத்தித் திருமறைஇம்***
***மலைகளில்யா(து)?" என்று கேட்டார். 1019***

(இ - ள்.) திக்குகளிலெல்லாம் விபூதியினொளிதழைக்க உலகத்தில் சிவலோகமடைந்தது போல அத்திருப்பதியிலுள்ள வர்களெழுந்தருளும்பொழுது, மேலே விளங்குகின்ற அழகிய முத்துச்சிவிகையினின்றும், வேதத்தின் கரையை யடைந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் இறங்கி வணங்கி, கெடாத பெருமை பொருந்திய அடியார் திருக்கூட்டங்கள் வணங்கித் துதித்து அரகரவென்னு மோசையினால் விண்ணுலகத்தை நிறைக்க, அன்பினால் புகழ் விளங்குகின்ற திருநெறியத் தமிழ்த் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் (அவ்வடியார் களை) இந்த மலைகளில் திருக்காளத்தித் திருமலை யாதென்று வினாவியருளினார். - எ - று.

***வந்தணைந்த மாதவத்தோர் வணங்கித் தாழ்ந்து "மறைவாழ்வே!***
***சைவசிகா மணியே! தோன்றும்,***
***இந்தமலை காளனோ டத்தி தம்மில் இகழிவழி பாடுசெய இறைவர்***
***மேவும்,***
***அந்தமில்சீர்க் காளத்தி மலையாம்" என்ன அவனிமேற்***
***பணிந்தெழுந்தஞ் சலிமேற் கொண்டு,***
***சிந்தைகளி மகிழ்ச்சிவரத் திருவி ராகம் "வானவர்கள் தானவர்" என்***
***றெடுத்துச் செல்வார். 1020***

(இ - ள்.) பிள்ளையாரை யெதிர்கொள்ளும்படி வந்தடைந்த மகத்தாகிய தவத்தையுடைய அடியார் தாழ்ந்து வணங்கி, வேதங்களின் வாழ்வாயுள்ளவரே! சைவசமயத்திற்கு இந்த மலையானது பாம்புடன் யானையும் தங்களுக்குள்ளே பகைமை கொண்டு பூசை செய்யும்படி காளத்திநாத ரெழுந்தருளிய

அளவற்ற சிறப்பினையுடைய திருக்காளத்தி மலையாமென்று கூற, உடனே பூமியின்மேல் சாட்டாங்கமாக நமஸ்கரித்தெழுந்து திருக்கரங்களை அஞ்சலி கூப்பிச் சிரசின் மேல் வைத்துத் திருவுள்ளத்தில் களிப்புடன் மகிழ்ச்சி யுண்டாகத் திருவிராகத் திருப்பதிகத்தை "வானவர்க டானவர்கள்" என்று முதலெடுத் துப் பாடிக்கொண்டு செல்வாராயினார். - எ - று.

***திருந்தியஇன் னிசைவகுப்புத் திருக்கண் ணப்பர் திருத்தொண்டு சிறப்பித்துத் திகழப் பாடிப்,***
***பொருந்துபெருந் தவர்கூட்டம் போற்ற வந்து பொன்முகலிக் கரைஅணைந்து தொழுது போகி,***
***அருந்தவர்கள் எம்மருங்கும் மிடைந்து செல்ல ஆளுடைய பிள்ளையார் அயன்மால் தேடும்,***
***மருந்துவெளி யேஇருந்த திருக்கா ளத்தி மலையடிவா ரஞ்சார வந்து தாழ்ந்தார். 1021***

(இ - ள்.) திருத்தமாகிய இனிய இசையோடு கூடிய திருப்பதிகத்தை ஸ்ரீ கண்ணப்பநாயனாரது திருத்தொண்டைச் சிறப்பித்து விளங்கப் பாடியருளி, தம்மைச் சூழ்ந்துள்ள மிக்க தவத்தினையுடைய அடியார் திருக்கூட்டங்கள் துதிக்க வெழுந் தருளி, பொன்முகலி யாற்றினது கரையை யடைந்து வணங்கி அங்கு நின்று மெழுந்தருளி, அரியதவத்தினையுடைய அடியார் கள் எந்தப் பக்கங்களிலும் நெருங்கிவர, திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருமாலும் பிரமனும் அடியையும் முடியையுந் தேடும்படி நின்றருளிய சிவபெருமானாகிய ஓர் மருந்து வெளிப்பட்டெழுந்தருளியிருந்த திருக்காளத்தித் திருமலை யினது அடிவாரத்தைப் பொருந்த வெழுந்தருளிச் சாட்டாங்க மாக வணங்கியருளினார். - எ - று.

***தாழ்ந்தெழுந்து திருமலையைத் தொழுது கொண்டே தடஞ்சிலா தலசோபா னத்தால் ஏறி,***
***வாழ்ந்திமையோர் குழாம்நெருங்கு மணிநீர் வாயில் மருங்கிறைஞ்சி உள்புகுந்து வளம்பொற் கோயில்,***
***சூழ்ந்து வலங் கொண்டிறைவர் திருமுன் பெய்தித் தொழுதுதலை மேற்கொண்ட செங்கை போற்றி,***
***வீழ்ந்தெழுவார் கும்பிட்ட பயன்காண் பார்போல் மெய்வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்தார். 1022***

(இ - ள்.) பூமியில் நமஸ்கரித் தெழுந்து திருக்காளத்தித் திருமலையைக் கைகூப்பி வணங்கிக் கொண்டே பெரிய கற்பாரையாகிய சோபானத்தின் வழியே அம்மலையின்மீதேறி, தேவர் கூட்டங்கள் வணங்கி உள்ளே யெழுந்தருளி, உயர்ந்த் பொன்மயமாகிய திருக்கோயிலைச் சூழ்ந்து வலமாக வந்து, ஸ்ரீகாளத்திநாதரது திருமுன்பு சென்று, அஞ்சலியாகச் சிரசின் மேற் குவித்த திருக்கரங்களோடு துதித்து, பூமியில் விழுந்து வணங்கி யெழுகின்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் தாம் சிவபெருமானை வணங்கிய வோர் பெரும்பயனைக் காண்பவ ரைப் போல உண்மையாகிய அன்பினையுடைய கண்ணப்பநாய னாரை அங்குத் தரிசித்துப் (பரவசராய்ப்) பூமியில் வீழ்ந் தருளினார். - எ - று.

***உள்ளத்தில் தெளிகின்ற அன்பின் மெய்ம்மை உருவினையும் அவ்வன்பின் உள்ளே மன்னும்,***
***வெள்ளச்செஞ் சடைக்கற்றை நெற்றிச் செங்கண் விமலரையும் உடன்கண்ட விருப்பும் பொங்கி,***
***பள்ளத்தில் இழிபுனல் பரந்து செல்ல பைம்பொன்மலை வல்லிபரிந் தளித்த செம்பொன்,***
***வள்ளத்தில் ஞானஆ ரமுதம் உண்டார் மகிழ்ந்தெழுந்து பலமுறையும் வணங்கு கின்றார். 1023***

(இ - ள்.) அடியார்களது திருவுள்ளத்தில் தெளிவாக விளங்குகின்ற (மெய்ம்மையனைத்தும் ஒருங்கு திரண்டாற் போன்ற ஸ்ரீகண்ணப்பநாயனாரது) மெய்ப்பதத் திருவடிவையும், அவ்வன் பினிடத்துக் கலந்து நிற்குங் கங்கைநதி பொருந்திய சிவந்த சடைமுடியையும் நெற்றிக் கண்ணையுமுடைய ஸ்ரீ காளத்தி நாதரையும் ஓரிடத்துத் தரிசித்த விருப்பமு மதிகரித்துப் பள்ளத்தில் விழுகின்ற நீர் போலப் பரவிப் பெருக, பசிய பொன்மயமாகிய பர்வதராஜபுத்திரியாகிய உமாதேவியார் விரும்பிக் கொடுத்தருளிய சிவந்த பொற்கிண்ணத்தில் சிவஞான மாகிய அரிய அமுதத்தை யுண்டருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் (பரவச நீங்கி) மகிழ்வுற் றெழுந்து பலதரம் வணங்குகின்றவராயினார். - எ - று.

**பங்கயக்கண் அருவிநீர் பாய நின்று பரவும்இசைத் திருப்பதிகம் பாடிஆடித்,**
**தங்குபெருங் களிகாதல் தகைந்து தட்பத் தம்பெருமான் கழல்போற்றுந் தன்மை நீட,**
**அங்கரிதிற் புறம்போந்தங் கயன்மால் போற்ற அறியார்தந் திருமலைக்கீழ் அணைந்தி றைஞ்சிப்,**
**பொங்குதிருத் தொண்டர்மடங் காட்ட அங்குப் புக்கருளி இனிதமர்ந்தார் புகலிவேந்தர். 1024**

(இ - ள்.) தாமரை மலர் போன்ற திருக்கண்களினின்றும் ஆனந்த பாஷ்பமாகிய அருவிநீர் பெருக நின்று, பரவிய இசை யினையுடைய திருப்பதிகம்பாடி ஆனந்தக் கூத்தாடித் திருவுள் ளத்தில் பொருந்திய களிப்புடன் பெருவிருப்பமானது தம்மை வலிந்து தடுக்க, தமது பெருமானாகிய ஸ்ரீகாளத்திநாதரது திருவடிகளைத் துதித்தலா லுண்டாகிய ஆனந்த மதிகரிக்க, அவ்வாலயத்தினின்றும் ஆராமையோடு புறத்திற் சென்று, அங்குத் திருமால் பிரமனென்னு மிருவரும் (அடியையு முடியை யுந்) தேடித் துதித்தற்கரிய ஸ்ரீகாளத்திநாதரது திருமலையின்கீழ டைந்து வணங்கி, சிறந்த திருத்தொண்டர்கள் தாம் வசித்தற்கு திருமடத்தைக் காட்ட, அத்திருமடத்தி னுட்புகுந்தருளிச் சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் இனிமையோடு எழுந்தருளியிருந்தார். - எ - று.

**யாவர்களும் அறிவரிய இறைவன் தன்னை ஏழுலகும் உடையானை எண்ணி லாத,**
**தேவர்கள்தம் பெருமானைத் திருக்காளத்தி மலையின் மிசை வீற்றிருந்த செய்ய தேனைப்,**
**பூவலரும் பொழில்புடைசூழ் சண்பை யாளும் புரவலனார் காலங்கள் தோறும் புக்குப்,**
**பாமலர் கொண்டடி போற்றிப் பருகி யார்ந்து பண்ணினிய திருப்பதியில் பயிலும் நாளில். 1025**

(இ - ள்.) பூக்கள் மலர்கின்ற சோலைகள் சூழ்ந்த சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார், யாவர்களும் அறிதற்கரிய முதல்வரும், ஏழுலகங்களையுந் தமக்கு அடிமையாக வுள்ள அருளாளரும், அளவில்லாத தேவர்களுக்கெல்லாந் தலைவராயுள்ளவரும், திருக்காளத்தித் திருமலையின்மேல்

வீற்றிருந்தருளுஞ் சிவந்தகோற்றேன் போல்பவருமாகிய ஸ்ரீகாளத்திநாதரைத் தரிசித்தற்குரிய காலங்கள் தோறுஞ் சென்று தேவாரமாகிய மலர்களைக் கொண்டு திருவடிகளைத் துதித்து, சிவானந்தமாகிய தேனைப் பருகி (அதனால்) நிறை வுற்று, இனிமை பொருந்திய அத்திருக்காளத்தித் திருப்பதியி லெழுந்தருளியிருக்கும் நாள்களில். - எ - று.

***அங்கண்வட திசைமேலும் குடக்கின் மேலும் அருந்தமிழின் வழக்கங்கு நிகழா தாகத்,***
***திங்கள்புனை முடியார்தந் தானந்தோறும் சென்று தமிழ் இசை பாடு" செய்கைகோல,***
***மங்கையுடன் வானவர்கள் போற்றி சைப்ப வீற்றிருந்தார் வடகயிலை வணங்கிப் பாடிச்,***
***செங்கமல மலர்வாவித் திருக்கே தாரம் தொழுதுதிருப் பதிகஇசை திருந்தப் பாடி. 1026***

(இ - ள்.) அத்திருக்காளத்தியின் வடக்குத்திக்கிலும் மேற்குத் திக்கிலுமுள்ள தேசங்களில் அரிய தமிழ் வழக்கு வழங்காதிருக்க, சந்திரனை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளிய திருப்பதிகள் தோறு மெழுந்தருளித் திருப் பதிகம் பாடியருளுந் தன்மைபோல, தேவர்கள் துதிக்க உமா தேவியாரோடு வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானது திருக்கயிலா யத்தை வணங்கித் திருப்பதிகம் பாடி, செந்தாமரை மலர்கள் நிறைந்த தடாகங்கள் சூழ்ந்த திருக்கேதாரத்தை வணங்கி, இசை பொருந்த திருப்பதிகம் பாடியருளி. - எ - று.

***கூற்றுதைத்தார் மகிழ்ந்தகோ கரணம் பாடிக் குலவு திருப்பருப் பதத்தின் கொள்கை பாடி,***
***ஏற்றின்மிசை வருவார்இந் திரன்றன் நீல பருப்பதமும் பாடிமற் றிறைவர் தானம்,***
***போற்றியசொன் மலர்மாலை பிறவும் பாடி புகலியர்தம் பெருந்தகையார் புனித மாகும்,***
***நீற்றின்அணி கோலத்துத் தொண்டர் சூழ நெடிது மகிழ்ந் தப்பதியில் நிலவுகின்றார். 1027***

(இ - ள்.) சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் (மார்க்கண்டேயர் பொருட்டு) இயமனை யுதைத் தருளிய மகாபலேசுர ரெழுந்தருளிய திருக்கோகரணத்தைப்

பாடியருளி, விளங்குகின்ற ஸ்ரீ சைலத்தின் சிறப்பைப் பாடியருளி, இடபவாகனத்தின் மேலெழுந்தருளும் ஸ்ரீ நீலாசலேசரது, திருஇந்திர நீல பருப்பதத்தையும் பாடி மகிழ்வுற்று, சிவபெருமானெழுந்தருளிய மற்றத் திருப்பதிகளையும் போற்றுகின்ற சொன்மலர்களாலாகிய திருப்பதிகமாலைகளாற் பாடியருளி, பரிசுத்தமாகிய விபூதியை யணிந்த அழகிய திருக்கோலத்தையுடைய அடியார்கள் சூழும்படி மிகவும் மகிழ்ந்து அத்திருக் காளத் தித் திருப்பதியிலெழுந்தருளியிருந்தார். - எ - று.

***தென்திசையிற் கயிலையெனுந் திருக்கா ளத்தி போற்றிஇனி தமர்கின்றார் திரைசூழ் வேலை,***
***ஒன்றுதிரு வொற்றியூர் உறைவார் தம்மை இறைஞ்சுவது திருவுள்ளத் துன்னி அங்கண்,***
***இன்றமிழின் விரகர் அருள் பெற்று மீள்வார். "எந்தையார் இணையடிஎன் மனத்த" என்று,***
***பொன்தரளங் கொழித்திழிபொன் முகலி கூடப் புனைந்ததிருப் பதிக இசைப் போற்றிப் போந்தார். 1028***

(இ - ள்.) இனிய தமிழ்த் தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் தென்கயிலாசமென்று (சாஸ்திரங்களிற் புகழ்ந்து) கூறுகின்ற திருக்காளத்தித் திருப்பதியைத் துதித்து, இனிமையாக எழுந்தருளி யிருக்கின்றவர், அலைகள் சூழ்ந்த சமுத்திரக்கரையிலுள்ள திருவொற்றியூரென்னுந் திருப்பதியிலெழுந்தருளும் ஸ்ரீ படம்பக்க நாதரை வணங்குங்கருத்தைத் தமது திருவுள்ளத்திற் கருதி, அத்திருக்காளத்தியினின்றும் (ஸ்ரீ காளத்தீசரது) திருவருளைப் பெற்று, அங்கு நின்று மெழுந்தருள்பவராய் "எந்தையாரிணையடி யென்மனத்துள்ளவே" என்று ஈற்றிலமைத்து, பொற் பொடிகளையும், முத்துக்களையும் (திரைக்கரங்களாற்) கொழித்துப் பெருகுகின்ற பொன்முகலிநதியையுஞ் சிறப்பித் தமைத்த ("சந்தமாரகில்" என்னு முதலையுடைய) திருப்பதிகத்தை இசை பொருந்தப் பாடித் துதித்து, அவ்விடத்தினின்று மெழுந்தருளினார். - எ - று.

***மன்னுபுகழ்த் திருத்தொண்டர் குழாத்தி னோடும் மழைவாழ வந்தவர் தாம் மலையும் கானும்,***
***முன்னணைந்த பதிபிறவும் கடன் போந்து முதல்வர் உறைபதிகள் பலவும் போற்றிப்,***
***பன்மணிகள் பொன் வரன்றி அகிலும் சந்தும் பொருதலைக்கும் பாலிவட கரையில் நீடு,***
***சென்னிமலை அணிந்தவர்தந் திருவேற்காடு சென்றணைந்தார் திருஞான முண்ட செல்வர். 1029***

(இ - ள்.) நிலைபெற்ற புகழையுடைய திருத்தொண்டர் திருக்கூட்டத்தோடு வேதங்களும் வாழும்படி அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் மலைகளையுங் காடுகளையும் முன்னே பொருந்திய மற்ற ஊர்களையுங் கடந்து சென்று, முதற் கடவுளாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதி களையும் (வணங்கித்) துதித்து, பல இரத்தினங்களையும் பொற்பொடிகளையும் வாரிக்கொண்டு, அகில் மரங்களையுஞ் சந்தனமரங்களையுங் கரையில் மோதி யலைக்கின்ற பாலி யாற்றின் வடகரையிற் பொருந்திய சந்திரசேகரராகிய ஸ்ரீவேற் காட்டீசரெழுந்தருளிய திருவேற்காடென்னுந் திருப்பதியைச் சென்றடைந்தருளினார்; சிறந்த சிவஞானப் பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார். - எ - று.

**திருவேற்கா டமர்ந்தசெழுஞ் சுடற்பொற் கோயில் வென்றணைந்து**
**பணிந்துதிருப் பதிகம் பாடி,**
**வருவேற்று மனத்தவுணர் புரங்கள் செற்றார் வலிதாயம் வந்தெய்தி**
**வணங்கிப் போற்றி,**
**உருவேற்றார் அமர்ந்துறையும் ஓத வேலை ஒற்றியூர் கைதொழச்சென்**
**றுற்றபோது,**
**பெருவேட்கை தருவாழ்வு பெற்ற தொண்டர் பெரும்பதியோர்**
**எதிர்கொள்ள பேணி வந்தார். 1030**

(இ - ள்.) திருவேற்காடு என்னுந் திருப்பதியிலெழுந்தருளிய செழியசோதி சொரூபராகிய ஸ்ரீவேற்காட்டீசரது பொன்மய மாகிய திருக்கோயிலை வந்தடைந்து அவ்வெம்பெருமானை வணங்கித் திருப்பதிகம் பாடியருளி, மாறுகொண்டு வந்த வஞ்சக மனத்தினையுடைய அசுரர்களது முப்புரங்களை யெரித்தருளிய ஸ்ரீ வலிதாய நாதர் வீற்றிருந்தருளும் திருவலிதாயமென்னுந் திருப்பதியை வந்து சேர்ந்து வணங்கித் (திருப்பதிகம் பாடித்) துதித்து, அழகிய இடப வாகனத்தையுடைய ஸ்ரீபடம் பக்கநாதர் எழுந்தருளுகின்ற குளிர்ந்த கடற்கரையிலுள்ள திருவொற்றி யூரை வணங்கும்படிச் சென்றடைந்தபொழுது, மிக்க நேசத்தா லுண்டாகிய சிவானந்தப் பெருவாழ்வைப் பெற்ற அடியார்க ளும், பெரிய அத்திருப்பதியில் வாழ்பவர்களும் (பிள்ளையாரை) எதிர்கொள்ளும்படி விருப்பமுற்று வந்தார்கள். - எ - று.

***மிக்கதிருத் தொண்டர்தொழு தணையத் தாமும் தொழுதிழிந்து "விடையவன்" என் றெடுத்துப் பாடி,***
***மைக்குலவு கண்டத்தார் மகிழுங் கோயில் மன்னுதிருக் கோபுரத்து வந்து தாழ்ந்து,***
***தக்கதிருக் கடைக்காப்புச் சாற்றித் தேவர் தம்பெருமான் திருவாயி லூடுசென்று,***
***புக்கருளி வலங்கொண்டு புனிதர் முன்பு போற்றெடுத்துப் படியின்மேல் பொருந்த வீழ்ந்தார். 1031***

(இ - ள்.) சிறந்த திருத்தொண்டர்கள் பிள்ளையாரை எதிர் கொண்டு வணங்கிவர, தாமும் அவர்களை வணங்கி முத்துச் சிவிகையினின்று மிறங்கி, "விடையவன்" என்று திருப்பதிக முதலெடுத்துப் பாடியருளிக் காளகண்டராகிய ஸ்ரீபடம்பக்க நாத ரெழுந்தருளிய திருக்கோயிலிலுள்ள திருக்கோபுரத்தின் கண் வந்து வணங்கிச் சிறந்த திருக்கடைக்காப்புப் பாடியருளித் தேவர்கள் நாயகராகிய அவ்வெம்பெருமானது திருக்கோயிற் றிருவாயிலின்வழியே சென்று உள்ளே புகுந்துபிரதக்ஷணஞ் செய்து, பரிசுத்தராகிய அவ்வெம்பெருமான் திருமுன்பு துதித்துப் பூமியில் பொருந்தும்படி சாஷ்டாங்கமாக வணங்கியருளினார். - எ - று.

***பொற்றிரள்கள் போற்புரிந்த சடையார் தம்பால் பொங்கிஎழுங் காதல்மிகப் பொழிந்து விம்மிப்,***
***பற்றிஎழும் மயிர்ப்புளகம் எங்கு மாகிப் பரந்திழியுங் கண்ணருவி பாய நின்று,***
***சொற்றிகழுந் திருப்பதிகம் பாடி ஏத்தித் தொழுதுபுறத் தணைந்தருளித் தொண்டரோடும்,***
***ஒற்றிநகர் காதலித்தங் கினிது றைந்தார் உலகுய்ய உலவாத ஞானம் உண்டார். 1032***

(இ - ள்.) பொற்கம்பிகளின் திரட்சி போன்ற முறுக்காகிய சடைமுடியை யுடைய சிவபெருமானிடத்தில் அதிகரித் தெழுகின்ற பெருவிருப்பமானது மிகுதியாகப் பெருகி, பொருந்தி யெழுகின்ற மயிர்ப்புளகம் திருமேனி முழுவதும் பரவிச் சொரிகின்ற ஆனந்தக் கண்ணீர் பாயும்படி நின்று, நல்ல சொற்கள் விளங்குகின்ற திருப்பதிகம் பாடித் துதித்து வணங்கி, அடியார் திருக்கூட்டத்தோடும் புறத்திற் சென்றருளி, உலகத்தார்

கடைத்தேறும் பொருட்டுக் கெடாத சிவஞானப்பாலுண் டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவொற்றியூரை விரும்பி அங்கு இனிமையோடு மெழுந்தருளியிருந்தார். - எ - று.

***இன்ன தன்மையிற் பிள்ளையார் இருந்தனர்; இப்பால்***
***பன்னு தொல்புகழ்த் திருமயி லாபுரிப் பதியில்***
***மன்னு சீர்ப்பெரு வணிகர்தந் தோன்றலார் திறத்து***
***முன்னம் எய்திய தொன்றினை நிகழ்ந்தவா மொழிவாம். 1033***

(இ - ள்.) இவ்வாறு திருஞானசம்பந்தப்பிள்ளையா ரெழுந்தருளியிருந்தனர்; இதன்மேல், யாவரும் சிறப்பித்துச் சொல்லுகின்ற பழமையாகிய புகழையுடைய திருமயிலாபுரி யென்னுந் திருப்பதியில் நிலைபெற்ற சிறப்பினையுடைய பெரிய வைசியர் குலத்தலைவராகிய சிவநேச செட்டியாரிடத்து முன்னம் நடந்த ஒரு சரித்திரத்தை நடந்த வண்ணம் ஈண்டுக் கூறுகின்றார். - எ - று.

***அருநி தித்திறம் பெருக்குதற் கருங்கலம் பலவும்***
***பொருக டற்செலப் போக்கிஅப் பொருட்கவை நிரம்ப***
***வரும ரக்கலம் மனைப்படப் பணைக்கரை நிரைக்கும்***
***இருநி திப்பெருஞ் செல்வத்தின் எல்லையில் வளத்தார். 1034***

(இ - ள்.) அருமையாகிய பொன்மணி முதலிய பொருட் பகுதிகளை விருத்தி செய்வதற்கு அரிய பல மரக்கலங்களையும் அலைவீசுகின்ற சமுத்திரத்திற் செல்லும்படி விட்டு, அதனால் விருத்தியாகிய திரவியத்தின் குவையல்கள் நிரம்பும்படி, தீவாந் தரங்களினின்றும் வருகின்ற மரக்கலப் பொருள்கள் தமது மனையிற் சேரும்படி பெரிய கடற்கரையில் வரிசையாக வைக்கப் படுகின்ற சங்கநிதி பதுமநிதிக் கொப்பான பெருஞ்செல்வத் தினாலுண்டாகிய அளவில்லாத பொருள்வளப்ப முடையவர்.- எ - று.

***தம்மை உள்ளவா றறிந்தபின் சங்கரற் கடிமை***
***மெய்ம்மை யேசெயும் விருப்புடன் மிக்கதோர் அன்பால்***
***பொய்ம்மை நீக்கிய பொருளிது எனக்கொளும் உள்ளச்***
***செம்மை யேபுரி மனத்தினார் சிவநேசர் என்பார். 1035***

(இ - ள்.) தமது உயிரியல்பை உள்ளபடியே (தாம்பசுவென்ற, அநாதியே மலசம்பந்த முடையதென்றும், செயலற்றதென்றும்

பசுபதியாகிய சிவபெருமானுக்குடைமைப் பொருளென்றும்) உணர்ந்த பின்பு, சிவபெருமானுக்கு அடிமைத்திறத்தை மெய்ம் மையாகச் செய்யும் விருப்போடு மிகுந்த பேரன்பினால், (உலக காரியங்களாகிய) பொய்ம்மையை யொழித்து, முத்தியடைதற் குரிய மெய்ப் பொருள் சிவபெருமானை வணங்குதலே என்று கருதியிருக்கின்ற செம்மையாகிய மனத்தினையுடையவர்; (அவர் யாரெனின்) சிவநேச செட்டியாரென்பவர். - எ - று.

***கற்றை வார்சடை முடியினார் அடியவர் கலப்பில்***
***உற்ற செய்கையில் ஒழிவின்றி உருகிய மனமும்***
***பற்றி லாநெறிப் பரசம யங்களைப் பாற்றும்***
***செற்ற மேவிய சீலமும் உடையராத் திகழ்வார். 1036***

(இ - ள்.) கூட்டமாகிய நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமானது அடியார்கள் சேர்க்கையினால் பொருந்திய பணிவிடைகளில் குறைவின்றி உருகிய மனமும், தமக்கென்று ஒரு உறுதியில்லாத மார்க்கமாகிய சமண முதலிய புறச் சமயங் களைக் கெடுகின்ற வீரம் பொருந்திய நல்லொழுக்கத்தையு முடையவராய் விளங்குகின்றவர். - எ - று..

***ஆன நாள்செல அருமறைக் கவுணியர் பெருமான்***
***ஞான போனகம் நுகர்ந்ததும் நானிலம் உய்ய***
***ஏனை வெஞ்சமண் சாக்கியம் இழித்தழித் ததுவும்***
***ஊன மில்புகழ் அடியர்பால் கேட்(டு)உவந் துளராய். 1037***

(இ - ள்.) அவ்வாறு அன்பு செய்து வருகின்ற நாள்கள் பலசெல்ல, அரிய வேதங்களை யுணர்ந்த கவுணியர் குலத் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் (உமாதேவியார் கொடுத்தருளிய) சிவஞானப்பாலமுதுண்டருளிய சங்கதியை யும், பரிய உலகத்தார் கடைத்தேறும் பொருட்டுக் கொடிய சமணரையும், புத்தரையும் இழிவு செய்து அழித்த தன்மையை யும், குற்றமற்ற புகழையுடைய அடியார்களிடத்துக் கேள்வியுற்று மனமகிழ்ச்சியடைந்தவராய். - எ - று.

***செல்வம் மல்கிய சிரபுரத் தலைவர்சே வடிக்கீழ்***
***எல்லை இல்லதோர் காதலின் இடையறா உணர்வால்***
***அல்லும் நண்பக லும்புரிந் தவரருள் திறமே***
***சொல்ல வும்செயல் கேட்கவும் தொழிலின ரானார். 1038***

(இ - ள்.) பலவகைச் செல்வங்கள் நிறைந்த சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது சிவந்த திருவடியில் அளவில்லாத பெருவிருப்போடு நீங்காத பேருணர்ச்சியினால், இரவும் பகலும் அவரது திருவருளின் திறத்தையே விரும்பி வாயாற் சொல்லவும், அவரத செயல்களைக் (கண்டோர் சொல்லக்) காதாற்கேட்கவுமாகிய தொழிலுடையவராயினார். - எ - று.

***நிகழும் ஆங்கவர் நிதிப்பெருங் கிழவனின் மேலாய்த்***
***திகழும் நீடிய திருவினிற் சிறந்துள ராகிப்***
***புகழும் மேன்மையின் உலகினிற் பொலிந்துளா ரெனினும்***
***மகவி லாமையின் மகிழ்மனை வாழ்க்கையின் மருண்டு. 1039***

(இ - ள்.) இவ்வாறு ஒழுகும் அச்சிவநேச செட்டியார், செல்வத்தில் குபேரனைப் பார்க்கிலும் அதிகப்பட்டு விளங்குகின்ற மிக்க செல்வத்தால் சிறந்தவராய், யாவரும் புகழும் மேன்மையோடு உலகத்தில் சிறந்திருந்தாராயினும், புத்திரனில்லாமையினால் தாம் விரும்பிய இல்வாழ்க்கை நிலையில் மனமயங்கி - எ - று.

***அரிய நீர்மையில் அருந்தவம் புரிந்தரன் அடியார்க்(கு)***
***உரிய அர்ச்சனை உலப்பில செய்தஅந் நலத்தால்***
***கரிய வாங்குழல் மனைவியார் வயிறெனுங் கமலத்***
***துரிய பூமகள் எனஒரு பெண்கொடி உதித்தாள். 1040***

(இ - ள்.) செய்தற்கரிய நன்னிலைமையினால் அருமையாகிய தவத்தைச் செய்து சிவனடியார்களுக்கு உரிய பூசனைகள் பலவற்றைச் செய்து வந்த அந்தப் புண்ணிய பலத்தினால், கருமையாகிய கூந்தலையுடைய அவர் மனைவியாரது கர்ப்பமென்று கூறுந் தாமரை மலரினிடத்துத் திருமகளென்று சொல்லும்படி ஒரு சற்புத்திரியார் பிறந்தனர். - எ - று.

***நல்ல நாள்பெற ஓரையின் நலமிக உதிப்பப்***
***பல்பெ ருங்கிளை யுடன்பெரு வணிகர்பார் முழுதும்***
***எல்லை யில்தனம் முகந்துகொண் டியாவரும் உவப்ப***
***மல்லல் ஆவண மறுகிடைப் பொழிந்துளம் மகிழ்ந்தார். 1041***

(இ - ள்.) சுபதினம்வர, இலக்கினத்தில் நன்மை மிகும்படி, அப்புத்திரியார் அவதரிக்கவும், பலசுற்றத்தாரோடு பெருமை

பொருந்திய சிவநேசசெட்டியார் அளவற்ற திரவியங்களை வாரிக்கொண்டு, உலக முழுவதும் யாவரும் மகிழும்படி வளப்ப மிக்க ஆவண வீதியிலிறைத்து மனமகிழ்ச்சி யடைந்தார். - எ - று.

***ஆறு சூடிய முடியினார் அடியவர்க் கன்பால்***
***ஈறி லாதபூ சனைகள்யா வையும்மிகச் செய்து***
***மாறி லாமறை யவர்க்குவேண் டினஎலாம் அளித்துப்***
***பேறு மற்றிது வேஎனும் பெருங்களி சிறந்தார். 1042***

(இ - ள்.) கங்கை நதியைத் தரித்த சடைமுடியையுடைய சிவபெருமானடியார்களுக்கு அன்போடு எண்ணிறந்த பல வழிபாடுகளையும் மிகுதியாகச் செய்து, (நன்னெறியினின்றும்) நீங்காத வேதியர்களுக்கு வேண்டும் பொருள்களனைத்துங் குறைவறக் கொடுத்து இதுவே பெரும்பேறென்று சொல்லும்படி மிக்க களிப்புற்றிருந்தார். - எ - று.

***சூத நல்வினை மங்கலத் தொழில்முறை தொடங்கி***
***வேத நீதியின் விதியுளி வழாவகை விரித்த***
***சாத கத்தொடு சடங்குகள் தசதினஞ் செல்லக்***
***காதல் மேவிய சிறப்பினில் கடிவிழா அயர்ந்தார். 1043***

(இ - ள்.) பிரசவ காலத்திற் செய்கின்ற நற்கருமங்களை மங்கலகரமாக முறைப்படி தொடங்கி, வேதத்திற்கூறு முறைமை யில் தவறாமல் விரித்துச் சொல்லப்பட்ட சாதகன்மத்தோடு கூடிய சடங்குகளைப் பத்துத்தினமளவும் விரும்பத்தக்க சிறப்போடு மங்கல விழாவாகச் செய்தார். - எ - று.

***யாவ ரும்பெரு மகிழ்ச்சியால் இன்புறப் பயந்த***
***பாவை நல்லுறுப் பணிகிளர் பண்பெலாம் நோக்கிப்***
***பூவி னாளென வருதலிற் பூம்பாவை என்றே***
***மேவும் நாமமும் விளம்பினர் புவியின்மேல் விளங்க. 1044***

(இ - ள்.) யாவரும் மிக்க மனமகிழ்ச்சியினா லின்ப மடையும் படி தான் பெற்ற அப்புத்திரியாரது அழகு விளங்குகின்ற நல்ல அவயவங்களினிலக்கணங்களை யெல்லாம் பார்த்து, இலக்குமி யைப் போல (அழகிற்சிறந்து) பிறத்தலினால், (அது காரண மாகப்) பூம்பாவையாரென்று உலகத்தில் விளங்கும்படி பொருந்திய பெயரையுமிட்டார். - எ - று.

***திங்கள் தோறும்முன் செய்யும்அத் திருவளர் சிறப்பின்***
***மங்க லம்புரி நல்வினை மாட்சியிற் பெருக***
***அங்கண் மாநகர் அமைத்திட ஆண்டெதிர் அணைந்து***
***தங்க பேரொளிச் சீறடி தளர்நடை பயில. 1045***

(இ - ள்.) அழகிய இடமகன்ற பெரிய திருமயிலைப் பதியில் மாதந்தோறும் முற்பட்டுச் செய்கின்ற செல்வமிக்க சிறப்பினை யுடைய மங்கலத்தை விளைக்கும் நற்கருமங்கள் மாட்சிமையோடு மிகும்படி செய்விக்க, ஒரு வருடத்தில் (தாய் தந்தையர்களுக்கு) எதிரிலடைந்து மிக்க ஒளி பொருந்திய சிறிய பாதங்கள் தளர்ந்த நடையையடையும்படி - எ - று.

***தளரும் மின்னின்அங் குரமெனத் தமனியக் கொடியின்,***
***வளரி ளந்தளிர்க் கிளையென மணிகிளர் ஒளியின்,***
***அளவில் அஞ்சுடர்க் கொழுந்தென அணைவுறும் பருவத்(து),***
***இளவ னப்பிணை அனையவர்க் கேழியாண் டெய்த. 1046***

(இ - ள்.) தளர்கின்ற மின்னற்கொடியின் அங்குரம்போல வும், பொற்கொடியில் வளர்கின்ற இளந்தளிர்கள் பொருந்திய கிளைபோலவும், மாணிக்கத்தினின்று மெழுந்த செவ்வொளி யானது மிகுந்த அழகிய சுடர்க்கொழுந்து போலவும், வளர்கின்ற மகப்பருவத்தையுடைய இளமை பொருந்திய அழகிய பெண் மான் கன்றை யொத்த அப்புத்திரியாருக்கு ஏழு வருடஞ் செல்ல.- எ - று.

***அழகின் முன்னிளம் பதமென அணிவிளக் கென்ன***
***விழவு கொண்டெழும் பேதைய ருடன்விளை யாட்டில்***
***கழலொ டம்மனை கந்துகம் என்றுமற் றினைய***
***மழலை மென்கிளிக் குலமென மனையிடை ஆடி. 1047***

(இ - ள்.) அழகின் முதன்மையாகிய ஓரிளம்பத மென்று சொல்லவும், அழகிய மணிவிளக்கென்று சொல்லவும், விழாக் கொண்டு வருஞ் சிறுபெண்களோடு விளையாடும்பொழுது, கழற்காயோடு அம்மனையும், பந்தும், என்று கூறுகின்ற இவை போல் வனவற்றை மழலை வார்த்தைகளைப் பேசுகின்ற மிருதுவாகிய கிளிக்கூட்டம் போலத் தமது வீட்டில் விளையாடி. - எ - று.

***பொற்றொ டிச்சிறு மகளிர்ஆ யத்தொடும் புணர்ந்து***
***சிற்றில் முற்றவும் இழைத்துடன் அடுந்தொழிற் சிறுசோ(று)***
***உற்ற உண்டிகள் பயின்றொளி மணியூசல் ஆடி***
***மற்றும் இன்புறு வண்டலாட் டயர்வுடன் வளர. 1048***

(இ - ள்.) பொன் வளையலை யணிந்து சிறுபெண்கள் கூட்டத்தோடு கலந்து மணற் சிறுவீடு முழுவதுங்கட்டி, அவர்களோடு சமைக்குந் தொழிலாலாகிய மணற் சிறுசோறுடன் பொருந்திய நால்வகையுண்டிகளையும் பழகி, ஒளி பொருந்திய இரத்தின ஊஞ்சலில் விளையாடி, பின்னும் இன்பம் பொருந்திய பலவகை விளையாடல் புரிதலோடு வளரும் பொழுது. - எ - று.

***தந்தை யாரும்அத் தளிரிளங் கொம்பனாள் தகைமை***
***இந்த வையகத் தின்மையால் இன்புறு களிப்ப***
***வந்த சிந்தையின் மகிழ்ந்துமற் றிவள்மணம் பெறுவான்***
***அந்த மில்லென தருநிதிக் குரியன்என் றறைந்தார். 1049***

(இ - ள்.) தந்தையாராகிய சிவநேசசெட்டியாரும், இளமை பொருந்திய பூங்கொம்பு போன்ற அந்தப் பூம்பாவையாரது நற்குண நற்செய்கைகள் இந்த வுலகத்தில் யாவரிடத்து மில்லாமையால், இன்பத்தால் களிப்படைந்த தமது மனதில் மகிழ்கூர்ந்து, இந்தப் புத்திரியைக் கலியாணஞ்செய்து கொள்ளுகிறவன் அளவில்லாத எனது அருமையாகிய பெருஞ் செல்வத்திற்கு உரிமையுடையவனாவானென்று சொன்னார். - எ - று.

***ஆய நாள்களில் அமண்பயில் பாண்டிநா டதனைத்***
***தூய ஞானமுண் டருளிய தோன்றலார் அணைந்து***
***மாய வல்லமண் கையரை வாதில்வென் றதுவும்***
***மேய வெப்பிடர் மீனவன் மேலொழித் ததுவும். 1050***

(இ - ள்.) அவ்வாறிருக்கும் நாள்களில் தூய்மையாகிய சிவஞானப் பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் சமணர்கள் வாழும் பாண்டி நாட்டை யடைந்து மாயத் தொழிலில் வல்ல அச்சமணர்களாகிய கீழ்மக்களை வாதில் வென்றதும், பொருந்திய சுரநோயைப் பாண்டியனிடத்தினின்று நீங்கியதும். - எ - று.

***நெருப்பில் அஞ்சினார் தங்களை நீரில்ஓட் டியபின்***
***மருப்பு நீள்கழுக் கோலில்மற் றவர்களே றியதும்***
***விருப்பி னால்திரு நீறுமீ னவற்களித் தருளிப்***
***பொருப்பு வில்லியார் சாதனம் போற்றுவித் ததுவும். 1051***

(இ - ள்.) அனல் வாதத்தில் தோற்ற சமணர்களைப் புனலில் வாது செய்யும்படி உடன்படச் செய்தபின்பு, கொம்பினால் கூர்மையாகச் செய்யப்பட்டு நீண்டிருக்கின்ற கழுமரத்தில் அவர்களை யேற்றியதும், விருப்பத்தோடு திருவெண்ணீற்றைப் பாண்டியராசனுக்குக் கொடுத்தருளி, மேருமலையாகிய வில்லை யுடைய சிவபெருமானது விபூதி திருத்திராக்ஷ சாதனங்களை யாவருந் தரிசிக்கும்படிச் செய்ததும். - எ - று.

***இன்ன வாறெலாம் அறிந்துளார் எய்திஅங் கிசைப்பச்***
***சொன்ன வர்க்கெலாம் இருநிதி துசுடன் அளித்து***
***மன்னு பூந்தராய் வள்ளலார் தமைத்திசை நோக்கிச்***
***சென்னி மேற்கரங் குவித்துவீழ்ந் தெழுந்துசெந் நின்று. 1052***

(இ - ள்.) இவ்வாறாகிய சரிதங்களனைத்தும் அறிந்தவர்கள் தம்மிடத்து வந்துசொல்ல, அச்சரிதங்களை வந்து சொன்னவர் களுக்கெல்லாம் மிகுந்த பொருள்களைப் பட்டாடையுடன் கொடுத்து, நிலைபெற்ற சீகாழித் தலைவராகிய திருஞான சம்பந்தப்பிள்ளையாரைத் திக்குநோக்கிச் சிரசின்மேல் இரண்டு கரங்களையுங் குவித்துப் பூமியில் வீழ்ந்து வணங்கி யெழுந்து செவ்வையாக நின்று. - எ - று.

***சுற்றம் நீடிய கிளையெலாஞ் சூழ்ந்துடன் கேட்பக்***
***"கற்ற மாந்தர்வாழ் காழிநா டுடையவர்க் கடியேன்***
***பெற்றெ டுத்தபூம் பாவையும் பிறங்கிய நிதியும்***
***முற்றும் என்னையும் கொடுத்தனன் யான்" என்று மொழிந்தார். 1053***

(இ - ள்.) சுற்றமாகிய மிக்க பந்துக்களெல்லாம் தம்மைச் சூழ்ந்து கொண்டு கேட்கும்படி, சகலசாஸ்திரங்களையுங் கற்றுணர்ந்த புலவர்கள் வாழ்கின்ற சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு அடியேன் பெற்றெடுத்த பூம்பாவையாரென்னும் புத்திரியையும், விளங்குகின்ற எனது செல்வத்தையும், என்னையும் யான் அவருக்குத் தத்தமாகக் கொடுத்தேனென்று மொழிவாராயினார். - எ - று.

***எல்லை யில்பெருங் களிப்பினால் இப்பரி சியம்பி***
***முல்லை வெண்ணகை முகிழ்முலை யாருடன் முடியா***
***மல்கு செல்வத்தின் வளமையும் மறைவளர் புகலிச்***
***செல்வ ரேஉடை யாரெனுஞ் சிந்தையால் மகிழ்ந்தார். 1054***

(இ - ள்.) அளவில்லாத மிகுந்த சந்தோஷத்தினால் இவ்வாறு யாவருமறியக் கூறி, முல்லையரும்புபோலும் வெள்ளிய பற்களையும், முகிழ் போன்ற ஸ்தனங்களையுமுடைய பூம்பாவையாருடன் அழியாத நிறைந்த செல்வத்தினது வளத்தையும் வேதியர்கள் வாழுகின்ற சீகாழியிலவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரே சொந்தமாக வுடைய வனென்னுஞ் சிந்தையோடு மகிழ்ச்சியடைந்தார். -எ-று.

***ஆற்று நாட்களில் அணங்கனார் கன்னிமா டத்தின்***
***பாற்ற டம்பொழில் மருங்கினிற் பனிமலர் கொய்வான்***
***போற்று வார்குழற் சேடிய ருடன்புறம் போந்து***
***கோற்றொ டித்தளிர்க் கையினால் முகைமலர் கொய்ய. 1055***

(இ - ள்.) இவ்வாறொழுகு நாள்களில் தெய்வப் பெண்ணை யொத்த அப்பூம்பாவையார் கன்னிமாடத்தின்கண்ணுள்ள பெரிய சோலையின் பக்கத்திற்கு குளிர்ந்த மலர்களையும் கொய்யும்படி, தம்மைச் சூழ்ந்து வருகின்ற நீண்ட கூந்தலை யுடைய தோழிமார்களுடன் புறத்தில் வந்து, அழகிய வளையலை யணிந்த தளிர்போன்ற கரத்தினால் அரும்போடு கூடிய மலர்களைக் கொய்யும்பெழுது. - எ - று.

***"அன்பர் இன்புறும் ஆர்வத்தின் அளித்தபாங் கல்லால்***
***பொன்பி றங்குநீர்ப் புகலிகா வளர்க்கிது புணரா(து)***
***என்ப துட்கொண்ட பான்மைஓர் எயிற்றிளம் பணிவாய்***
***முன்ப ணைந்தது போலஓர் முள்ளெயிற் றரவம்." 1056***

(இ - ள்.) சிவநேச செட்டியார் இன்பமிகுகின்ற விருப்பத் தினால் கொடுத்த தன்மையேயல்லாமல், பொன்மயமக விளங்கு கின்ற காவிரி நீர்சூழ்ந்த சீகாழித் தலைவராகிய திருஞான சம்பந்தப்பிள்ளையாருக்கு (அவர் கருதியிருக்கும் எண்ணமாகிய) இது பொருந்தாதென்பதைத் தம்முட் கொண்ட ஓர் எண்ண மானது, பற்களை யுடைய இளமை பொருந்திய ஒரு பாம்பாய் முன்னே வந்துபோல, ஒரு முட்டோலும் பற்களையுடைய பாம்பானது. - எ - று.

***மௌவல் மாதவிப் பந்தரில் மறைந்துவந் தெய்திச்***
***செவ்வி நாண்முகை கவர்பொழு தினில்மலர்ச் செங்கை***
***நவ்வி வாள்விழி நறுநுதற் செறிநெறி கூந்தல்***
***கொவ்வை வாயவள் முகிழ்விரல் கவர்ந்தது குறித்து. 1057***

(இ - ள்.) முல்லை மலர்களும் மல்லிகை மலர்களும் நிறைந்திருக்கும் பந்தலில் மறைந்து வந்து, அழகிய புதுமலர்களைக் கொய்யும் பொழுது, மலர்போலுஞ் சிவந்த கைகளையும், மான் போலும் ஒளிபொருந்திய விழிகளையும், நல்ல நெற்றியையும், நெருங்கி நெறித்த கூந்தலையும், கொவ்வை கனிபோலும் வாயையுமுடைய ஆப்பூம்பாவையாரது முகிழ் போன்ற விரலைச் சுட்டிக் கடித்தது. - எ - று.

***நாலு தந்தமும் என்புறக் கவர்ந்துநஞ் சுகுத்து***
***மேலெ ழும்பணம் விரித்துநின் றாடிவே றடங்க***
***நீல வல்விடந் தொடர்ந்தெழ நேரிழை மென்பூ***
***மாலை தீயிடைப் பட்டது போன்றுளம் மயங்கி.*** **1058**

(இ - ள்.) நாலு பற்களும் எலும்பைப் பொருந்தும்படிக் கடித்து விஷத்தைக் கக்கி மேலெடுத்து படத்தை விரித்து நின்று ஆடி, பின்வேறோரிடத்தில மையவும் (அப்பாம்பினது) நீலநிறம் பொருந்திய கொடிய விஷமானது எலும்பைப் பற்றி மேற் கொண்டெழ, (அதனால்) நேர்மையாகிய ஆபரணங்களை யணிந்த பூம்பாவையார் மிருதுவாகிய பூமாலையானது நெருப்பிற் பட்டாற்போல மனமயங்கி. - எ - று.

***தரையில் வீழ்தரச் சேடியர் வெருக்கொடு தாங்கி***
***வரைசெய் மாடத்தி னுட்கொடு புகுந்திட வணிகர்***
***உரையும் உள்ளமும் நிலையழிந் துறுதுயர் பெருகக்***
***கரையில் சுற்றமும் தாமுமுன் கலங்கினார்; கலுழ்ந்தார்.*** **1059**

(இ - ள்.) பூமியில் விழ, உடனே தோழிப் பெண்கள் அச்சமுற்றெடுத்து மலை போன்ற கன்னி மாடத்தினுள்ளே கொண்டு செல்ல, அதனை யுணர்ந்த சிவநேச செட்டியார் வார்த்தையும் மனமும் நிலைகலங்கித் துயரமதிகரிக்க, அளவற்ற சுற்றத் தாருந் தாமும் முன்னே கலக்கமடைந்து அழுதார். - எ-று.

***விடந்தொ லைத்திடும் விஞ்சையிற் பெரியராம் மேலோர்***
***அடர்ந்த தீவிடம் அகற்றுதற் கணைந்துளார் அனேகர்***
***திடங்கொள் மந்திரந் தியானபா வகநிலை முட்டி***
***தொடர்ந்த செய்வினைத் தனித்தனித் தொழிலராய்ச் சூழ்வார்.*** **1060**

(இ - ள்.) விஷத்தை நீக்குகின்ற கருடவித்தையில் தேர்ந்தவர்களாகிய அறிஞர்கள் கொடிய விஷத்தை நீக்குதற்கு அநேகராய் வந்தவர்களும், உறுதியாகக் கொண்ட மந்திரங்

களும், கருடத்தியான முதலியானவும், அவற்றின் பாவனைகளும், முட்டி நீலையுமாகிய ஒன்றேடொன்று தொடர்ந்து செய்கின்ற விஷம் நீக்கும் வினையில் வெவ்வேறு தொழிலுடையவராய்ச் சூழ்வாராயினார். - எ - று.

***மருந்தும் எண்ணில மாறில செய்யவும் வலிந்து***
***பொருந்து வல்விடம் ஏழுவே கமும்முறை பொங்கிப்***
***பெருந்த டங்கண்மென் கொடியனாள் தலைமிசைப் பிறங்கித்***
***திருந்து செய்வினை யாவையுங் கடந்துதீர்ந் திலதால். 1061***

(இ - ள்.) (மந்திரங்களேயன்றி) மருந்தும் அளவற்றவைகளை மாறுபாடில்லாமற் செய்யவும், வலியடைந்து நிற்குங் கொடிய விஷமானது ஏழுவேகமும் முறையே ஒன்றன்பின் னொன்றா யதிகரித்து, பெரிய விசாலமான கண்களையுடைய மிருதுவான பூங்கொடி போன்ற பூம்பாவையாரது தலையில் சேர்ந்து திருத்தமான செயல்கள் யாவையுஞ் செய்தும் நீங்காதிருந்தது. - எ - று.

***ஆவி தங்குபல் குறிகளும் அடைவில வாக***
***மேவு காருட விஞ்சைவித் தகர்"இது விதி"என்(று)***
***ஓவும் வேலையில் உறுபெருஞ் சுற்றமும் அலறிப்***
***பாவை மேல்விழுந் தழுதனர் படரொலிக் கடல்போல். 1062***

(இ - ள்.) உயிர் தங்குதற்குரிய பலகுறிகளும் பொருந்தா தொழியவும், சிறப்புப் பொருந்திய காருடவித்தையை யுணர்ந்த மருத்துவர்கள் இது விதியேயென்று தாங்கள் செய்யும் அம் மந்திரவித்தையியின்றும் நீங்கும்பொழுது, பெரிய சுற்றத்தாரும் அப்புத்திரியின்மேல் விழுந்து மிக்க ஒலியையுடைய கடல் போலக் கதறியழுதார்கள். - எ - று.

***சிந்தை வெந்துய ருறுசிவ நேசரும் தெளிந்து***
***வந்த செய்வினை இன்மையில் "வையகத் துள்ளோர்***
***இந்த வெவ்விடம் ஒழிப்பவர்க் கிகுவன் கண்ட***
***அந்த மில்நிதிக் குவை"எனப் பறைஅறை வித்தார். 1063***

(இ - ள்.) மனத்தில் மிக்க துன்பமடைந்திருக்குஞ் சிவநேச செட்டியாரும் சிறிது துன்பநீங்கித் தாம் செய்தற்குரிய செயல்கள வேறில்லாமையால், இவ்வுலகத் துள்ளோரில் இந்தக் கொடிய விஷத்தை யொழிப்பவர்களுக்கு என்னுடைய அளவில்லாத பொருட்குவைகளைக் கொடுப்போனென்று பறையறைந்து தெரிவித்தார். - எ - று.

***முரசி யம்பிய மூன்றுநாள் அகவையின் முற்ற***
***அரசர் பாங்குளோர் உட்பட அவனிமே லுள்ள***
***கரையில் கல்வியோர் யாவரும் அணைந்துதங் காட்சிப்***
***புரையில் செய்கையில் தீர்ந்திடா தொழிந்திடப் போனார். 1064***

(இ - ள்.) பறையறைந்து தெரிவிக்கவும், அன்று தொடங்கி மூன்று நாள் வரையிலும் அரசர்கள் பக்கலிலுள்ள மருந்துவர் களுட்பட உலகத்திலுள்ள அளவற்றகாருட முதலிய வித்தையில் வல்லவர்கள் யாவருமடைந்து, தாங்கள் விட நீங்கப் பார்க்கும் பார்வை யென்னும் குற்றமற்ற செய்கையினால் தீராதொழியப் போனார்கள். - எ - று.

***சீரின் மன்னிய சிவநேசர் கண்டுளம் மயங்கிக்***
***காரின் மல்கிய சோலைசூழ் கழுமலத் தலைவர்***
***சாரும் அவ்வள வும்உடல் தழலிடை அடக்கிச்***
***சேர என்பொடு சாம்பல்சே மிப்பது தெளிவார். 1065***

(இ - ள்.) சிறப்புப் பொருந்திய சிவநேசசெட்டியார் அதனைப் பார்த்து மனமயங்கி, மேகங்களால் நிறைந்த சோலை சூழ்ந்த சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் இங்கு எழுந்தருளி வருமளவும் இவ்வுடம்பை நெருப்பில் அடக்கி, எலும்போடு சாம்பலையும் ஒருசேரச் சேமித்து வைப்பதைத் தெளிவாராயினார். - எ - று.

***"உடைய பிள்ளையார்க் கெனஇவள் தனைஉரைத் ததனால்***
***அடைவு துன்புறு வதற்கிலை யாம்நமக்(கு)" என்றே***
***இடரொ ழிந்தபின் அடக்கிய என்பொடு சாம்பல்***
***புடைபெ ருத்தகும் பத்தினிற் புகப்பெய்து வைப்பார். 1066***

(இ - ள்.) இப்புத்திரியை என்னை யடிமையாகவுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கென்று யாவரு மறியச் சொன்னதனால், நமக்குத் துன்பமடைதற்கு முறைமையில்லை யென்று துன்பம் நீங்கினபின்பு, நெருப்பினிடத்து வேகச் செய்த எலும்புடன் சாம்பலை இடமகன்ற குடத்தில் இட்டு வைப்பாரா யினார். - எ - று.

***கன்னி மாடத்தில் முன்புபோற் காப்புற அமைத்துப்***
***பொன்னும் முத்துமேல் அணிகலன் பூந்துகில் சூழ்ந்து***
***பன்னு தூவியின் பஞ்சணை விரைப்பள்ளி அதன்மேல்***
***மன்னு பொன்னரி மாலைகள் அணிந்துவைத் தனரால். 1067***

(இ - ள்.) கன்னிமாடத்தில் முன்பு போலத் தாதியர்கள் காவலிருக்கும்படி வைத்து, அதன்மேல் பொன்னையும் - முத்தையும் - ஆபரணங்களையும் - வஸ்திரங்களையும் - அலங்கரித்து, சிறந்த அன்னத் தூவியாலாகிய மெத்தையில் வாசனைப் பொருள்களாலமைத்த படுக்கையின்மேல் சிறப்புப் பொருந்திய பொன்னரிமாலைகளணிந்து வைத்தனர். - எ - று.

***மாலை சாந்தொடும் மஞ்சனம் நாடொறும் வழாமைப்***
***பாலின் நேர்தரும் போனகம் பகல்விளக் கினைய***
***சாலு நன்மையில் தகுவன நாடொறுஞ் சமைத்தே***
***ஏலு மாசெய் யாவரும் வியப்பெய்து நாளில்.*** **1068**

(இ - ள்.) மாலை சந்தனத்தோடு திருமஞ்சனமிவைகள் நாள்தோறுங் குறையாமல், பாலால் சமைத்த உண்டியும், பகல் விளக்குமாகிய இவை போல்வனவற்றை மிக்க நன்மையினால் உரியவைகளை நாள்தோறுஞ் செய்து பொருந்தும்படிப் பூசிக்க, அங்குள்ளவர்கள் யாவரும் அதிசயமடைந்திருக்கும் நாள்களில்.- எ - று.

***சண்பை மன்னவர் திருவொற்றி யூர்நகர் சார்ந்து***
***பண்பு பெற்றநற் றொண்டர்க ளுடன்பணிந் திருந்த***
***நண்பு மிக்கநல் வார்த்தைஅந் நற்பதி யுள்ளோர்***
***வண்பு கழ்ப்பெரு வணிகர்க்கு வந்துரை செய்தார்.*** **1069**

(இ - ள்.) சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவொற்றியூரென்னுந் திருப்பதியையடைந்து, சிவநேசமமைந்த நல்ல திருத்தொண்டர்களோடு ஸ்ரீ தியாக ராசப் பெருமானை வணங்கி யெழுந்தருளியிருந்த நண்புமிகுந்த நல்ல வார்த்தையை அத்திருவொற்றியூரிலுள்வர்கள் மிக்க புகழையுடைய சிறந்த சிவநேசசெட்டியாருக்கு வந்து சொன் னார்கள். - எ - று.

***சொன்ன வர்க்கெலாந் துசொடு காசுபொன் னளித்தே***
***இன்ன தன்மையர் எனவொணா மகிழ்சிறந் தெய்தச்***
***சென்னி வாழ்மதி யார்திரு வொற்றியூர் அளவும்***
***துன்னு நீள்நடைக் காவணந் துகில்விதா னித்து.*** **1070**

(இ - ள்.) அவ்வாறு சொன்னவர்களுக்கெல்லாம் வஸ்திரங் களோடு மணிகளையும் பொன்னையுங் கொடுத்து, இவர் இத்தன்மையாரென்று சொல்லுதற்கரிய மகிழ்ச்சி யதிகரிக்க

திருமுடியில் சிறந்த சந்திரனையணிந்த சிவபெருமா னெழுந் தருளிய திருவொற்றியூரென்னுந் திருப்பதியளவும், நெருங்கிய நீண்ட நடைப்பந்தலையும் வஸ்திரத்தாலாகிய மேற்கட்டியையுங் கட்டி. - எ - று.

**மகர தோரணம் வண்குலைக் கமுகொடு கதலி**
**நிகரில் பல்கொடித் தாமங்கள் அணிபெற நிரைத்து**
**நகர நீள்மறு கியாவையும் நலம்புனை அணியால்**
**புகரில் பொன்னுல கிழிந்ததாம் எனப்பொலி வித்தார். 1071**

(இ - ள்.) மகர தோரணங்களையும், வளம் பொருந்திய குலைகளையுடைய கமுகமரத்துடன் வாழை மரங்களையும், ஒப்பற்ற பல கொடிகளோடு மாலைகளையும் அழகு பெறவரிசை யாக வைத்து, திருமயிலைப் பதியிலுள்ள நீண்ட வீதிகளை யெல்லாம் நன்மைமிகுந்த அலங்காரத்தினால் குற்றமற்ற பொன்னுலகமானது பூமியில் வந்ததென்று சொல்லும்படி அலங்கரித்தார். - எ - று.

**இன்ன வாறணி செய்துபல் குறைவறுப் பேவி**
**"முன்னம் ஒற்றியூர் நகரிடை முத்தமிழ் விரகர்**
**பொன்ன டித்தலந் தலைமிசை புனைவன்" என் றெழுவார்**
**அந்ந கர்ப்பெருந் தொண்டரும் உடன்செல அணைந்தார். 1072**

(இ - ள்.) இவ்வாறு அலங்காரஞ் செய்து வேண்டிய பல குறைகளையும் முடிக்கும்படிப் பரிசனங்களை ஏவி, முன்னே திருவொற்றியூர் நகரிற் சென்று முத்தமிழ்த் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது பொன்போன்ற திருவடி களைச் சிரசில்சூடுவேனென்று எழுகின்ற அச்சிவநேச செட்டியார் அத்திருமயிலைப் பகுதியிலுள்ள பெரிய திருத் தொண்டர்களும் தம்முடன் செல்லும்படி அத்திருவொற்றியூரை யடைந்தார். - எ - று.

**ஆய வேலையில் அருமறைப் புகலியர் பிரானும்**
**மேய வொற்றியூர் பணிபவர் வியன்நகர் அகன்று**
**காயல் சூழ்கரைக் கடல்மயி லாபுரி நோக்கித்**
**தூய தொண்டர்தங் குழாத்தொடும் எதிர்வந்து தோன்ற. 1073**

(இ - ள்.) அக்காலத்தில் அரிய வேதங்களை யோதா துணர்ந்த திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் பெருமை பொருந் திய திருவொற்றியூரை வணங்குகின்றவராய் இடமகன்ற அத்திரு வொற்றியூரை நீங்கிக் கழிநிலஞ் சூழ்ந்த கடற்கரையிலுள்ள திருமயிலை யென்னுந் திருப்பதியை நோக்கிப் பரிசுத்தம்

பொருந்திய அடியார் திருக்கூட்டத்தோடும் சிவநேசசெட்டியாருக்கு எதிரில் (முத்துச் சிவிகையில்) எழுந்தருளிவர. - எ - று.

***மாறில் வண்பெரு வணிகரும் தொண்டரும் மலர்ந்த***
***நீறு சேர்தவக் குழாத்தினை நீளிடைக் கண்டே***
***"ஆறு சூடினார் திருமக னார்அணைந் தார்" என்(று)***
***ஈறி லாததோர் மகிழ்ச்சியி னால்விழுந் திறைஞ்ச. 1074***

(இ - ள்.) மாறுபாடில்லாத வளம்பொருந்திய சிவநேச செட்டியாரும் திருத் தொண்டர்களும் விளங்குகின்ற திருவெண் ணீறு சேர்ந்த அடியார் திருக்கூட்டங்களை நெடுந்தூரத்திற் கண்டு, கங்கை நதியைத் தரித்த சிவபெருமான் திருக்குமாரராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரெழுந்தருளினாரென்று, முடிவில்லாத பெருமகிழ்ச்சியினால் பூமியில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்க. - எ - று.

***காழி நாடரும் கதிர்மணிச் சிவிகைநின் றிழிந்து***
***சூழி ரும்பெருந் தொண்டர்முன் தொழுதெழுந் தருளி***
***வாழி மாதவர் வணிகர்செய் திறஞ்சொலக் கேட்டே***
***ஆழி சூழ்மயி லாபுரித் திருநகர் அணைந்தார். 1075***

(இ - ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையாரும் விளங்குகின்ற முத்துசிவிகையினின்றுங் கீழேயிறங்கித் தம்மைச் சூழ்ந்திருக் கின்ற பெருமை பொருந்திய திருத்தொண்டர்களுக்கு முன்னே வணங்கி யெழுந்தருளி, மிக்க தவசிரேஷ்டர்களாகிய அடியார்கள் சிவநேச செட்டியார் செய்த காரியங்களைச் சொல்லக் கேட் டருளி, சமுத்திரஞ் சூழ்ந்த திருமயிலை யென்னுந் திருப்பதியை யடைந்தருளினார். - எ - று.

***அத்தி றத்துமுன் நிகழ்ந்தது திருவுள்ளத் தமைத்துச்***
***சித்தம் இன்புறு சிவநேசர் தஞ்செயல் வாய்ப்பப்***
***பொய்த்த வச்சமண சாக்கியர் புறத்துரை அழிய***
***வைத்த அப்பெருங் கருணைநோக் கால்மகிழ்ந் தருளி. 1076***

(இ - ள்.) அவ்வடியார் கூறியவாறு முன் நடந்ததைத் தமது திருவுள்ளத்திற் கருதி, மனதில் இன்பமடைந்திருக்குஞ் சிவநேசசெட்டியாரது எண்ணம் நிறைவேறவும், பொய்யாகிய தவவொழுக்கத்தையுடைய சமணர் பௌத்தர்களது புறச் சமயங்களழியவும் தமது திருவுள்ளத் தடைத்த பெருங்கருணை நோக்கத்தால் மகிழ்கூர்ந்தருளி. - எ - று.

***கங்கை வார்சடை யார்கபா லீச்சரத் தணைந்து***
***துங்க நீள்சுடர்க் கோபுரந் தொழுதுபுக் கருளி***
***மங்கை பங்கர்தங் கோயிலை வலங்கொண்டு வணங்கிச்***
***செங்கை சென்னிமேற் குவித்திடத் திருமுன்பு சேர்ந்தார். 1077***

(இ - ள்.) கங்கைநதி பொருந்திய நீண்ட சடைமுடியை யுடைய ஸ்ரீகபாலீச ரெழுந்தருளிய கபாலீச்சரமென்னுந் திருக் கோயிலை யடைந்து, மிக்க ஒளி பொருந்திய திருக்கோபுரத்தை வணங்கி யுள்ளே புகுந்து, பார்வதி பாகராகிய அவ்வெம் பெருமானது திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ் செய்து வணங்கிச் சிவந்த திருக்கரங்கள் சிரசின்மேற் குவிய ஸ்ரீகபாலீசரது சந்நிதியில் வந்தருளினார். - எ - று.

***தேவ தேவனைத் திருக்கபா லீச்சரத் தமுதைப்***
***பாவை பாகனைப் பரிவுறு பண்பினாற் பரவி***
***மேவு காதலின் விரும்பிய விரைவினால் விழுந்து***
***நாவின் வாய்மையிற் போற்றினார் ஞானசம் பந்தர். 1078***

(இ - ள்.) தேவர்கள் நாயகரும், திருக்கபாலீச்சர மென்னுந் திருக்கோயிலிலெழுந்தருளிய அமுதம் போல்பவரும், பார்வதி பாகருமாகிய ஸ்ரீகபாலீசரை அன்புமிக்க நற்குணத்தோடு துதித்து, பெருவிருப்பினால் திருவுள்ளத்திற்கொண்ட விரைவி னால் விழுந்து வணங்கித் தமது திருநாவினது மெய்ம்மையினால் துதித்தருளினார்; திருஞானசம்பந்தப்பிள்ளையார். - எ - று.

***போற்றி மெய்யருட் டிறம்பெறு பரிவுடன் வணங்கி***
***நீற்றின் மேனியில் நிறைமயிர்ப் புளகங்கள் நெருங்கக்***
***கூற்ற டர்த்தவர் கோயிலின் புறம்புபோந் தருளி***
***ஆற்றும் இன்னருள் வணிகர்மேற் செலஅருள் செய்வார். 1079***

(இ - ள்.) துதித்து, மெய்ம்மையாகிய திருவருளின் திறத்தை யடையும் விருப்பத்தோடு வணங்கி, திருவெண்ணீ றணிந்த திருமேனியில் நிறைந்த புளகாங்கித முண்டாகிய இயமனை யுதைத்தருளிய ஸ்ரீகபாலீசரது திருக்கோயிலின் புறத்திற் சென்றருளி, பொருந்திய திருவருளானது அச் சிவநேச செட்டியாரிடத்திற்செல்ல, அருளிச் செய்வாராயினார். - எ - று.

***"ஒருமை உய்த்தநல் லுணர்வினீர்! உலகவர் அறிய***
***அருமை யாற்பெறு மகள்என்பு நிறைத்தஅக் குடத்தைப்***
***பெருமயானத்து நடம்புரி வார்பெருங் கோமில்***
***திரும திற்புற வாய்தலிற் கொணர்"கென்று செப்ப. 1080***

(இ - ள்.) ஒருமைப்பட்ட நல்லறிவினையுடையவரே! உலகத்தாரறியும்படி நீர் அருமையாகப் பெற்ற புத்திரியினது எலும்பை நிறைத்து வைத்திருக்கும் அந்தக் குடத்தை மகாமசானத்தில் திருநடனம் புரிந்தருளும் ஸ்ரீ கபாலீசரரது பெரிய திருக்கோயிலின் திருமதிலின் புறத்திலுள்ள சந்நிதி வாயிலிற் கொண்டு வருவீரென்று கூறியருள. - எ - று.

**அந்த மில்பெரு மகிழ்ச்சியால் அவனிமேற் பணிந்து**
**வந்து தந்திரு மனையினில் மேவிஅம் மருங்கு**
**கந்த வார்பொழிற் கன்னிமா டத்தினிற் புக்கு**
**வெந்த சாம்பலோ டென்புசேர் குடத்தைவே றெடுத்து. 1081**

(இ - ள்.) முடிவில்லாத பெருமகிழ்ச்சியினால் பூமியில் விழுந்து வணங்கி, அவ்விடத்தினின்றுந் தமது திருமாளிகையிற் சென்று, அம்மாளிகையருகில் வாசனை பொருந்திய நீண்ட சோலை சூழ்ந்த கன்னிமாடத்திற் புகுந்து, வெந்த சாம்பலுடன் எலும்பும்சேர்ந்த குடத்தை வேறாக எடுத்து. - எ - று.

**மூடு பன்மணிச் சிவிகையுட் பெய்துமுன் போத**
**மாடு சேடியர் இனம்புடை சூழ்ந்துவந் தணைய**
**ஆடல் மேவினார் திருக்கபா லீச்சரம் அணைந்து**
**நீடு கோபுரத் தெதிர்மணிச் சிவிகையை நீக்கி. 1082**

(இ - ள்.) பல மணிகளாற் செய்து மூடிய சிவிகையினுள்ளே வைத்து முன்னே கொண்டு வரவும், அதனருகில் தாதியர் கூட்டம் புடைசூழ்ந்து வரவும், ஸ்ரீகபாலீசரது திருக்கபாலீச்சரத்தை யடைந்து உயர்ந்த திருக்கோபுரத்திற்கு எதிரே அவ்விரத்தினச் சிவிகையை நீக்கி யெடுத்து. - எ - று.

**அங்க ணாளர்தம் அபிமுகத் தினில்அடி உறைப்பால்**
**மங்கை என்புசேர் குடத்தினை வைத்துமுன் வணங்கப்**
**பொங்கு நீள்புனற் புகலிகா வலர்புவ னத்துத்**
**தங்கி வாழ்பவர்க் குறுதியாம் நிலைமைசா திப்பார். 1083**

(இ - ள்.) அருட்கண்ணராகிய ஸ்ரீ கபாலீசரது சந்நிதிக்கெதிரில் அடிபொருந்தும்படி பூம்பாவையாரது எலும்பு வைத்திருக்கின்ற குடத்தை வைத்துத் திருஞானசம்பந்தப் பிள்ளையாரது திருமுன்னின்று வணங்க, அலை பொங்குகின்ற காவிரிநீர் சூழ்ந்த சீகாழித் தலைவராகிய பிள்ளையார் உலகத்தில் பொருந்தி வாழ்கின்ற மனிதர்களுக்கு உறுதியைத் தரத்தக்கதாகிய நிலைமையைச் சாதிப்பாராயினார். - எ - று.

**மாடம் ஓங்கிய மயிலைமா நகருளார் மற்றும்**
**நாடு வாழ்பவர் நன்றியில் சமயத்தி னுள்ளோர்**
**மாடு சூழ்ந்துகாண் பதற்குவந் தெய்தியே மலிய**
**நீடு தேவர்கள் ஏனையோர் விசும்பிடை நெருங்க. 1084**

(இ - ள்.) மாடங்களுயர்ந்த திருமயிலைமா நகரத்திலுள்ளவர்களும், பின்னும்மற்ற நாடுகளில் வாழ்கின்றவர்களும், நன்மையற்ற புறச் சமயத்திலுள்ளவர்களும் அருகில்சூழ்ந்து காணும்படி வந்தடைந்து சூழவும், உயர்ந்த தேவர்களும் மற்றை கருட காந்தருவ சித்த வித்தியாதரர் முதலியோர்களும் ஆகாயத்தில் நெருங்கவும். - எ - று.

**தொண்டர் தம்பெருங் குழாம்புடை சூழ்தரத் தொல்லை**
**அண்டர் நாயகர் கோபுர வாயில்நேர் அணைந்து**
**வண்டு வார்குழ லாள்என்பு நிறைந்தமட் குடத்தைக்**
**கண்டு தம்பிரான் கருணையின் பெருமையே கருதி. 1085**

(இ - ள்.) சிறந்த அடியார் கூட்டங்கள் அருகிற் சூழும்படி பழமை பொருந்திய தேவர்கள் நாயகராகிய ஸ்ரீ கபாலீசரது திருக்கோபுரவாயிலின் முன்னே யடைந்து, வண்டுகள் மொய்க்கும் நீண்ட கூந்தலையுடைய பூம்பாவையாரது எலும்பு நிறைந்த மண்குடத்தைப் பார்த்தருளிச் சிவபெருமானது திருவருட் பெருமையைத் திருவுள்ளத்திற் கருதி. - எ - று.

**"இந்த மாநிலத் திறந்துளோர் என்பினைப் பின்னும்**
**நந்து நன்னெறிப் படுத்திட நன்மையாந் தன்மை**
**அந்த என்பொடு தொடர்ச்சியாம்" எனஅருள் நோக்கால்**
**சிந்தும் அங்கம்அங் குடையபூம் பாவைபேர் செப்பி. 1086**

(இ - ள்.) இந்தப் பெரிய நிலவுலகத்திலே இறந்தவர்களுடைய எலும்பை உயர்ந்த நன்னெறியிற் சேர்க்க நன்மை வருந்தன்மை அந்த எலும்போடு தொடர்ச்சியாகும் என்று கிருபா நோக்கத்தினாலே சிதறிய எலும்பை அக்குடத்தின் கண்ணுடைய பூம்பாவையாரது பெயரைக் கூறி. - எ - று.

**மண்ணி னிற்பிறந் தார்பெறும் பயன்மதி சூடும்**
**அண்ண லார்அடி யார்தமை அமுதுசெய் வித்தல்**
**கண்ணி னால்அவர் நல்விழாப் பொலிவுகண் டார்தல்**
**உண்மை யாமெனில் உலகர்முன் வரு"கென உரைப்பார். 1087**

(இ - ள்.) பூமியிலே மானுடப்பிறப்பு எடுத்தவர்கள் பெறுதற் குரிய பயன், சந்திரனை யணிந்த சிவபெருமானது அடியார் களைத் திருவமுது செய்வித்தலும், கண்களினால் எம்பெருமா னது நல் திருவிழாப் பொலிவைத் தரிசித்து ஆனந்தமடைதலுமே யென்பது சத்தியமாயின், இவ்வுலகத்தார் முன்பு வரக் கடவா யென்று வுரைப்பாராயினார். - எ - று.

***மன்னு வார்சடை யாரைமுன் தொழுது "மட்டிட்ட"***
***என்னும் நற்பதி கத்தினிற் "போதியோ" என்னும்***
***அன்ன மெய்த்திரு வாக்கெனும் அமுதம்அவ் வங்கம்***
***துன்ன வந்துவந் துருவமாயத் தொக்கதக் குடத்துள். 1088***

(இ - ள்.) நிலைபெற்ற நீண்ட சடைமுடியையுடைய ஸ்ரீகபாலீசரை முன்னே வணங்கி "மட்டிட்ட" என்னு முதலை யுடய திருப்பதிகத்தில், "போதியோ பூம்பாவாய்" என்று இறுதி யில் முடித்த திருவாக்கென்னு மமுதமானது அவ்வெலும்பில் பொருந்த, அது உருவமாய்ப் பரிணமித்து அக்குடத்துட் சேர்ந்தது. - எ - று.

***ஆன தன்மையின் அத்திருப் பாட்டினில் அடைவே***
***போன வாயுவும் வடிவமும் பொலிவொடு நிரம்பி***
***ஏனை அக்குடத் தடங்கிமுன் னிருந்தெழு வதன்முன்***
***ஞான போனகர் பின்சமண் பாட்டினை நவில்வார். 1089***

(இ - ள்.) அவ்வெலும்பு உருவமாய்ப் பரிணமித்த முறையில், அத்திருப்பதிகப் பாட்டினடைவே. நீங்கிய பிராண வாயுவும், அவயவங்களும் அழகோடு நிரம்பப் பெற்று அக்குடத்தில் முன்னே யடங்கியிருந்து எழுவதற்கு முன்னே, திருஞானசம்பந் தப்பிள்ளையார் பின் சமணர்களைக் குறித்துப் பாடியருளுந் திருப்பாடலை யருளிச் செய்வாராயினார். - எ - று.

***"தேற்ற மில்சமண் சாக்கியத் திண்ணரிச் செய்கை***
***ஏற்ற தன்றென எடுத்துரைப் பார்" என்றபோது***
***கோற்றொ டிச்செங்கை தோற்றிடக் குடம்உடைந் தெழுவாள்***
***போற்று தாரைப் போதவிழ்ந் தெழுந்தனன் போன்றாள். 1090***

(இ - ள்.) தெளிவில்லாத சமண சாக்கியர்களாகிய கீழ்மக்கள், யான் செய்யுமிச் செய்கை செய்து முடித்தற்குரிய தன்றென்று எடுத்துக் குறை கூறுவார்களென்னுங் கருத்தால்

அருளிச் செய்த போது, அழகிய வளையலை யணிந்த சிவந்த கைகள் வெளியே தோன்ற, அக்குடமுடைந்து எழுகின்ற பூம்பாவையார் யாவருந் துதிக்குந் தாமரை யரும்பு மலர்ந்து எழுந்தருளிய இலக்குமியை யொத்தவராயினார். - எ - று.

***எடுத்த பாட்டினில் வடிவுபெற் றிருநான்கு திருப்பாட்(டு)***
***அடுத்த அம்முறைப் பன்னிரண்ட டாண்டள வணைந்து***
***தொடுத்த வெஞ்சமண் பாட்டினில் தோன்றிடக் கண்டு***
***விடுத்த வேட்கையர் திருக்கடைக் காப்புமேல் விரித்தார். 1091***

(இ - ள்.) "மட்டிட்ட" என்று தொடங்கிய திருப்பாடலில் உருவத்தைப் பெற்று, அடுத்த வேறெட்டுப் பாட்டிலே அம் முறையே பன்னிரண்டு வயதளவடைந்து அதன்பின் பாடி யருளிய கொடிய சமண்பாட்டில் வெளிபட்டு வரக்கண்டு, ஆசை யொழிந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் பின் திருக் கடைக்க காப்பை யருளிச் செய்தார். - எ - று.

***ஆங்கனம் எழுந்து நின்ற அங்கினை நோக்கு வார்கள்***
***"ஈங்கிது காணீர்" என்ன அற்புதம் எய்தும் வேலைப்***
***பாங்குசூழ் தொண்ட ரானோர் "அரகர" என்னப் பார்மேல்***
***ஓங்கிய ஓசைஉம்பர் நாட்டினை உற்ற தன்றே. 1092***

(இ - ள்.) அவ்வாறு எழுந்து நின்ற பூம்பாவையாரைக் கண்ட வர்கள் இங்கே இதனைக் காப்பீராக வென்று அற்புதமடையும் பொழுது, அருகிற் சூழ்ந்த அடியார்களெல்லாம் அரகரவென்று ஆரவாரிக்க உலகில் அதிகரித்த அவ் வோசையானது விண்ணுலகத்தை யடைந்தது. - எ - று.

***தேவரும் முனிவர் தாமும் திருவருட் சிறப்பு நோக்கிப்***
***பூவரு விரைகொள் மாரி பொழிந்தனர்; ஒழிந்த மண்ணோர்***
***யாவரும் "இருந்த வண்ணம் எம்பிரான் கருணை" என்றே***
***மேவிய கைகள் உச்சி மேற்குவித் திறைஞ்சி வீழ்ந்தார். 1093***

(இ - ள்.) தேவர்களும் முனிவர்களும் திருவருட் சிறப்பைப் பார்த்து வாசனை பொருந்திய புஷ்ப மழையைப் பொழிந் தார்கள். அவரல்லாத நிலவுலகத்திலுள்ளோர் யாவரும் இவ்வாறு நிகழ்ந்தது எமது சிவபெருமான் திருவருளென்று பொருந்திய கைகளைச் சிரசின்மேற் குவித்து வணங்கிப் பூமியில் பொருந்த வீழ்ந்தார்கள். - எ - று.

**அங்கவள் உருவங் காண்பார் அதிசயம் மிகவும் எய்திப்**
**பங்கமுற் றாரே போன்றார் பரசம யத்தி னுள்ளோர்**
**"எங்குள செய்கை தான்மற் றென்செய்த வா"றிதென்று**
**சங்கையாம் உணர்வு கொள்ளும் சமணர்தள் ளாடி வீழ்ந்தார். 1094**

(இ - ள்.) அப்பூம்பாவையாரது திருவுருவத்தைக் காணுகின்றவராகிய புத்தர் முதலிய புறச் சமயத்துள்வர்கள் மிக்க அதிசயமடைந்து சேற்றிலழுந்தினவரை யொத்தார்கள். இச்செய்கை யெங்குள்ளது; எவ்வாறு செய்யப்பட்டதென்று சந்தேகவுணர்ச்சியடைந்த சமணர்கள் தள்ளாடிப் பூமியில் விழுந்தார்கள். - எ - று.

**கன்னிதன் வனப்புத் தன்னைக் கண்களால் முடியக் காணார்**
**முன்னுறக் கண்டார்க் கெல்லாம் மொய்கருங் குழலின் பாரம்**
**மன்னிய வதன செந்தா மரையினிற் கரிய வண்டு**
**துன்னிய ஒழுங்கு துற்ற சூழல்போல் இருண்டு தோன்ற. 1095**

(இ - ள்.) அப்பூம்பாவையாரது அழகைத் தங்கள் கண்களால் முழுதுங்காணமல் முற்படப் பார்த்தவர்களுக்கெல்லாம் நெருங்கிய கரிய அளகபாரமானது பொருந்திய முகமென்னுஞ் செந்தாமரை மலரின்மேல் கருமை பொருந்திய வண்டுகளின் நெருங்கிய ஒழுங்கானது வரிசையாய்ச் சூழ்ந்திருந்தாற் போலக் கருநிறமடைந்து தோன்றவும். - எ - று.

**பாங்கணி கரும்பு மொய்த்த பனிமலர் அளகப் பந்தி**
**தேங்கமழ் ஆரஞ் சேருந் திருநுதல் விளக்கம் நோக்கில்**
**பூங்கொடிக் கழகின் மாரி பொழிந்திடப் புயற்கீ ழிட்ட**
**வாங்கிய வான வில்லின் வளரொளி வனப்பு வாய்ப்ப. 1096**

(இ - ள்.) அருகில் அழகிய வண்டுகள் நெருங்கிய குளிர்ந்த மாலைகளை முடித்த அளகபந்தியானது வாசனை வீசுகின்ற பூமாலையோடு சேர்ந்திருக்கும் அழகிய நெற்றியின் அழகைப் பார்க்குமிடத்தில், பூங்கொம்பு போன்ற பூம்பாவையாருக்கு அழகின் மழைபொழியும்படி மேகம் தன் கீழிட்டவளைந்த இந்திரவில்லினது மிக்க ஒளியின் அழகையடையவும். - எ - று.

**புருவமென் கொடிகள் பண்டு புரமெரித் தவர்தம் நெற்றி**
**ஒருவிழி எரியின்நீறாய் அருள்பெற உளனாங் காமன்**
**செருவெழும் தனுவ தொன்றும் சேமவில் லொன்றும் ஆக**
**இருபெருஞ் சிலைகள் முன்கொண் டெழுந்தன போலஏற்ப. 1097**

(இ - ள்.) புருவமென்னும் மிருதுவாகிய கொடிகள், பூர்வத்தில் திரிபுரங்களை யழிந்தருளிய சிவபெருமானது நெற்றியிலுள்ள ஒப்பற்ற விழியினின்றுண்டாகிய நெருப்பில் சாம்பராய், அவரது திருவருளைப் பெருங்கால் வடிவம் பெறத் தோன்றிய மன்மதன் போர்க்கெழுகின்ற வில்லொன்றும், அதற்குச் சேமமாகிய வில்லொன்றுமாக இரண்டு பெரிய விற்களை முன்னே கொண்டு எழுந்தாற் போலத் தோன்றவும். - எ - று.

***மண்ணிய மணியின் செய்ய வளரொளி மேனி யாள்தன்***
***கண்ணிணை வனப்புக் காணில் காமரு வதனத் திங்கள்***
***தண்ணளி விரிந்த சோதி வெள்ளத்தில் தகைவின் நீள***
***ஒண்ணிறக் கரிய செய்ய கயலிரண் டொத்து லாவ.*** **1098**

(இ - ள்.) அலங்கரிக்கப் பெற்ற மாணிக்கம் போன்ற சிவந்த ஒளி வளர்கின்ற திருமேனியையுடைய பூம்பாவையாரது இரு விழிகளின் அழகைக் காணுமிடத்து அழகிய முகமென்னுஞ் சந்திரனது குளிர்ச்சிமிகுந்த ஒளிவெள்ளத்தில் பெருமை பொருந் திய நீண்ட மிகுந்த ஒளிமிக்க கருமையுஞ் செம்மையுங்கலந்த இரண்டு சேற்கண்டை களையொத் துலாவவும். - எ.- று.

***பணிவளர் அல்குல் பாவை நாசியும் பவள வாயும்***
***நணியபே ரொளியில் தோன்றும் நலத்தினை நாடு வார்க்கு***
***பணிநிறக் கோபங் கண்டு மற்றது வவ்வத் தாழும்***
***அணிநிலக் காம ரூபி அணைவதாம் அழகு காட்ட.*** **1099**

(இ - ள்.) சர்ப்பம் போல் வளர்ந்த நிதம்பத்தையுடைய பூம் பாவையாரது மூக்கும், பவளம் போன்ற வாயும் பொருந்திய பேரொளியினால் தோன்றுகின்ற அழகைப் பார்ப்பவர்களுக்கு மாணிக்கத்தின் நிறம் போன்ற இந்திர கோபத்தைப் பார்த்து, அதனைக் கவரும்படித் தாழ்கின்ற அழகிய நிறத்தையுடய பச்சோந்தியை யொத்த தாகிய அழகினைக் காட்டவும். - எ - று.

***இளமயில் அனைய சாயல் ஏந்திழை குழைகொள் காது***
***வளமிகு வனப்பி னாலும் வடிந்ததா ளுடைமை யாலும்***
***கிளரொளி மகர வேறு கெழுமிய தன்மை யாலும்***
***அளவில்சீர் அனங்கன் வென்றிக் கொடியிரண் டனைய வாக.*** **1100**

(இ - ள்.) இளமை பொருந்திய மயிலை யொத்த சாயலையும், சிறந்த ஆபரணத்தையு மணிந்த பூம்பாவையாரது குண்டலத்தை

யணிந்த காதானது வளப்பமிக்க அழகினாலும், வடிந்த காதுத் தண்டை யுடைத்தாயிருப்பதானாலும், மிக்க ஒளியினையுடைய மகர குண்டலமானது பொருந்திய தன்மையினாலும் அளவற்ற சிறப்பினையுமுடைய மன்மதனது இரண்டு வெற்றிக்கொடியை யொத்தனவாக விளங்கவும். - எ - று.

***விற்பொலி தரளக் கோவை விளங்கிய கழுத்து மீது***
***பொற்பமை வதன மாகும் பதுமநன் நிதியம் பூத்த***
***நற்பெரும் பணிலம் என்னும் நன்னிதி போன்று தோன்றி***
***அற்பொலி கண்டர் தந்த அருட்கடை யாளங் காட்ட.*** 1101

(இ - ள்.) ஒளிபொருந்திய முத்துமாலைவிளங்குங் கழுத்தானது, தன்மீது அழகமைந்த முகமென்னும் பதுமநிதி மலரும்படி, அதன்கீழ் பெரிய சங்க நிதி போன்று தோன்றப் பெற்று, காளகண்டத்தையுடைய சிவபெருமான் தந்தருளிய திருவருளுக்கு ஓரடையாளத்தைக் காட்டவும். - எ - று.

***எரியவிழ் காந்தள் மென்பூத் தலைதொடுத் திசையவைத்துத்***
***திரள்பெறச் சுருக்குஞ் செச்சை மாலையோ தெரியின் வேறு***
***கருநெடுங் கயற்கண் மங்கை கைகளால் காந்தி வெள்ளம்***
***அருகிழிந் தனவோ என்னும் அதிசயம் வடிவிற் றோன்ற.*** 1102

(இ - ள்.) கருமை பொருந்திய நீண்ட கயல்போலுங் கண்களையுடைய பூம்பாவையாரது வடிவில், (பார்ப்பவர்களுக்குக்) கைகள் காரணமாக எரிபோல் மலர்ந்த செங்காநத்ள் மலரை நுனியில் தொடுத்தப் பொருந்தவைத்து, அதன் மேல் உருட்சியாகக் கட்டிய வெட்சிப்பூமாலையோ? அதுவன்றி, வேறு ஆராயுங்கால், உடம்பன் காந்தி வெள்ளமானது அருகில் வழிந்தனவோவென்னும் அதிசயந் தோன்றவும். - எ - று.

***ஏர்கெழு மார்பிற் பொங்கும் ஏந்திளங் கொங்கை நாகக்***
***கார்கெழு விடத்தை நீக்குங் கவுணியர் தலைவர் நோக்கால்***
***ஆர்திரு வருளிற் பூரித் தடங்கிய அமுத கும்பச்***
***சீர்கெழு முகிழைக் காட்டுஞ் செவியிற் றிகழ்ந்து தோன்ற.*** 1103

(இ - ள்.) அழகு மிக்க மார்பில் விளங்குகின்ற இளமை பொருந்திய ஸ்தனங்கள் பாம்பின் கரிய விஷத்த யொழித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது அருணோக்கத்தால் பொருந்திய திருவருளினால் பூரித்து அடங்கிய அமுதாகும் பங்களின் வாயிலடைத்த சிறந்த குமிழைக்காட்டுகின்ற அழகால் விளங்கித் தோன்றவும். - எ - று.

**காமவேள் என்னும் வேடன் உந்தியிற் கரந்து கொங்கை**
**நேமியம் புட்கள் தம்மை அகப்பட நேரி தாய**
**தாமநீள் கண்ணி சேர்த்த சலாகைதூக் கியதே போலும்**
**வாமமே கலைசூழ் வல்லி மருங்கின்மேல் உரோம வல்லி. 1104**

(இ - ள்.) அழகிய மேகலாபரணமணிந்த பூம்பாவையாரது இடையின் மேலுள்ள மயிரொபங்கானது, மன்மதனென்னும் வேடனானவன் நாபியினுள்ளே மறைந்து கொங்கையாகிய சக்கரவாகப்புட்களை யகப்படுத்தும் பொருட்டு ஒழுங்காகயி கயிறுகளில் நீண்ட கண்ணிகளைக் கோத்த ஓர் சலாகை தூக்கியதை யொத்திருக்கவும். - எ - று.

**பிணியவிழ் மலர்மென் கூந்தல் பெண்ணமு தனையாள் செம்பொன்**
**அணிவளர் அல்குல் தங்கள் அரவுசெய் பிழையால் அஞ்சி**
**மணிகிளர்க் காஞ்சி சூழ்ந்து வனப்புடை அல்கு லாகிப்**
**பணியுல காளுஞ் சேடன் பணம்விரித் தடைதல் காட்ட. 1105**

(இ - ள்.) கட்டவிழ்ந்த மலர்களை முடித்த மிருதுவாகிய கூந்தலையுடைய பெண்களுள் அமுதம் போன்ற பூம்பாவையா ரது சிவந்த பொன்னாபரணங்கள் விளங்குகின்ற நிதம்பமானது, பாதலத்தை யரசாட்சிசெய்யும் ஆதிசேடன் தங்கள் சுற்றமாகிய பாம்பானது இப் பும்பாவையாருக்குச் செய்த குற்றத்தால் அச்ச முற்று மணிகள் விளங்குங் காஞ்சியென்னும் ஆபரணமணிந்து அழகிய நிதம்ப உருவமாய்ப் படம் விரித்தடைந்த தோற்றத்தைக் காட்டவும். - எ - று.

**வரிமயில் அனைய சாயல் மங்கைபொற் குறங்கின் மாமை**
**கரிஇளம் பிடிக்கை வென்று கதலிமென் தண்டு காட்டத்**
**தெரிவுறு மவர்க்கு மென்மைச் செழுமுழந் தாளின் செவ்வி**
**புரிவுறு பொற்பந் தென்னப் பொலிந்தொளி விளங்கிப் பொங்க. 1106**

(இ - ள்.) வருகின்ற மயிலை யொத்த சாயலையுடைய பூம்பாவையாரது அழகிய துடையின் நிறமானது, யானையிளம் பிடியினது துதிக்கையை வென்று வாழைனிது மிருதுவான இளந்தண்டையொத்த விளங்கவும், நன்காராய்ந்தவர்களுக்கு மிருதுவாகிய செழிய முழந்தாளினழகானது, கட்டிய பொற் பந்து போலப் பொலிந்து ஒளிவிளங்கி யோங்கவும். - எ - று.

**பூவலர் நறுமென் கூந்தல் பொற்கொடி கணைக்கால் காமன்**
**ஆவநா ழிகையே போலும் அழகினில் மேன்மை எய்த**
**மேவிய செம்பொற் றட்டின் வனப்பினை மீதிட் டென்றும்**
**ஓவியர்க் கெழுத ஒண்ணாப் பரட்டொளி ஒளிர்வுற் றோங்க. 1107**

(இ - ள்.) பூக்கள் அலர்ந்து நறுமணங்கமழும் மிருதுவாகிய கூந்தலையுடைய பூம்பாவையாரது கணைக்காலானது மன்மதனது அம்புக் கூட்டை யொத்த அழகால் சிறப்பினையுடையவும்; பொருந்திய செம்பொன்னாலாகிய தராசுத் தட்டின் அழகை வென்ற, எப்பொழுதும் சித்திரக்காரரா லெழுதமுடியாத காற்பரடுகளி னொளியானது விளங்கித் தோன்றவும். - எ - று.

***கற்பகம் ஈன்ற செவ்விக் காமரு பவளச் சோதிப்***
***பொற்றிரள் வயிரப் பத்திப் பூந்துணர் மலர்ந்த போலும்***
***நற்பதம் பொலிவு காட்ட ஞாலமும் விசும்பும் போலும்***
***அற்புதம் எய்தத் தோன்றி அழகினுக் கணியாய் நின்றாள். 1108***

(இ - ள்.) கற்பகத் தருவீன்ற அழகிய பவள வண்ணத்தில் பொற்றிரளோடு வயிர வொழுங்குகளையுடைய பூங்கொத்துகள் மலர்ந்தாற்போலும் நல்ல பாதங்கள் பொலிவைக் காட்டவும், மண்ணுலகும் விண்ணுலகுமாகிய எல்லா வுலகங்களும் ஆச்சரியமடையும்படி வெளிப்பட்டு அழகினுக்கு ஓரழகாக நின்றார். - எ - று.

***எண்ணிலாண் டெய்தும் வேதாப் படைத்தவள் எழிலின் வெள்ளம்***
***நண்ணுநான் முகத்தால் கண்டான் அவளினும் நல்லாள் தன்பால்***
***புண்ணியப் பதினாறாண்டு பேர்பெறும் புகலி வேந்தர்***
***கண்ணுதல் கருணை வெள்ளம் ஆயிர முகத்தாற் கண்டார். 1109***

(இ - ள்.) அளவற்ற வருடங்கள் நிலைபெற்றிருக்கும் பிரமனானவன் தான் படைத்த திலோத்தமையினது அழகின் வெள்ளத்தைப் பொருந்திய நான்கு முகங்களாற் பார்த்தான்; அத்திலோத்தமையினுஞ் சிறந்த இப்பூம்பாவையாரிடத்துப் புண்ணியவடிவமாய்ப் பதினாறு வயதுடையவரென்று பேர் பெற்ற திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிவபெருமானது திருவருள் வெள்ளத்தை அநேகமுகத்தாற் பார்த்தருளினார். - எ - று.

***இன்னணம் விளங்கிய ஏர்கொள் சாயலாள்***
***தன்னைமுன் கண்ணுறக் கண்ட தாதையார்***
***பொன்னணி மாளிகைப் புகலி வேந்தர்தாள்***
***சென்னியிற் பொருந்தமுன் சென்று வீழ்ந்தனர். 1110***

(இ - ள்.) இவ்வாறு பேரழகோடு விளங்குகின்ற அழகிய சாயலையுடைய அப்பூம்பாவையாரைத்தன்கண்ணுக்கு முன்னே

பார்த்த சிவநேச செட்டியார் பொன்மயமான அழகிய மாளிகை களையுடைய சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது திருவடிகள் தமது சிரசிற் பொருந்தும்படி முன்னே சென்று பூமில் விழுந்து வணங்கினார். - எ - று.

***அணங்கினும் மேம்படும் அன்னம் அன்னவள்***
***பணம்புரிஅரவரைப் பரமர் முன்பணிந்(து)***
***இணங்கிய முகில்மதில் சண்பை ஏந்தலை***
***வணங்கியே நின்றனள் மண்ணு ளோர்தொழ.*** ***1111***

(இ - ள்.) தெய்வப் பெண்களினுஞ் சிறந்த அன்னத்தை யொத்த அப்பூம் பாவையார் படத்தையுடைய பாம்பை அரைக்கச்சாக வணிந்த ஸ்ரீகபாலீசரைத் திருமுன்னின்று வணங்கி, மேகங்கள் பொருந்திய மதில் சூழ்ந்த சீகாழித் தலைவராகிய பிள்ளையாரை உலகத்தார் தொழும்படி வணங்கி நின்றார். - எ - று.

***சீர்கெழு சிவநேசர் தம்மை முன்னமே***
***கார்கெழு சோலைசூழ் காழி மன்னவர்***
***“ஏர்கெழு சிறப்பில்நும் மகளைக் கொண்டினிப்***
***பார்கெழு மனையினிற் படர்மின்” என்றலும்.*** ***1112***

(இ - ள்.) சிறப்புமிக்க சிவநேச செட்டியாரை (ப்பார்த்து,) முன்னே, மேகங்கள் தவழுஞ் சோலை சூழ்ந்த சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அழகுமிக்க சிறப்பினையுடைய உமது புத்திரியை யழைத்துக் கொண்டு இனி உலகத்திற் சிறந்த உமது வீட்டிற்குச் செல்லுமென்று கூறி யருளவும். - எ - று.

***பெருகிய அருள்பெறும் வணிகர் பிள்ளையார்***
***மருவுதா மரையடி வணங்கிப் போற்றிநின்(று)***
***“அருமையால் அடியனேன் பெற்ற பாவையைத்***
***திருமணம் புணர்ந்தருள் செய்யும்” என்றலும்.*** ***1113***

(இ - ள்.) மிக்க திருவருளைப் பெற்ற சிவநேச செட்டியார் திருஞானசம்பந்தப்பிள்ளையாரது தாமரை மலர் போன்ற திருவடிகளை வணங்கித் துதித்து நின்று, அடியேன் அருமை யாகப் பெற்ற இப்புத்திரியைத் தேவரீர் திருக்கலியாணஞ் செய்து அருள் செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்கவும். - எ - று.

***மற்றவர் தமக்குவண் புகலி வாணர் "நீர்***
***பெற்றபெண் விடத்தினால் வீந்த பின்னையான்***
***கற்றைவார் சடையவர் கருணை காண்வர***
***உற்பவிப் பித்தலால் உரைத கா"தென. 1114***

(இ - ள்.) அச் சிவநேசசெட்டியாருக்கு, சிறந்த சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் நீர் பெற்ற இந்தப் புத்திரி விஷத்தாலிறந்த பின்பு, யான் கூட்டமாகிய நீண்ட சடை முடியையுடைய ஸ்ரீகபாலீசரது திருவருளின் பெருமையை யாவரு மறியும்படிக் குடத்தில் நின்றும் உதிப்பித்தலால், நீர் கூறும் அவ்வுரை தகாதென்று தடுத்தருளவும். - எ - று.

***வணிகருஞ் சுற்றமும் மயங்கிப் பிள்ளையார்***
***அணிமலர் அடியில்வீழ்ந் தரற்ற ஆங்கவர்***
***தணிவில்நீள் பெருந்துயர்தணிய வேதநூல்***
***துணிவினை அருள்செய்தார் தூய வாய்மையார். 1115***

(இ - ள்.) சிவநேசசெட்டியாரும் அவர் சுற்றத்தாரும் அவ் வார்த்தையைக் கேட்டு மனமயக்கங்கொண்டு, திருஞான சம்பந்தப்பிள்ளையாரது அழகிய தாமரை மலர் போன்ற திருவடிகளில் வீழ்ந்து புலம்பவும், குற்றமற்ற மெய்ம்மையை யுடைய பிள்ளையார் அவர்களது அடங்காத பெரிய துயரந் தணியும்படி வேதநூலின் சம்மதத்தை அவர்களுக்கு அருளிச் செய்தார். - எ - று.

***தெள்ளுநீ தியின்முறை கேட்ட சீர்க்கிளை***
***வெள்ளமும் வணிகரும் வேட்கை நீத்திடப்***
***பள்ளநீர்ச் செலவெனப் பரமர் கோயிலின்***
***உள்ளெழுந் தருளினார் உடைய பிள்ளையார். 1116***

(இ - ள்.) தெளிவாகிய நீதியின் முறைமையைப் பிள்ளையா ரால் கேள்விப்பட்ட சிறந்த உறவினர் கூட்டமும், சிவநேசசெட் டியாரும் (பூம்பாவையாரைத் திருஞானசம்பந்தப்பிள்ளையா ருக்குத் திருமணஞ் செய்யக் கருதியிருந்த) விருப்பம் நீங்க, பள்ளத் திற்பாயும் நீரின்வேகம் போல, ஸ்ரீகபாலீசரது திருக்கோயிலி னுள் திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளினார். - எ - று.

***பான்மையால் வணிகரும் "பாவை தன்மணம்***
***ஏனையோர்க் கிசைகிலேன்" என்று கொண்டுபோய்***
***வானுயர் கன்னிமா டத்து வைத்தனர்***
***தேனமர் கோதையும் சிவத்தை மேவினாள். 1117***

(இ - ள்.) (பிள்ளையார் அவ்வாறு தடுத்துவிட்ட) முறைமை யினால், சிவநேசசெட்டியாரும் பூம்பாவையாரது விவாகரத்தை வேறொருவருக்குச் செய்ய உடன்படேனென்று (அவ்வம் மையாரை) அழைத்துக் கொண்டுபோய், விண்ணுலகளவுயர்ந்த கன்னிமாடத்தில் வைத்தார்; தேன் பொருந்திய மலர்மாலை யணிந்த அப் பூம்பாவையாரும் (பின்பு) சிவபெருமானை யடைந்தார். - எ - று.

**தேவர்பிரான் அமர்ந்தருளுந் திருக்கபா லீச்சரத்து**
**மேவியஞா னத்தலைவர் விரிஞ்சன்முதல் எவ்வுயிர்க்கும்**
**காவலனார் பெருங்கருணை கைதந்த படி போற்றிப்**
**பாவலர்செந் தமிழ்ப்பாடிப் பன்முறையும் பணிந்தெழுவார். 1118**

(இ - ள்.) ஸ்ரீசிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக் கபாலீச்சரமென்னுந் திருக்கோயிலில் எழுந்தருளிய திருஞான சம்பந்தப்பிள்ளையார் பிரமன் முதலிய எல்லா வுயிர்களுக்கு முதல்வராகிய ஸ்ரீகபாலீசரது பெருங்கருணையானது உபகரித்த முறைமையைத் துதித்து, செந்தமிழ்த் திருப்பதிகம் பாடியருளிப் பலதரமும் வணங்கி யெழுவாராயினார். - எ - று.

**தொழுதுபுறம் போந்தருளித் தொண்டர்குழாம் புடைசூழப்**
**பழுதில்புகழ்த் திருமயிலைப் பதியில் அமர்ந் தருளுநாள்**
**முழுதுலகுந் தரும்இறைவர் முதற்றானம் பலஇறைஞ்ச**
**அழுதுலகை வாழ்வித்தார் அப்பதியின் மருங்ககல்வார். 1119**

(இ - ள்.) வணங்கித் திருக்கோயிலின் புறத்தே யெழுந்தருளி அடியார் திருக்கூட்டங்கள் பக்கங்களிற் சூழும்படிக் குற்றமற்ற திருமயிலை யென்னுந் திருப்பதியிலெழுந்தருளியிருக்கு நாள்களில், சர்வலோகங்களையும் படைத்தருளிய சிவபெருமா னெழுந்தருளும் முதன்மை பொருந்திய பல திருப்பதிகளை வணங்கும் பொருட்டு (அம்மே யப்பா வென்றுகூறி) அழுது, உலகத்தை வாழச் செய்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அத்திருமயிலைத் திருப்பதியினின்றும் புறத்தே நீங்குவா ராயினார். - எ - று.

**திருத்தொண்டர் அங்குள்ளார் விடைகொள்ளச் சிவநேசர்**
**வருத்தம்அகன் றிடமதுர மொழிஅருளி விடைகொடுத்து**
**நிருத்தர்உறை பிறபதிகள் வணங்கிப்போய் நிறைகாதல்**
**அருத்தியொடுந் திருவான்மி யூர்பணிய அணைவுற்றார். 1120**

(இ - ள்.) அங்குள்ள திருத்தொண்டர்கள் விடைபெற்றுக் கொள்ளவும், சிவநேச செட்டியார் கொண்ட வருத்தம் நீங்க (அவர்க்கு) இனிய வார்த்தை யருளிச் செய்து விடைகொடுத் தருளி, தாண்டவமூர்த்தியாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் மற்றத் திருப்பதிகளை வணங்கிச் சென்று, நிறைந்த பெரு விருப்பத்தோடும் திருவான்மியூரை வணங்க எழுந்தருளினார். - எ - று.

***திருவான்மி யூர்மன்னுந் திருத்தொண்டர் சிறப்பெதிர***
***வருவார்மங் கலஅணிகள் மறுகுநிரைத் தெதிர்கொள்ள***
***அருகாக இழிந்தருளி அவர்வணங்கத் தொழுதன்பு***
***தருவார்தங் கோயில்மணித் தடநெடுங்கோ புரஞ்சார்ந்தார். 1121***

(இ - ள்.) திருவான்மியூரில் வாழும் அடியார்கள் சிறப்போடு எதிர்கொள்ளும்படி வருபவர்களாய் மங்கல அணிகளை வீதியில் வரிசையாக அலங்கரித்து எதிர்கொண்டுவர, அத் திருப்தியினருகில் முத்துச் சிவிகையினின்று மிழிந்தருளி, அவ்வடியார்கள் தம்மை வணங்கத் தாமு மெதிர்தொழுது, பேரன்பைக் கொடுத்தருளுஞ் சிவபெருமானது திருக்கோயிலின் அழகிய விசாலமாகிய நீண்ட திருக்கோபுரத்தை யடைந்தருளி னார். - எ - று.

***மிக்குயர்ந்த கோபுரத்தை வணங்கிவியன் திருமுன்றில்***
***புக்கருளிக் கோயிலினைப் புடைவலங்கொண் டுள்ளணைந்து***
***கொக்கிறகும் மதிக்கொழுந்தும் குளிர்புனலும் ஒளிர்கின்ற***
***செக்கர்நிகர் சடைமுடியார் சேவடியின் கீழ்த்தாழ்ந்தார். 1122***

(இ - ள்.) மிகுதியாக வுயர்ந்த திருக்கோபுரத்தை வணங்கி, விசாலமாகிய திருமுற்றத்தை யடைந்தருளித் திருக்கோயிலைப் பிரதட்சணஞ்செய்து உள்ளே புகுந்து, கொக்கினிறகும், பிறைச் சந்திரனும், குளிர்ந்த கங்கைநதியும் விளங்குகின்ற சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருவடியில் வணங்கி யருளினார். - எ - று.

***தாழ்ந்துபல முறைபணிந்து தம்பிரான் முன்னின்று***
***வாழ்ந்துகளி வரப்பிறவி மருந்தான பெருந்தகையைச்***
***சூழ்ந்தஇசைத் திருப்பதிகச் சொன்மாலை வினாவுரையால்***
***வீழ்ந்தபெருங் காதலுடன் சாத்திமிக இன்புற்றார். 1123***

(இ - ள்.) பலதரம் பூமியில் விழுந்து வணங்கி, அவ்வெம் பெருமானது சந்நிதியில் நின்று சிவாநந்தப் பெருவாழ்வடைந்து மகிழ்ச்சியுண்டாகப் பிறவிக்கு மருந்தாயுள்ள ஸ்ரீ மருந்தீசரை இசை பொருந்திய திருப்பதிகமென்னும் பாமாலையை வினா வுரையினால் மிக்க பெருவிருப்பத்தோடும் அருளிச் செய்து பேரின்பமுற்றருளினார். - எ - று.

***பரவிவரும் ஆனந்தம் நிறைந்ததுளி கண்பனிப்ப***
***விரவுமயிர்ப் புளகங்கள் மிசைவிளங்கப் புறத்தணைவுற்(று)***
***அரவநெடுந் திரைவேலை அணிவான்மி யூர்அதனுள்***
***சிரபுரத்துப் புரவலனார் சிலநாள்அங் கினிதமர்ந்தார். 1124***

(இ - ள்.) பரவி வருகின்ற நிறைந்த ஆனந்தக் கண்ணீர் கண்களினின்றுஞ் சிந்த, நெருங்கிய மயிர்ப்புளகங்கள் திருமேனி யில் விளங்கப் புறத்திற் சென்றருளி, ஒலிபொருந்திய நீண்ட அலைகளையுடைய கடற்கரையிலுள்ள திருவான்மியூரென்னுந் திருப்பதியினிடத்துத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் சில நாள்கள் இனிமையோடு எழுந்தருளியிருந்தார். - எ - று.

***அங்கணமர் வார்உலகா ளுடையாரை அருந்தமிழின்***
***பொங்கும்இசைப் பதிகங்கள் பலபோற்றிப் போந்தருளிக்***
***கங்கையணி மணிமுடியார் பதிபலவுங் கலந்திறைஞ்சிச்***
***செங்கண்விடைக் கொடியார்தம் இடைச்சுரத்தைச் சேர்வுற்றார். 1125***

(இ - ள்.) அங்கு எழுந்தருளியிருக்குந் திருஞானசம்பந்தப் பிள்ளையார் சர்வ லோகங்களையுந் தமக்கடிமையாகவுடைய ஸ்ரீ மருந்தீசரை அரிய தமிழினாலாகிய மிக்க இசையினையுடைய பல திருப்பதிகங்களால் துதித்து, அங்குநின்று மெழுந்தருளி, கங்கை நதியை யணிந்த அழகிய திருமுடியையுடைய சிவ பெருமானெழுந்தருளிய பல திருப்பதிகளை யடைந்து வணங்கி, சிவந்த கண்களையுடைய இடபக் கொடியை யுயர்த்திய சிவபெருமானது திருவிடைச் சுரமென்னுந் திருப்பதியை யடைந்தருளினார். - எ - று.

***சென்னிஇள மதியணிந்தார் மருவுதிரு இடைச்சுரத்து***
***மன்னுதிருத் தொண்டர்குழாம் எதிர்கொள்ள வந்தருளி***
***நன்னெடுங்கோ புரம் இறைஞ்சி உள்புகுந்து நற்கோயில்***
***தன்னைவலங் கொண்டணைந்தார் தம்பிரான் திருமுன்பு. 1126***

(இ - ள்.) சிரசில் இளம்பிறையையணிந்த சிவபெருமா னெழுந்தருளிய அத்திருவிடைச் சுரத்தில் வாழும் அடியார் திருக்கூட்டங்கள் எதிர்கொள்ளும்படி அங்குச் சென்றருளி, நல்ல உயர்ந்த திருக்கோபுரத்தை வணங்கி யுள்ளே புகுந்து அழகிய திருக்கோயிலைப் பிரதட்சணஞ்செய்து, சிவபெருமான் சந்நிதி யில் அடைந்தருளினார். - எ - று.

***கண்டபொழு தேகலந்த காதலால் கைதலைமேல்***
***கொண்டுதலம் உறவிழுந்து குலவுபெரு மகிழ்ச்சியுடன்***
***மண்டியபேர் அன்புருகி மயிர்முழ்கிப்ப வணங்கிஎழுந்(து)***
***அண்டர்பிரான் திருமேனி வண்ணங்கண் டதிசயித்தார். 1127***

(இ - ள்.) சிவபெருமானைத் தரிசித்தபொழுதே உண்டாகிய அன்பினால் கைகளைச் சிரமேற் குவித்துப் பூமியிற் பொருந்த விழுந்து வணங்கி மிக்க பெரு மகிழ்ச்சியோடும் நெருங்கிய பேரன்பினால் மனமுருகி உரோமாஞ்சிதமுண்டாக நமஸ்கரித் தெழுந்து, தேவர்கள் நாயகராகிய அவ்வெம்பெருமானது திருமேனியின் நிறத்தைக் கண்டு அதிசயமடைந்தருளினார். - எ - று.

***“இருந்தஇடைச் சுரம்மேவும் இவர்வண்ணம் என்னே!” என்(று)***
***அருந்தமிழின் திருப்பதிகத் தலர்மாலை கொடுபரவித்***
***திருந்துமனங் கரைந்துருகத் திருக்கடைக்காப் புச்சாத்திப்***
***பெருந்தனிவாழ் வினைப்பெற்றார் பேருலகின் பேறானார். 1128***

(இ - ள்.) திருவிடைச்சுரத்தி லெழுந்தருளிய இவ்வெம் பெருமான் இருந்தவண்ணம் என்னவென்று அரிய தமிழ்த் திருப்பதிகமாலையால் துதித்து, திருத்தமாகிய மனங்கரைந் துருகும்படித் திருக்கடைக்காப்பைச் சாத்தியருளி, பெரிய உலகத்திற்குப் பெரும்பேறா யவதரித்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் ஒப்பற்ற சிவாநந்தப் பெருவாழ் வடைந்தருளினார்.- எ - று.

***நிறைந்தார்வ வேட்கையினால் நின்றிறைஞ்சிப் புறம்போந்தங்***
***குறைந்தருளிப் பணிகின்றார் உமைபாகர் அருள்பெற்றுச்***
***சிறந்ததிருத் தொண்டருடன் எழுந்தருளிச் செந்துருத்தி***
***அறைந்(து) அளிகள் பயில்சாரல் திருக்கழுக்குன் றினைஅணைந்தார். 1129***

(இ - ள்.) நிறைந்த பெருங்காதலால் திருமுன்னின்று வணங்கிப் புறத்திற் சென்று அத்திருப்பதியில் வசித்தருளி

(நாள்தோறும்) பணிகின்ற பிள்ளையார் பார்வதிபாகராகிய ஸ்ரீஇடைச்சுரநாதரது திருவருளைப் பெற்றுச் சிறந்த திருத் தொண்டர்களோடு மெழுந்தருளி, வண்டுகள் செந்துருத்தி யென்னும் பண்ணைப் பாடி வசிக்கின்ற மலைச் சாரலையுடைய திருக்கழுக்குன்ற மென்னுந் திருப்பதியை யடைந்தருளினார். - எ - று.

***சென்றணையும் பொழுதின்கண் திருத்தொண்டர் எதிர்கொள்ளப்***
***பொன்றிகழும் மணிச்சிவிகை இழிந்தருளி உடன்போந்து***
***மன்றல்விரி நறுஞ்சோலைத் திருமலையை வலங்கொண்டு***
***மின்றயங்குஞ் சடையாரை விருப்பினுடன் பணிகின்றார். 1130***

(இ - ள்.) அத்திருப்பதியைச் சென்று சேரும்பொழுது அங்குள்ள திருத்தொண்டர்கள் எதிர்கொண்டுவர, பொன்மய மாக விளங்குகின்ற அழகிய முத்துச் சிவிகையினின்று மிறங்கி யருளி அவர்களுடன் சென்று, வாசனை பொருந்திய நல்ல சோலை சூழ்ந்த அத்திருமலையைப் பிரதட்சணஞ்செய்து, மின்போல் விளங்குஞ் சடைமுடியையுடைய ஸ்ரீ வேதகிரீசரை விருப்பத்துடன் வணங்குகின்றாராயினார். - எ - று.

***திருக்கழுக்குன் றத்தமர்ந்த செங்கனகத் தனிக்குன்றைப்***
***பெருக்கவளர் கதலினால் பணிந்தெழுந்து பேராத***
***கருத்தினுடன் "காதல்செயுங் கோயில்கழுக் குன்று"என்று***
***திருப்பதிகம் புனைந்தருளிச் சிந்தைநிறை மகிழ்வுற்றார். 1131***

(இ - ள்.) திருக்கழுக்குன்றத்தி லெழுந்தருளிய சிவந்த பொன் மலைபோன்ற ஸ்ரீவேதகிரீசரை மிக்க ஆசையினால் வணங்கி யெழுந்து, நீங்காத திருவுள்ளத்தோடும், "காதல்செய் கோயில் கழுக்குன்றே" என்று ஈற்றி லமைத்துத் திருப்பதிகம் பாடியருளித் தமது திருவுள்ளத்தில் மிக்க மகிழ்ச்சியடைந்தருளினார். - எ - று.

***இன்புற்றங் கமர்ந்தருளி ஈறில்பெருந் தொண்டருடன்***
***மின்பெற்ற வேயினார் அருள்பெற்றுப் போந்தருளி***
***என்புற்ற மணிமார்பர் எல்லைமிலா ஆட்சிபுரிந்(து)***
***அன்புற்று மகிழ்ந்ததிரு வச்சிறுபாக் கத்தணைந்தார். 1132***

(இ - ள்.) பேரின்பமடைந்து அத்திருப்பதியிலெழுந்தருளி, அளவற்ற பெரிய திருத் தொண்டர்களோடும், மின்போல் விளங்குகின்ற சடைமுடியையுடைய ஸ்ரீ வேதகிரீசரது திருவரு ளைப் பெற்று அங்கு நின்று மெழுந்தருளி எலும்புமாலையை

யணிந்த அழகிய திருமார்பினையுடைய சிவபெருமான் அளவில் லாத ஆட்சிபெற்று அன்புற்று மகிழ்ந் தெழுந்தருளிய திருஅச் சிறுபாக்கமென்னுந் திருப்பதியை யடைந்தருளினார். - எ - று.

***ஆதிமுதல் வரைவணங்கி "ஆட்சி கொண்டார்" எனமொழியும்***
***கோதில்திருப் பதிகஇசை குலாவியபா டலிற்போற்றி***
***மாதவத்து முனிவருடன் வணங்கிமகிழ்ந் தின்புற்றுத்***
***தீதகற்றுஞ் செய்கையினார் சின்னாளங் கமர்ந்தருளி. 1133***

(இ - ள்.) முதற் பெருங் கடவுளாகிய அவ்வெம்பெருமானை வணங்கி, "ஆட்சிகொண்டார்" என்று இறுதியிலமைத்துக் கூறியருளுங் குற்றமற்ற திருப்பதிகத்தில்இசை பொருந்திய செய்யுட்களால் துதித்து, மிக்க தவத்தினையுடைய அடியார் களோடு நாள்தோறும் வணங்கி மகிழ்ந்து இன்பமடைந்து, குற்றத்தை யொழிக்கும் நற்செய்கையையுடைய திருஞான சம்பந்தப்பிள்ளையார் சிலநாள்கள் அங்கு வசித்தருளி. - எ - று.

***ஏறணிந்த வெல்கொடியார் இனிதமர்ந்த பதிபிறவும்***
***நீறணிந்த திருத்தொண்டர் எதிர்கொள்ள நேர்ந்திறைஞ்சி***
***வேறுபல நதிகானங் கடந்தருளி விரிசடையில்***
***ஆறணிந்தார் மகிழ்ந்ததிரு அரசிலியை வந்தடைந்தார். 1134***

(இ - ள்.) இடபத்தை யெழுதிய வெற்றிக் கொடியையுடைய சிவபெருமான் இனிமையாக வெழுந்தருளியமற்றத் திருப்பதி களையும் விபூதியை யணிந்த திருத்தொண்டர்களோடுந் தம்மை யெதிர்கொண்டுவரச் சென்று வணங்கி, பல்வேறு நதிகளையுங் காடுகளையுங் கடந்து, விரிந்தசடையில் கங்கை நதியை யணிந்த சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளிய திருஅரசிலியென்னுந் திருப்பதியை வந்தடைந்தருளினார். - எ - று.

***அரசிலியை அமர்ந்தருளும் அங்கணர சைப்பணிந்து***
***பரசிஎழு திருப்புறவார் பனங்காட்டூர் முதலாய***
***விரைசெய்மலர் கொன்றையினார் மேவுபதி பலவணங்கித்***
***திரைசெய்நெடுங் கடலுடுத்த திருத்தில்லை நகரணைந்தார். 1135***

(இ - ள்.) திருஅரசிலியென்னுந் திருப்பதியில் வீற்றிருந் தருளும் அழகிய காருண்ணியமூர்த்தியாகிய சிவபெருமானை வணங்கி, (அடியார்கள்) துதித்தெழுகின்ற திருப்புறவார் பனங்காட்டூர் முதலிய வாசனை பொருந்திய கொன்றைமலர்

மாலையை யணிந்த சிவபெருமான் எழுந்தருளிய பல திருப்பதி களை வணங்கி அலை வீசுகின்ற நீண்ட கடல் சூழ்ந்த ஸ்ரீசிதம்பர மென்னுந் திருப்பதியை யடைந்தருளினார். - எ - று.

***எல்லையில்ஞா னத்தலைவர் எழுந்தருள எதிர்கொள்வார்***
***தில்லையில்வாழ் அந்தணர்மெய்த் திருத்தொண்டர் சிறப்பினொடு***
***மல்கிஎதிர் பணிந்திறைஞ்ச மணிமுத்தின் சிவிகைஇழிந்(து)***
***அல்குபெருங் காதலுடன் அஞ்சலிகொண் டணைகின்றார். 1136***

(இ - ள்.) அளவில்லாத சிவஞானத் தலைவராகிய பிள்ளையார் அங்கெழுந்தருளும்பொழுது அவரை யெதிர் கொள்ளும்படி தில்லைவாழந்தணர்களும், மெய்ம்மை பொருந்திய திருத்தொண்டர்களும் சிறப்புடன் நெருங்கி எதிரில் தாழ்ந்து வணங்க, அழகிய முத்துச் சிவிகையினின்றுங் கீழிறங்கி யருளிப் பொருந்திய பெருவிருப்பத்தோடும் வணங்கி அவர்க ளுடன் வருவாராயினார். - எ - று.

***திருவெல்லை யினைப்பணிந்து சென்றணைவார் சேண்விசும்பை***
***மருவிவிளங் கொளிதழைக்கும் வடதிசைவா யிலைவணங்கி***
***உருகுபெருங் காதலுடன் உட்புகுந்து மறையினொலி***
***பெருகிவளர் மணிமாடப் பெருந்திருவீ தியைஅணைந்தார். 1137***

(இ - ள்.) திருவெல்லையை வணங்கி வருகின்ற பிள்ளையார் உயர்ந்த விண்ணுலகையடைந்து விளங்குகின்ற ஒளிமிகுந்த வடதிசைத் திருக்கோபுரவாயிலை வணங்கி, மனமுருகுகின்ற பெருவிருப்புடன் உள்ளே புகுந்து வேதங்களினோசை மிகுத்து வளர்கின்ற அழகிய மாடவீதியை யடைந்தருளினார். - எ - று.

***நலமலியுந் திருவீதி பணிந்தெழுந்து நற்றவர்தம்***
***குலநிறைந்த திருவாயில் குவிந்தமலர்ச் செங்கையொடு***
***தலமுறமுன் தாழ்ந்தெய்தித் தமனியமா ளிகைமருங்கு***
***வலமுறவந் தோங்கியபே ரம்பலத்தை வணங்கினார். 1138***

(இ - ள்.) நன்மை மிகுந்த திருவீதியை வணங்கி யெழுந்து நல்லஅடியார் கூட்டங்கள் நிறைந்திருக்குந் திருவாயிலில் சிரசில் குவித்த தாமரை மலர் போன்ற சிவந்த திருக்கரங்களுடன் பூமியிற் பொருந்த வணங்கிச் சென்று கனகசபையின் அருகில் பிரதட்சணஞ் செய்த உயர்ந்த பேரம்பலத்தை வணங்கி யருளினார். - எ - று.

**வணங்கிமிக மனமகிழ்ந்து மாலயனுந் தொழும்பூத**
**கணங்கள்மிடை திருவாயில் பணிந்தெழுந்து கண்களிப்ப**
**அணங்குதனி கண்டருள அம்பலத்தே ஆடுகின்ற**
**குணங்கடந்த தனிக்கூத்தர் பெருங்கூத்துக் கும்பிடுவார். 1139**

(இ - ள்.) பேரம்பலத்தை வணங்கி மனமகிழ்வடைந்து, பிரமவிஷ்ணுக்களுந் தொழத்தக்க பூதகணங்கள் நெருங்கிய திருவணுக்கன் றிருவாயிலை வணங்கி யெழுந்து, சிவகாமி யம்மையார் தனிமையாகக் கண்களிக்கத் தரிசிக்கும்படித் திருவம் பலத்தில் ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளுங் குணாதீதராகிய ஸ்ரீநடராசப் பெருமானது பெரிய திருக்கூத்தைத் தரிசிப்பா ராயினார். - எ - று.

**தொண்டர்மனம் பிரியாத திருப்படியைத் தொழுதிறைஞ்சி**
**மண்டுபெருங் காதலினால் நோக்கிமுகம் மலர்ந்தெழுவார்**
**அண்டமெலாம் நிறைந்தெழுந்த ஆனந்தத் துள்ளலைந்து**
**கண்டபே ரின்பத்தின் கரையில்லா நிலைஅணைந்தார். 1140**

(இ - ள்.) அடியார்களது திருவுள்ளத்தினின்று நீங்காத ஸ்ரீ பஞ்சாட்சரத் திருப்படியை வணங்கி, நெருங்கிய பெருவிருப்பத் துடன் ஸ்ரீநடராசப் பெருமானைத் தரிசித்து முகமலர்ச்சி யடைந்து எழுகின்ற பிள்ளையார் சர்வாண்டங்களிலும் வியாபித்தெழுந்த சிவாநந்தவெள்ளத்தில் அலைந்து தரிசித்த பேரின்பத்தினது அளவுகடந்த நிலைமையை யடைந்தருளினார்.- எ - று.

**அந்நிலைமை அடைந்துதிளைத் தாங்கெய்தாக் காலத்தில்**
**மன்னுதிரு அம்பலத்தை வலங்கொண்டு போந்தருளிப்**
**பொன்னணிமா ளிகைவீதிப் புறத்தணைந்து போதுதொறும்**
**இன்னிசைவண் டமிழ்பாடிக் கும்பிட்டங் கினிதிருந்தார். 1141**

(இ - ள்.) அத்தகைய பேரின்ப நிலைமையை யடைந்து அதில் முழுகி அங்கு நின்று நீங்கும்பொழுது, நிலைபெற்ற கனகசபை யைப் பிரதட்சணஞ்செய்து புறத்திற்சென்று, பொன்மயமாகிய அழகிய மாளிகைகளையுடைய திருவீதியில் வசித்தருளி, காலங்கள்தோறும் இனிமை பொருந்திய வளவிய தமிழ்ப் பதிகம்பாடி வணங்கி, அங்கு இனிதாக எழுந்தருளியிருந்தார். - எ - று.

***திருந்தியசீர்த் தாதையார் சிவபாத விருதயரும்
பொருந்துதிரு வளர்புகலிப் பூசுரரும் மாதவரும்
"பெருந்திருமா லயன்போற்றும் பெரும்பற்றப் புலியூரில்
இருந்தமிழாகரர் அணைந்தார்" எனக்கேட்டு வந்தணைந்தார். 1142***

(இ - ள்.) திருத்தமாகிய சிறப்பினையுடைய தந்தையாராகிய சிவபாதவிருதயரும், மிக்க செல்வங்கள் நிறைந்த சீகாழியில் வாழும் வேதியர்களும், தவசிரேஷ்டர்களும், பெருமை பொருந்திய திருமாலும் பிரமனுந்துதிக்கும் ஸ்ரீ சிதம்பரத்தில் திருஞானசம்பந்தப்பிள்ளையாரெழுந்தருளினாரென்று கேள்வி யுற்று அங்கு வந்து சேர்ந்தார்கள். - எ - று.

***ஆங்கவரைக் கண்டுசிறப் பளித்தருளி அவரோடும்
தாங்கரிய காதலினால் தம்பெருமான் கழல்வணங்க
ஓங்குதிருத் தில்லைவாழ் அந்தணரும் உடனாகத்
தேங்கமழ்கொன் றைச்சடையார் திருச்சிற்றம் பலம்பணிந்தார். 1143***

(இ - ள்.) (பிள்ளையார்) அவர்களைப் பார்த்துச் சிறந்த உபசார வார்த்தைகள் கூறி, அவர்களுடன் தாங்குதற்கரிய பெருவிருப்பினால் ஸ்ரீநடராசப் பெருமானது திருவடிகளை வணங்கும்படி, சிறந்த தில்லைவாழந்தணர்களுந் தம்முடன் செல்ல, தேன்மணங் கமழும் கொன்றை மாலையணிந்த சடை முடியை யுடைய அவ்வெம்பெருமானது திருச்சிற்றம்பலத்தை வணங்கியருளினார். - எ - று.

***தென்புகலி அந்தணரும் தில்லைவாழ் அந்தணர்முன்
அன்புநெறி பெருக்குவித்து ஆண்டகையார் அடிபோற்றிப்
பொன்புரிசெஞ் சடைக்கூத்தர் அருள்பெற்றுப் போந்தருளி
இன்புறுதோ ணியில்அமர்ந்தார் தமைவணங்க எழுந்தருள. 1144***

(இ - ள்.) அழகிய சீகாழியினின்று வந்த வேதியர்களும் தில்லைவாழந்தணர்களுக்கு முன்னே அன்பின் வழியை விருத்தி செய்த பிள்ளையாரது திருவடிகளைத் துதித்து, பொன்போலும் முறுக்காகிய சடைமுடியையுடைய ஸ்ரீநடராசப் பெருமானது திருவருளைப் பெற்றுப் புறத்திற் சென்றருளிய, இன்பம் பொருந்திய திருத்தோணியப்பரை வணங்கும்படி யெழுந்தருள.- எ - று.

***நற்றவர்தங் குழாத்தோடும் நம்பர்திரு நடஞ்செய்யும்***
***பொற்பதியின் திருவெல்லை பணிந்தருளி புறம்போந்து***
***பெற்றம்உயர்த் தவர்அமர்ந்த பிறபதியும் புக்கிறைஞ்சிக்***
***கற்றவர்கள் பரவுதிருக் கழுமலமே சென்றடைவார். 1145***

(இ - ள்.) நல்ல தவத்தினையுடைய அடியார் கூட்டங் களோடும் சிவபெருமான் திருநடனஞ் செய்தருளும் அழகிய ஸ்ரீ சிதம்பரத்தின் திருவெல்லையை வணங்கி யெழுந்து புறத்திற் சென்று, இடபத்தைக் கொடியாகவுயர்த்திய சிவபெருமா னெழுந்தருளிய மற்றத் திருப்பதிகளையும் அடைந்து வணங்கிச் சகலசாஸ்திரங்களையு முணர்ந்த புலவர்கள் துதிக்கின்ற சீகாழிப்பதியைச் சென்று சேர்ந்தவராயினார். - எ - று.

***பல்பதிகள் கடந்தருளிப் பன்னிரண்டு பேர்படைத்த***
***தொல்லைவளப் பூந்தராய் தூரத்தே தோற்றுதலும்***
***மல்குதிரு மணிமுத்தின் சிவிகைஇழிந் தெதிர்வணங்கிச்***
***செல்வமிகு பதியதன்மேல் திருப்பதிகம் அருள்செய்வார். 1146***

(இ - ள்.) பல திருப்பதிகளைக் கடந்தருளி, பன்னிரண்டு திருப்பெயரைப் பெற்ற பழமையாகிய வளம் நிறைந்த சீகாழிப்பதி யானது தூரத்தில் தோன்றவும் அழகிய முத்துச் சிவிகையினின்று மிறங்கி யெதிரே வணங்கிச் செல்வங்கள் நிறைந்த அச்சீகாழித் திருப்பதியின்மேல் திருப்பதிகமருளிச் செய்வாராயினார். - எ-று.

***மன்னுஇசை மொழி "வண்டார் குழல்அரிவை" என்றெடுத்து***
***மின்னுசுடர் மாளிகை "விண் டாங்குவபோல் வேணுபுரம்"***
***என்னும்இசைச் சொன்மாலை எடுத்தியம்பி எழுந்தருளிப்***
***புன்னைமணங் கமழ்புறவப் புறம்பணையில் வந்தணைந்தார். 1147***

(இ - ள்.) நிலைபெற்ற இசை பொருந்திய மொழியினை யுடைய "வண்டார் குழலரிவை" என்று தொடங்கி, ஒளி விளங்கு கின்ற திருமாளிகைகள் "விண்டாங்குவபோலும் மிகுவேணுபுர மதுவே" என்று மிறுதியையுடைய திருப்பதிகத்தைப் பாடிச் சென்றருளிப் புன்னை மலர்கள் வாசனை கமழுஞ் சீகாழியின் புறத்திலுள்ள வயற்பக்கங்களில் வந்து சேர்ந்தருளினார். - எ - று.

***வாழிவளர் புறம்பணையின் மருங்கணைந்து வரிவண்டு***
***சூழமலர் நறுந்தீப தூபங்க ளுடன்தொழுது***
***காழிநகர் சேர்மின்எனக் கடைமுடிந்த திருப்பதிகம்***
***ஏழிசையி னுடன்பாடி எயின்மூதூர் ருட்புகுந்தார். 1148***

(இ - ள்.) செழித்து வளர்கின்ற வயலிடங்களின் அருகிலடைந்து, வரி பொருந்திய வண்டுகள் சூழும் மலர்களைக் கொண்டு நல்ல தீபதூபங்களோடும் வணங்கி "காழிநகர் சேர்மின்" என்று கடையில் முடிந்த திருப்பதிகத்தைச் சப்தசுரங் களும் பொருந்தப் பாடியருளி, மதில்சூழ்ந்த பழைய சீகாழிப்பதி யினுள்ளே புகுந்தருளினார். - எ - று.

***சேணுயர்ந்த திருத்தோணி வீற்றிருந்த சிவபெருமான்***
***தாணினைந்த ஆதரவின் தலைப்பாடு தனையுன்னி***
***நீணிலைக்கோ புரம்அணைந்து நேரிறைஞ்சிப் புக்கருளி***
***வாணிலவு பெருங்கோயில் வலங்கொண்டு முன்பணிந்தார். 1149***

(இ - ள்.) விண்ணுலகளவு முயர்ந்த திருத்தோணியென்னு மாலயத்தில் வீற்றிருந்தருளிய சிவபெருமானது திருவடிகளை நினைந்த விருப்பத்தின் மேன்மையைக் கருதி, உயர்ந்த நிலை களையுடைய திருக்கோபுரத்தையடைந்து எதிரே வணங்கி யுள்ளே புகுந்தருளி, ஒளி விளங்குகின்ற பெரிய திருக்கோயிலைப் பிரதட்சணஞ் செய்து திருமுன்னே வணங்கினார். - எ - று.

***முன்னிறைஞ்சித் திருவருளின் முழுநோக்கம் பெற்றேறிப்***
***பொன்னிமயப் பாவையுடன் புணர்ந்திருந்த புராதனரைச்***
***சென்னிமிசைக் குவித்தகரங் கொடுவிழுந்து திளைத்தெழுந்து***
***மன்னுபெரு வாழ்வெய்தி மனங்களிப்ப வணங்குவார். 1150***

(இ - ள்.) திருமுன்னே வணங்கித் திருவருள் பூரண நோக்கத்தைப் பெற்று, பார்வதிதேவியாரோடு மெழுந்தருளிய தோணியப்பரை சிரமேற்குவித்த திருக்கரங்களைக்கொண்டு பூமியில் விழுந்து வணங்கிப் பேராநந்தத்தழுந்தி யெழுந்து, நிலைபெற்ற சிவாநந்தப் பெருவாழ்வடைந்து மனமகிழும்படி வணங்குவாராயினார். - எ - று.

***பரவுதிருப் பதிகங்கள் பலவும்இசை யினிற்பாடி***
***விரவியகண் ணருவிநீர் வெள்ளத்திற் குளித்தருளி***
***அரவணிந்தார் அருள்பெருகப் புறம்பெய்தி அன்பருடன்***
***சிரபுரத்துப் பெருந்தகையார் தந்திருமா ளிகைசேர்ந்தார். 1151***

(இ - ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் துதிக்கின்ற பல திருப்பதிகங்களைப் பாடியருளி, நெருங்கிய ஆனந்தக் கண்ணீ ராகிய வெள்ளத்தில் முழுகி சர்ப்பாபரணராகிய தோணியப் பரது திருவருள் பெருகும்படிப் புறத்தே வந்து அடியார்களுடன் தமது திருமாளிகையை யடைந்தருளினார். - எ - று.

**மாளிகையின் உள்ளணைந்து மறையவர்கட் கருள்புரிந்து**
**தாள்பணியும் பெருங்கிளைக்குத் தகுதியினால் தலையளிசெய்(து)**
**ஆளுடைய தம்பெருமான் அடியவர்க ளுடன்அமர்ந்து**
**நீளவரும் பேரின்பம் மிகப்பெருக நிகழுநாள். 1152**

(இ - ள்.) திருமாளிகையினுள்ளே யடைந்து, வேதியர்களுக்கு விடை கொடுத்தருளித் தமது திருவடிகளை வணங்கும் மிக்க சுற்றத்தாருக்கு முறைமைப்படி யுபசாரஞ்செய்து, தம்மையடிமை யாகவுடைய சிவபெருமானடியார்களுடன் சேர்ந்து, மிக்க பேரின்பமதிகரிக்க எழுந்தருளியிருக்கும் நாள்களில். - எ - று.

**காழிநா டுடையபிரான் கழல்வணங்கி மகிழ்வெய்த**
**ஆழியினும் மிகப்பெருகும் ஆசையுடன் திருமுருகர்**
**வாழி திருநீலநக்கர் முதற்றொண்டார் மற்றெனையோர்**
**சூழுநெடுஞ் சுற்றமுடன் தோணிபுரந் தொழுதணைந்தார். 1153**

(இ - ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவடிகளை வணங்கி மகிழ்கூரும்படி, கடலினம் மிகப் பெருகுகின்ற ஆசையோடு திருமுருநாயனார் திருநீலநக்கநாயனார் முதலிய அடியார்களும், அவரல்லாத மற்றையர்களும், தம்மைச் சூழ்ந்த பெருஞ்சுற்றத்தாருடன் சீகாழியை வணங்கி யடைந்தார்கள். - எ - று.

**வந்தவரை எதிர்கொண்டு மனமகிழ்ந்து சண்பையர்கோன்**
**அத்தமில்சீர் அடியார்கள் அவரோடும் இனிதமர்ந்து**
**சுந்தரவா ரணங்கினுடன் தோணியில்வீற் றிருந்தாரைச்**
**செந்தமிழின் பந்தத்தால் திருப்பதிகம் பலபாடி. 1154**

(இ - ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் அவ்வாறு வந்த அடியார்களை யெதிர்கொண்டு மனமகிழ்ச்சியடைந்து, அளவற்ற சிறப்பினையுடைய அவ்வடியார்களோடும் இனிதாக அமர்ந்து, அழகிய பெரிய நாயகியாரோடு திருத்தோணியில் வீற்றிருந்தருளிய தோணியப்பரைச் செந்தமிழ்த் தொடையால் பலதிருப்பதிகங்கள் பாடியருளி. - எ - று.

**பெருமகிழ்ச்சி யுடன்செல்லப் பெருந்தவத்தால் பெற்றவரும்**
**மருவுபெருங் கிளையான மறையவரும் உடன்கூடித்**
**"திருவளர்ஞா னத்தலைவர் திருமணஞ்செய் தருளுதற்குப்**
**பருவமிது" என்றெண்ணி அறிவிக்கப் பாங்கணைந்தார். 1155**

(இ - ள்.) மிக்க மகிழ்ச்சியோடு சிலகாலஞ் செல்ல, பெரிய தவத்தினாற் பெற்ற சிவபாத விருதயரும், பொருந்திய பெரிய சுற்றத்தாராகிய வேதியர்களும் ஒருங்குசேர்ந்து, பிள்ளையார் திருக்கலியாணமகோற்சவஞ் செய்தருளுதற்குரிய காலம் இதுவென்று கருதித் தெரிவிக்குங் குணமுடையவராயடைந் தார்கள். - எ - று.

***நாட்டுமறை முறையொழுக்கம் ஞானபோ னகருக்கும்***
***கூட்டுவது மனங்கொள்வார் "கோதில்மறை நெறிச்சடங்கு***
***காட்டவரும் வேள்விபல புரிவதற்கோர் கன்னிதனை***
***வேட்டருள வேண்டும்" என விண்ணப்பஞ் செய்தார்கள். 1156***

(இ - ள்.) வேதத்திற் கூறிய விதியொழுக்கமாகிய திருமணத்தை திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்குஞ் செய்விப் பதை மனதிற் கொண்ட அவ்வேதியர்கள குற்றமற்ற வேத விதிப் படிச் செய்யுஞ் சடங்குகளைக் காட்ட வருகின்ற பல வேள்வி களைச் செய்வதற்கு ஒரு கன்னிகையைத் திருமணஞ் செய்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தார்கள். - எ - று.

***மற்றவர்தம் மொழிகேட்டு மாதவத்தின் கொழுந்தனையார்***
***சுற்றமுறு பெரும்பாசத் தொடர்ச்சிவிடு நிலைமையராய்ப்***
***பெற்றம்உயர்த் தவர்அருள்முன் பெற்றதினால் இசையாது***
***"முற்றியதா யினுங்கூடா" தென்றவர்முன் மொழிந்தருள. 1157***

(இ - ள்.) மகத்தாகிய தவக்கொழுந்து போன்ற பிள்ளையார் அவர்கள் வார்த்தையைக் கேட்டருளிச் சுற்றத்தாரால் வருகின்ற பெரிய பாசத் தொடக்கை யொழிக்குங் கருத்துடையவராய், இடபக் கொடியையுயர்த்திய தோணியப்பரது திருவருளை முன்னே பெற்றதனால் அது பொருந்தாது; (அன்றி) முடியுமாயி னும், அஃது எமக்குப் பொருந்தாதென்று அவர்களுக்கு முன்னே கூறியருள. - எ - று.

***அருமறையோர் அவர்பின்னுங் கைதொழுதங் கறிவிப்பார்***
***"இருநிலத்து மறைவழக்கம் எடுத்தீர்நீர் ஆதலினால்***
***வருமுறையால் அறுதொழிலின் வைதிகமா நெறியொழுகும்***
***திருமணஞ்செய் தருளுதற்குத் திருவுள்ளஞ் செய்யும்" என. 1158***

(இ - ள்.) அரிய வேதியர்கள் பின்னும் வணங்கியறிவிப் பார்கள், தேவரீர் பெரிய உலகத்தில் வேதவொழுக்கத்தை

நிலைப்படுத்தினீர்; ஆதலால், வருகின்ற முறைமைப்படி ஆறு தொழிலோடு கூடிய வைதிய நெறியி லொழுகுதற்குரிய திருமணஞ் செய்தருளுதற்குத் திருவுள்ளங் கொண்டருள வேண்டுமென்று கூற. - எ - று.

**மறைவாழ அந்தணர்ம் வாய்மையொழுக் கம்பெருகும்**
**துறைவாழச் சீற்றத்தார் தமக்கருளி உடன்படலும்**
**பிறைவாழுந் திருமுடியிற் பெரும்புனலோ டரவணிந்த**
**கறைவாழுங் கண்டத்தார் தமைத்தொழுது மனங்களித்தார். 1159**

(இ - ள்.) வேதமார்க்கம் வாழவும், வேதியர்களது மெய்ம்மையாகிய நல்லொழுக்கமிக்க நிலைகள் வாழவும், தமது சுற்றத்தாருக்கு (அவ்வாறே செய்மினென்று) அருள் செய்து பிள்ளையார் உடன்படவும், இளம்பிறை வாழுந் திருமுடியில் பெரிய கங்கைநதியோடு பாம்பையுமணிந்த காளகண்டராகிய தோணியப்பரை வணங்கி மனமகிழ்ச்சி யடைந்தருளினார். - எ - று.

**திருஞான சம்பந்தர் திருவுள்ளஞ் செய்ததற்குத்**
**தருவாய்மை மறையவரும் தாதையரும் தாங்கரிய**
**பெருவாழ்வு பெற்றாராய்ப் "பிஞ்ஞகனார் அருள்" என்றே**
**உருகாநின் றின்பமுறும் உளமகிழ்ச்சி எய்துவார். 1160**

(இ - ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவுள்ளமிசைந் ததற்கு மெய்ம்மை பொருந்திய வேதியர்களும் சிவபாதவிரு தயரும் தாங்குதற்கரிய பெரிய வாழ்வைப் பெற்றவர்களாய், இது சிவபெருமான் திவருளென்று மன முருகி நின்று, இன்பமிக்க தமதுள்ளத்தில் மகிழ்ச்சியடைவாராயினார்- - எ - று.

**ஏதமில்சீர் மறையவரில் ஏற்றகுலத் தோடிசைவால்**
**நாதர்திருப் பெருமணத்து நம்பாண்டார் நம்பிபெறும்**
**காதலியைக் காழிநா டுடையபிரான் கைப்பிடிக்கப்**
**போதுமவர் பெருந்தன்மை எனப்பொருந்த எண்ணினார். 1161**

(இ - ள்.) குற்றமற்ற சிறப்பினையுடைய வேதியர்களில் விவாகஞ் செய்தற்குரிய கோத்திரத்தோடு பொருத்த முடைமை யால், சிவபெருமானது துதிப் பெருமணமென்னுந் திருப்பதியி லுள்ள நம்பாண்டார் நம்பியென்பவர் பெற்ற புத்திரியைத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் பாணிக்கிரகணஞ் செய்ய அவர் பெருந்தன்மையானது அமையுமென்று தீர்க்க யோசித் தார்கள். - எ - று.

***திருஞானசம்பந்தர் சீர்பெருக மணம்புணரும்***
***பெருவாழ்வு திருத்தொண்டர் மறையவர்கள் மிகப்பேணி***
***வருவாரும் பெருஞ்சுற்றம் மகிழ்சிறப்ப மகட்பேசத்***
***தருவார்தண் பணைநல்லூர் சார்கின்றார் தாதையார். 1162***

(இ - ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிறப்புமிகும்படித் திருமணஞ் செய்யும் பெரிய வாழ்வினை திருத்தொண்டர் வேதியர்களும் (வேள்வியுற்று) மிக விரும்பி வருகின்றவர்களும், பெரிய சுற்றத்தாரும் மகிழ்ச்சிமிகும்படி, சிவபாதவிருதயர் பெண் சுற்றத்தாரும் மகிழ்ச்சிமிகும்படி, சிபவாதவிருதயர் பெண் பேசுற்தற்கு நிறைந்த குளிர்ந்த வயல் சூழ்ந்த அத்திருப் பெருமண நல்லூரையடைவாராயினார். - எ - று.

***மிக்கதிருத் தொண்டர்களும் வேதியரும் உடன்ஏகத்***
***திக்குநிகழ் திருநல்லூர்ப் பெருமணத்தைச் சென்றெய்தத்***
***தக்கபுகழ் நம்பாண்டார் நம்பிதாம் அதுகேட்டுச்***
***செக்கர்முடிச் சடையார்தந் திருப்பாதந் தொழுதெழுவார். 1163***

(இ - ள்.) சிறந்த திருத்தொண்டர்களும், வேதியர்களும் தம்முடன் வரும்படி திசைகடோறும் விளங்குகின்ற திருநல்லூர்ப் பெருமணமென்னுந் திருப்பதியைச் சென்றுசேர, தகுந்த கீர்த்தியையுடைய நம்பாண்டார் நம்பி அதனைக் கேள்வியுற்று, செவ்வானம் போலுஞ் சடைமுடியையுடைய சிவபெருமானது திருவடிகளை வணங்கி, அவரை யெதிர்கொள்ள எழுகின்றவரா யினார். - எ - று.

***ஒப்பரிய பேருவகை ஓங்கி எழும் உள்ளத்தால்***
***அப்புநிறை குடம்விளக்கு மறுகெல்லாம்அணிபெருக்கிச்***
***செப்பரிய ஆர்வமிகு பெருஞ்சுற்றத் தொடுஞ்சென்றே***
***எப்பொருளும் எய்தினேன் எனத்தொழுதங் கெதிர்கொண்டார். 1164***

(இ - ள்.) ஒப்பற்ற பெருமகிழ்ச்சியானது அதிகரித்தெழு கின்ற திருவுள்ளத்தோடு பூரணகும்பங்களையும், திருவிளக்கு களையும் வீதிகளிலெல்லாம் அழகுபெற வைத்து, சொல்லுதற் கரிய விருப்பமிகுந்த பெரிய சுற்றத்தாருடன் சென்று, (இம்மை மறுமைக்குரிய) எல்லாப் பொருள்களையும் யான் அடைந்தே னென்று கூறி வணங்கி அங்கே எதிர்கொண்டார். - எ - று.

***எதிர்கொண்டு மணிமாடத் தினில்எய்தி இன்பமுறு***
***மதுரமொழி பலமொழிந்து வரன்முறையால் சிறப்பளிப்பச்***
***சதுர்முகனின் மேலாய சண்பைவரு மறையவரும்***
***முதிருணர்வின் மாதவரும் அணைந்ததிறம் மொழிகின்றார். 1165***

(இ - ள்.) அவ்வாறு எதிர்கொண்டழைத்துத் தமது அழகிய திருமாளிகை யிலடைந்து, மதுரமாகிய பல வார்த்தைகளைக் கூறிக் கிரமப்படிப் பல சிறப்புகளைச் செய்ய, பிரமனிலுஞ் சிறந்தவராகிய சிவபாதவிருதயர் முதலிய வேதியர்களும், பேருணர்ச்சியையுடைய அடியார்களும் தாங்கள் வந்த திறத்தைக் கூறுவாரானார்கள். - எ - று.

***"ஞானபோ னகருக்கு நற்றவத்தின் ஒழுக்கத்தால்***
***ஊனமில்சீ லத்(து)உம்பால் மகட்பேச வந்த"தென***
***"ஆனபே றந்தணர்பால் அருளுடைமை யாம்"என்று***
***வானளவு நிறைந்தபெரு மனமகிழ்ச்சி யொடுமொழிவார். 1166***

(இ - ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு நல்ல தவவொழுக்கத்தில் குற்றமற்ற சீலத்தையுடைய உம்மிடத்தில் பெண்பேச வந்ததென்று கூற, நீவிர் இங்கு வந்த பேறானது, இவ்வேதியர்களிடத்து வைத்த பெருங் கருணை யாமென்று, மிகவுமுயர்ந்த சிறந்த மனமகிவோடு கூறுவாராயினார். - எ - று.

***"உம்முடைய பெருந்தவத்தால் உலகனைத்தும் ஈன்றளித்த***
***அம்மைதிரு முலைப்பாலிற் குழைத்தஆ ரமுதுண்டார்க்(கு)***
***எம்முடைய குலக்கொழுந்தை யாம்உய்யத் தருகின்றோம்;***
***வம்மின்"என உரைசெய்து மனமகிழ்ந்து செலவிடுத்தார். 1167***

(இ - ள்.) உமது பெருந்தவத்தினால் சர்வலோகங்களையும் பெற்றருளிய உமாதேவியாரது திருமுலைப் பாலோடு குழைத்த அரிய ஞானாமுதத்தை யுண்டருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு எமது குலக்கொழுந்து போன்ற புத்திரியை யாங்களுய்யும் பொருட்டுத் திருமணஞ் செய்து தருகின்றோம்; வாருங்களென்று கூறி, மனமகிழ்ந்து (அவர்களைச் சீகாழிக்குச்) செல்லும்படி யனுப்பினார். - எ - று.

***பேருவகை யால்இசைவு பெற்றவர்தாம் மீண்டணைந்து***
***காருலவு மலர்சோலைக் கழுமலத்தை வந்தெய்திச்***
***சீருடைய பிள்ளையார்க் கவர்நேர்ந்த படிசெப்பிப்***
***பார்கலவுந் திருமணத்தின் பான்மையினைத் தொடங்குவார். 1168***

(இ - ள்.) மிக்க மகிழ்ச்சியோடு நம்பாண்டார் நம்பியினது உடன்பாட்டைப் பெற்ற சிவபாதவிருதயர் மீண்டு சென்று, மேகங்கள் தவழும் மலர்கள் நிறைந்த சோலை சூழ்ந்த சீகாழியை யடைந்து சிறந்த திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு நம்பாண்டார்நம்பி உடன்பட்டமையை கூறி, உலகத்தில் விளங்குந் திருக்கல்யாணத்தின் முறைமையைத் தொடங்குவாராயினார். - எ - று.

***திருமணஞ்செய் கலியாணத் திருநாளும் திகழ்சிறப்பின்***
***மருவியஓ ரையும்கணித மங்கலநூ லவர்வகுப்பப்***
***பெருகுமண நாளோலை பெருஞ்சிறப்பி னுடன்போக்கி***
***அருள்புரிந்த நன்னாளில் அணிமுளைப்பா லிகைவிதைத்தார். 1169***

(இ - ள்.) திருக்கல்யாணஞ் செய்தற்குரிய திருநாளும், மிக்க சிறப்போடு கூடிய இலக்கினமும் சோதிட சாஸ்திரிகள் நியமிக்க, சிறந்த திருமணத்திற்குரிய முகூர்த்த ஓலையை மிகுந்த சிறப்புடன் அனுப்பி, நியமித்த நல்ல முகூர்த்தத்தில் அழகிய முளைப்பாலிகைகளை விதைத்தார்கள். - எ - று.

***செல்வமலி திருப்புகலிச் செழுந்திருவீ திகளெல்லாம்***
***மல்குநிறை குடம்விளக்கு மகரதோ ரணம்நிரைத்தே***
***எல்லையிலா ஒளிமுத்து மாலைகள்எங் கணுநாற்றி***
***அல்குபெருந் திருஓங்க அணிசிறக்க அலங்கரித்தார். 1170***

(இ - ள்.) பலவகைச் செல்வங்கள் நிறைந்த சீகாழிப்பதியின் செழிய திருவீதிகளெல்லாம் நெருங்கிய பூரண கும்பங்களையும், திருவிளக்குகளையும், மகரதோரணங்களையும் வரிசையாக வமைத்து, அளவற்ற ஒளிபொருந்திய முத்துமாலைகளை எவ்விடத்தும் தொங்கவிட்டு, நிறைந்த பேரழகு மிகும்படி அணிசிறந்தோங்க அலங்காரஞ்செய்தார். - எ - று.

***அருந்தவத்தோர் அந்தணர்கள் அயலுள்ளோர் தாம்உய்யப்***
***பொருந்துதிரு நாளோலை பொருவிறந்தார் கொண்டணையத்***
***திருந்துபுகழ் நம்பாண்டார் நம்பிசிறப் பெதிர்கொண்டு***
***வருந்தவத்தான் மகட்கொடுப்பார் வதுவைவினை தொடங்குவார். 1171***

(இ - ள்.) அரிய தவத்தினையுடைய அடியார்களும், வேதியர்களும், அயலிடங்களிலுள்ளவர்களும் உய்யும்படி, பொருந்திய முகூர்த்த ஓலையை அளவற்ற வேதியர்கள் கொண்டுவர, திருந்திய புகழையுடைய நம்பாண்டார் நம்பியென்பவர்

சிறப்போடு அத்திருமுகத்தை யெதிர்கொண்டு பெற்று, முன் செய்ய வந்த தவங் காரணமாகத் தமது புத்திரியை விவாகஞ் செய்து கொடுப்பாராய்த் திருக்கல்யாணத் தொழிலைத் தொடங்குவாராயினார். - எ - று.

***மன்னுபெருஞ் சுற்றத்தார் எல்லாரும் வந்தீண்டி***
***நன்னிலைமைத் திருநாளுக் கெழுநாளாம் நன்னாளிற்***
***பன்மணிமங் கலமுரசம் பல்லியங்கள் நிறைந்தார்ப்பப்***
***பொன்மணிப்பா லிகைமீது புனிதமுளை பூரித்தார். 1172***

(இ - ள்.) நிலைபெற்ற பெரிய சுற்றத்தாரனைவரும் வந்து கூடி, நல்ல நிலைமையோடு கூடிய திருக்கல்யாண தினத்திற்கு ஏழு நாள் முன்னே, நல்ல நாளில் பல மணிகளழுத்திய மங்கல முரசும் பல வாத்தியங்களும் நிறைந்து ஆரவாரிக்க, பொன்னாலாகிய அழகிய பாலிகைக் கிண்ணத்தின்மேல் சுத்தமான முளைகளை நிறைத்தார். - எ - று.

***சேணுயரும் மாடங்கள் திருப்பெருகு மண்டபங்கள்***
***நீணிலைய மாளிகைகள் நிகரில்அணி பெறவிளக்கிக்***
***காணவருங் கைவண்ணம் கவினோங்கும் படிஎழுதி***
***வாணிலவு மணிக்கடைக்கண் மங்கலக்கோ லம்புனைந்து- 1173***

(இ - ள்.) விண்ணுலகளவு முயர்ந்த மாடங்களையும், அழகு மிக்க மண்டபங்களையும், உயர்ந்த நிலைகளையுடைய மாளிகைகளையும் மிக்க அழகுண்டாக வமைத்து, காணத்தக்க கைத்தொழிலாகிய சித்திரங்களை அழகு விளங்கும்படி யெழுதி, ஒளி விளங்குகின்ற மணிகளழுத்திய தலைவாயிலில் மங்கலகரமாகிய கோலங்களிட்டு. - எ - று.

***நீடுநிலைத் தோரணங்கள் நீள்மறுகு தொறும்நிரைத்து***
***மாடுயருங் கொடிமாலை மணிமாலை இடைப்போக்கிச்***
***சேடுயரும் வேதிகைகள் செழுஞ்சாந்து கொடுநீவிப்***
***பீடுகெழு மணிமுத்தின் பெரும்பந்தர் பலபுனைந்தார். 1174***

(இ - ள்.) உயர்ந்த நிலைத் தோரணங்களை நீண்ட வீதிகள் தோறும் வரிசையாக நிறுத்திப் பக்கங்களிலுயர்ந்த கொடி வரிசைகளையும் இரத்தின மாலைகளையும் இடையிடையே கட்டி, மிகவுயர்ந்ததிண்ணைகளைச் செழிய கலவைச் சாந்திட்டு மெழுகிப் பெருமை பொருந்திய அழகிய பெரிய பல முத்துப் பந்தலை அலங்கரித்தார். - எ - று.

**மன்றல்வினைத் திருமுளைநாள் தொடங்கிவரு நாளெல்லாம்
முன்றில்தொறும் வீதிதொறும் முகநெடுவா யில்கள்தொறும்
நின்றொளிரும் மணிவிளக்கு நிறைவாசப் பொற்குடங்கள்
துன்றுசுடர்த் தாமங்கள் தூபங்கள் துதைவித்தார். 1175**

(இ - ள்.) திருமணஞ் செய்தற்குப் பாலிகையில் முளையிட்ட நாள் தொடங்கி வருகின்ற நாள்களெல்லாம் முற்றங்கள் தோறும், வீதிகள் தோறும், நீண்ட தலைவாயில்கள் தோறும் நிலைத்து விளங்குகின்ற தூண்டாவிளக்குகளையும், நீர் நிறைந்த வாசனை பொருந்திய பொற்குடங்களையும், ஒளிபொருந்திய பொன்னரிமாலைகளையும், தூபங்களையும் நெருங்க வைத்தார்.- எ - று.

**எங்கணுமெய்த் திருத்தொண்டர் மறையவர்கள் ஏனையோர்
மங்கலநீள் மணவினைநாள் கேட்டுமிக மகிழ்வெயதிப்
பொங்குதிருப் புகலிதனில் நாடோறும் புகுந்தீண்ட
அங்கண்அணைந் தவர்க்கெல்லாம் பெருஞ்சிறப்புமிக அளித்தார். 1176**

(இ - ள்.) எவ்விடங்களிலும் மெய்ம்மை பொருந்திய திருத் தொண்டர்களும், வேதியர்களும் அவரல்லாத மற்றவர்களும் சுப மிக்க திருக்கல்யாண நாளைக் கேள்வியுற்று மிக மகிச்சி யடைந்து, சிறந்த சீகாழித் திருப்பதியில் நாள்தோறும் வந்து கூடி, அத்திருநல்லூருக்கு வந்தவர்களுக்கெல்லாம் பெரிய சிறப்பினை மிகுதியுஞ் செய்தார். - எ - று.

**மங்கலதூ ரியநாதம் மறுகுதொறும் நின்றியம்பப்
பொங்கியநான் மறையோசை கடலோசை மிசைப்பொலியத்
தங்குநறுங் குறைஅகிலின் தழைத்தசெழும் புகையினுடன்
செங்கனல்ஆ குதிப்புகையும் தெய்வவிரை மணம்பெருக. 1177**

(இ - ள்.) மங்கல வாத்தியங்களினொலியானது வீதிகள் தோறும் நிலைபெற்று ஒலிக்கவும், அதிகரிக்க நான்கு வேதங்களி னோசையானது கடலோசையினும் மிகுதியாக விளங்கவும், நறுமணம் பொருந்திய அகிற்றுண்டுகளினாலுண்டாகிய செழிய புகையோடு சிவந்த அக்கினியிற்செய்யும் ஆகுதியினா லாகிய புகையும் தெய்வத் தன்மை பொருந்திய வாசனை வீசவும்.- எ - று.

***எண்டிசையி னுள்ளோரும் ஈண்டுவளத் தொடுநெருங்கப்***
***பண்டநிறை சாலைகளும் பலவேறு விதம்பயில***
***மண்டுபெரு நிதிக்குவைகள் மலைப்பிறங்கல் எனமலிய***
***உண்டிவினைப் பெருந்துழனி ஓவாத ஒலிஓங்க. 1178***

(இ - ள்.) எட்டுத் திக்கிலுள்ளவர்களும் இங்குப் பலவளத்தோடும் நெருங்குதலால், பல பண்டங்களும் நிறைந்த மாளிகைகளும் பற்பலவிதங்களாகப் பொருந்தவும், நெருங்கிய (பொன்மணி முதலிய) பெரிய நிதிக்குவியல்கள் மலைகள் போல விளங்கவும், உணவு கொள்ளும் பேராசையானது நீங்காத ஒலியாயோங்கவும். - எ - று.

***மாமறைநூல் விதிச்சடங்கில் வகுத்தமுறை நெறிமரபின்***
***தூமணநல் லுபகரணம் சமைப்பவர்தந் தொழில்துவன்றத்***
***தாமரையோன் அனையபெருந் தவமறையோர் தாமெடுத்த***
***பூமருவு பொற்கலசப் புண்ணியநீர் பொலிவெய்த. 1179***

(இ - ள்.) மகத்தாகிய வேதத்தில்விதித்த கலியாணச் சடங்கில் வகுத்த விதிமுறையே நல்லமணத்தோடு கூடிய உபகரணங்களை யமைப்பவர்களது தொழில் நெருங்கவும், பிரமனை யொத்த பெரிய தவத்தினையுடைய வேதியர்கள் தங்கள் கையில் தாங்கிய மலர்களோடு சேர்ந்த பொற்கலசங் களில் நிறைந்த புண்ணிய தீர்த்தமானது விளக்கமடையவும். - எ - று.

***குங்குமத்தின் செழுஞ்சேற்றின் கூட்டமைப்போர் இனங்குழுமப்***
***பொங்குவிரைப்புதுக்கலவைப் புகைஎடுப்போர் தொகைவிரவத்***
***துங்கநறுங் கர்ப்பூரச் சுண்ணம்இடிப் போர்நெருங்க***
***எங்குமலர்ப் பிணைபுனைவோர் ஈட்டங்கள் மிகப்பெருக. 1180***

(இ - ள்.) செழிய குங்குமக்குழம்பின் கூட்டை இழைப்பவர் களது கூட்டங்கள் நெருங்கவும், வாசனை வீசுகின்ற புதிய கலவைப் பொருள்களாலாகிய புகையை யெடுக்கின்றவர்களது கூட்டங்கள் நெருங்கவும், உயர்ந்த நறுமணங்கமழும் கர்ப்பூரச் சுண்ணமிடிப்பவர்கள் நெருங்கவும், மலர்மாலைகளைத் தொடுப்பவர்களது கூட்டங்கள் எங்கும் மிகுதியாகப் பெருகவும்.- எ - று.

***இனையபல வேறுதொழில் எம்மருங்கும் நிரைத்தியற்றும்***
***மனைவளரும் மறுகெல்லாம் மணவணிசெய் மறைமூதூர்***
***நினைவரிய பெருவளங்கள் நெருங்குதலால் நிதிக்கோமான்***
***தனைஇறைவர் தாம்ஏவச் சமைத்ததுபோல் அமைந்துளதால். 1181***

(இ - ள்.) இத்தகைய பல வேறுவகைத் தொழில்களை எவ்விடங்களிலும் வரிசையாகச் செய்யும் மாளிகைகள் நிறைந்த வீதிகளெல்லாம் திருமணத்தின் அழகைக் காட்டுகின்ற வேதியர்கள் வாழும் பழைய திருநல்லூரில் நினைத்தற்கரிய மிக்க வளத்தோடு நெருங்கியிருத்தலால், சிவபெருமான் குபேரனை யனுப்ப, அவன் அவ்வளங்களை யமைத்ததுபோன் றிருந்தது. - எ - று.

***மாறி லாநிறை வளர்ந்தரு புகலியின் மணமீக்***
***கூறு நாளின்முன் னாளினில் வேதியர் குழாமும்***
***நீறு சேர்திருத் தொண்டரும் நிகரிலா தவருக்(கு)***
***ஆறு சூடினார் அருட்டிருக் காப்புநாண அணிவார். 1182***

(இ - ள்.) மாறுதலில்லாத நிறைந்த வளம் பொருந்திய சீகாழிப்பதியில் திருமணத்தை மேற்கொள்ளும் திருநாளின் முதல் நாளில் வேதியர் கூட்டங்களும், விபூதியணிந்த திருத் தொண்டர்களும், ஒப்பற்ற திருஞானசம்பந்தப்பிள்ளையா ருக்குக் கங்கைநதியை யணிந்த சிவபெருமானது திருவருள் வடிவமான காப்புநாணை (த் திருமணத்தின் பொருட்டுக்) கட்டுவாராயினார். - எ - று.

***வேத வாய்மையின் விதியுளி வினையினால் விளங்க***
***ஓத நீருல கியன்முறை ஒழுக்கமும் பெருகக்***
***காதல் நீள்திருத் தொண்டர்கள் மறையவர் கவினார்***
***மாதர் மைந்தர்பொற் காப்புநாண் நகர்வலஞ் செய்தார். 1183***

(இ - ள்.) வேதத்திற்கூறும் விதிகள் இச்செயலால் விளங்கவும், சமுத்திரஞ் சூழ்ந்த உலக நடையின் முறைமையான ஒழுக்கங்களும் விருத்தியடையவும், அன்பு மிகுந்த திருத் தொண்டர்களும் வேதியர்களும், அழகு பொருந்திய மாதர் களும், புருடர்களுமாகிய இவர்கள் பொன்னாலாகிய காப்பு நாணை நகர் வலஞ் செய்வித்தார்கள். - எ - று.

***நகர்வ லஞ்செய்து புகுந்தபின் நவமணி அணிந்த***
***புகலில் சித்திர விதானமண் டபத்தினிற் பொலியப்***
***பகரும் வைதிக விதிச்சமா வர்த்தனப் பான்மை***
***திகழ முற்றிய செம்மலார் திருமுன்பு சேர்ந்தார்.*** ***1184***

(இ - ள்.) நரகத்தை வலஞ்செய்து (திருமாளிகையிற்) புகுந்தபின்பு, நவரத்தினங்களா லலங்கரித்த குற்றமற்ற அழகிய மேற்கட்டிகட்டிய மண்டபத்தில் பொலிவெய்த, சொல்லுகின்ற வைதிகவிதியாகிய சமாவர்த்தனக்கிரியையை விதிப்படி முடித்த திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருமுன்னே (வேதியர்கள் யாவரும்) ஒருங்கு சேர்ந்தார்கள். - எ - று.

***செம்பொ னின்பரி கலத்தினிற் செந்நெல்வெண் பரப்பின்***
***வம்ப ணிந்தநீள் மாலைசூழ் மருங்குற அமைத்த***
***அம்பொன் வாசநீர்ப் பொற்குடம் அரசிலை தருப்பை***
***பம்பு நீள்சுடர் மணிவிளக் கொளிதரும் பரப்பில்.*** ***1185***

(இ - ள்.) சிவந்த பொற்பாத்திரத்தில் வெள்ளிய சம்பா நெற்பரப்பின் மேல் வாசனை பொருந்திய நீண்ட மாலைகள் சூழ்ந்த (மண்டபத்தின்) அருகில் பொருந்தவைத்த அழகிய பொன்னாற் செய்த வாசனை பொருந்திய நீர் நிறைந்த பூரணகும்பங்களும், அரசிலையுந் தருப்பையும் பரவிய ஒளிமிக்க இரத்தின தீபங்கள் விளங்குகின்ற இடத்தில். - எ - று.

***நாத மங்கல முழக்கொடு நற்றவ முனிவர்***
***வேத கீதமும் விம்மிட விரைகமழ் வாசப்***
***போது சந்தணி பூந்துகில் புனைந்தபுண் ணியம்போல்***
***மீது பூஞ்ச யனத்திருந் தவர்முன்பு மேவி.*** ***1186***

(இ - ள்.) மங்கலவாத்திய முழக்கத்தோடு நல்ல தவத்தை யுடைய வேதியர்கள் செய்யும் வேதங்களினிசையுமதிகரிக்க, வாசனை வீசுகின்ற புஷ்பங்களும், சந்தனமும், ஆபரணமும், சிறந்த பட்டாடையும் அணிந்த புண்ணிய வடிவம் போலப் புஷ்பசயனத்தின்மேல் எழுந்தருளியிருந்த திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருமுன்பு (அவ்வேதியர்கள்) அடைந்து. - எ - று.

***ஆர்வம் மிக்கெழும் அன்பினால் மலரயன் அனைய***
***சீர்ம றைத்தொழிற் சடங்குசெய் திருந்துநூல் முனிவர்***
***பார்வ ழிப்பட வரும்இரு வினைகளின் பந்தச்***
***சார்பொ ழிப்பவர் திருக்கையிற் காப்புநாண் சாத்த.*** ***1187***

(இ - ள்.) விருப்பமிகுத் தெழுகின்ற அன்போடு வேத வொழுக்கமான சடங்குகளைச் செய்கின்ற திருத்தமாகிய பூணூலையணிந்த பிரமனையொத்த சிறந்த வேதியர்கள், உலகத்திற் பிறக்க வருகின்ற நல்வினை தீவினைகளின் பந்தமாகிய சார்பை நீக்கி யருளுந் திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருக்கரத்தில் காப்புநாணையணிய. - எ - று.

**கண்ட மாந்தர்கள் கடிமணங் காணவந் தணைவார்**
**கொண்ட வல்வினை யாப்பவிழ் கொள்கைய வான**
**தொண்டர் சிந்தையும் வதனமும் மலர்ந்தன; சுருதி**
**மண்டு மாமறைக் குலமெழுந் தார்த்தன மகிழ்ந்தே. 1188**

(இ - ள்.) அதனைத் தரிசித்தமனிதர்களும், புதிய திருமணத் தைத் தரிசிக்க வந்தவர்களும், தம்மைப் பற்றிய தீவினைப் பகுதிகள் நீங்குங் கொள்கையையுடைய அடியார்களுமாகிய இவர்களது மனமும் முகமும் மலர்ந்தன; வேதங்களை யுணர்ந்த வேதியர் கூட்டமும் மகிழ்ச்சியடைந் தெழுந்து ஆரவாரித்தன. - எ - று.

**நிரந்த கங்குலின் நிதிமழை விதிமுறை எவர்க்கும்**
**புரந்த ஞானசம் பந்தர்தாம் புன்னெறிச் சமய**
**அரந்தை வல்லிருள் அகலவந் தவதரித் தாற்போல்**
**பரந்த பேரிருள் துரந்துவந் தெழுந்தனன் பகலோன். 1189**

(இ - ள்.) (உலகத்தில்) பரந்த சமணர்களாகிய இருளி னிடத்து அருட் செல்வமாகிய மழையை வேதவிதிப்படி யாவர்க்குஞ் சுரந்தளித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அற்ப மார்க்கமாகிய புறச் சமயங்களென்னுந் துன்பத்தை விளைக்குங் கொடிய இருள் நீங்க, வந்து திருவவதாரஞ் செய்தாற் போலப் பரவிய பெரிய இருளை யொழித்துச் சூரியனுதயமானான். - எ - று.

**அஞ்சி றைச்சுரும் பறைபொழிற் சண்பைஆண் டகையார்**
**தஞ்சி வத்திரு மணஞ்செயத் தவஞ்செய்நாள் என்று**
**மஞ்ச னத்தொழில் புரிந்தென மாசிருள் கழுவிச்**
**செஞ்சு டர்க்கதிர்ப் பேரணி அணிந்தன திசைகள். 1190**

(இ - ள்.) அழகிய சிறகினையுடைய வண்டுகள் சப்திக்குஞ் சோலை சூழ்ந்த சீகாழித் தலைவராகிய பிள்ளையாரது மங்கலகரமான திருமணஞ் செய்தற்குத் தவத்தைச் செய்த

நாளிதுவென்று, தானம் திருமஞ்சனமாகிய தொழிலைச் செய்தாற் போலக் குற்றம் பொருந்திய இருளைக் கழுவிச் சிவந்த ஒளிபொருந்திய சூரிய கிரணமமென்னும் பெரிய ஆபரணத்தைத் திக்குகளணிந்தன. - எ - று.

***பரம்பு தம்வயின் எங்கணும் உள்ளபல் வளங்கள்***
***நிரம்ப முன்கொணர்ந் தெண்டிசை யவர்நெருங் குதலால்***
***தரங்க டந்தவர் தந்திருக் கல்லியா ணத்தின்***
***வரம்பில் தன்பயன் காட்டுவ தொத்தது வையம். 1191***

(இ - ள்.) பரவிய தம்மிடத்துள்ள பலவளங்களையும் நிரம்ப முன்னே கொண்டு வந்து எட்டுத் திக்கிலுள்ளவர்களும் நெருங்குதலினால், ஒப்பற்றவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது திருமணத்தில் அளவற்ற தனது வளங்களை இந்நிலவுலகமானது காட்டுவதை யொத்திருந்தது. - எ - று.

***நங்கள் வாழ்வென வருந்திரு ஞானசம் பந்தர்***
***மங்க லந்திரு மணஎழுச் சியின்முழக் கென்னத்***
***துங்க வெண்டிரைச் சுரிவளை ஆர்ப்பொடு சூழ்ந்து***
***பொங்கு பேரொலி முழக்குடன் எழுந்தது புணரி. 1192***

(இ - ள்.) நமது பெருவாழ்வென்று சொல்லும்படி யெழுந் தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது மங்கலகரமான திருக்கல்யாணத்தி லுண்டாகும் வாத்திய வொலிபோல, உயர்ந்த வெள்ளிய அலையினிடத்துள்ள சுரிந்த சங்கு களினாரவாரத் தோடு கரையிற் சூழ்ந்து பொங்குகின்ற பேரொலியாகிய முழக்கத்துடன் சமுத்திரமெழுந்தது. - எ - று.

***அளக்கர் ஏழுமொன் றாமெனும் பெருமைஎவ் வுலகும்***
***விளக்கு மாமண விழாவுடன் விரைந்துசெல் வனபோல்***
***துளக்கில் வேதியர் ஆகுதி தொடங்கிடா முன்னம்***
***வளர்க்கும் வேதியில் வலஞ்சுழித் தெழுந்தது வன்னி. 1193***

(இ - ள்.) சப்த சமுத்திரங்களும் ஒன்று சேர்ந்தாற்போலும் பெருமையை எவ்வுலகத்திலும் விளங்கச் செய்யும் சிறந்த திருக் கல்யாண விழாவுடன் தாம் விரைந்து செல்லக்கருதினபோல, அசைவில்லாத வேதியர்கள் ஆகுதிகளைத் தொடங்குதற்கு முன்னே, தம்மை வளர்க்கும் யாககுண்டத்தில் ஓமாக்கினி யானது வலமாகச் சுழித் தெழுந்தது. - எ - று.

**சந்த மென்மலர்த் தாதணி நீறுமெய் தரித்துக்**
**கந்த மேவுவண் டொழுங்கெனுங் கட்டிகை பூண்டு**
**சிந்தை தூயஅன் பர்களுடன் திருமணம் போத**
**மந்த சாரியின் மணங்கொணர்ந் தெழுந்தது மருத்து. 1194**

(இ - ள்.) அழகிய மிருதுவாகிய பூந்தாதென்னும் அணியத் தக்க விபூதியை உடம்பிற்பூசி, கூட்டமாக வருகின்ற வண்டி னொழுங்கென்னும் உருத்தராட்சத்தைப் பூண்டு, மனதில் தூய்மை பொருந்திய அடியார்களுடன் திருமணத்திற்குச் செல்ல மந்தகதியோடு வாசனையை வகித்துக் கொண்டு தென்றற் காற்று வீசியது. - எ - று.

**எண்டி சைத்திறத் தியாவரும் புகலிவந் தெய்தி**
**மண்டும் அத்திரு மணஎழுச் சியின்அணி வாய்ப்பக்**
**கொண்ட வெண்ணிறக் குரூஉச்சுடர்க் கொண்டல்கள் என்ன**
**வெண்து கிற்கொடி நிரைத்தது போன்றது விசும்பு. 1195**

(இ - ள்.) எட்டுத் திக்கி லுள்ளவர்களும் சீகாழியை வந்து சேர்ந்து, நெருங்கிய அத்திருமண வெழுச்சியில் அழகு பொருந் தப் பிடித்த வெண்ணிறம் பொருந்திய ஒளியினையுடைய மேகங்களென்னும் வெள்ளிய கொடியாடைகளை ஆகாயம் வரிசையாக வைத்தாற்போன்றிருந்தது. - எ - று.

**ஏல இந்நலம் யாவையும் எழுச்சிமுன் காட்டும்**
**காலை செய்வினை முற்றிய கவுணியர் பெருமான்**
**மூல மாகிய தோணிமேல் முதல்வரை வணங்கிச்**
**சீல மார்திரு வருளினால் மணத்தின்மேற் செல்வார். 1196**

(இ - ள்.) பொருந்தும்படி இத்தகைய நலங்களனைத்தையுந் திருமணவெழுச்சியின் முன்னே காட்டுகின்ற அவ்வுதயகாலத் தில், நித்தியகன்மங்களைச் செய்து முடித்த திருஞானசம்பந்தப் பிள்ளையார் எப்பொருட்குங் காரணராகிய தோணியப்பரை வணங்கி, சிறந்த திருவருளின் வழித்தாய்த் திருமணத்திற் கெழுந்தருளுவாராயினார். - எ - று.

**காழி மாநகர் வேதியர் குழாத்தொடுங் கலந்து**
**சூழும் அன்பர்கள் ஏனையோர் துதைந்துமுன் செல்ல**
**வாழி மாமறை முழங்கிட வளம்பதி வணங்கி**
**நீழல் வெண்சுடர் நித்திலச் சிவிகைமேற் கொண்டார். 1197**

(இ - ள்.) சிறந்த சீகாழிப்பதியில் வாழும் வேதியர் கூட்டத் தோடுங் கலந்து சூழ்ந்த அடியார்களும், மற்றவர்களும் நெருங்கி முன்னே செல்ல, மகத்தாகிய வேதங்களொலிக்க வளப்பம் பொருந்திய சீகாழிப்பதியை வணங்கி, மிக்க வெள்ளிய ஒளி பொருந்திய முத்துச் சிவிகையின் மேலெழுந்தருளினார். - எ - று.

***யான வாகனம் ஏறுவார் யாருமேற் கொள்ளக்***
***கான மாகிய தொங்கல்பிச் சம்குடை கவரி***
***மேல் நெருங்கிட விசும்பினும் நிலத்தினும் எழுந்த***
***வான துந்துபி முழக்குடன் மங்கல இயங்கள். 1198***

(இ - ள்.) சிவிகைகளிலும் வாகனங்களிலு மேறுகின்றவர்கள் யாவரும் அவ்வவ்வாகனங்களி லேறிவரவும், திரளாகிய மாலைகளும், மயிற்பீலிகளும், குடைகளும், சாமரைகளும் மேலே நெருங்கவும் தேவதுந்துபியின் முழக்கத்தோடு மங்கல வாத்தியங்கள் ஆகாயத்திலும் நிலவுலகத்திலும் முறையே யொலித்தன. - எ - று.

***சங்கொடு தாரை சின்னத் தனிப்பெருங் காளம் தாளம்***
***வங்கியம் ஏனை மற்று மலர்துளைக் கருவி எல்லாம்***
***பொங்கிய ஒலியின் ஓங்கிப் பூசுரர் வேத கீதம்***
***எங்கணும் எழுந்து மல்கத் திருமணம் எழுந்த தன்றே. 1199***

(இ - ள்.) சங்குகளும், தாரையும், திருச்சின்னமும், ஒப்பற்ற பெரிய எக்காளமும், தாளமும், புள்ளாங்குழலும் இவையல்லாத வேறுதுளைக் கருவிகளுமாகிய எல்லா வாத்தியங்களும் மிக்க ஒலியோடு அதிகரிக்கவும், வேதியர்கள் செய்யும் வேதநாதங்கள் எவ்விடத்திலுந்தோன்றி நிறையவும், திருக்கல்யாண மகோற்சவ மெழுந்தது. - எ - று.

***கோதையர் குழல்சூழ் வண்டின் குழாத்தொலி ஒருபால் கோல***
***வேதியர் வேத வாய்மை மிகுமொலி ஒருபால் மிக்க***
***ஏதமில் விபஞ்சி வீணை யாழொலி ஒருபால் ஏத்தும்***
***நாதமங் கலங்கள் கீத நயப்பொலி ஒருபா லாக. 1200***

(இ - ள்.) மாதர்களது கூந்தலிற் சூழ்ந்த வண்டின் கூட்டங்களி னோசை யொருபக்கத்திலும், அழகிய வேதியர்கள் செய்யும் உண்மையாகிய வேதவாக்கியங்களின் மிகுந்த வோசை யொரு பக்கத்திலும், சிந்த குற்றமற்றவீணையும் யாழுமாகிய

இவைகளினொலி யொருபக்கத்திலும், துதிக்கின்ற இசை பொருந்திய மங்கல வாழ்த்துக்களும், சங்கீதங்களின் ஒலியும் ஒருபக்கத்திலுமாக. - எ - று.

**விண்ணினை விழுங்க மிக்க வெண்துகிற் பதாகை வெள்ளம்**
**கண்வெளி படைப்ப மிக்க கதிர்விரி கவரிக் கானம்**
**மண்ணிய மணிப்பூண் நீடும் அரிசனம் மலிந்த பொற்பின்**
**எண்ணிலா வண்ணத் தூசின் பொதிப்பரப் பெங்கும் நண்ண. 1201**

(இ - ள்.) வெள்ளிய துகிற் கொடிகளின் கூட்டங்கள் ஆகாயத்தை மூடவும், மிகுந்த சாமரைக் கூட்டங்கள் கண்களை வெறிக்கச் செய்யவும், அலங்கரிக்கத் தக்க இரத்தினாபரணங் களினோடு மிக்கமஞ்சள் பூசிய அழகிய அளவற்ற பட்டாடை களின் பொதிக் கூட்டங்கள் எங்கும் பொருந்தவும். - எ - று.

**சிகையொடு மான்தோல் தாங்குங் கிடையுமா சானுஞ் செல்வார்**
**புகைவிடும் வேள்விச் செந்தீ இல்லுடன் கொண்டு போவார்.**
**தகைவிலா விருப்பின் மிக்க பதிகங்கள் விளம்பிச் சார்வார்**
**வகையறு பகையுஞ் செற்ற மாதவர் இயல்பின் மல்க. 1202**

(இ - ள்.) மயிரும் மான்றோலும் பூணூலுடன் சேர்த்தணிந்த வேதமோதுஞ் சிறுவர்களும் அவற்றையோ துவிக்குமாசானு மாகச் செல்பவர்களும், புகை விடுகின்ற யாகாக்கினிகளை மனைவிமார்களுடன் எடுத்துக் கொண்டு செல்பவர்களும், அடங்காதவிருப்பத்தின் மிக்க தேவாரத் திருப்பதிகங்களை யோதிச் செல்பவர்களும், அறுவகைப் பகையையு மொழித்த சிறந்த முனிவர்களும் இயல்போடு நெருங்கவும். - எ - று.

**அறுவகை விளங்குஞ் சைவத் தளவிலா விரதஞ் சாரும்**
**நெறிவழி நின்ற வேடம் நீடிய தவத்தி னள்ளோர்**
**மறுவறு மனத்தில் அன்பின் வழியினால் வந்த யோகக்**
**குறிநிலை பெற்ற தொண்டர் குழாங்குழா மாகிஏக. 1203**

(இ - ள்.) ஆறுவகையாக விளங்குகின்ற சைவத்தில் அளவில் லாத விரதத்தைச் சார்ந்த நல்லொழுக்கத்தில் சைவ வேடமிகுந்த தவமுனிவர்களும், குற்றமற்ற மனதில் அன்புகாணரமாக வந்த யோகக்குறி நிலைக்கப் பெற்ற அடியார்களும் கூட்டங்கூட்ட மாகச் செல்லவும். - எ - று.

***விஞ்சையர் இயக்கர் சித்தர் கின்னரர் மிடைந்த தேவர்
அஞ்சன நாட்ட ஈட்டத் தரம்பையர் உடனா யுள்ளோர்
தஞ்சுடர் விமான மேறித் தழைந்தஆ தரவி னோடு
மஞ்சுறை விசும்பின் மீது மணஅணி காணச் சென்றார். 1204***

(இ - ள்.) வித்தியாதரரும், இயக்கரும், சித்தரும், கின்னரும், நெருங்கிய தேவர்களும் மையிட்ட கண்களையுடைய கூட்டமாகிய தெய்வப் பெண்களுடன் கூடினவர்களாய்த் தங்கள் தங்கள் ஒளிபொருந்திய விமானங்களிலேறிக் கொண்டு, மிக்க விருப்பத்தோடு மேகங்கள் தவழும் ஆகாயத்தினிடத்துத் திருமணப் பொலிவைத் தரிசிக்க வந்தார்கள். - எ - று.

***மற்றிவர் மிடைந்து செல்லும் மங்கல வனப்பின் காட்சி
முற்றஇத் தலத்தி னுள்ளோர் மொய்த்துடன் படரும் போதில்
அற்புத நிகழ்ச்சி எய்த அணைதலால் மணமேற் செல்லும்
பொற்பமை மணத்தின் சாயை போன்றுமுன் பொலியச் செல்ல. 1205***

(இ - ள்.) அத்தேவர்கள் நெருங்கிச் செல்கின்ற மங்கலகர மான அழகின் காட்சியானது, இவ்வுலகத்துள்ளோ ரனைவரும் நெருங்கித் திருமணத்துடன் செல்லும்பொழுது அற்புதமுண் டாக விருத்தலால், திருமணத்தில் நின்று மேற்செல்கின்ற அழகிய அத்திருமணத்தினது சாயையையொத்து முன்னே விளங்கச் செல்லவும். - எ - று.

***தவஅர சாள உய்க்குந் தனிக்குடை நிழற்றச்சாரும்
பவம்அறுத் தாள வல்லார் பாதம்உள் ளத்துக் கொண்டு
புவனங்கள் வாழ வந்த பூந்தராய் வேந்தர் போந்து
சிவனமர்ந் துறையும் நல்லூர்த் திருப்பெரு மணத்தைச் சேர்ந்தார். 1206***

(இ - ள்.) தவமாகிய அரசாட்சி செய்யும் பொருட்டுப் பிடித்த ஒப்பற்ற முத்துக்குடைநிழலைச் செய்யும்படி, தம்மை யடைந்த சனனமரணங்களை யொழித்து அடிமை கொள்ள வல்ல சிவபெருமானது திருவடிகளை மனத்திற் சிறந்து, சர்வ லோகங்களும் வாழும்படி யவதரித்த திருஞானசம்பந்தப் பிள்ளையாரெழுந்தருளி, சிவபெருமான் வீற்றிருந்தருளிய திருநல்லூர்ப் பெருமணமென்னுந் திருப்பதியை யடைந்தருளி னார். - எ - று.

***பெருமணக் கோயி லுள்ளார் மங்கலம் பெருகு மாற்றால்***
***வருமணத் திறத்தின் முன்னர் வழிஎதிர் கொள்ளச் சென்று***
***திருமணம் புணர எய்தும் சிரபுரச் செம்ம லார்தாம்***
***இருள்மணந் திலங்கு கண்டத் திறைவர்தங் கோயில் புக்கார். 1207***

(இ - ள்.) திருநல்லூர்ப் பெருமணத் திருக்கோயிலுள்ள அடியார்கள் மங்கலமிகும்படி வருகின்ற திருமணவெழுச்சியின் முன்பு வலியிலெதிர்கொள்ளும்படி திருக்கலியாணஞ் செய்ய எழுந்தருளிய, திருஞானசம்பந்தப்பிள்ளையார் சென்றருளி, இருண்டு விளங்குகின்ற கண்டத்தையுடைய சிவபெருமானது திருக்கோயிலையடைந் தருளினார். - எ - று.

***நாதரைப் பணிந்து போற்றி நற்பொருட் பதிகம் பாடிக்***
***காதல்மெய் யள்முன் பெற்றுக் கவுணியர் தலைவர் போந்து***
***வேதியர் "வதுகைக் கோலம் புனைந்திட வேண்டும்" என்னப்***
***பூதநா யகர்தங் கோயில் புறத்தொரு மடத்திற் புக்கார். 1208***

(இ - ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிவபெருமானை வணங்கித்துதித்து நல்ல பொருளமைந்த திருப்பதிகம்பாடி யருளி, விருப்ப மிக்க மெய்ம்மையாகிய திருவருளை முன்பு பெற்று, புறத்திற்சென்றருளி, வேதியர்கள் திருமணக்கோலத்தை யணியவேண்டுமென்று கூற, சிவபெருமானது திருக்கோயிலின் புறத்திலுள்ள ஒரு திருமடத்திற் புகுந்தருளினார். - எ - று.

***பொற்குடம் நிறைந்த வாசப் புனிதமஞ்ச சனநீராட்டி***
***விற்பொலி வெண்பட் டாடை மேதக விளங்கச் சாத்தி***
***நற்றிரு உத்த ரீய நறுந்துகில் சாத்தி நானப்***
***பற்பல கலவைச் சாந்தம் பான்மையின் அணிந்த பின்னர். 1209***

(இ - ள்.) பொற்குடங்களில் நிறைந்த வாசனை பொருந்திய பரிசுத்தமாகிய திருமஞ்சனநீரில் முழுக்காட்டி, ஒளிவிளங்கு கின்ற வெள்ளிய பட்டு வஸ்திரத்தை அழகு பொருந்தத் திருவரையில் தரிசித்து, நல்லதிருவுத் தரீயமென்னும் பட்டாடை யைத் தோளின்மேற்சாத்தி, கஸ்தூரி சேர்ந்த பலகலவைச் சந்தனத்தை முறைமையோடு பூசியபின். - எ - று.

***திருவடி மலர்மேற் பூத்த செழுநகைச் சோதி என்ன***
***மருவிய தரளக் கோவை மணிச்சரி அணையச் சாத்தி***
***விரிசடர்ப் பரட்டின் மீது விளங்குபொற் [illegible] [illegible]***
***பெருகொளி முத்தின் தாமம் பிறங்கிய தொங்கல் சாத்தி 1210***

(இ - ள்.) திருவடித் தாமரைகளிற் பூத்த செழிய விளக்க மிக்க சோதியைப் போலப் பொருந்திய முத்துக் கோவைகளையுடைய அழகிய காற்சரியைப் பொருந்த அணிந்து, மிக்க ஒளிபொருந்திய திருவடிப் பரட்டின்மேல்விளங்குகின்ற குச்சங்களையணிந்து. - எ - று.

**தண்சுடர்ப் பரிய முத்துத் தமனிய நாணிற் கோத்த**
**கண்கவர் கோவைப் பத்திக் கதிர்க்கடி சூத்தி ரத்தை**
**வெண்சுடர்த் தரள மாலை விரிசுடர்க் கொடுக்கின்மீது**
**வண்திரு அரையின் நீடு வனபொலி வளரச் சாத்தி. 1211**

(இ - ள்.) (பார்ப்பவரது) கவரத்தக்க குளிர்ந்த ஒளி பொருந்திய பெருமுத்துக்களைப் பொற்கயிற்றிற்கோத்த கோவைப்பத்தியையுடைய விளங்குகின்ற அரைஞாணை வெள்ளொளி பொருந்திய முத்து வரிசைகள் விரிந்து பிரகாசிக்கின்ற. பின்கச்சத்தின்மேல் அழகிய திருவரையில் மிக்க அழகோடு ஒளிவிளங்கத் தரித்து. - எ - று.

**ஒளிகதிர்த் தரளக் கோவை உதரபந் தனத்தின் மீது**
**தளிரொளி துளும்பு முத்தின் சன்னவீ ரத்தைச் சாத்திக்**
**குளிர்நில வெறிக்கு முத்தின் பூணநூல் கோவை சாத்தி**
**நளிர்கதிர் முத்து மாலை நகுசடர் ஆரஞ் சாத்தி. 1212**

(இ - ள்.) ஒளிவிளங்குகின்ற முத்துவடங்களாலாகிய உதரபந்தனத்தின் மேல் மிக்க ஒளிததும்புகின்ற சன்னவீர மென்னு முத்தாபரணத்தையணிந்து, குளிர்ந்த ஒளிவீசுகின்ற முத்துக்களாலாகிய பூணூல் வடத்தை யணிந்து, குளிர்ந்த ஒளியையுடைய முத்துமாலையாகிய ஆரத்தையணிந்து. - எ - று.

**வாள்விடு வயிரக் கட்டு மணிவிரல் ஆழி சாத்தித்**
**தாளுறு தடக்கை முத்தின் தண்டையும் சரியும் சாத்தி**
**நீளொளி முழங்கைப் பொட்டு நிரைசுடர் வடமுஞ் சாத்தித்**
**தோள்வளைத் தரளப் பைம்பூண் சுந்தரத் தோள்மேல் சாத்தி. 1213**

(இ - ள்.) ஒளிவீசுகின்ற வயிரமணிகளாற்கட்டிய அழகிய விரல் மோதிரங்களை யணிந்து, முழந்தாள்வரையில் நீண்ட திருக்கரத்தில் முத்துத்தண்டையையுங் கைச்சரியையு மணிந்து, மிக்க ஒளிபொருந்திய முழங்கைப் பொருட்டோடு வரிசையாக மணிவடங்களையுமணிந்து, - எ - று.

***திருக்கழுத் தாரந் தெய்வக் கண்டிகை மாலை சேரப்***
***பருத்தமுத் தொழுங்கு கோத்த படரொளி வடமுஞ் சாத்திப்***
***பெருக்கிய வனப்பின் செவ்வி பிறங்கிய திருவார் காதில்***
***வருக்கவெண் டரளக் கொத்தின் வடிக்குழை விளங்கச் சாத்தி. 1214***

(இ - ள்.) திருக்கழுத்தில் பதக்கத்தையும் தெய்வத் தன்மை பொருந்திய முத்துக்கண்டிகைமாலையோடு பொருந்தும்படி, பருத்த முத்துக்களை வரிசையாகக் கோர்த்த ஒளிபொருந்திய முத்துவடத்தையுமணிந்து, மிக்க அழகு விளங்குந் திருக்காதில் கூட்டமாக வெள்ளமுத்துக் கொள்ளத்தாலமைந்த வடிந்த மகர குண்லடத்தை விளங்கும்படித் தரித்து.- எ - று.

***நீற்றொளி தழைத்துப் பொங்கி நிறைதிரு நெற்றி மீது***
***மேற்பட விரித்த சோதி வெண்சுடர் எழுந்த தென்னப்***
***பாற்படு முத்தின் பாரப் பனிச்சுடர்த் திரணை சாத்தி***
***ஏற்பவைத் தணிந்த முத்தின் எழில்வளர் மகுடஞ் சேர்த்தார். 1215***

(இ - ள்.) விபூதியினொளி தழைத்து நிறைந்த திருநெற்றியின் மேல் பேரொளிபரந்த வெள்ளிய சுடரெழுந்தது போல, அந்நெற்றியினிடத்துச் சேர்ந்த முத்துக்களாலாகிய குளிர்ந்த ஒளிபொருந்திய திலதத்தையணிந்து, பொருத்த வைத்த மைத்த முத்தாலாகிய அழகு விளங்குங் கிரீடத்தி யணிந்தார். - எ - று.

***இவ்வகை நம்மை யாளும் ஏர்வளர் தெய்வக் கோலம்***
***கைவ்வினை மறையோர் செய்யக் கடிகொள்செங் கமலத் தாதின்***
***செவ்விநீள்தாம மார்பர் திருவடை யாள மாலை***
***எவ்வுல கோரும் ஏத்தத் தொழுதுதாம் எடுத்துப் பூண்டார். 1216***

(இ - ள்.) இவ்வாறு நம்மை யாட்கொள்ளும் அழகிய தெய்வத் தன்மை பொருந்திய திருமணக் கோலத்தைக் கைத் தொழிலிற் சிறந்த வேதியர்கள் செய்யவும், வாசனை பொருந்திய செந்தாமரைப் பூவாலாகிய மாலையை யணிந்த திருமார்பினை யுடைய திருஞானசம்பந்தப்பிள்ளையார் ருத்திராட்ச கண்டி கையை எவ்வுலகத்தாருந் துதிக்க, வணங்கித் தாமே எடுத்தணிந் தருளினார். - எ - று.

***அழகினுக் கணியாம் வெண்ணீ றஞ்செழுத் தோதிச் சாத்திப்***
***பழகிய அன்பர் சூழப் படரொளி மறுகில் எய்தி***
***மழவிடை மேலோர் தம்மை மனங்கொள வணங்கி வந்து***
***முழவொலி எடுப்ப முத்தின் சிவிகைமேற் கொண்ட போது. 1217***

(இ-ள்.) அழகுக்கழகாய் விளங்கும் விபூதியை ஸ்ரீபஞ்சாட்சர மோதியணிந்து, தம்முடன் பழகிய அடியார்கள் சூழும்படி பரந்த ஒளியையுடைய திருவீதியெலழுந்தருளி, இடபவாகனத்தின் மீதெழுந்தருளுஞ் சிவபெருமானை மனதிற்பொருந்த வணங்கி மீண்டெழுந்தருளி, மங்கலவாத்தியங்களொலிக்க முத்துச் சிவிகையிலெழுந்தருளும் பொழுது. - எ - று.

***எழுந்தன சங்க நாதம் இயம்பின இயங்கள் எங்கும்***
***பொழிந்தன விசும்பில் விண்ணோர் கற்பகப் புதுப்பூ மாரி***
***தொழுந்தகை முனிவர் தொண்டர் சுருதியின் வாழ்த்துப் பொங்கி***
***வழிந்தன திசைகள் மீது மலர்ந்தன உலகம் எல்லாம்.*** *1218*

(இ - ள்.) சங்கத் தொனியெழுந்தன, எங்கும் மங்கல வாத்தியங்களொலித்தன; ஆகாயத்தில் தேவர்கள் தூவும் புதிய கற்பகப் பூமழை பொழிந்தன; வணங்கத்தக்க பெருமை பொருந்திய முனிவர்களும், அடியார்களும் ஓதுகின்ற வேதங்களின் வாழ்த்தொலிகள் திக்குகளிற்பொங்கி வழிந்தன; சர்வலோகங்களும் மகிழ்ச்சியடைந்தன. - எ - று.

***படர்பெருந் தொங்கல் பிச்சம் பைங்கதிர்ப் பீலிப் பந்தர்***
***அடர்புனை செம்பொற் பாண்டில் அணிதுகிற் சதுக்கம் மல்கக்***
***கடலின்மீ தெழுந்து நிற்கும் கதிர்நிறை மதியம் போல***
***வடநிரை அணிந்த முத்தின் மணிக்குடை நிழற்ற வந்தார்.*** *1219*

(இ - ள்.) படர்ந்த பெரிய பீலிக் குஞ்சங்களும், வெண்குடைகளும், பசிய ஒளி பொருந்திய மயிற்றோகைப் பந்தல்களும், அலங்கரிக்கப்பட்ட செம்பொற்ற கட்டாலாகிய வட்டங்களையுடைய அழகிய வஸ்திரவிதானங்களும் நெருங்க, சமுத்திரத்தினிடத்து உதித்து நிற்கின்ற சோடசகலைகள் நிறைந்த பூரணச் சந்திரன் போல முத்து வடங்களின் வரிசைகளால் அலங்கரித்த முத்துக்குடை நிழற்றும்படி யெழுந்தருளினார். - எ - று.

***சீரணி தெருவி னூடு திருமணஞ் செல்ல முத்தின்***
***ஏரணி காளம் சின்னம் இலங்கொளித் தாரை எல்லாம்***
***பேரொலி பெருக முன்னே பிடித்தன "மறைக ளோடு***
***தாரணி உள்ள ஞான சம்பந்தன் வந்தான்" என்று-*** *1220*

(இ - ள்.) சிறப்புப் பொருந்திய திருவீதியில் திருமணக் கோலங் கொண்டு செல்ல, அழகிய முத்துக்காளமும், சின்னமும், விளங்குமொளியையுடைய தாரையுமாகிய அனைத்தும்,

வேதங்களோடு உலகத்தா ருய்யும் பொருட்டுத் திருஞான சம்பந்தப்பிள்ளையா ரெழுந்தருளினாரென்று மிக்க ஒலிபெருக முன்னே ஊதப்பட்டன. - எ - று.

**மண்ணினுக் கிடுக்கண் தீர வந்தவர் திருநா மங்கள்**
**எண்ணில பலவும்ஏத்திச் சின்னங்கள் எழுந்த போதவ்**
**அண்ணார் வதுவை செய்ய அலங்கரித் தணையப் பெற்ற**
**புண்ணிய மறையோர் மாடமங்கலம் பொழிந்து பொங்க. 1221**

(இ - ள்.) உலகத்தார்க்குத் துன்பநீங்கும்படி யவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது பல திருநாமங்களையுந் துதித்து முத்துச் சின்னங்களொலிக்கும்பொழுது, அப்பிள் ளையார் திருமணஞ்செய்யும் பொருட்டு மணக்கோலங்கொண் டெழுந்தருளப் பெற்ற புண்ணியத்தையுடைய நம்பாண்டார் நம்பியினது திருமாளிகையானது மங்கலகரமிகுத்துப் பொலி வடைய. - எ - று.

**முற்றுமெய்ஞ் ஞானம் பெற்ற மூர்த்தியார் செங்கை பற்ற**
**நற்பெருந் தவத்தின் நீர்மை நலம்படைத் தெழுந்த தெய்வக்**
**கற்பகப் பூங்கொம் பன்னார் தம்மையுங் காப்புச் சேர்த்துப்**
**பொற்புறு சடங்கு முன்னர்ப் பரிவுடன் செய்த வேலை. 1222**

(இ - ள்.) முதிர்ந்த சிவஞானத்தையடைந்த பிள்ளையார் பாணிக்கிரகணஞ்செய்யும்படி நல்ல பெருந்தவத்தையடைந்து பிறந்த தெய்வத் தன்மை பொருந்திய கற்பகத்தின் பூங்கொம்பு போன்ற அப்புத்திரியாரையுங் காப்புக்கட்டி, அழகிய கலியாணச் சடங்குகளை முன்னே விருப்பத்துடன் செய்த பொழுது. - எ-று.

**செம்பொன்செய் வாசிச் சூட்டுத் திருமணிப் புனைபூண் செல்வப்**
**பைம்பொனின் மாலை வேய்ந்த பவளமென் கொடியொப் பாரை**
**நம்பன்தன் அருளே வாழ்த்தி நல்லெழில் விளங்கச் சூட்டி**
**அம்பொன்செய் தீபம் என்ன அழகலங் கரித்து வைத்தார். 1223**

(இ - ள்.) செம்பொன்னாற் செய்த சிறந்த நுதலணிமாலை யையும், அழகிய மணிகளழுத்திய ஆபரணங்களையும், செல்வ மிக்க பசிய பொன்னரிமாலையை யுந்தரித்த மெல்லிய பவளக்கொடி போன்ற அப்புத்திரியாரைச் சிவபெருமானது திருவருளைக் கொண்டு வாழ்த்தி, நல்ல அழகு விளங்க ஆபரணங்களைச் சூட்டி அழகிய பொன்னாற் செய்த தீபம் போல அழகினுக்கு அலங்காரஞ்செய்து வைத்தார்கள். - எ - று.

***மாமறை மைந்த ரெல்லாம் மணத்தெதிர் சென்று மன்னும்***
***தூமலர்ச் செம்பொற் சுண்ணந் தொகுநவ மணியும் வீசத்***
***தாமரை மலரோன் போல்வார் அரசிலை தருப்பை தோய்ந்த***
***காமர்பொற் கலச நன்னீர் இருக்குடன் கலந்து வீச. 1224***

(இ - ள்.) சிறந்த பிராமணச் சிறுவர்களனைவரும் திருமணத்தை யெதிர் கொண்டு சென்று, தூய்மை பொருந்திய மலரோடு செம்பொற் சுண்ணத்தையும் கூட்டமான நவரத்தினங் களையுந் தூவ, பிரமனையொத்த வேதியர்கள் அரசிலையுந் தருப்பையுஞ் சேர்ந்த அழகிய பொற்கலசத்திலுள்ள நீரை வேதமந்திரத்துடன் கலந்து வீசவும். - எ - று.

***விண்ணவர் மலரின்மாரி விசும்பொளி தழைப்ப வீச***
***மண்ணகம் நிறைந்த கந்த மந்தமா ருதமும் வீசக்***
***கண்ணொளி விளக்கம் மிக்கார் காமர்தோ ரணங்க ளூடு***
***புண்ணிய விளைவு போல்வார் பூம்பந்தர் முன்பு சார்ந்தார். 1225***

(இ - ள்.) தேவர்கள் கற்பகமலர்மாரியை ஆகாயம் ஒளிதழைக்கும்படி சொரியவும், உலகத்தில் நிறைந்த மணம் பொருந்திய சிறு தென்றற்காற்று வீசவும், கண்களுக்கு விளக்க மாக நிறைந்த அழகிய தோரணங்களினடுவே புண்ணியப் பயன் போன்ற பிள்ளையார் பூம்பந்தரின் முன்படைந்தருளினார். - எ - று.

***பொன்னணி சங்கின் வெள்ளம் பொலிவுடன் முழங்கி ஆர்ப்ப***
***மன்னிய தரளப் பத்தி வளர்மணிச் சிவிகை நின்றும்***
***பன்மலர் நறும்பொற் சுண்ணம் பரந்தபா வாடைமீது***
***முன்னிழிந் தருளி வந்தார் மூவுல குய்ய வந்தார். 1226***

(இ - ள்.) பொன்னாலலங்கரித்த சங்கவாத்தியங்கள் பொலி வோடு முழங்கி யாரவாரிக்க, பொருந்திய முத்துவரிசைகள் நிறைந்த அழகிய முத்துச்சிவிகையினின்றும் மூன்றுலகத்தாரு முய்யும்படி அவதரித்தருளிய பிள்ளையார் பலமலர்களும் நல்ல பொற்சுண்ணமும் பரப்பிய பாவாடையின்மேல் முன்னே இறங்கி வந்தருளினார். - எ - று.

***மறைக்குல மனையின் வாழ்க்கை மங்கல மகளி ரெல்லாம்***
***நிரைத்தநீர்ப் பொற்கு டங்கள் நிரைமணி விளக்குத் தூபம்***
***நறைக்குல மலர்சூழ் மாலை நறுஞ்சுடர் முளைப்பொற் பாண்டில்***
***உறைப்பொலி கலவை ஏந்தி உடனெதிர் ஏற்று நின்றார். 1227***

(இ - ள்.) வேதியர்குலத்தில் இல்வாழ்க்கையையுடைய மங்கலகரமான மாதர்களெல்லாம் நீர்நிறைத்த பொற்குடங் களையும், வரிசையாகிய அழகிய விளக்குகளையும், தூபங்களை யும், தேன் பொருந்திய மலர்மாலைகளையும், நல்ல ஒளி பொருந்திய முளைப்பாலிகைகளையும், இழைத்த கலவைச் சாந்தையுமேந்திக் கொண்டு பிள்ளையார் வரவை எதிர் கொண்டு நின்றார்கள். - எ - று.

**ஆங்குமுன் னிட்ட செம்பொன் அணிமணிப் பீடந் தன்னில்**
**ஓங்கிய ஞான வெள்ளம் உள்நிறைத் தெழுவ தென்னத்**
**தாங்கிய முத்தின் பைம்பூண் தண்ணிலா எறிப்ப ஏறிப்**
**பாங்கொளி பரப்பி நின்றார் பரசம யங்கள் வீழ்ந்தார். 1228**

(இ - ள்.) அங்குப் பிள்ளையார் திருமுன்னே இட்ட அழகிய செம்பொற் பீடத்தில் உயர்ந்த சிவஞானமென்னும் வெள்ள மானது உள்ளத்து நிறைந்து வழிந்தாற்போல, புறச்சமயங்களை யழித்த பிள்ளையார்திருமேனியில்தரித்த பசிய முத்தாபர ணங்கள் குளிர்ந்த நிலவைவீச அப்பீடத்தி லெழுந்தருளிப் பக்கத்தி லொளியைப் பரப்பி நின்றருளினார். - எ - று.

**எதிர்வர வேற்ற சாயல் இளமயி லனைய மாதர்**
**மதுரமங் கலமுன் னான வாழ்த்தொலி எடுப்ப வந்து**
**கதிர்மணிக் கரக வாசக் கமழ்புனல் ஒழுக்கிக் காதல்**
**விதிமுறை வலங்கொண் டெய்தி மேவுநல் வினைகள் செய்தார். 1229**

(இ - ள்.) பிள்ளையாரது வருகையை எதிர்கொண்டு நின்ற இளமையில் போன்ற பார்ப்பன மாதர்கள் இனிய மங்கலத்தை முன்னிட்ட வாழ்த்தொலியுண்டாக வந்து, ஒளிபொருந்திய அழகிய கமண்டலத்திலுள்ள மணம் பெருந்திய நீரைவிட்டு, சிறந்த விதிப்படி வலமாக வந்து பொருந்திய மங்கல வினை களைச் செய்தார்கள். - எ - று.

**மங்கலம் பொலிய ஏந்தி மாதரார் முன்பு செல்லக்**
**கங்கையின் கொழுந்து செம்பொன் இமவரை கலந்த தென்ன**
**அங்கவர் செம்பொன் மாடத் தாதிபூ மியினுட் புக்கார்**
**எங்களை வாழ முன்னாள் ஏடுவை கையினுள் இட்டார். 1230**

(இ - ள்.) அட்டமங்கலங்களும் பொலியும்படி ஏந்திக் கொண்டு பார்ப்பன மாதர்கள் முன்னே செல்ல, கங்கைநதியின் கொழுந்தானது செம்பொன்மயமாகிய இமயமலையிற் சேர்ந்தாற்போல, யாங்கள் வாழும் பொருட்டு முன்னாளில்

திருப்பாசுரமெழுதிய திருவேட்டை வைகைநதியிலிட்டருளிய பிள்ளையார், நம்பாண்டார் நம்பியினது செம்பொன்மயமாகிய திருமாளிகையில் விவாகபூமியுள் புகுந்தருளினார். - எ - று.

**அகில்நறுந் தூபம் விம்ம அணிகிளர் மணியால் வேய்ந்த**
**துகில்புனை விதான நீழல் தூமலர்த் தவிசின் மீது**
**நகிலணி முத்த மாலை நகைமுக மடவார் வாழ்த்த**
**இகலில்சீர் மறையோர் சூழ இனிதின்அங் கிருந்த வேலை. 1231**

(இ - ள்.) அகிற்கட்டைகளினது நறுமணங்கமழுந் தூபமதிகரித்து அழகிய இரத்தினங்களா லலங்கரித்த வஸ்திர விதானத்தின்கீழ்த் தூய்மையாகிய பூந்தவிசின்மேல், ஸ்தனங்களிலணிந்த முத்துமாலைகளையும் ஒளிபொருந்திய முகத்தையுடைய மாதர்கள் வாழ்த்தொலிகூற, சிறந்த வேதியர்கள் சூழும்படி இனிமையோடு அங்கெழுந்தருளி யிருக்கும் பொழுது. - எ - று.

**திருமகட் கொடுக்கப் பெற்ற செழுமறை முனிவர்தாமும்**
**அருமையான முன்செய் மெய்ம்மை அருந்தவ மனைவியாரும்**
**பெருமகிழ்ச் சியினாற் பாதம் விளக்குவார் பிள்ளை யார்முன்**
**உரிமையால் வெண்பால் தூநீர் உடன்எடுத் தேந்தி வந்தார். 1232**

(இ - ள்.) அழகிய புத்திரியைக் கொடுக்கும்படி தவஞ் செய்த செழிய வேதங்களை யுணர்ந்த நம்பாண்டார்நம்பியும், அருமை யாகப் பூர்வத்திற் செய்த மெய்த் தவத்தையுடைய அவர் மனைவியாரும் மிக்க கமகிழ்ச்சியினால் திருவடிகளை விளங்குங் கருத்துடையவராய்ப் பிள்ளையார் திருமுன்னே உரிமையுடன் வெள்ளிய பாலைத் தூய நீருடனெடுத்து ஏந்திக் கொண்டு வந்தார்கள். - எ - று.

**வந்துமுன் னெய்தித் தாமுன் செய்தமா தவத்தின் நன்மை**
**நந்துநம் பாண்டார் நம்பி ஞானபோ னகர்பொற் பாதம்**
**கந்தவார் குழலி னார்பொற் கரகநீர் எடுத்து வார்ப்பப்**
**புந்தியால் நினைதி யானம் 'புரிசடை யான்'என் றுன்னி. 1233**

(இ - ள்.) அவ்வாறு வந்து பிள்ளையார் திருமுன்னடைந்து தாம் முன்பு செய்த பெருந்தவத்தின் நன்மையானது விளங்குகின்ற நம்பாண்டார் நம்பியென்பவர் திருஞானசம்பந்தப் பிள்ளையாரது திருவடிகளை மணம் பொருந்திய நீண்ட கூந்தலையுடைய மனைவியார்கலசத்திலிருக்கும் நீரையெடுத்து வார்க்க, மனத்தினால் நினைக்குந்தியானப் பொருள் சிவ பெருமானென்று கருதி. - எ - று.

***விருப்பினால் விளக்கி மிக்க புனிதநீர் தலைமேற் கொண்டு***
***பொருப்புறு மாடத் துள்ளும் புறத்துளுந் தெளித்த பின்னர்***
***உருப்பொலி உதரத் துள்ளும் பூரித்தார்; உவகை பொங்கி***
***அறுப்புறு கிளைஞர் மேலும் தெளித்தனர் ஆர்வத் தோடும். 1234***

(இ - ள்.) விருப்பத்தோடு திருவடிகளை விளக்கி மிக்க புனிதமாகிய பாததீர்த்தத்தைச் சிரசில் தெளித்துக்கொண்டு, மலை போன்ற திருமாளிகையினுள்ளும் புறம்புந் தெளித்தபின்பு அழகிய வயிற்றினுள்ளுங் கொண்டார்; மகிழ்ச்சி மிகுத்துத் தோன்றிய சுற்றத்தார் மேலும் அன்புடன் தெளித்தார். - எ - று.

***பெருகொளி ஞானம் உண்ட பிள்ளையார் மலர்க்கை தன்னில்***
***மருவுமங் கலநீர் வாசக் கரகமுன் னேந்தி வார்ப்பார்***
***தருமுறைக் கோத்தி ரத்தின் தங்குலஞ் செப்பி "என்றன்***
***அருநிதிப் பாவை யாரைப் பிள்ளையார்க் களித்தேன்" என்றார். 1235***

(இ - ள்.) சிறந்த ஞானாமுதத்தை யுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது தாமரை மலர் போன்ற திருக்கரத்தில் மங்கலம் பொருந்திய நீரைக் கரகத்தில் திருமுன் தாங்கி வார்க்கும் நம்பாண்டார் நம்பியென்பவர் தமது கோத்திரத்தை முறைப் படியே கூறி, எனது அரும்பேறாகிய புத்திரியாரைப் பிள்ளையாருக்குக் கொடுத்தேனென்று கூறினார். - எ - று.

***நற்றவக் கன்னி யார்கை ஞானசம் பந்தர் செங்கை***
***பற்றுதற் குரிய பண்பிற் பழுதில்நற் பொழுது நண்ணப்***
***பெற்றவ ருடன்பி றந்தார் பெருமணப் பிணையன் னாரைச்***
***சுற்றமுன் சூழ்ந்து போற்றக் கொண்டுமுன் துன்னி னார்கள். 1236***

(இ - ள்.) நல்ல தவத்தையுடைய அக்கன்னிகையாரது திருக்கரத்தைத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது திருக் கரத்தால் பிடித்தற்குரிய பண்பினால் குற்றமற்ற நல்ல முகூர்த்தம் வர, பெற்ற தாய் தந்தையரும் உடன் பிறந்தவர்களும் திருமணக் கோலங்கொண்ட அக்கன்னிகையாரைச் சுற்றத்தார் சூழ்ந்து வாழ்த்தும்படி யழைத்துக்கொண்டு முன்னே வந்தார்கள். - எ-று.

***ஏகமாஞ் சிவமெஞ் ஞானம் இசைந்தவர் வலப்பால் எய்தி***
***நாகமார் பணப்பே ரல்குல் நற்றவக் கொழுந்தன் னாரை***
***மாகமார் சோதி மல்க மன்னிவீற் றிருந்த வெள்ளை***
***மேகமோ டிசையும் மின்னுக் கொடியென விளங்க வைத்தார். 1237***

(இ - ள்.) ஒன்றாகிய சிவஞானத்தைப் பெற்ற பிள்ளையாரது வலப்பக்கமடைந்து, நல்ல தவக்கொழுந்து போன்ற அக்

கன்னிகையாரைவிண்ணுலகத்து நிறைந்த ஒளிவிளங்கும்படி பொருந்தியிருந்த வெண்மேகத்துடன் கூடிய மின்னற்கொடி போல விளங்க வைத்தார்கள். - எ - று.

***புனிதமெய்க் கோல நீடு புகலியார் வேந்தர் தம்மைக்***
***குனிசிலைப் புருவ மென்புங் கொம்பனா ருடனே கூட***
***நனிமிகக் கண்ட போதின் நல்லமங் கலங்கள் கூறி***
***மனிதருந் தேவ ரானார் கண்ணிமை யாது வாழ்த்தி. 1238***

(இ - ள்.) பரிசுத்தமாகிய திருமேனிப் பொலிவு விளங்கும் திருஞானசம்பந்தப்பிள்ளையாரை வளைந்த விற்போலும் புருவத்தையுடைய பூங்கொம்பு போன்ற அம்மணமகளுடனே கூடத் தரிசித்த பொழுது, நல்ல மங்கல வார்த்தைகூறிக் கண்ணிமை யால் வாழ்த்தி மனிதர்களுந் தேவரை யொத்தார்கள். - எ - று.

***பத்தியிற் குயிற்றும் பைம்பொற் பவளக்காற் பந்தர் நாப்பண்***
***சித்திர விதானத் தின்கீழ்ச் செழுந்திரு நீல நக்கர்***
***முத்தமிழ் விரகர் முன்பு முதன்மறை முறையி னோடு***
***மெய்த்தநம் பெருமான் பாதம் மேவும்உள் ளத்தாற் செய்ய. 1239***

(இ - ள்.) வரிசையாக இழைத்த பசும்பொன்னாகிய பவளக்காற் பந்தலினடுவில் அழகிய விதானத்தின்கீழே சிறந்த திருநீலநக்கநாயனார் பிள்ளையாரது திருமுன்னே முதன்மை யாகிய வேதத்திற் கூறுஞ் சடங்குகளை முறைமைப்படியே மெய்ப்பொருளாகிய ஸ்ரீ சிவபெருமானது திருவடிகளிற் பதிந்த திருவுள்ளத்தோடுஞ் செய்ய. - எ - று.

***மறையொலி பொங்கி யோங்க மங்கல வாழ்த்து மல்க***
***நிறைவளைச் செங்கை பற்ற நேரிழை யவர்முன் அந்தப்***
***பொறையணி முந்நூல் மார்பர் புகரில்வெண் பொரிகை அட்டி***
***இறைவரை ஏத்தும் வேலை எரிவலங் கொள்ள வேண்டி. 1240***

(இ - ள்.) வேதங்களினோசை யதிகரித்தோங்கவும், மங்கல வாழ்த்துக்கள் நிறையவும், நிறைந்த வளையலையணிந்த அப் பிராட்டியாரது திருக்கரத்தைப் பிடிக்க, அவ்வம்மையாருக்கு முன்னே முப்புரிநூலையணிந்த மார்பினையுடைய திருநீலநக்க நாயனார் குற்றமற்ற பொரியைத் தீயிற் பெய்து சிவபெருமானைத் துதிக்கும்பொழுது, ஓமாக்கினியை வலம்வர விரும்பி. - எ - று.

***அருப்புமின் முலையி னார்தம் அணிமலர்க் கைப்பி டித்தங்(கு)***
***ஒருப்படும் உடைய பிள்ளை யார்திரு உள்ளந் தன்னில்***
***"விருப்புறும் அங்கி யாவர் விடைஉயர்த் தவரே" என்று***
***திருப்பெரு மணத்தை மேவுஞ் சிந்தையில் தெளிந்து செல்வார். 1241***

(இ - ள்.) அரும்பு போன்ற மெல்லிய ஸ்தனங்களையுடைய அவ்வம்மையாரது அழகிய மலர்க்கரத்தைப் பிடித்துத் தீயை வலம் வருகின்ற பிள்ளையாரது திருவுள்ளத்தில், (யாவரும்) விரும்பத்தக்க அக்கினிமூர்த்தியாயுள்ளவர் ஸ்ரீசிவபெருமானே யென்று கருதி, திருப்பெருமணமென்னும் ஆலயத்தையடையுந் திருவுள்ளத்தோடு தெளிந்து செல்கின்றவராய். - எ - று.

***மந்திர முறையால் உய்த்த எரிவல மாக மாதர்***
***தந்திருக் கையைப் பற்றுந் தாமரைச் செங்கை யாளர்***
***"இந்தஇல் லொழுக்கம் வந்து சூழ்ந்ததே! இவள்தன் னோடும்***
***அந்தமில் சிவன்தாள் சேர்வன்" என்னும்ஆ தரவு பொங்க.*** 1242

(இ - ள்.) மந்திரவிதிப்படி வளர்த்த அக்கினியை வலம் வரும்பொழுது, அவ்வம்மையாரது திருக்கரத்தைப் பிடிக்குந் தாமரை மலர் போன்ற திருக்கரத்தையுடைய பிள்ளையார் இந்த இல்வாழ்க்கையானது எம்மை வந்தடைந்தது; ஆதலால், இந்தப் பத்தினியோடு முடிவில்லாத சிவபெருமான் திருவடியை யடைவேனென்று ஆசை யதிகரிக்க. - எ - று.

***மலர்பெருங் கிளையும் தொண்டர் கூட்டமும் மல்கிச் சூழ***
***அலகில்மெய்ஞ் ஞானத்தொல்லை அடைவுறுங் குறிப்பால் அங்கண்***
***உலகின்எம் மருங்கும் நீங்க உடன்அணைந் தருள வேண்டிக்***
***குலமணம் புரிவித் தார்தங் கோயிலை நோக்கி வந்தார்.*** 1243

(இ - ள்.) பரவிய சுற்றத்தாரும் அடியார் திருக்கூட்டமும் நெருங்கிச் சூழும்படி, அளவில்லாத சிவஞானத்தின் வரம்பை யடையுங் குறிப்பினால், உலகங்களில் எவ்வுலகமுந் தம்மை நீங்கச் சிவபெருமானுடன் கலந்தருளக் கருதிச் சிறந்த திருமணத் தைச் செய்வித்த அவ்வெம்பெருமானது திருக்கோயிலை நோக்கி வந்தருளினார். - எ - று.

***சிவனமர்ந் தருளுஞ் செல்வத் திருப்பெரு மணத்துள் எய்தித்***
***தவநெறி வளர்க்க வந்தார் தலைப்படுஞ் சார்பு நோக்கிப்***
***"பவமற என்னை முன்னாள் ஆண்டஅப் பண்புகூட***
***நவமலர்ப் பாதங் கூட்டும்" என்னுநல் லுணர்வு நல்க.*** 1244

(இ - ள்.) சிவபெருமானெழுந்தருளிய செல்வம் பொருந்திய திருப்பெருமணமென்னும் ஆலயத்தையடைந்து, தவநெறியை வளர்க்கும்படி யவதரித்தருளிய பிள்ளையார் முத்தியிற் கலத்தற்குக் காரணமான திருவருட் சார்பைக் குறித்து, பிறவி நீங்க என்னை முன்னாளில் அடிமை கொண்ட திருவருளுக்

கிசைய, புதிய தாமரை மலர் போன்ற திருவடியை யடைவிக்கு மென்னும் நல்லுணர்ச்சியானது திருவுள்ளத் துதிக்க - எ - று.

***காதல்மெய்ப் பதிகம் "கல்லூர்ப் பெருமணம்" எடுத்துக் கண்டோர்***
***தீதுறு பிறவிப் பாசந் தீர்த்தல்செம் பொருளாகக் கொண்டு***
***"நாதனே! நல்லூர் மேவும் பெருமண நம்ப னே!உன்***
***பாதமெய்ந் நீழல்சேரும் பருவமி" தென்று பாட.*** 1245

(இ - ள்.) விருப்ப மிக்க மெய்ம்மையாகிய திருப்பதிகத்தை "கல்லூர்ப் பெருமணம்" என்று முதலில் தொடங்கி, தம்மைத் திருமணத்தில் தரிசித்தவர்களது தீமைபொருந்திய பிறவிக்குக் காரணமாகிய மலமாயா கன்மங்களை யொழித்தலையே செவ்விய பொருளாகக் கொண்டு, நாதனே! திருநல்லூரிலுள்ள திருப்பெருமணமென்னுந் திருக்கோயிலி லெழுந்தளிய கர்த்தனே! தேவரீரது திருவடி நீழலை யடையும் பருவம் இதுவென்று பாடியருள. - எ - று.

***தேவர்கள் தேவர் தாமுந் திருவருள் புரிந்து "நீயும்***
***பூவையன் னாளும் இங்குன் புண்ணிய மணத்தின் வந்தார்***
***யாவரும் என்பாற் சோதி இதனுள்வந் தெய்தும்" என்று***
***மூவுல கொளியால் விம்ம முழுச்சுடர்த் தாணு வாகி.*** 1246

(இ - ள்.) தேவதேவராகிய சிவபெருமானுந் திருவருள் புரிந்து, நீயும், நாகணவாய்ப்பறவை போன்ற மொழியினை யுடைய உனது பத்தினியும், இங்கே உனது புண்ணியரூபமாகிய திருமணத்திற்கு வந்தவர்கள் யாவரும் எம்மிடத்துத் தோன்றும் இந்தச் சோதியினுள்ளே வந்து எம்மை யடையுங்களென்று மூன்றுலகமுந் தன்னொளியினால் விளங்க, நிறைந்த சோதி லிங்கத் திருவுருவங்கொண்டு. - எ - று.

***கோயிலுட் படமேல் ஓங்குங் கொள்கையாற் பெருகுஞ் சோதி***
***வாயிலை வகுத்துக் காட்ட மன்னுசீர்ப் புகலி மன்னர்***
***பாயின ஒளியால் நீடு பரஞ்சுடர்த் தொழுது போற்றி***
***மாயிரு ஞாலம் உய்ய வழியினை அருளிச் செய்வார்.*** 1247

(இ - ள்.) திருக்கோயில் தன்னுள்ளடங்க மேலோங்குந் தன்மையால் மிக்க சோதிலிங்கமானது திருவாயிலை வகுத்துக் காட்ட, நிலை பெற்ற சிறப்பினையுடைய திருஞானசம்பந்தப் பிள்ளையார், பரந்த ஒளிப்பிழம்பாக நீண்ட அச்சிவ பரஞ்சுடரை வணங்கித் துதித்து, பெரிய உலகத்தாருய்யும் பொருட்டு அதனையடையும் நெறியை யருளிச் செய்வாராயி னார். - எ - று.

**"ஞானமெய்ந் நெறிதான் யார்க்கு நமச்சிவா யச்சொ லாம்" என்**
**றானசீர் நமச்சி வாயத் திருப்பதி கத்தை அங்கண்**
**வானமும் நிலனும் கேட்க அருள்செய்(து) "இம் மணத்தில் வந்தோர்**
**ஈனமானம் விறவி தீர யாவரும் புகுக" என்ன. 1248**

(இ - ள்.) யாவருக்கும் சிவஞானத்தைக் கொடுக்கும் உண்மை நெறியாவது, நமச்சிவாய என்னு மந்திரமாமென்று, சிறந்த நமச்சிவாயத்திருப்பதிகத்தை, அங்கே, விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாருங் கேட்கும்படி யருளிச் செய்து, இத்திருமணங் காண வந்தவர்கள் யாவரும், குற்றம் பொருந்திய உங்கள் பிறவி நீங்கும்படி இந்தச் சோதியினுள்ளே பிரவேசியுங்களென்று அருளிச் செய்ய. - எ - று.

**வருமுறைப் பிறவி வெள்ளம் வரம்பு காணாதழுந்தி**
**உருவெனுந்துயரக் கூட்டில் உணர்வின்றி மயங்கு வார்கள்**
**திருமணத் துடன்சே வித்து முன்செலுஞ் சிறப்பி னாலே**
**மருவிய பிறவி நீங்க மன்னுசோ தியினுட் புக்கார். 1249**

(இ - ள்.) முறைமையாக வருகின்ற பிறவிக் கடலின் கரையைக் காணாது அழுந்தி உடம்பென்னுந் துன்பமாகிய கூட்டினுள் அறிவின்றி மயங்குகின்றவர்கள் பிள்ளையாருடைய திருமணத்தைச் சேவை செய்து அவர்திருமுன்வரப் பெற்ற சிறப்பினால், பொருந்திய பிறவி நோய் நீங்க, நிலைபெற்ற அச்சோதியினுள்ளே புகுந்தார்கள் - எ - று.

**சீர்பெருகு நிலநக்கநர் திருமுருகர் முதற்றொண்டர்**
**ஏர்கெழுவு சிவபாத விருதயர்நம் பாண்டார்சீர்**
**ஆர்திருமெய்ப் பெரும்பாணர் மற்றெனையோர் அணைந்துளோர்**
**பார்நிலவு கிளைசூழப் பன்னிகளோ டுடன்புக்கார். 1250**

(இ - ள்.) சிறந்த திருநீலநக்கநாயனார், திருமுருகநாயனார் முதலிய திருத்தொண்டர்களும் அழகுமிக்க சிவபாதவிருதயரும், நம்பாண்டார் நம்பியும், புகழ் நிறைந்த திருநீலகண்டப் பெரும்பாணநாயனாரும், நம்பாண்டார் நம்பியும், புகழ் நிறைந்த திருநீலகண்டப் பெரும்பாணநாயனாரும், திருமணங்காண வந்த மற்றவர்களும் உலகில் விளங்குகின்ற சுற்றத்தார் சூழும்படி தமது பத்தினிமார்களுடன் அச்சோதியினுள்ளே புகுந்தார்கள். - எ-று.

**அணிமுத்தின் சிவிகைமுதல் அணிதாங்கிச் சென்றோர்கள்**
**மணிமுத்த மாலைபுனை மடவார்மங் கலம்பெருகும்**
**பணிமுற்றும் எடுத்தார்கள் பரிசனங்கள் வினைப்பாசந்**
**துணிவித்த உணர்வினராய்த் தொழுதுடன்புக் கொடுங்கினார். 1251**

(இ - ள்.) அழகிய முத்துச் சிவிகை முதலிய விருதுகளைத் தாங்கிச் சென்றவர்களும், முத்துமாலையணிந்த மாதர்களும், மங்கலமிகுந்த நீராஞ்சன முதலிய பணிகளை யெடுத்தவர்களும், பரிசனங்களும், தீவினையை விளைக்கும் ஆணவமலத்தைக் கெடுத்த பேரறிவினையுடையவர்களாய் வணங்கி யொருங்கு கூடி அச்சோதியினுள்ளே புகுந்து ஒடுங்கினார்கள். - எ - று.

***ஆறுவகைச் சமயத்தில் அருந்தவரும் அடியவரும்***
***கூறுமறை முனிவர்களும் கும்பிடவந் தணைந்தாரும்***
***வேறுதிரு வருளினால் வீடுபெற வந்தாரும்***
***ஈறில்பெருஞ் சோதியினுள் எல்லாரும் புக்கதற்பின். 1252***

(இ - ள்.) ஆறுவகை உட்சமயத்திலொழுகும் அரிய தவமுனிவர்களும், அடியவர்களும், வேதங்களையோதும் வைதிக சைவர்களும், திருமணத்தைத் தரிசிக்க வந்தவர்களும், இவர்கட்கு வேறாகிய திருவருள் வசத்தினால் முத்திபெற வந்த சித்தாந்த சைவர்களும் ஆகிய யாவரும், முடிவில்லாத அப்பெருஞ்சோதியினுள்ளே புகுந்த பின்பு. - எ - று.

***காதலியைக் கைப்பற்றிக் கொண்டுவலஞ் செய்தருளித்***
***தீதகற்ற வந்தருளுந் திருஞான சம்பந்தர்***
***நாதனெழில் வளர்சோதி நண்ணியதன் உட்புகுவார்***
***போதநிலை முடிந்தவழிப் புக்கொன்றி உடனானார். 1253***

(இ - ள்.) யாவருடைய குற்றங்களையும் நீக்கும்படி யவதரித் தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமது பத்தினியாரைக் கைப்பற்றிக் கொண்டு, அதனைப் பிரதட்சணஞ்செய்து, அழகு வளர்கின்ற அச்சோதிலிங்கத்தை யடைந்து, அதனுள்ளே புகுகின்றவராய், அத் திருமணங்காண வந்தவர் யாவரும் அடைந்த பின்பு, தாமும் புகுந்து சிவத்துடன் இரண்டறக் கலந்தருளினார். - எ - று.

***பிள்ளையார் எழுந்தருளிப் புக்கதற்பின் பெருங்கூத்தர்***
***கொள்ளநீ டியசோதிக் குறிநிலைஅவ் வழிகரப்ப***
***வள்ளலார் தம்பழைய மணக்கோயில் தோன்றுதலும்***
***தெள்ளுநீ ருலகத்துப் பேறில்லார் தெருமந்தார். 1254***

(இ - ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் எழுந்தருளி அச் சோதியினள்ளே புகுந்தபின்பு, சிவபெருமான் கொண்டருளிய நீண்ட சோதிலிங்கத்தின் நிலைமை அங்கே மறைந்துவிட

உடனே சிவபெருமானது பழைய திருநல்லூர்ப் பெருமண மென்னுந் திருக்கோயில் தோன்றவும், தெளிவாகிய கடல் சூழ்ந்த உலகத்திலே அத்தகைய சிவப் பேறடையப் பெறாதவர்கள் எல்லாரும் மனமயக்கங் கொண்டார்கள். - எ - று.

**கண்ணுதலார் திருமேனி உடன்கூடக் கவுணியனார்**
**நண்ணியது தூரத்தே கண்டுநணு கப்பெறா**
**விண்ணவரும் முனிவர்களும் விரிஞ்சனே முதலானார்**
**எண்ணிலவர் ஏசறவு தீரஎடுத் தேத்தினார். 1255**

(இ - ள்.) திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிவபெருமானது திருமேனியுடன் கலந்தருளியதைத் தூரத்தேகண்டு அதனை யடையப் பெறாத தேவர்களும், முனிவர்களும், பிரமன் முதலிய அளவில்லாத பெருந்தேவர்களும் அதனைச் சிந்தித்து, தங்கள் மனக் கவலை நீங்கப் (பிள்ளையாரது பெருமையை) எடுத்து ஸ்தோத்திரஞ் செய்தார்கள். - எ - று.

**அருந்தமிழா கரர்சரிதை அடியேனுக் கவர்பாதம்**
**தரும்பரிசால் அறிந்தபடி துதிசெய்தேன் தாரணிமேல்**
**பெருங்கொடையும் திண்ணனவும் பேருணர்வும் திருத்தொண்டால்**
**வருந்தகைமைக் கலிக்காம னார்செய்கை வழுத்துவேன். 1256**

(இ - ள்.) பெருமை பொருந்திய திருஞானசம்பந்தப்பிள் ளையாரது திவ்ய சரித்திரத்தை அடியேனுக்கு அவரது திருவடி தந்தருளிய திருவருள் விளக்கத்தால், யான் அறிந்தவாறு துதிசெய்தேன்; இனி நிலவுலகத்தில் பெருங்கொடையும், உறுதியான பத்தியும், பேருணர்ச்சியுமாகிய அனைத்தும் திருத்தொண்டு செய்ததனால் வரப்பெற்ற பெருமையினை யுடைய ஏயர்கோன் கலிக்காம நாயனாரது திருத்தொண்டின் சிறப்பைத் துதிக்கின்றேன். - எ - று.

❑ ❑ ❑

# 29. ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம்

*நீடு வண்புகழ்ச் சோழர்நீர் நாட்டிடை நிலவும்*
*மாடு பொன்கொழி காவிரி வடகரைக் கீழ்பால்*
*ஆடு பூங்கொடி மாடநீ டியஅணி நகர்தான்*
*பீடு தங்கிய திருப்பெரு மங்கலப் பெயர்த்தால்.* 1

(இ - ள்.) வளப்பமிக்க புகழையுடைய நீர்வளம் பொருந்திய சோழ நாட்டில் விளங்குகின்ற இருபக்கங்களிலும் பொற்பொடி களைக் கொழிக்கின்ற காவிரி நதியின் வடகரைக்குக் கிழக்குத் திக்கில், பொலி வினையுடைய பல கொடிகளாடுகின்ற மாளிகை களுயர்ந்த அழகிய நகரமானது பெருமை பொருந்திய திருப் பெருமங்கலமென்னும் பெயரையுடையது. - எ - று.

*இஞ்சி சூழ்வன எந்திரப் பந்திசூழ் ஞாயில்*
*மஞ்சு சூழ்வன வரைஎன உயர்மணி மாடம்*
*நஞ்சு சூழ்வன நயனியர் நளினமெல் லடிச்செம்*
*பஞ்சு சூழ்வன காளையர் குஞ்சியின் பரப்பு.* 2

(இ - ள்.) எந்திரவரிசைகள் சூழ்ந்த மதிலுறுப்புகள் மதிலைச் சூழ்ந்திருக்கின்றன; மலை போலுயர்ந்த அழகிய மாளிகைகளில் மேகங்கள் சூழ்ந்திருக்கின்றன; விடஞ் சூழ்ந்திருக்கப் பெற்ற கண்களையுடைய மாதர்களது தாமரை மலர் போன்ற மிருது வாகிய பாதங்களிலூட்டிய செம்பஞ்சுக் குழம்பானது இளம் பருவத்தையுடைய புருஷர்களது குடுமிகளில் சூழ்ந்திருக்கின்றன.- எ - று.

*விழவ றாதன விளங்கொளி மணிநெடு வீதி*
*முழவ றாதன மொய்குழ லியர்நட அரங்கம்*
*முழவ றாதன மங்கலம் பொலிமணி முற்றில்*
*உழவ றாதநல் வளத்தன ஓங்கிருங் குடிகள்.* 3

(இ - ள்.) ஒளி விளங்குகின்ற அழகிய நெடுந்தெருக்கள் திருவிழாக்களை நீங்காதிருக்கும்; நெருங்கிய கூந்தலையுடைய கணிகைமாதர்கள் நடிக்கும் நாடக சாலைகள் மத்தள வோசையை நீங்காதிருக்கும்; மங்கலகரம் நிறைந்த அழகிய

முற்றங்கள் குழந்தைகளை நீங்காதிருக்கும்; செழித்திருக்கின்ற பெருங்குடிகள் உழவுத் தொழில் நீங்காத வளத்தையுடையனவா யிருக்கும். - எ - று.

***நீரி னிற்பொலி சடைமுடி நெற்றிநாட் டத்துக்***
***காரி னில்திகழ் கண்டர்தங் காதலோர் குழுமிப்***
***பாரின் மிக்கதோர் பெருமையால் பரமர்தாள் பரவும்***
***சீரின் மிக்கது சிவபுரி எனத்தகுஞ் சிறப்பால்.*** 4

(இ - ள்.) கங்கை நீரினால் விளங்குகின்ற சடைமுடியையும், நெற்றிக்கண்ணையும், மேகம் போல விளங்குங் கண்டத்தையு முடைய சிவபெருமானடியார்கள் நெருங்கி, உலகத்தில் சிறந்த பெருமையினால் சிவபெருமானது திருவடிகளை வணங்குஞ் சீரினாலும், இதுவே சிவபுரியென்று சொல்லத்தக்க சிறப்பினா லும் மேம்பட்டுள்ளது. - எ - று.

***இன்ன வாழ்பதி அதனிடை ஏயர்கோக் குடிதான்***
***மன்னி நீடிய வளவர்சே னாபதிக் குடியாம்***
***தொன்மை மேவிய தொடர்ச்சியால் நிகழ்வது; தூய***
***பொன்னி நாட்டுவே ளாண்மையில் உயர்ந்தபொற் பினதால்.*** 5

(இ - ள்.) இத்தன்மையாகிய வாழ்வினையுடைய அத் திருப்பெருமங்கலமென்னுந் திருப்பதியில் சிறந்த ஏயர்குடிய னாது, நிலைபெற்றுயர்ந்த சோழர்களது சேனாபதியாதற்குரிய குடியென்னும் பழமையாகிய வழக்கத்தால் விளங்குவது, தூய்மையாகிய சோழ நாட்டில் வேளாண்மைத் தொழிலா லுயர்ந்த பொலிவினையுடையது. - எ - று.

***அங்கண் மிக்கஅக் குடியினில் அவதரித் துள்ளார்***
***கங்கை வாழ்முடி யார்தொண்டர் கலிக்காமர் என்பார்;***
***தங்கள் நாயகர் அடிபணி வாரடிச் சார்ந்து***
***பொங்கு காதலின் அவர்பணி போற்றுதல் புரிந்தார்.*** 6

(இ - ள்.) அத்திருப்பதியில் உயர்ந்த அவ்வேயர்குடியினில் திருவவதாரஞ் செய்தவர், (அவர் யாரெனில்), கங்கை நதி வாழ்கின்ற சடைமுடியையுடைய சிவபெருமான் அடியவராகிய கலிக்காமநாயனா ரென்பவர்; அவர், தங்கள் முதல்வராகிய சிவ பெருமான் திருவடிகளை வணங்கும் அடியார்களது திருவடி களில் வணங்கியடைந்து மிக்க விருப்பத்தோடும் அவ்வடியார் களிடும் பணிவிடைகளை விரும்பிச் செய்தொழுகினார். - எ - று.

***புதிய நாண்மதிச் சடைமுடி யார்திருப் புன்கூர்க்***
***கதிக மாயின திருப்பணி அனேகமுஞ் செய்து***
***"நிதிய மாவன நீறுகந் தார்கழல்" என்று***
***துதியி னாற்பர வித்தொழு தின்புறு கின்றார். 7***

(இ - ள்.) இளம்பிறையணிந்த சடைமுடியையுடைய சிவ பெருமானெழுந்தருளிய திருப்புன்கூரென்னுந் திருப்பதிக்கு மிகுதியாகிய அநேகந்திருப்பணிகளைச் செய்து, நமக்குப் பெருஞ்செல்வமாயுள்ளன விபூதியை விரும்பியணிந்த சிவ பெருமான் றிருவடிகளேயென்று ஸ்தோத்திரங்களினால் துதித்து வணங்கிப் பேரின்புற்றிருக்கின்றவர். - எ - று.

***நாவ லூர்மன்னர் நாதனைத் தூதுவிட் டதனுக்***
***"கியாவர் இச்செயல் புரிந்தனர்" என்றவர் இழிப்பத்***
***தேவர் தம்பிரான் அவர்திறந் திருத்திய அதற்கு***
***மேவ வந்தஅச் செயலினை விளம்புவா னுற்றேன். 8***

(இ - ள்.) திருநாவலூரராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் தியாகராசப் பெருமானே (ப்பரவைநாச்சியார் திருமாளிகைக்கு இருமுறை) தூதனுப்பியதைக் குறித்து, யாவர் இத்தகாதகாரியத் தைச் செய்தனரென்று அவரைக் குறைவாகக் கூற, தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் அந்நாயனாரது கொள்கையைத் திருத்தும் பொருட்டு அதற்கிசையவந்த சரித்திரத்தை (யான்) சொல்லத் தொடங்கினேன். - எ - று.

***திருத்தொண்டத் தொகையருளித் திருநாவ லூராளி***
***கருத்தொன்று காதலினாற் கனகமதில் திருவாரூர்***
***ஒருத்தர்கழல் முப்பொழுதும் உருகியஅன் பொடுபணிந்து***
***பெருத்தெழுமெய் அன்பினால் பிரியாதங் குறையுநாள். 9***

(இ - ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் திருத்தொண்டத் தொகையை யருளிச் செய்து, தமது திருவுள்ளத்திற் பொருந்திய பெருவிருப்பினால், பொன்மயமாகிய மதில் சூழ்ந்த திருவாரூரில் வீற்றிருந்தருளிய ஸ்ரீதியாகராசப் பெருமானது திருவடிகளை முக்காலத்தும் மனமுருகுகின்ற அன்போடும் வணங்கி, அதிகரித் தெழுகின்ற மெய்யன்போடு நீங்காமல் அத்திருவாரூரில் வசிக்கும் நாள்களில். - எ - று.

**தாளாண்மை உழவுதொழில் தன்மைவளம் தலைசிறந்த**
**வேளாளர் குண்டையூர்க் கிழவரெனும் மேதக்கோர்**
**வாளார்வெண் மதியணிந்தார் மறையவராய் வழக்கினில்வென்(று)**
**ஆளாகக் கொண்டவர்தாள் அடைந்தன்பால் ஒழுகுவார். 10**

(இ - ள்.) முயற்சி பொருந்திய உழவுத் தொழிலாலுண்டாகிய வளப்பங்கள் மிகுதியாகச் சிறந்த வேளாளமரபினராகிய குண்டையூர்க்கிழார் என்னும் பெரியவர் ஒளிபொருந்திய வெள்ளிய சந்திரனை யணிந்த சிவபெருமான் விருத்தவேதியத் திருவுருவங்கொண்டு வந்து வழக்கினால் வென்று தடுத்தடிமை கொள்ளப் பெற்ற ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளது திருவடிகளை யடைந்து அன்போடொழுகி வருவாராயினார். - எ - று.

**செந்நெல்லும் பொன்னன்ன செழும்பருப்பும் தீங்கரும்பின்**
**இன்னல்ல அமுதும்முதல் எண்ணில்பெரும் பலவளங்கள்**
**மன்னியசீர் வன்றொண்டர்க் கமுதாக வழுவாமல்**
**பன்னெடுநாள் பரவையார் மாளிகைக்குப் படிசமைத்தார். 11**

(இ - ள்.) சம்பாநெல்லும், பொன்னையொத்த செழுமை தங்கிய பருப்பும், மதுரமாகிய கரும்பினது நல்ல பாகு முதலான அளவற்ற மிக்கவளப்பமாகிய பொருள்களை நிலைபெற்ற சிறப்பினையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் திரு வமுதாகும்படி தவறாமல் அநேகநாள் பரவை நாச்சியாது திருமாளிகைக்குப் படித்தரம் நடத்தி வந்தார். - எ - று.

**ஆனசெயல் அன்பின்வரும் ஆர்வத்தால் மகிழ்ந்தாற்ற**
**வானமுறை வழங்காமல் மாநிலத்து வளஞ்சுருங்கப்**
**போனகநெற் படிநிரம்ப எடுப்பதற்குப் போதாமை**
**மானமழி கொள்கையினால் மனமயங்கி வருந்துவார். 12**

(இ - ள்.) அவ்வாறாகிய திருத்தொண்டினை அன்புகாரண மாக வுதிக்கும் விருப்தினால் மனமகிழ்ந்து செய்துவரும் பொழுது, மேகமானது மழைத் துளிகளைப் பெய்யாமல் பெரிய உலகத்தில் வளங்குறைந்துவர, (அதனால்,) திருவமுதிற்குரிய நென் முதலிய படித்தரங்களை நிரம்ப நடத்துவதற்குக் கூடாமை யாகிய பெருமைகெடும்படி நேர்ந்த தன்மையினால் (அக் குண்டையூர்க்கிழார்) மனமயக்கங்கொண்டு வருந்துவராயினார். - எ - று.

***"வன்றொண்டர் திருவாரூர் மாளிகைக்கு நெல்லெடுக்க***
***இன்றுகுறை யாகின்ற தென்செய்கேன்" எனநினைந்து***
***துன்றுபெருங் கவலையினால் துயரெய்தி உண்ணாதே***
***அன்றிரவு துயில்கொள்ள அங்கணவர்வந் தருள்புரிவார். 13***

(இ - ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் வசிக்குந் திருவாரூர்த் திருமாளிகைக்கு நெற்படியனுப்புவதற்கு இன்று குறை நேர்ந்தது; இதற்குயான் யாது செய்வேனென்று நினைத்துப் பொருந்திய பெருங்கவலையினால் மனவருத்த மடைந்து உணவுகொள் ளாமல், அன்றிரவு நித்திரை செய்ய, சிவபெருமான் அவர் கனவில் எழுந்தருளி அருளிச் செய்கின்றார். - எ - று.

***"ஆரூரன் தனக்குன்பால் நெல்தந்தோம்" என்றருளி***
***நீரூருஞ் சடைமுடியார் நிதிக்கோமான் தனைஏவப்***
***பேரூர்மற் றதன்எல்லை அடங்கவும்நெல் மலைப்பிறங்கல்***
***காரூரும் நெடுவிசும்பும் கரக்கநிறைந் தோங்கியதால். 14***

(இ - ள்.) நம்பியாரூரன் பொருட்டு உன்னிடத்து நெல்லைத் தந்தோமென்று அருளிச் செய்து, கங்கை நீர் தவழுஞ் சடை முடியையுடைய சிவபெருமான் குபேரனை நெற்கொடுக்கும்படி யனுப்ப, (அக்குபேரனால்) பெரிய அக்குண்டையூரின் எல்லை முழுதும் நெல்மலைகள் விளங்கும்படி மேகங்கள் தவழும் நெடிய ஆகாயமும் மறைய நிறைந்து ஓங்கியது. - எ - று.

***அவ்விரவு புலர்காலை உணர்ந்தெழுவார் அதுகண்டே***
***"எவ்வுலகின் நென்மலைதான் இது?" என்றே அதிசயித்துச்***
***செவ்வியபொன் மலைவளைத்தார் திருவருளின் செயல்பேற்றிக்***
***கொவ்வைவாய்ப் பரவையார் கொழுநரையே தொழுதெழுவார். 15***

(இ - ள்.) அன்றிரவு விடியும் பொழுது நித்திரை நீங்கியெழு கின்ற குண்டையூர்க்கிழார் அதனைப் பார்த்து, இது எவ்வுலகத் திலுள்ள நென்மலையென்று அதிசயித்து, சிவந்த பொன்மய மாகிய மேருமலையை வில்லாக வளைத்த சிவபெருமானது திருவருட் செயலைத் துதித்து, கொவ்வைக் கனி போலுஞ் சிவந்த வாயையுடைய பரவை நாச்சியாரது நாயகராகிய ஸ்ரீ சுந்தர மூர்த்தி சுவாமிகளையே வணங்கி யெழுகின்றவராய். - எ - று.

***"நாவலூர் மன்ன னார்க்கு நாயனார் அளித்த நெல்லிங்(கு)***
***யாவரால் எடுக்க லாகும்; இச்செயல் அவர்க்குச் சொல்லப்***
***போவன்யான்" என்று போந்தார்; புகுந்தவா றருளிச் செய்து***
***தேவர்தம் பெருமான் ஏவநம்பியும் எதிரே சென்றார். 16***

(இ - ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் பொருட்டுச் சிவபெருமான் கொடுத்தருளிய நென்மாலைகளை இங்கு யாவராலும் எடுக்க முடியாது; ஆகையால், இச்செய்தியை அவர்க்குத் தெரிவிக்க யான்போவேனென்று சென்றார்; தேவர்கள் நாயகாகிய சிவபெருமான் குண்டையூர்க் கிழார்க்கு நென்மலை கொடுத்த தன்மையை யருளிச் செய்து அனுப்ப, ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளும் அவரெதிரே வந்தருளினார். - எ - று.

***குண்டையூர்க் கிழவர் தாமும் எதிர்கொண்டு கோதில் வாய்மைத்***
***தொண்டனார் பாதந் தன்னில் தொழுதுவீழ்ந் தெழுந்து நின்று***
***"பண்டெலாம் அடியேன் செய்த பணிஎனக் கின்று முட்ட***
***அண்டர்தம் பிரானார் தாமே நெல்மலை அளித்தார்" என்று.*** 17

(இ - ள்.) குண்டையூர்க்கிழாரும் அவரை எதிர்கொண்டு குற்றமற்ற மெய்த் தொண்டராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமி களது திருவடிகளில் சாஷ்டாங்கமாக வணங்கியெழுந்து நின்று, முன்னாளெல்லாம் அடியேன் செய்த திருப்பணி இன்று குறை பட, (அது நீங்கும் பொருட்டுச்) சிவபெருமானே நென்மலை யைக் கொடுத்தருளினாரென்று கூறி. - எ - று.

***"மனிதரால் எடுக்கும் எல்லைத் தன்றுநெல் மலையின் ஆக்கம்***
***இனிஎனாற் செய்ய லாகும் பணியன்றி(து)" என்னக் கேட்டுப்***
***"பனிமதி முடியா [illegible]ன்றே பரிந்துமக் களித்தார் நெல்"லென்று***
***இனியன மொழிந்து தாமும் குண்டையூர் எய்த வந்தார்.*** 18

(இ - ள்.) நென்மலையினதுயர்ச்சியானது மனிதர்களால் எடுக்கும் அளவினதன்று; இதை யெடுத்துத் தேவரீரது திருமாளி கைக்கு அனுப்புந் திருப்பணி அடியேனால் செய்யத்தக்கதல்ல வென்று சொல்ல, அதனை ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் கேட்டு, குளிர்ந்த இளம்பிறையணிந்த திருமுடியையுடைய சிவ பெருமானே விரும்பி உமக்கு நென்மலையளித்தாரென்று இனிய மொழிகளைக் கூறி, தாமும் குண்டையூர்க்கெழுந் தருளினார். - எ - று.

***விண்ணினை அளக்கும் நெல்லின் வெற்பினை நம்பி நோக்கி***
***அண்ணலைத் தொழுது போற்றி அதிசயம் மிகவும் எய்தி***
***"எண்ணில்சீர்ப் பரவ இல்லத் திந்நெல்லை எடுக்க ஆளும்***
***தண்ணில(வு) அணிந்தார் தாமே தரிலன்றி ஒண்ணா"தென்று.*** 19

(இ - ள்.) விண்ணுலகத்தை யளக்கத் தக்க நென்மலையை நம்பியாரூரர் பார்த்தருளிச் சிவபெருமானை வணங்கித் துதித்து மிகவும் அதிசயமுற்று, அளவற்ற சிறப்பினையுடைய பரவை

நாச்சியாரது மாளிகைக்கு இந்நெல்லை யெடுத்துச் சேர்ப்பதற்கு ஆளினையும் குளிர்ந்த சந்திரனை யணிந்த அவ்வெம்பெருமானே கொடுத்தாலன்றி எடுத்தனுப்பமுடியாதென்று. - எ - று.

***ஆளிடவேண் டிக்கொள்வார் அருகுதிருப் பதியான***
***கோளிலியில் தம்பெருமான் கோயிலினை வந்தெய்தி***
***"வாளன கண்மடவாள் வருந்தாமே" எனும்பதிகம்***
***மூளவருங் காதலுடன் முன்தொழுது பாடுதலும். 20***

(இ - ள்.) ஆள்கொடுக்கும்படி சிவபெருமானை வேண்டிக் கொள்ளுங் கருத்துடையவராய், அவ்வூர்க்கருகிலுள்ள திருப்பதியாகிய திருக்கோளிலியில் தமது ஆண்டவராகிய சிவபெருமானது திருக்கோயிலையடைந்து, "வாளனகண்டமடவாள் வருந்தாமே" என்னுஞ் சொற்றொடரையுடைய திருப்பதிகத்தை மிக்க பெருவிருப்போடும் திருமுன் வணங்கிப் பாடியருளவும். - எ - று.

***பகற்பொழுது கழிந்ததற்பின் பரவைமனை அளவன்றி***
***முகப்பெருகு நெல்லுலகில் விளங்கியஆ ரூர்நிறையப்***
***புகப்பெய்து தருவனநம் பூதங்கள்" எனவிசும்பில்***
***நிகர்ப்பரிய தொருவாக்கு நிகழ்ந்ததுநின் மலனருளால். 21***

(இ - ள்.) இன்று பகற்காலங்கழிந்தபின் இராத்திரிக்கு பரவை நாச்சியாரது மாளிகையளவேயல்லாமல் அதிகமாகப் பெருகிய நெற்குவியலை உலகத்தில் சிறந்து விளங்குகின்ற திருவாரூரடங்க நிரம்பும்படி நமது பூதங்கள் சேர்த்துக் கொடுப்பனவென்று, சிவபெருமான் றிருவருளினால் ஒப்பற்ற ஒரு அசரீரிவாக்கு ஆகாயத்தினின்று மெழுந்தது. - எ - று.

***தம்பிரான் அருள்போற்றித் தரையின்மிசை விழுந்தெழுந்தே***
***உம்பரால் உணர்வரிய திருப்பாதந் தொழுதேத்திச்***
***செம்பொனேர் சடையாரைப் பிறபதியுந் தொழுதுபோய்***
***நம்பர்ஆ ரூர்அணைந்தார் நாவலூர் நாவலனார். 22***

(இ - ள்.) (அதைக் கேட்ட) திருநாவலூரராகிய ஸ்ரீசுந்தர மூர்த்தி சுவாமிகள் சிவபெருமானது திருவருளைத் துதித்துப் பூமியில் சாஷ்டாங்கமாக வணங்கியெழுந்து, தேவர்களாலறிதற்கரிய திருவடிகளை வணங்கித் துதித்து, செம்பொன் போன்ற சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமானை மற்றத் திருப்பதிகளிலும் வணங்கிச் சென்ற, ஸ்ரீ தியாகராசப் பெருமான் வீற்றிருந்தருளுந் திருவாரூரை யடைந்தருளினார். - எ - று.

***பூங்கோயில் மகிழ்ந்தருளும் புராதனரைப் புக்கிறைஞ்சி***
***நீங்காத பெருமகிழ்ச்சி யுடனேத்திப் புறம்போந்து***
***பாங்கானார் புடைசூழ்ந்து போற்றிசைக்கப் பரவையார்***
***ஓங்குதிரு மாளிகையின் உள்ளணைந்தார் ஆரூரர்.*** 23

(இ - ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள், பூங்கோயிலென்னும் ஆலயத்தில் மகிழ்ந்தெழுந்தருளிய ஸ்ரீ தியாகராசப் பெருமானை யடைந்து வணங்கி, நீங்காத மிக்க மகிழ்வோடுந் துதித்துப் புறத்திற்சென்று பரிசனங்கள் பக்கங்களிற் சூழ்ந்து துதிக்கப் பரவை நாச்சியாரது உயர்ந்த திருமாளிகையினுள்ளே யெழுந்தருளினார். - எ - று.

***கோவைவாய்ப் பரவையார் தாமகிழும் படிகூறி***
***மேவியவர் தம்மோடு மிகஇன்புற் றிருந்ததற்பின்***
***சேவின்மேல் உமையோடும் வருவார்தந் திருவருளின்***
***ஏவலினால் அவ்விரவு பூதங்கள் மிக்கெழுந்து.*** 24

(இ - ள்.) கொவ்வைக் கனிபோலுஞ் சிவந்த வாயையுடைய பரவை நாச்சியார் மகிழும்படி நிகழ்ந்த செய்தியைக் கூறி, அப்பரவை நாச்சியாரோடு மிகவும் இன்புற்றிருந்த பின்பு, இடபத்தின்மேல் உமாதேவியாரோடு எழுந்தருளி வரும் ஸ்ரீ சிவபெருமானது திருவருளின் ஏவலினால் அன்றிரவு சிவ பூதங்கள் அதிகரித்தெழுந்து. - எ - று.

***குண்டையூர் நென்மலையைக் குறட்பூதப் படைகவர்ந்து***
***வண்டுலாங் குழற்பரவை மாளிகையை நிறைவித்தே***
***அண்டர்பிரான் திருவாரூர் அடங்கவும்நென் மலையாக்கிக்***
***கண்டவர்அற் புதமெய்தும் காட்சிபெற அமைத்தனவால்.*** 25

(இ - ள்.) குண்டையூரிலுள்ள நெல்மலையைக் குறளுருவ மான பூதகணங்கள் வாரிக் கொண்டு வண்டுகள் மொய்க்குங் கூந்தலையுடைய பரவை நாச்சியாரது திருமாளிகையை நிறை வித்து, சிவபெருமானது திருவாரூர் முழுவதும் நென்மலையாகக் குவித்துப் பார்ப்பவர்கள் ஆச்சரியமடையத்தக்க தோற்றமுண் டாகச் செய்தன. - எ - று.

***அவ்விரவு புலர்காலை ஆரூரில் வாழ்வார்கண்(டு)***
***"எவ்வுலகில் விளைந்தனநெல் மலைஇவை" என் றதிசயித்து***
***"நவ்விமதர்த் திருநோக்கின் நங்கைபுகழ்ப் பரவையார்க்(கு)***
***இவ்வுலகு வாழவரும் நம்பிஅளித் தன" என்பார்.*** 26

(இ - ள்.) அன்றிரவு விடியும்பொழுது திருவாரூரில் வாழ்ப வர்கள் (அதனைக் கண்டு) இந்நென்மலைகள் எந்தத் தேசத்தில் விளைந்தனவென்று அதிசயித்து, இவை மான்போலும் மதர்த்த கண்களையுடைய சிறந்த புகழமைந்த பரவை நாச்சியாருக்கு இவ்வுலகத்தார் சிவாநந்தப் பெருவாழ்வடையும்படி யவதரித் தருளிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் கொடுத்தனவென்று சொல்வார்கள். - எ - று.

***நீக்கரிய நெற்குன்று தனைநோக்கி நெறிபலவும்***
***போக்கரிதாயி டக்கண்டு மீண்டுந்தம் இல்புகுவார்***
***பாக்கியத்தின் திருவடிவாம் பரவையார்க் கிந்நெல்லுப்***
***போக்குமிடம் அரிதாகும்" எனப்பலவும் புகல்கின்றார். 27***

(இ - ள்.) எடுத்தற்கரிய நென்மலையைப் பார்த்துப் பல வழிகளிலுஞ் செல்லுதற்கரியதாயிருப்பதைக் கண், மீளவுந் தமது வீட்டிற்குப் புகுகின்றவர்கள் செல்வத்தின் திருவுருவமாகிய பரவைநாச்சியாருக்கு இந்த நெல்லைச் சேர்த்து வைக்குமிடம் அரிதாயிருக்குமென்று பல வார்த்தைகளையுஞ் சொல்கின் றார்கள். - எ - று.

***வன்றொண்டர் தமக்களித்த நெற்கண்டு மகிழ்சிறப்பார்***
***"இன்றுங்கள் மனைஎல்லைக் குட்படுநெற் குன்றெல்லாம்***
***பொன்றங்கு மாளிகையிற் புகப்பெய்து கொள்க" என***
***வென்றிமுர சறைவித்தார் மிக்கபுகழ்ப் பரவையார். 28***

(இ - ள்.) சிறந்த புகழையுடைய பரவைநாச்சியார், தமக்கு ஸ்ரீசுந்தரமூர்த்திசுவமிகள் கொடுத்தருளிய நென்மலையைப் பார்த்து, மகிழ்ச்சி யதிகரித்தவராய், இப்பொழுது உங்களுங்கள் வீட்டினெல்லைக் குட்பட்ட நென்மலைகளனைத்தையும் அழகமைந்த உங்கள் திருமாளிகையில் அடையும்படி சேர்த்துக் கொள்ளுங்களென்று வெற்றி பொருந்திய முரசறைவித்தார். - எ - று.

***அணியாரூர் மறுகதனில் ஆளியங்கப் பறையறைந்த***
***பணியாலே மனைநிறைத்துப் பாங்கெங்கும் நெற்கூடு***
***கணியாமற் கட்டிநகர் களிகூரப் பரவையார்***
***மணியாரம் புனைமார்பின் வன்றொண்டர் தமைப்பணிந்தார். 29***

(இ - ள்.) அழகிய திருவாரூர்த் திருவீதியில் மனிதர்கள் சஞ்சரிக்கும்படி பறையறைந்து தெரிவித்த கட்டளையினால்

தங்கள் தங்கள் மாளிகைகளை நிறைத்து, அம்மாளிகைகளின் பக்கங்களெங்கும் நெற்கூடுகளை அளவிடாமற்கட்டி, அந் நகரத்தார் மகிழ்ச்சியடையவும், பரவைநாச்சியார் இரத்தின ஆரத்தையணிந்த திருமார்பினையுடைய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளை வணங்கினார். - எ - று.

**நம்பியா ரூரர்திரு வாரூரில் நயந்துறைநாட்**
**செம்பொற்புற் றிடங்கொண்டு வீற்றிருந்த செழுந்தேனைத்**
**தம்பெரிய விருப்பினொடுந் தாழ்ந்துணர்வி னாற்பருகி**
**இம்பருடன் உம்பர்களும் அதிசயிப்ப ஏத்தினார். 30**

(இ - ள்.) நம்பியாரூரராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாரூர்த் திருப்பதியில் விரும்பி வசித்தருளம் நாள்களில், சிவந்த பொன்மயமாகிய புற்றினையிடமாகக் கொண்டு வீற்றிருந் தருளிய செழிய தேன்போல்பவராகிய ஸ்ரீவன்மீகநாதரைத் தமது பெருவிருப்பத்தோடும் வணங்கிப் பேருணர்ச்சியாலுண்டு, மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் அதிசயிக்கும்படி துதித்தார். - எ - று.

**குலவுபுகழ்க் கோட்புலியார் குறையிரந்து தம்பதிக்கண்**
**அலகில்புகழ் ஆரூரர் எழுந்தருள அடிவணங்கி**
**நிலவியவன் றொண்டரஃ திசைந்ததற்பின் நேர்இறைஞ்சிப்**
**பலர்புகழும் பண்பினர் மீண்டும்தம் பதிஅணைந்தார். 31**

(இ - ள்.) புகழ்விளங்குகின்ற கோட்புலிநாயனார் தமது குறைகளைக் கூறி, தமது ஊருக்கு அளவில்லாத புகழையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் எழுந்தருளும்படி அவரது திருவடி களை வணங்கி, அவ்வாறே சிறந்த ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அதற்கு திருவுள்ளமிசைந்தபின்பு, எதிரே வணங்கிப் பலரும் புகழத்தக்க நற்குணங்களையுடைய அக்கோட்புலி நாயனார் திரும்பவுந் தமது ஊராகிய திருநாட்டியத்தான்குடி யென்னுந் திருப்பதியை யடைந்தார். - எ - று.

**தேவ ரொதுங்கத் திருத்தொண்டர் மிடையுஞ் செல்வத் திருவாரூர்**
**காவல் கொண்டு தனியாளுங் கடவுட் பெருமான் கழல்வணங்கி**
**நாவ லூரர் அருள்பெற்று நம்பர் பதிகள் பிறநண்ணிப்**
**பாவை பாகர்தமைப்பணிந்து பாடும் விருப்பிற் சென்றணைவார். 32**

(இ - ள்.) தேவர்கள் ஒதுங்கும்படி அடியார்கள் நெருங்கி யிருக்கும் செல்வத்தையுடைய திருவாரூரைக் காத்தல் மேற் கொண்டு தனிமையாக அரசாட்சி செய்யும் ஸ்ரீ தியாகராசப் பெருமானது திருவடிகளை வணங்கித் திருவருள் பெற்று,

சிவபெருமான் வீற்றிருந்தருளிய மற்றத் திருப்பதிகளையடைந்து பார்வதிபாகராகிய அவ்வெம்பெருமானை வணங்கித் திருப் பதிகம்பாடும் விருப்பத்தோடு செல்கின்றவராயினார். - எ - று.

***மாலும் அயனும் உணர்வரியார் மகிழும் பதிகள் பலவணங்கி***
***ஞாலம் நிகழ்கோட் புலியார்தம் நாட்டி யத்தான் குடிநண்ண***
***ஏலும் வகையால் அலங்கரித்தங் கவரும் எதிர்கொண் டினிதிறைஞ்சிக்***
***கோல மணிமா ளிகையின்கண் ஆர்வம் பெருகக் கொடுபுக்கார். 33***

(இ - ள்.) திருமால் பிரமனென்னு மிருவராலு மறிதற்கரிய சிவபெருமான் மகிழ்ந்தருளிய பலதிருப்பதிகளை வணங்கி, உலகத்தில் விளங்குகின்ற கோட்புலிநாயனாரது திருநாட்டியத் தான்குடி யென்னுந் திருப்பதியையடைய, அக்கோட்புலியாரும் அவ்வூரைப் பொருந்திய வண்ணம் அலங்கரித்து இனிமையோடு ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளை எதிர்கொண்டு வணங்கித் தமது அழகிய திருமாளிகையில் விருப்பமிகும்படி அழைத்துக் கொண்டு சென்றார். - எ - று.

***தூய மணிப்பொற் றவிசிலெழுந் தருளி இருக்கத் தூநீரால்***
***சேய மலர்ச்சே வடிவிளக்கித் தெளித்துக் கொண்டச் செழும்புனலால்***
***மேய சுடர்மா ளிகைஎங்கும் விளங்க வீசி உளங்களிப்ப***
***ஏய சிறப்பில் அர்ச்சனைகள் எல்லாம் இயல்பின் முறைபுரிவார். 34***

(இ - ள்.) தூய்மையாகிய மாணிக்கங்களழுத்திய பொற் பீடத்தின் மேல் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் எழுந்தருளி யிருக்கப் பரிசுத்தம் பொருந்திய நீரைக் கொண்டு, அவரது செந்தாமரை மலர் போன்ற திருவடிகளை அலம்பிச் சிரசில் தெளித்துக் கொண்ட அந்த நீரினால் ஒளிபொருந்திய தமது திருமாளிகை முழுவதும் விளங்கத் தெளித்து, மனமகிழும்படி பொருந்திய சிறப்போடு பூசைகளனைத்தும் முறைமைப்படி செய்வாராயினார். - எ - று.

***பூந்தண் பனிநீர் கொடுசமைத்த பொருவில் விரைச்சந் தனக்கலவை***
***வாய்ந்த அகிலின் நறுஞ்சாந்து வாசம் நிறைமான் மதச்சேறு***
***தோய்ந்த புகைநா வியின்நறுநெய் தூயபசுங்கர்ப் பூரமுடன்***
***ஏய்ந்த அடைக்காய் அமுதினைய எண்ணில் மணிப்பா சனத்தேத்தி 35***

(இ - ள்.) குளிர்ந்த பனி நீராலமைத்த ஒப்பற்ற வாசனை வீசுங் கலவச் சந்தனமும், நன்மை மிக்க அகிற்சந்தனமும், வாசனை நிறைந்த கஸ்தூரிக் குழம்பும், புகைதோய்ந்த நறிய

நாவிநெய்யும், தூய்மையாகிய பச்சைக் கர்ப்பூரமும் முதலாகப் பொருந்திய தாம்பூலமும் இவை முதலிய பொருள்களை அளவற்ற இரத்தினத் தட்டுகளிலெடுத்துக்கொண்டு. - எ - று.

**வேறு வேறு திருப்பளித் தாமப் பணிகள் மிகஎடுத்து**
**மாறி லாத மணித்திருவா பரண வருக்கம் பலதாங்கி**
**ஈறில் விதத்துப் பரிவட்டம் ஊழின் நிரைத்தே எதிரிறைஞ்சி**
**ஆறு புனைந்தார்அடித்தொண்டர் அளவில் பூசை கொளஅளித்தார். 36**

(இ - ள்.) வெவ்வேறு திருப்பள்ளித் தாமத்திற்குரிய பொருள்களை மிகுதியாக எடுத்துக்கொண்டு, (அதனுடன்) ஒப்பற்ற பல இரத்தினாபரணங்களை யெடுத்துக்கொண்டு, அளவற்றவகைப் பரிவட்டங்களை வரிசையாக வைத்து எதிரே வணங்கிக் கங்கைநதியை யணிந்த சிவபெருமானடியவராகிய கோட்புலிநாயனார் அளவில்லாத பூசையை (ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள்) ஏற்றுக்கொள்ளும்படி செய்தார். - எ - று.

**செங்கோல் அரசன் அருளுரிமைச் சேனா பதியாங் கோட்புலியார்**
**நங்கோ மானை நாவலூர் நகரார் வேந்தை நண்பினால்**
**தங்கோ மனையில் திருஅமுது செய்வித் திறைஞ்சித் தலைசிறந்த**
**பொங்கோ தம்போல் பெருங்காதல் புரிந்தார் பின்னும் போற்றுவார். 37**

(இ - ள்.) செங்கோலையுடைய சோழராசனது அரசுரிமைக் குரிய சேனாபதியாகிய கோட்புலிநாயனார், நமது தலைவரும் திருநாவலூரரர்க் கிறைவமாகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளை நண்புடன் சிறந்த தமது திருமாளிகையில் திருவமுதுசெய்வித்து வணங்கி, மிகச் சிறந்த கடல்போலப் பேரன்பு பொருந்தியவ ராய்ப் பின்னுந் துதிப்பாராயினார். - எ - று.

**ஆனா விருப்பின் மற்றவர்தாம் அருமை யால்முன் பெற்றெடுத்த,**
**தேனார் கோதைச் சிங்கடியார் தமையும் அவர்பின் திருவுருமிர்த்த**
**மானார் நோக்கின் வனப்பகையார்தமையும் கொணர்ந்து வன்றொண்டர்,**
**தூநாண் மலர்த்தாள் பணிவித்துத் தாமும் தொழுது சொல்லுவார். 38**

(இ - ள்.) நீங்காத அன்பினால் அக்கோட்புலிநாயனார் தாம் முன்பு அருமையாகப் பெற்றெடுத்த தேன்பொருந்திய மலர்மாலையை யணிந்த சிங்கடியாரென்னும் புத்திரியாரையும், மான் போற் பார்வையினையுடைய வனப் பகையாரென்னும் புத்திரியாரையும் அழைத்து, ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளது தூய்மையாகிய புதிய தாமரைமலர் போன்ற திருவடிகளை வணங்கச் செய்து, தாமும் வணங்கிச் சொல்லுகின்றார். - எ - று.

***"அடியேன் பெற்ற மக்களிவர் அடிமை யாகக் கொண்டருளிக்,
கடிசேர் மலர்த்தாள் தொழுதுய்யக் கருணை அளிக்க வேண்டும்" எனத்,
"தொடிசேர் தளிர்க்கை இவர்எனக்குத் தூய மக்கள்" எனக்கொண்டப்,
படியே மகண்மை யாக்கொண்டார் பரவை யார்தங் கொழுநனார். 39***

(இ - ள்.) அடியேன் பெற்ற இப்புத்திரிகளைத் தேவரீர் அடிமை கொண்டருளி, வாசனை பொருந்திய தாமரை மலர் போன்ற திருவடிகளை வணங்கியுய்யும்படி கிருபை செய்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க, (அதற்குப்) பரவை நாச்சியார் மணவாளராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் வளையலை யணிந்த மாந்தளிர்போலுங் கையையுடைய இச்சிறுமியர்கள் எனக்குத் தூயபுத்திரிகளென்று கருதி, அவ்வாறே புத்திரிகளாகக் கொண்டருளினார். - எ - று.

***கோதை சூழ்ந்த குழலாரைக் குறங்கின் வைத்துக் கொண்டிருந்து
காதல் நிறைந்த புதல்வியராங் கருத்துட் கசிவால் அணைத்துச்சி
மிது கண்ணீர் விழ மோந்து வேண்டு வனவுங் கொடுத்தருளி
நாதர் கோயில் சென்றடைந்தார் நம்பி தம்பி ரான்தோழர். 40***

(இ - ள்.) தம்பிரான்றோழராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் மலர்மாலை சூழ்ந்த கூந்தலையுடைய அப்பெண் களைத் துடையின்மேல் வைத்துக் கொண்டிருந்து, விருப்ப மிக்க புத்திரிகளாகக் கொண்ட கருத்தினுள்ளன்பினால் அணைத்துக் கண்ணீர் சிந்த உச்சிமோந்து, அவர்கள் விரும்பிய பொருள் களைக் கையிற் கொடுத்து, சிவபெருமானது திருக்கோயிலை யடைந்தருளினார். - எ - று.

***வென்றி வெள்ளே றுயர்த்தருளம் விமலர் திருக்கோ புரம்இறைஞ்சி
ஒன்றும் உள்ளத் தொடும்அன்பால் உச்சி குவித்த கரத்தோடும்
சென்று புக்குப் பணிந்துதிருப் பதிகம் "பூணாண்" என்றெடுத்துக்
கொன்றை முடியார் அருளுரிமை சிறப்பித் தார்கோட் புலியாரை. 41***

(இ - ள்.) வெற்றி பொருந்திய வெள்ளிய இடபக்கொடியை யுயர்த்திய சிவபெருமானது திருக்கோபுரத்தை வணங்கி அன்பு பொருந்திய திருவுள்ளத்தோடு சிரசிற்குவித்த திருக்கரத்தோடுஞ் சென்று உள்ளே புகுந்து வணங்கி, "பூணாண்" என்னு முதலை யுடைய திருப்பதிகத்தைத் தொடங்கிக் கொன்றை மாலையை யணிந்த திருமுடியையுடைய சிவபெருமானது திருவருட் பெருமையையும், கோட்புலிநாயனாரையும் சிறப்பித்துப் பாடி யருளினார்.- எ - று.

**சிறப்பித் தருளுந் திருக்கடைக்காப் பதனி னிடைச்சிங் கடியாரைப்**
**பிறப்பித் தெடுத்த பிதாவாகத் தம்மை நினைந்த பெற்றியினால்**
**"மறப்பில் வகைச்சிங் கடியப்பன்" என்றே தம்மை வைத்தருளி**
**நிறப்பொற் புடைய இசைபாடி நிறைந்த அருள்பெற் றிறைஞ்சுவார். 42**

(இ - ள்.) அவ்வாறு சிறப்பித்துப் பாடியருளிய திருக்கடைக் காப்பில், சிங்கடியாரென்னும் புத்திரியைப் பெற்றெடுத்த பிதாவாகத் தம்மை நினைந்த முறைமையினால், மறவாத வண்ணம் "சிங்கடியப்பன்" என்று தம்மையமைத்து, இனிய இசை பொருந்திய திருப்பதிகம் பாடியருளிச் சிறந்த திருவருளைப் பெற்று வணங்குவாராயினார். - எ - று.

**அங்கு நின்றும் எழுந்தருளி அளவில் அன்பின் உள்மகிழச்**
**செங்கண் நுதலார் மேவுதிரு வலிவ லத்தைச் சேர்ந்திறைஞ்சி**
**மங்கை பாகர் தமைப்பதிகம் "வலிவ லத்துக் கண்டேன்" என்(று)**
**எங்கும் நிகழ்ந்த தமிழ்மாலை எடுத்துத் தொடுத்த இசைபுனைவார். 43**

(இ - ள்.) அத்திருநாட்டியத்தான்குடி யென்னுந் திருப்பதியி னின்று மெழுந்தருளி, அளவற்ற பேரன்பினால் திருவுள்ள மகிழச் சிவந்த நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் எழுந் தருளிய திருவலிவலமென்னுந் திருப்பதியை யடைந்து வணங்கி, பார்வதிபாகராகிய அவ்வெம்பெருமானை, "வலிவலந்தனில் வந்துகண்டேன்" என்னும் இறுதியையுடைய திருப்பதிகத் தமிழ்மாலையை யெடுத்து இசை பொருந்தப்பாடுவாராயினார்.- எ - று.

**"நன்று மகிழுஞ் சம்பந்தர் நாவுக் கரசர் பாட்டுகந்தீர்"**
**என்று சிறப்பித் திறைஞ்சி மகிழ்ந் தேத்தி அருள்பெற் றெழுந்தருளி**
**மன்றி னிடையே நடம்புரிவார் மருவு பெருமைத் திருவாரூர்**
**சென்று குறுகிப் பூங்கோயிற் பெருமான் செம்பொற் கழல்பணிந்து. 44**

(இ - ள்.) மிக்க மகிழ்வினையுடைய திருஞானசம்பந்தப் பிள்ளையாரும் திருநாவுக்கரசுசுவாமிகளுமாகிய இவர்களது திருப்பாடலை மகிழ்ந்தருளினீரென்று சிறப்பித்து வணங்கி மகிழ்ந்து துதித்துத்திருவருள் பெற்று, நடனமூர்த்தியாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளிய பெருமை பொருந்திய திருவாரூரைச் சென்று சேர்ந்து, திருப்பூங்கோயிலிலெழுந் தருளிய ஸ்ரீதியாகராசப் பெருமானது செம்பொன்மயமாகிய திருவடிகளை வணங்கி. - எ - று.

**இறைஞ்சிப் போந்து பரவையார் திருமாளிகையில் எழுந்தருளி**
**நிறைந்த விருப்பின் மேவுநாள் நீடு செல்வத் திருவாரூர்ப்**
**புறம்பு நணிய கோயில்களும் பணிந்து போற்றிப் புற்றிடமாய்**
**உறைந்த பெருமான் கழல்பிரியா(து) ஓவா இன்பம் உற்றிருந்தார். 45**

(இ - ள்.) வணங்கிச் சென்று பரவைநாச்சியாரது திருமாளிகையிலெழுந்தருளிய நிறைந்த விருப்பத்தோடும் வாழும் நாள்களில், மிக்க செல்வத்தை யுடைய திருவாரூரின் புறத்திலுள்ள திருக்கோயிலையும் வணங்கித் துதித்து, புற்றையிடமாகக் கொண்டெழுந்தருளிய ஸ்ரீவன்மீகநாதரது திருவடிகளைப் பிரியாமல் கெடாத பேரின்பமடைந்திருந்தருளினார். - எ - று.

**"செறிபுன் சடையார் திருவாரூர்த் திருப்பங் குனியுத் திரத்திருநாள்,**
**குறுக வரலும் பரவையார் கொடைக்கு விழாவில் குறைவறுக்க,**
**நிறையும் பொன்கொண் டணைவதற்கு நிறைந்து நம்பி திருப்புகலூர்,**
**இறைவர் பாதம் பணியஎழுந் தருளிச் சென்றங் கெய்தினார். 46**

(இ - ள்.) நெருக்கமாகிய புல்லிய சடைமுடியையுடைய சிவபெருமானது திருவாரூரில் பங்குனி யுத்திரத் திருநாள் சமீபிக்கவும், அத்திருவிழாவில் பரவை நாச்சியார் செய்யுந் தருமங்களுக்குப் பொருளில்லாமையால் நேர்ந்த குறையை நீக்க, மிகுந்த பொன்னைக் கொண்டு வருவதற்கு நினைந்து, ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருப்புகலூரி லெழுந்தருளிய சிவபெருமான் திருவடிகளை வணங்க எழுந்தருளி அத்திருப்புகலூரையடைந்தருளினார். - எ - று.

**சென்று விரும்பித் திருப்புகலூர்த் தேவர் பெருமான் கோயில்மணி**
**முன்றில் பணிந்து வலங்கொண்டு முதல்வர் முன்பு வீழ்ந்திறைஞ்சித்**
**தொன்று மரபின் அடித்தொண்டு தோய்ந்த அன்பில் துதித்தெழுந்து**
**நின்று பதிக இசை பாடி நினைந்த கருத்து நிகழ்விப்பார். 47**

(இ - ள்.) திருப்புகலூரையடைந்து, விரும்பி அத்திருப்புகலூரி லெழுந்தருளிய சிவபெருமானது திருக்கோயிலின் திருமுற்றத்தை வணங்கிப் பிரதக்ஷணஞ் செய்து, சிவபெருமான் திருமுன்பு சாஷ்டாங்கமாக வணங்கிப் பழைய முறைமைப் படியே திருவடித் தொண்டமைந்த அன்பினால் துதித்து எழுந்து நின்று இசையமைந்த திருப்பதிகம் பாடியருளித் தாம்நினைந்த கருத்தைக் குறிப்பாலுணர்த்துவாராயினார். - எ - று.

**சிறிது பொழுது கும்பிட்டுச் சிந்தை முன்னம் அங்கொழிய**
**வறிது புறம்போந் தருளிஅயல் மடத்தில் அணையார் வன்றொண்டர்**
**அறிவு கூர்ந்த அன்பருடன் அணிமுன் றிலின்ஓர் அருகிருப்ப**
**மறிவண் கையார் அருளேயோ! மலர்க்கண் துயில்வந் தெய்தியால். 48**

(இ - ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமி கொஞ்சநேரம் நின்று வணங்கித் தமது சிந்தையானது முற்பட்டு அவ்வெம்பெருமானிடத்து இலயித்து நிற்க, தாம்தனியே புறத்திற் சென்றருளி அருகிலுள்ள திருமடத்திற்குச் செல்கின்றவர், பேரறிவினையுடைய அடியார்களோடு அழகிய திருமுற்றத்தின் ஒருபக்கத்திலிருக்க, (அப்பொழுது) மானேந்திய திருக்கரத்தையுடைய சிவபெருமானது திருவருள்தானோ! அவர்க்குத் தாமரை மலர் போன்ற திருக்கண்களில் நித்திரை வந்தடைந்தது. - எ - று.

**துயில்வந் தெய்தத் தம்பிரான் தோழர் அங்குத் திருப்பணிக்குப்**
**பயிலுஞ் சுடுமட் பலகைபல கொணர்வித் துயரம் பண்ணித்தேன்**
**அயிலுஞ் சுரும்பார் மலர்ச்சிகழி முடிமேல் அணியா உத்தரிய**
**வெயிலுந் தியவெண் பட்டதன்மேல் விரித்துப் பள்ளி மேவினார். 49**

(இ - ள்.) அவ்வாறு நித்திரை வரவும், ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அங்குத் திருப்பணி செய்தற்காக வைத்திருக்கும் சுட்ட பல செங்கற் பலகைகளைத் தருவித்து உயரமாக அடுக்கி, உத்தரியமாகிய ஒளிவீசுகின்ற வெண்பட்டை அதன்மேல் விரித்து, தேனுண்ணுகின்ற வண்டுகள் நிறைந்த மலர்மாலையணிந்த திருமுடியை அக்கல்லடுக்கின்மேல் வைத்துப் பள்ளி கொண்டருளினார். - எ - று.

**சுற்றும் இருந்த தொண்டர்களும் துயிலும் அளவில் துணைமலர்க்கண்**
**பற்றுந் துயில்நீங் கிடப்பள்ளி உணர்ந்தார் பரவை கேள்வனார்**
**வெற்றி விடையார் அருளாலே வேமண் கல்லே விரிசுடர்ச்செம்**
**பொற்றின் கல்லா யினகண்டு புகலூர் இறைவர் அருள்போற்றி. 50**

(இ - ள்.) நாற்புறத்துஞ் சூழ்ந்திருந்த அடியார்களும் நித்திரை செய்யும் பொழுது, ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் தமது தாமரை மலர் போன்ற கண்ணைப் பந்தித்திருந்த நித்திரை நீங்கத் துயிலெழுந்தார்; அவர், வெற்றி பொருந்திய இடபவாகனத்தையுடைய சிவபெருமானது திருவருளினால் சுட்ட அச்செங்கற் பலகைகளே ஒளிவீசுகின்ற மாற்றுயர்ந்த செம்பொன் கல்லாக விளங்கக் கண்டு ஸ்ரீ வர்த்தமானேசரது திருவருளைத் துதித்து. - எ - று.

**தொண்டர் உணரமகிழ்ந்தெழுந்து துணைக்கைக் கமல முகைதலைமேல்**
**கொண்டு கோயி லுட்புக்குக் குறிப்பில் அடங்காப் பேரன்பு**
**மண்டு காத லுறவணங்கி வாய்த்த மதுர மொழிமாலை**
**பண்டங் கிசையில் "தம்மையே புகழ்ந்''தென் றெடுத்துப் பாடினார். 51**

(இ - ள்.) அடியார்களுந் துயில்நீங்க மகிழ்வுற்றெழுந்து தாமரை யரும்பு போன்ற இரண்டு திருக்கரங்களையுஞ் சிரசின் மேற் குவித்துத் திருக்கோயிலுட் புகுந்து குறிப்பிலடங்காத பேரன்பு நிறைந்த விருப்புடன் வணங்கிச் சிறந்த மதுரமாகிய சொற்களமைந்த திருப்பதிக மாலையை இசையோடு, "தம்மையே புகழ்ந்து" என்று முதலெடுத்துப் பாடியருளினார். - எ - று.

**பதிகம் பாடித் திருக்கடைக்காப் பணிந்து பரவிப் புறம் போந்தே**
**எதிரில் இன்பம் இம்மையே தருவார் அருள்பெற் றெழுந்தருளி**
**நிதியின் குவையும் உடன்கொண்டு நிறையும் நதியும் குறைமதியும்**
**பொதியுஞ் சடையார் திருப்பனையூர் புகுவார் புரிநூல் மணிமார்பர். 52**

(இ - ள்.) திருப்பதிகம்பாடித் திருக்கடைக் காப்பையுமணிந்து துதித்துப் புறத்திற் சென்று, ஒப்பற்ற பேரின்பத்தை இம்மையிலேயே கொடுத்தருளுஞ் சிவபெருமானது திருவருளைப் பெற்று, அங்கு நின்று மெழுந்தருளிப் பொற்குவைகளையுந் தம்முடனெடுத்துக் கொண்டு, நிறைந்த கங்கை நதியும் இளம்பிறையும் பொருந்திய சடைமுடியையுடைய சிவபெருமானது திருப்பனையூரை முப்புரி நூலையணிந்த திருமார்பினையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அடைவாராயினார். - எ - று.

**செய்ய சடையார் திருப்பனையூர்ப் புறத்துத் திருக்கூத் தொடுங்காட்சி**
**எய்த அருள எதிர்சென்றங் கெழுந்த விருப்பால் விழுந்திறைஞ்சி**
**ஐயர் தம்மை "அரங்காட வல்லார் அவரே அழகியர்" என்(று)**
**உய்ய உலகு பெறும்பதிகம் பாடி அருள்பெற் றுடன்போந்தார். 53**

(இ - ள்.) சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமான் திருப்பனையூர்த் திருப்பதியில் திருக்கூத்தோடுங் காட்சி கொடுத்தருள, எதிரே சென்று அங்குண்டாகிய பெருவிருப்பினால் சாஷ்டாங்கமாக வணங்கிச் சிவபெருமான் சிற்சபையில் "ஆடுமாறுவல்லாரவரேயழகியர்" என்று இறுதியிலமைத்து உலகத்தா ருய்த்தற்கேதுவாகிய திருப்பதிகத்தை யருளிச் செய்து திருவருள் பெற்று அடியார்களுடன் புறத்திற் சென்றருளினார். - எ - று.

**வளமல் கியசீர்த் திருப்பனையூர் வாழ்வார்ஏத்த எழுந்தருளி
அளவில் செம்பொன் இட்டிகைகள் ஆள்மேல் நெருங்கி அணிஆரூர்த்
தளவ முறுவல் பரவையார் தம்மா ளிகையில் புகத்தாமும்
உளமன் னியதம் பெருமானார் தம்மை வணங்கி உவந்தணைந்தார். 54**

(இ - ள்.) வளப்பமிக்க சிறந்த திருப்பனையூரில் வாழும் அடியார்கள் துதிக்க அங்கு நின்று மெழுந்தருளி, அளவற்ற செம்பொற்கற்கள் ஆள்களின்மேல் எடுக்கப்பட்டு அழகிய திருவாரூரில் முல்லையரும்பு போன்ற பற்களையுடைய பரவை நாச்சியாரது திருமாளிகையிற் செல்ல, தாமும் தமது திருவுள்ளத்தில் வீற்றிருந்தருளும் ஸ்ரீ தியாகராஜப் பெருமானை வணங்கி மனமகிழ்ந்து பரவை நாச்சியாரது திருமாளிகைக்கு வந்தருளினார். - எ - று.

**வந்து பரவைப் பிராட்டியார் மகிழவைகி மருவுநாள்
அந்தண் ஆரூர் மருங்கணிய கோயில் பலவும் அணைந்திறைஞ்சிச்
சிந்தை மகிழ விருப்பினொடுந் தெய்வப் பெருமாள் திருவாரூர்
முந்தி வணங்கி இனிதிருந்தார் முனைப்பா டியர்தங் காவலனார். 55**

(இ - ள்.) திருமுனைப்பாடி நாட்டிலுள்ள தலைவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் பரவை நாச்சியார் திருமாளிகைக்கு வந்து அவ்வம்மையார் மனமகிழும்படி வசிக்கும் நாள்களில் அழகிய திருவாரூரினருகிலுள்ள பல திருக்கோயில்களையு மடைந்து வணங்கி, மனமகிழப் பெருவிருப்போடும் தெய்வநாயக ராகிய ஸ்ரீ தியாகராஜப் பெருமானது திருவாரூரையடைந்து வணங்கி இனிமையோடு மெழுந்தருளியிருந்தார். - எ - று.

**பலநாள் அமர்வார் பரமர்திரு அருளால் அங்கு நின்றும்போய்ச்
சிலைமா மேரு வீரனார் திருநன்னிலத்துச் சென்றெய்தி
வலமா வந்து கோயிலினுள் வணங்கி மகிழ்ந்து பாடினார்
தலமார்கின்ற "தண்ணியல்வெம் மையினான்" என்னுந் தமிழ்மாலை. 56**

(இ - ள்.) அத்திருப்தியில் பலநாள்கள் வசித்தருளும் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவபெருமான் திருவருளினால் அத்திருப்பதியினின்று நீங்கி, மேருமலையை வில்லாகவுடைய சிவபெருமானது திருநன்னிலமென்னுந் திருப்பதியை யடைந்து பிரதக்ஷணஞ் செய்து திருக்கோயிலினுள்ளே சுவாமி தரினஞ் செய்து மனமகிழ்ந்து உலகத்திற் சிறந்த "தண்ணியல் வெம்மை யினால்" என்னு முதலையுடைய திருப்பதிகம் பாடியருளினார். - எ - று.

***பாடி அங்க வைகியபின் பரமர் வீழி மிழலையினில்
நீடு மறையால் மேம்பட்ட அந்த ணாளர் நிறைந்தீண்டி
நாடு மகிழ அவ்வளவு நடைக்கா வணம்பா வாடையுடன்
மாடு கதலி பூகநிரை மல்க மணித்தோ ரணம்நிரைத்து. 57***

(இ - ள்.) திருப்பதிகம்பாடி அங்கு எழுந்தருளிய பின்பு, சிவபெருமானது திருவீழிமிழலையென்னுந் திருப்பதியிலுள்ள உயர்ந்த வேத வொழுக்கத்திற் சிறந்த வேதியர்கள் சேர்ந்து வந்து உலகத்தார் மகிழும்படி அவ்வுரெல்லை வரையிலும் நடைப் பந்தல் பாவாடையோடு பக்கங்களில வாழை கமுகுகளின் வரிசைகள் நெருங்க அழகிய மகர தோரணங்களை வரிசையாக நாட்டி. - எ - று.

***வந்து நம்பி தம்மைஎதிர் கொண்டு புக்கார் மற்றவருஞ்
சிந்தை மலர்ந்து திருவீழி மிழலை இறைஞ்சிச் சேண்விசும்பின்
முந்தை இழிந்த மொய்யொளிசேர் கோயில் தன்னை முன்வணங்கிப்
பந்தம் அறுக்குந் தம்பெருமான் பாதம் பரவிப் பணிகின்றார். 58***

(இ - ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளை எதிர்கொண்டு வந்து அழைத்துச் சென்றார்கள்; அச்சுந்தரமூர்த்திகளும் திருவுள்ள மகிழ்நது, திருவீழிமிழலைத் திருப்பதியை வணங்கி, முன்பு உயர்ந்த விண்ணுலகினின்று மிழிந்த விமானக் கோயிலை முன்னே வணங்கி (உள்ளே புகுந்து) ஆன்மாக்களுடைய பாசபந்தங்களை யறுத்தருளுந் தமது சிவபெருமானுடைய திருவடிகளைத் துதித்து வணங்குவாராயினார். - எ - று.

***படங்கொள் அரவில் துயில்வோனும் பதுமத் தோனும் பரவரிய
விடங்கன் விண்ணோர் பெருமானை விரவும் புளக முடன்பரவி
"அடங்கல் வீழி கொண்டிருந்தீர் அடியே னக்கும் அருளும்" எனத்
தடங்கொள் செஞ்சொற் றமிழ்மாலை சாத்தி அங்குச் சாருநாள். 59***

(இ - ள்.) படம் பொருந்திய சேஷசயனத்திற் பள்ளிகொள் ளுந் திருமாலும், தாமரை மலரில் வசிக்கும் பிரமனுந் துதித்தற் கரிய விடங்கரும், தேவர்கள் நாயகருமாகிய சிவபெருமானைக் கலந்த புளகாங்கிதத்தோடுந் துதித்து "அடங்கல் வீழிகொண் டீரடியேற்று மருளுதிரே" என்று மிறுதியையுடைய சிறந்த தமிழ்ச் சொற்களாலாகிய திருப்பதிகம்பாடி அங்கு வசிக்கும் நாள்களில். - எ - று.

**வாசி யறிந்து காசளிக்க வல்ல மிழலை வாணர்பால்**
**தேசு மிக்க திருவருள்முன் பெற்றுத் திருவாஞ் சியத்தடிகள்**
**பாச மறுத்தாட் கொள்ளுந்தாள் பணிந்து "பொருவ னார்"என்னும்**
**மாசில் பதிகம் பாடிஅமர்ந் தரிசிற் கரைப்புத் தூரணைந்தார். 60**

(இ-ள்.) வாசியுடைத்தா தலையுணர்ந்து திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்குப் பொற்காசு அருளவல்லவராகிய வீழிய மூகரிடத்து ஒளிமிகுந்த திருவருளை முன்னே பெற்று, (ஆன்மாக் களின்) பாசபந்தங்களை யறுத்தடிமை கொண்டருளுந் திருவாஞ் சியத்தி லெழுந்தருளிய சிவபெருமானது திருவடிகளை வணங்கி, "பொருவனார்" என்னு முதலையுடைய குற்றமற்ற திருப்பதிகம் பாடி வசித்தருளி, அரிசில் நதிக்கரையிலுள்ள திருப்புத்தூரை யடைந்தருளினார். - எ - று.

**செழுநீர் நறையூர் நிலவுதிருச் சித்தீச் சரமும் பணிந்தேத்தி,**
**விழுநீர் மையினில் பெருந்தொண்டர் விருப்பி னோடும் எதிர்கொள்ள,**
**மழுவோ டிளமான் கரதலத்தில் உடையார் திருப்புத் தூர்வணங்கித்,**
**தொழுநீர் மையினில் துதித்தேத்தித் தொண்டர் சூழ உறையுநாள். 61**

(இ - ள்.) செழித்த நீர்வளம் பொருந்திய திருநறையூரில் விளங்குந் திருச் சித்தீச்சரமென்னுந் திருப்பதியையும் வணங்கித் துதித்து, மிக்க மெய்யன்பினையுடை பெரிய திருத்தொண் டர்கள் விருப்பத்துட னெதிர்கொள்ள, மழுவையும் மான்கன்றை யுந் திருக்கரத்திலேந்திய சிவபெருமானது திருப்புத்தூரை வணங்கி முறைப்படி துதித்து அடியார்கள் சூழும்படி அங்கு வசித்தருளும் நாள்களில். - எ - று.

**புனித னார்முன் புகழ்த்துணையார்க் கருளுந் திறமும் போற்றிசைத்து**
**முனிவர் போற்ற எழுந்தருளி மூரி வெள்ளக் கங்கையினில்**
**பனிவெண் டிங்கள் அணிசடையார் பதிகள் பலவும் பணிந்துபோந்(து)**
**இனிய நினைவில் எய்தினார்; இறைவர் திருவா வடுதுறையில். 62**

(இ - ள்.) மலரகிதராகிய சிவபெருமான் முன்னாளில் புகழ்த்துணை நாயனாருக்குப் டிக்காசு கொடுத்தருளிய பேரருட் டிறத்தைத் திருப்பதிகத்திலமைத்துத் துதித்து அடியார்கள் துதிக்க அவ்விடத்தினின்று மெழுந்தருளி, வலிய வெள்ள நீராகிய கங்கை நதியில் குளிர்ந்த வெண்பிறையைத் தரித்தசடை முடியையுடைய சிவபெருமானது பல திருப்பதிகளையும் வணங் கிச் சென்று, அவ்வெம்பெருமானெழுந்தருளிய திருவாவடு துறை யென்னுந் திருப்பதியில் இனிமையாகிய நினைவோடுஞ் சென்றருளினார். - எ - று.

***விளங்குந் திருவா வடுதுறையில் மேயார்கோயில் புடைவலங்கொண்(டு)***
***உளங்கொண் டுருகும் அன்பினுடன் உள்புக் கிறைஞ்சி ஏத்துவார்***
***வளங்கொள் பதிகம் "மறையவன்"என் றெடுத்து வளவன் செங்கணான்***
***தளங்கொள் பிறப்புஞ் சிறப்பித்துத் தமிழ்ச்சொன் மாலை சாத்தினார். 63***

(இ - ள்.) சிறப்புற்று விளங்குந் திருவாவடுதுறையில் எழுந்தருளிய சிவபெருமானது திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ் செய்து, அவ்வெம்பெருமானைத் தமதுள்ளத்தில் தியானித்து உருகுகின்ற பேரன்போடும் உள்ளே சென்று வணங்கித் துதிக்கின்ற ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் வளப்பமிக்க திருப்பதிகத்தை "மறையவன்" என்று முதல் தொடங்கி, கோச்செங்கட் சோழ நாயனாரது சிறந்த அவதார மான்மியத்யையுஞ் சிறப்பித்துத் தமிழ்ச் சொற்களாலாகிய திருப்பதிகமாலையை யணிந்தருளினார். - எ - று.

***சாத்தி அங்கு வைகுநாள் தயங்கும் அன்ப ருடன்கூடப்***
***பேர்த்தும் இறைஞ்சி அருள்பெற்றுப் பெண்ணோர் பாகத் தண்ணலார்***
***தீர்த்தப் பொன்னித் தென்கரைமேல் திகழும் பதிகள் பலபணிந்து***
***மூர்த்தி யார்தம் இடைமருதை அடைந்தார் முனைப்பா டித்தலைவர். 64***

(இ - ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருப்பதிக மாலையைச் சாத்தி அங்கு வசித்தருளும் நாள்களில் விளங்குகின்ற அடியார்களோடு கூட மீண்டும் (ஆலயத்திற் சென்று) வணங்கி அவ்வெம்பெருமானது திருவருளைப் பெற்று, தீர்த்தமாகிய காவிரிநதியின் தென்கரையில் பார்வதிபாகராகிய சிவபெருமான் எழுந்தருளிய பல திருப்பதிகளை வணங்கி, சிவபெருமானெழுந் தருளிய திருவிடைமருதூரை யடைந்தருளினார். - எ - று.

***மன்னு மருதின் அமர்ந்தவரை வணங்கி மதுரச் சொன்மலர்கள்***
***பன்னிப் புனைந்து பணிந்தேத்திப் பரவிப் போந்து தொண்டருடன்***
***அந்நற் பதியில் இருந்தகல்வார் அரனார் திருநா கேச்சரத்தை***
***முன்னிப் புக்கு வலங்கொண்டு முதல்வர் திருத்தாள் வணங்கினார். 65***

(இ - ள்.) நிலைபெற்ற திருவிடை மருதூரிலெழுந்தருளிய சிவபெருமானை வணங்கி மதுரம் பொருந்திய சொற்களாகிய மலர்களைத் தொடுத்துப் பாமாலை சூட்டி வணங்கித் துதித்துப் புறத்திற் சென்று, அடியார்களுடன் நன்மை பொருந்திய அத்திருப்பதியினின்று நீங்குகின்றவராய், சிவபெருமானது திருநாகேச்சரமென்னுந் திருப்பதியை விரும்பியடைந்து திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ் செய்து சிவபெருமானது திருவடிகளை வணங்குவாராயினார். - எ - று.

**பெருகும் பதிகம் 'பிறையணிவாள் நுதலாள்' பாடிப் பெயர்ந்துநிறை**
**திருவின் மலியுஞ் சிவபுரத்துத் தேவர் பெருமான் கழல்வணங்கி**
**உருகுஞ் சிந்தை யுடன்போந்தே உமையோர் பாகர் தாம்மகிழ்ந்து**
**மருவும் பதிகள் பிறபணிந்து கலைய நல்லூர் மருங்கணைந்தார். 66**

(இ - ள்.) சிறப்புமிகுந்த திருப்பதிகத்தை "பிறையணிவாணு தலாள்" என்று தொடங்கிப் பாடியருளி அங்கு நின்று நீங்கி, நிறைந்த செல்வத்தான் மிக்க சிவபுரத்தின் கண் வீற்றிருந்தருளுந் தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது திருவடிகளை வணங்கி, உருகுகின்ற திருவுள்ளத்தோடும் அங்கு நின்று மெழுந்தருளி, பார்வதி பாகராகிய சிவபெருமான் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளை வணங்கித் திருக்கலைய நல்லூரென்னுந் திருப்பதியினருகடைந்தருளினார். - எ - று.

**செம்மை மறையோர் திருக்கலைய நல்லூர் இறைவர் சேவடிக்கீழ்**
**மும்மை வணக்கம் பெறஇறைஞ்சி முன்பு பரவித் தொழுதெழுவார்**
**கொம்மை மருவு "குரும்பைமுலை உமையாள்" என்னுந் திருப்பதிகம்**
**மெய்ம்மைப் புராணம் பலவுமிகச் சிறப்பித்(து) இசையின் விளம்பினார். 67**

(இ - ள்.) நல்லொழுக்கத்தையுடைய வேதியர்கள் வாழும் திருக்கலைய நல்லூரி லெழுந்தருளிய சிவபெருமானது திருவடிகளில் திரிகரணங்களும் ஒருமைப்பட வணங்கித் திருமுன்னின்று துதித்து, சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தெழுகின்ற ஸ்ரீ சுந்தர மூர்த்தி சுவாமிகள் "குரும்பைமுலை மலர்க்குழலி" என்னு முதலையுடைய திருப்பதிகத்தை மெய்ம்மையாகிய புராணங் களிற் கூறும் பல சரித்திரங்களையும் மிகச் சிறப்பித்து இசை பொருந்தப் பாடியருளினார். - எ - று.

**அங்கு நின்று திருக்குடமூக் கணைந்து பணிந்து பாடிப்போய்**
**மங்கை பாகர் வலஞ்சுழியை மருவிப் பெருகும் அன்புருகத்**
**தங்கு காத லுடன்வணங்கித் தமிழாற் பரசி அரசினுக்குத்**
**திங்கள் முடியார் அடியளித்த திருநல் லூரைச் சென்றணைந்தார். 68**

(இ - ள்.) அத்திருக்கலைய நல்லூரினின்று நீங்கி, ஸ்ரீ கும்ப கோணமென்னுந் திருப்பதியை யடைந்து வணங்கித் திருப்பதிகம் பாடிச் சென்று, பார்வதி பாகராகிய சிவபெருமான் எழுந் தருளிய திருவலஞ்சுழியை யடைந்து மிக்க அன்பினால் மன முருக, பொருந்திய விருப்பத்துடன் வணங்கித் தமிழ்த் திருப் பதிகம் பாடித் துதித்து, சந்திரசேகரராகிய சிவபெருமான் திருநாவுக்கரசு சுவாமிகளுக்குத் திருவடிதீக்ஷை செய்தருளிய திருநல்லூ ரென்னுந் திருப்பதியைச் சென்று சேர்ந்தருளினார். - எ - று.

**நல்லூர் இறைவர் கழல்போற்றி நவின்று நடுவு நம்பர்பதி**
**எல்லாம் இறைஞ்சி ஏத்திப்போந் திசையாற் பரவுந் தம்முடைய**
**சொல்லூ தியமா அணிந்தவர்தஞ் சோற்றுத் துறையின் மருங்கெய்தி**
**அல்லூர் கண்டர் கோயிலுனுள் அடைந்து வலங்கொண் டடிபணிவார். 69**

(இ - ள்.) திருநல்லூரில் எழுந்தருளும் சிவபெருமானது திருவடிகளைத் துதித்து அதற்கிடையிலும் சிவபெருமான் வீற்றிருந்தருளிய பல திருப்பதிகளையும் வணங்கிச் சென்று, இசையோடு பாடித் துதிக்கின்ற தமது திருப்பதிகத்தைப் பொருளாக வணிந்த சிவபெருமானது திருச்சோற்றுத் துறையி னருகிற் சென்று, காளகண்டராகிய அவ்வெம் பெருமானது திருக்கோயிலினுள்ளடைந்து பிரதக்ஷணஞ் செய்து அவரது திருவடிகளை வணங்குவாராயினார். - எ - று.

**"அழல்நீர் ஒழுகி அனைய" எனும் அஞ்சொற் பதிகம் எடுத்தருளிக்**
**கழல்நீ டியஅன் பினிற்போற்றுங் காதல் கூரப் பரவியபின்**
**கெழுநீர் மையினில் அருள்பெற்றுப் போந்து பரவை யார்கேள்வர்**
**முழுநீ றணிவார் அமர்ந்தபதி பலவும் பணிந்து முன்னுவார். 70**

(இ - ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் "அழனீரொழு கினைய" என்னுமுதலையுடைய அழகிய சொற்களமைந்த திருப் பதிகம் பாடியருளி, மிக்க அன்போடு திருவடிகளைத் துதி செய்யும் பெருவிருப்ப மதிகரிக்கத் துதித்தபின்பு, பொருந்திய முறைமைப்படியே திருவருள் பெற்று அங்கு நின்று மெழுந் தருளி, திருமேனி முழுவதுந் திருவெண்ணீறணிந்த சிவ பெருமான் வீற்றிருந்தருளும் பல பதிகளையும் வணங்கிச் செல்வாராயினார். - எ - று.

**தேவர் பெருமான் கண்டியூர் பணிந்து திருவை யாறதனை**
**மேவி வணங்கிப் பூந்துருத்தி விமலர் பாதந் தொழுதிறைஞ்சிச்**
**சேவில் வருவார் தருவாலம் பொழிலிற் சேர்ந்து தாழ்ந்திரவு**
**பாவு சயனத் தமர்ந்தருளிப் பள்ளி கொள்ளக் கனவின்கண். 71**

(இ - ள்.) தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது திருக்கண்டியுரை வணங்கி, திருவையாற்றை யடைந்து வணங்கி, திருப்பூந் துருத்தியிலெழுந்தருளிய சிவபெருமானது திருவடி களை வணங்கித் துதித்து, இடபவாகனத்தின் மேல் வருகின்ற அவ்வெம்பெருமானெழுந்தருளிய திருவாலம்பொழில் என்னுந் திருப்பதியை யடைந்து வணங்கி, அன்றிரவு பொருந்திய சயனத்திலெழுந்தருளி நித்திரை கொள்ளும் பொழுது அவர் சொப்பனத்தில். - எ - று.

***"மழபா டியினில் வருவதற்கு நினைக்க மறந்தா யோ?" என்று***
***குழகா கியதம் கோலம்எதிர் காட்டி அருளக் குறித்துணர்ந்து***
***நிழலார் சோலைக் கரைப்பொன்னி வடபால் ஏறி நெடுமாடம்***
***அழகார் வீதி மழபாடி அணைந்தார் நம்பி ஆரூரர். 72***

(இ - ள்.) திருமழபாடியில் வருவதற்கு நினைக்க நீ மறந் தனையோ வென்று, இளமை பொருந்திய தமது திருக்கோலத் தைக் காட்டியருள, ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அதைத் தரிசித்துணர்ந்து, நிழல் பொருந்திய சோலைகளையுடைய காவிரிநதியின் வடகரையிலேறி உயர்ந்த மாளிகைகள் அழகோடு நிறைந்த வீதிகளையுடைய திருமழபடியென்னுந் திருப்பதியை யடைந்தருளினார். - எ - று.

***அணைந்து திருக்கோ புரம்இறைஞ்சி அன்பர் சூழ உடன்புகுந்து***
***பணங்கெள் அரவம் அணிந்தார்முன் பணிந்து வீழ்ந்து பரங்கருணைக்***
***குணங்கொள் அருளின் திறம்போற்றிக் கொண்டபுளகத் துடனுருகிப்***
***புணர்ந்த இசையால் திருப்பதிகம் "பொன்னார் மேனி" என்றெடுத்து. 73***

(இ - ள்.) அங்குச் சேர்ந்து திருக்கோபுரத்தை வணங்கி அடியார்கள் தம்மைச் சூழ்ந்துவர உள்ளே புகுந்து, படம் பொருந் திய பாம்பை யாபரணமாகவணிந்த சிவபெருமான் திருமுன்னே வீழ்ந்து வணங்கி, பெருங்கருணையோடு கூடிய திருவருட்டிறத் தைத் துதித்து, திருமேனியிற் கொண்ட புளகாங்கிதத்துடன் மனமுருகி, பொருந்திய இசையோடு திருப்பதிகத்தைப் "பொன்னார்மேனி" என்று முதல் எடுத்து. - எ - று.

***"அன்னே உன்னை அல்லால்யான் ஆரை நினைக்கேன்" எனஏத்தித்***
***தன்னே ரில்லாப் பதிகமலர் சாத்தித் தொழுது புறம்பணைந்து***
***மன்னும் பதியில் சிலநாட்கள் வைகித் தொண்ட ருடன்மகிழ்ந்து***
***பொன்னிக் கரையின் இருமருங்கும் பணிந்து மேற்பாற் போதுவார். 74***

(இ-ள்.) "அன்னேயுன்னையல்லானி னியாரை நினைக்கேனே" என்று இறுதியிலமைத்துத் துதித்து, தனக்கு வேறொப்பில்லா திருப்திக மலர்மாலையைச் சாத்தித் துதித்துப்புறத்திற்சென்று, நிலைபெற்ற அத்திருப்பதியில் சில நாள்கள் வசித்து, அடியார் களுடன் மகிழ்ந்து காவிரி நதிக்கரையினிருபுறத்திலுமுள்ள திருப்பதிகளை வணங்கி மேற்றிசையிற் செல்லுங்கருத்துடையவ ராயினார். - எ - று.

***செய்ய சடையார் திருவானைக் காவில் அணைந்து திருத்தொண்டர்***
***எய்த முன்வந் தெதிர்கொள்ள இறைஞ்சிக் கோயி லுட்புகுந்தே***
***ஐயர் கமலச் சேடிவக்கீழ் ஆர்வம் பெருக விழுந்தெழுந்து***
***மெய்யும் முகிழ்ப்பக் கண்பொழிநீர் வெள்ளம் பரப்ப விம்முவார். 75***

(இ - ள்.) சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளிய திருவானைக்கா என்னுந் திருப்பதியிற் சென்று, அங்குள்ள திருத்தொண்டர்கள் பொருந்த முன்னே வந்தெதிர் கொள்ள வணங்கி, அவர்களுடன் திருக்கோயிலுட் புகுந்து, சிவபெருமானது தாமரை மலர் போன்ற திருவடிகளில் அன்பு மிக வீழ்ந்து வணங்கி யெழுந்து, திருமேனி மயிர்கூச் செறிய, கண்களினின்றும் பொழிகின்ற ஆனந்த பாஷ்பமாகிய வெள்ளம் பரவும்படி விம்முவாராயினார். - எ - று.

***"மறைக ளாய நான்கும்" என மலர்ந்த செஞ்சொற் றமிழ்ப்பதிகம்,***
***நிறையுங் காத லுடன்எடுத்து நிலவும் அன்பர் தமைநோக்கி,***
***"இறையும் பணிவார் எம்மையும்ஆ ளுடையார் என்றென் றேத்துவார்,***
***உறையூர்ச் சோழன் மணியாரஞ் சாத்துந் திறத்தை உணர்ந்தருளி." 76***

(இ - ள்.) "மறைகளாயின நான்கும்" என்று முதலில் தொடங்கிய செவ்விய சொற்களமைந்த தமிழ்த் திருப்பதிகத்தை மிக்க விருப்பத்துடனெடுத்து, விளங்குகின்ற அடியார் திருக் கூட்டத்தைப் பார்த்து இறைப்பொழுதேனும் (இப்பெருமானை) வணங்குகின்றவர் "எம்மையுமாளுடையார்" என்று செய்யுளின் இறுதிகடோறும் வைத்துத் துதிப்பவராய், உறையூர்ச் சோழ மகாராஜனது முத்து ஆரத்தைச் சிவபெருமான் அணிந்தருளிய முறைமையைத் தமது திருவுள்ளத்திற் கொண்டருளி. - எ - று.

***வளவர் பெருமான் மணியாரம் சாத்திக்கொண்டு வரும்பொன்னிக்***
***கிளருந் திறைநீர் மூழ்குதலும் வழுவிப் போகக் கேதமுற***
***அளவில் திருமஞ் சனக்குடத்துள் அதுபுக் காட்ட அணிந்தருளித்***
***தளரும் அவனுக் கருள் புரிந்த தன்மை சிறக்கச் சான்றினார். 77***

(இ - ள்.) உறையூர்ச் சோழராசன் மணியாரத்தைத் தரித்துக் கொண்டு பெருகி வருகின்ற காவிரி நதியின் விளங்கும் அலை களையுடைய நீரில் ஸ்நானஞ் செய்யவும், அம்மணியாரம் நீரில் நழுவிவிட, அதனால்அவன் துன்பமடைய, அவ்வாரம், சிறந்த திருமஞ்சனமெடுக்குந் திருக்குடத்துள் புகுந்து, சிவபெருமா னுக்கு அபிஷேகஞ் செய்யும் பொழுது அதனை அவ்வெம் பெருமானணிந்தருளி, மனம் வருந்துகின்ற அவ்வுறையூர்ச்

சோழனுக்குத் திருவருள் செய்த தன்மையை அத்திருப்பதிகத்தில் விளங்கப் பாடியருளினார். - எ - று.

**சாற்றி அங்குத் தங்குநாள் தயங்கும் பவளத் திருமேனி**
**நீற்றர் கோயில் எம்மருங்கும் சென்று தாழ்ந்து நிறைவிருப்பால்**
**போற்றி அங்கு நின்றும் போய்ப் பொருவில் அன்பர்மருவியதொண்(டு)**
**ஆற்றும் பெருமைத் திருப்பாச்சி லாச்சி ராமஞ் சென்றடைந்தார். 78**

(இ - ள்.) (உறையூர்ச் சோழனுக்கருள் புரிந்த தன்மையைச்) சிறப்பித்துப் பாடியருளி, அங்கு வசித்தருளும் நாள்களில், விளங்குகின்ற பவளம் போன்ற சிவந்த திருமேனியில் திருவெண்ணீற்றையணிந்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் (திருவானைக்காவினருகிலுள்ள) திருக்கோயில்களெங்குஞ் சென்று வணங்கி, மிகுந்த விருப்பத்தினால் துதித்து அங்கு நின்று மெழுந்தருளி, ஒப்பற்ற அடியார்கள் சிறந்த திருத்தொண்டைச் செய்தொழுகும் பெருமையினையுடைய திருப்பாச்சிலாச் சிராமம் என்னுந் திருப்பதியைச் சேர்ந்தருளினார். - எ - று.

**சென்று திருக்கோ புரம்இறைஞ்சித் தேவர் மலிந்த திருந்துமணி,**
**முன்றில் வலங்கொண் டுள்ளணைந்து தல்வர் முன்னர் வீழ்ந்தி றைஞ்சி,**
**நன்னு பெருகும் பொருட்காதல் நயப்புப் பெருக நாதரெதிர்,**
**நின்று பரவி நினைந்தபொருள் அருளா தொழிய நேர்நின்று. 79**

(இ - ள்.) அங்குச் சென்று திருக்கோபுரத்தை வணங்கி, தேவர்கள் நெருங்கியிருக்கும் திருத்தமாகிய அழகிய திருமுற்றத் தைப் பிரதக்ஷணஞ் செய்து உள்ளே புகுந்து சிவபெருமான் திருமுன்னே விழுந்து வணங்கி, நன்மை மிக்க பொருள் வேண்டுமென்னும் ஆசையதிகரிகக் அவ்வெம்பெருமான் திருமுன்னின்று துதித்து, தாம் விரும்பிய பொருளைச் சிவ பெருமான் கொடுத்தருளாதிருக்க அவரது சந்நிதியில் நின்று. - எ - று.

**அன்பு நீங்கா அச்சமுடன் அடுத்த திருத்தோ ழமைப்பணியால்**
**பொன்பே றாத திருவுள்ளம் புழுங்க அழுங்கிப் புறம்பொருபால்**
**முடுன்பு நின்ற திருத்தொண்டர் முகப்பே முறைப்பா டுடையார்போல்**
**என்பு கரைந்து "பிரானார்மற் றிலையோ" என்னை எடுக்கின்றார். 80**

(இ - ள்.) தமதுள்ளத்தில் அன்பு நீங்காத அச்சத்துடனே, தமக்கடுத்த தோழமையோடு கூடிய திருத்தொண்டினால், தாம் கருதிய பொன்னைப் பெறாத திருவுள்ளமானது புழுங்க, அத னால் வருந்தி, புறத்தில் ஒரு பக்கத்தில் நிற்கும் திருத்தொண்டர் முன்னிலையில் முறையிடுபவர் போல, என்பு நெக்குருகித் தமது

திருப்பதிகத்தில் "இவரலாதில்லையோ பிரானார்" என்று ஈற்றிலமைத்துப் பாடுவாராயினார். - எ - று.

**நித்தமும் நீங்கா நிலைமையின் நீங்கி நிலத்திடைப் புலங்கெழும் பிறப்பால்**
**உய்த்தகா ரணத்தை உணர்ந்துநொந் தடிமை ஒருமையாம் எழுமையும் உணர்த்தி**
**"எத்தனை அருளா தொழியினும் பிரானார் இவரலா தில்லையோ" என்பார்**
**"வைத்தனன் தனக்கே தலையும்என் நாவும்" எனவழுத் தினார்வழித் தொண்டர். 81**

(இ - ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் (தாம் திருக்கயிலாயத்தில் ஆலால சுந்தரரென்னுந் திருப்பெயரோடு அணுக்கத் தொண்டராய்) எப்பொழுதும் சிவபெருமானை நீங்காதிருக்கும் நிலைமையினின்று நீங்கி (கமலினி-அநிந்திதை யென்னு மாதர்களை விரும்பிய காரணமாக) இவ்நிலவுலகத்தில் ஐம்புலவுணர்ச்சியோடு கூடிய மானுடப்பிறப்பில் செலுத்திய கரணத்தையுணர்ந்து வருந்தி, அடிமையி னொருமைப் பாட்டை அத்திருப்பதிகத்தில் "ஒருமையேனல்லே னெழுமையுமடியே னடியவர்க்கடியனு மானேன்" என்று அமைத்து, எவ்வளவும் திருவருள் செய்யாது விடினும், "இவரலாதில்லையோ பிரானார்" என்று இறுதியில் முடிக்கின்றவராய், "வைத்தனன்றனக்கே தலையுமென்னாவும்" என்று முதலெடுத்துத் திருப்பதிகம் பாடியருளினார். - எ - று.

**இவ்வகை பரவித் திருக்கடைக் காப்பும் "ஏசின வல்ல" என் றிசைப்ப**
**மெய்வகை விரும்பு தம்பெரு மானார் விழுநிதிக் குவைஅளித் தருள**
**மைவளர் கண்டர் கருணையே பரவி வணங்கிஅப் பதியிடவைகி**
**எவ்வகை மருகும் இறைவர்தம் பதிகள் இறைஞ்சிஅங் கிருந்தனர் சிலநாள். 82**

(இ - ள்.) இவ்வாறு துதித்துத் திருக்கடைக்காப்பையும், "ஏசினவல்ல" என்று பாடியருள, மெய்ப்பத்தியை விரும்புந் தமது ஆண்டவராகிய சிவபெருமான் சிறந்த பொற்குவையைக் கொடுத்தருள, (ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள்) கருநிறம் வளர்கின்ற கண்டத்தையுடைய அவ்வெம்பெருமானது பெருங் கருணைத் திறத்தைத் துதித்து வணங்கி அத்திருப்பதியில்

வசித்து, அதனருகி லெங்குமுள்ள சிவபெருமான் றிருப்பதிகளை யடைந்து வணங்கிச் சிலநாள்கள் அத்திருப்பாச்சிலாச்சிராமத் திருப்பதியில் எழுந்தருளியிருந்தார். - எ - று.

**அப்பதி நீங்கி அருளினாற் போகி ஆவின்அஞ் சாடுவார் நீடும்"**
**எப்பெயர்ப் பதியும் இருமருங் கிறைஞ்சி இறைவர்பைஞ் ஞீலியை எய்திப்**
**பைப்பணி அணிவார் கோபுரம் இறைஞ்சிப் பாங்கமர் புடைவலங் கொண்டு**
**துப்புறழ் வேணி யார்கழல் தொழுவார் தோன்றுகங் காளரைக் கண்டார். 83**

(இ - ள்.) அத்திருப்பதியின்று நீங்கிச் சிவபெருமான் றிருவருளினாற் சென்று, பசுவினிடத் துண்டாகிய பஞ்ச கௌவியங்களையு மபிடேகங் கொண்டருளுஞ் சிவபெருமான் வீற்றிருந்தருளும் இருபக்கங்களிலுமுள்ள எல்லாத் திருப்பதி களையும் வணங்கி, சிவபெருமானது திருப்பைஞ்ஞீலி யென்னுந் திருப்பதியையடைந்து, படத்தையுடைய சர்ப்பாபரணத்தை யணிந்த அவ்வெம் பெருமானது திருக்கோபுரத்தை வணங்கி அருகிலுள்ள திருமாளிகையைப் பிரதக்ஷிணஞ்செய்து, பவளம் போலுஞ் சிவந்த சடைமுடியையுடைய அப்பெருமானது திருவடிகளை வணங்குகின்ற நம்பியாரூரர் அங்கு வீற்றிருந் தருளும் பிக்ஷாடனமூர்த்தியைத் தரிசித்தருளினார். - எ - று.

**கண்டவர் கண்கள் காதல்நீர் வெள்ளம் பொழிதரக் கைகுவித் திறைஞ்சி**
**வண்டறை குழலார் மனங்கவர் பலிக்கு வருந்திரு வடிவுக்கண் டவர்கள்**
**கொண்டதோர் மயலால் வினவுகூற் றாகக் குலவுசொற் "காருலா விய"என்(று)**
**அண்டநா யகரைப் பரவி ஆரணிய விடங்கராம்" அருந்தமிழ் புனைந்தார். 84**

(இ - ள்.) அவ்வாறு தரிசித்த ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் தமது கண்களினின்றும் ஆனந்தக் கண்ணீராகிய வெள்ளஞ் சிந்தத் திருக்கரங்களைக் குவித்து வணங்கி, வண்டுகள் சப்திக்குங் கூந்தலையுடைய தாருகாவனத்து ரிஷிபத்தினிகளது மனதைக் கவர்கின்ற பிக்ஷாடனத் திருவுருவத்தைத் தரிசித்து, அந்த

ரிஷிபத்தினிகள் அடைந்த மயக்கத்தினால் வினாவும் உரையாக, விளங்குகின்ற நல்ல சொற்களால் "காருலாவிய" என்று முதலெடுத்துத் தேவர்கள் நாயகராகிய சிவபெருமானைத் துதித்து "ஆரணீயவிடங்கர்" என்னும் இறுதியையுடைய திருப் பதிகத்தைப் பாடியருளினார். - எ - று.

***பரவிஅப் பதிகத் திருக்கடை காப்புச் சாத்திமுன் பணிந்(து) அருள் பெற்றுக்***
***கரவில்அன் பர்கள்தங் கூட்டமுந் தொழுது கலந்தினி திருந்துபோந் தருளி***
***விரவிய ஈங்கோய் மலைமுதலாக விமலர்தம் பதிபல வணங்கிக்***
***குரவலர் சோலை அணிதிருப் பாண்டிக் கொடுமுடி அணைந்தனர் கொங்கில். 85***

(இ - ள்.) திருப்பதிகம்பாடித் துதித்து அத்திருப்பதிகத் திறுதியில் திருக்கடைக்காப்பைச் சாத்தியருளித் திருமுன்னே வணங்கித் திருவருள் பெற்று, மெய்யடியார்களது திருக்கூட்டத் தையும் வணங்கி அவர்களுடன் கூடி, இனிமையோடு வசித்து அங்கு நின்று மெழுந்தருளி, சிறந்த திருவீங்கோய்மலை முதலாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளை வணங்கி, கொங்கு தேசத்திலுள்ள குராவிருக்ஷங்கள் மலர்கின்ற சோலை சூழ்ந்த திருப்பாண்டிக் கொடு முடியென்னுந் திருப்பதியை யடைந்தருளினார். - எ - று.

***கொங்கினிற் பொன்னித் தென்கரைக் கறையூர்க் கொடுமுடிக் கோயில்முன் குறுகிச்***
***சங்கவெண் குழையார் உழைவலஞ் செய்து சார்ந்தடி அன்பினில் தாழ்ந்து***
***பொங்கிய வேட்கை பெருகிடத் தொழுது புனிதர்பொன் மேனியை நோக்கி***
***"இங்கிவர் தம்மை மறக்கவொண் ணாதென்" றெழுந்தமெய்க் குறிப்பினில் எடுப்ப. 86***

(இ - ள்.) கொங்கு நாட்டில் காவிரி நதியின் தென்கரையி லுள்ள கறையூரில் திருப்பாண்டிக் கொடுமுடியென்னுந் திருக் கோயிலின் முன்னடைந்து, வெள்ளிய சங்கக் குழையை யணிந்த சிவபெருமானது திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ் செய்து சந்நிதியை யடைந்து அவ்வெம்பெருமானது திருவடிகளை

அன்போடு வணங்கி, பெருவிருப்பானது அதிகரிக்கத் தொழுது, சிவபெருமானது திருமேனியைத் தரிசித்து, இவ்வெம் பெருமானை மறக்கவொண்ணாதென்று தமது திருவுள்ளத் தினின்று மெழுந்த மெய்ம்மையாகிய குறிப்பினால் திருப்பதிகம் பாடத் தொடங்க. - எ - று.

***"அண்ணலார் அடிகள் மறக்கினும் நாம அஞ்செழுத் தறியஎப் பொழுதும்***
***எண்ணிய நாவே இன்சுவை பெருக இடையறா தியம்பும்" என் றிதனைத்***
***திண்ணிய உணர்விற் கொள்பவர் "மற்றுப் பற்றிலேன்" எனச்செழுந் தமிழால்***
***நண்ணிய அன்பில் பிணிப்புற நவின்றார் நமச்சிவா யத்திருப் பதிகம். 87***

(இ - ள்.) சிவபெருமானது திருவடிகளை நான் மறந்தாலும், அவர் திருநாமமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை யாவரும் அறியும்படி எப்பொழுதும் துதிக்கின்ற எனது நாவே இனிய மதுரமுண்டாக இடைவிடாமல் கூறுமென்று இக்கருத்தைக் கலங்காத தமது திருவுள்ளத்திற் கொண்டருளிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் "மற்றுப்பற்றெனக்கின்றி" என்னு முதலையுடைய செந்தமிழ்த் தொடையினால் தமதுள்ளத்திற் பொருந்திய பேரன்பிற் பொருந்தும்படி நமச்சிவாயத் திருப்பதிகத்தைப் பாடியருளினார். - எ - று.

***உலகெலாம் உய்ய உறுதியாம் பதிகம் உரைத்துமெய் உணர்வறா ஒருமை***
***நிலவிய சிந்தை யுடன்திரு வருளால் நீங்குவார் பாங்குநற் பதிகள்***
***பலவுமுன் பணிந்து பரமர்தாள் போற்றிப் போந்துதண் பனிமலர்ப் படப்பைக்***
***குலவும்அக் கொங்கிற் காஞ்சிவாய்ப் பேரூர் குறுகினார் முறுகும்ஆ தரவால். 88***

(இ - ள்.) சர்வலோகங்களுந் திருவருள் பெற்றுய்யும் பொருட்டு உறுதியைத் தரத்தக்க திருப்பதிகத்தையருளிச் செய்து, மெய்யுணர்ச்சி நீங்காத ஒருமைப்பாடு விளங்குந் திருவுள்ளத்துடன் சிவபெருமான் திருவருளினால் அங்கு நின்று நீங்கும் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருகிலுள்ள நன்மை பொருந்திய பல திருப்பதிகளையும் முன்னே வணங்கி,

அங்குள்ள சிவபெருமான் திருவடிகளைத் துதித்துச் சென்று, குளிர்ந்த மலர்ச்சோலை சூழ்ந்த அக்கொங்கு நாட்டில் காஞ்சி நதிக் கரையிலிருக்கும் திருப்பேரூரென்னுந் திருப்பதியை மிக்க பேரன்போடும் அடைந்தருளினார். - எ - று.

***அத்திருப் பதியை அணைத்துமுன் தம்மை ஆண்டவர் கோயிலுட் புகுந்து***
***மெய்த்தவர் சூழ வலங்கொண்டு முன்பு மேவுவார் தம்மெதிர் விளங்க***
***நித்தனார் தில்லை மன்றுள்நின் றாடல் நீடிய கோலம்நேர் காட்டக்***
***கைத்தலங் குவித்துக் கண்கள்ஆ னந்தக் கலுழிநீர் பொழிதரக் கண்டார். 89***

(இ - ள்.) அத்திருப்பேரூரையடைந்து முன்னாளில் தம்மைத் தடுத்தடிமை கொண்டருளிய சிவபெருமானது திருக்கோயிலினுள்ளே புகுந்து, மெய்யடியார்கள் புடைசூழத் திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்து திருமுன் சென்றருளும் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளுக் கெதிரில் விளங்கும்படி, சிவபெருமான் ஸ்ரீ சிதம்பரத்தில் கனகசபையில் நின்று திருநடனஞ் செய்தருளுந் திருக்கோலத்தை நேரே காட்டியருள, அவர் திருக்கரங்களைக் குவித்துக் கண்களில் ஆனந்த பாஷ்பம் பொழியும்படி தரிசித் தருளினார். - எ - று.

***காண்டலுந் தொழுது வீழ்ந்துடன் எழுந்து கரையில்அன் பென்பினை யுருக்கப்***
***பூண்டஐம் புலனில் புலப்படா இன்பம் புணர்ந்துமெய் உணர்வில் பொங்கத்***
***தாண்டவம்புரியுந் தம்பிரானாரைத் தலைப்படக் கிடைத்தபின் சைவ***
***ஆண்டகை யாருக்கடுத்தஅந் நிலைமை விளைவையார் அளவறிந் துரைப்பார். 90***

(இ - ள்.) அவ்வாறு தரிசித்தவளவில் சாஷ்டாங்கமாக வணங்கி யெழுந்து அளவற்ற பேரன்பானது என்புருகச் செய்ய, பொருந்திய ஐம்புலன்களால் அறியப்படாத பேரின்பமானது கலந்து மெய்யுணர்ச்சியிலதிகரிக்க, ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளும் சிவபெருமானைத் தரிசிக்கப் பெற்றபின்பு, சைவாசாரியாராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குண்டான அப்பேரானந்த விளைவை யாவர் அளவிட்டுச் சொல்ல வல்லவர்கள். - எ - று.

**அந்நிலை நிகழ்ந்த ஆரருள் பெற்று அன்பனார் இன்பவெள்ளத்து**
**மன்னிய பாடல் மகிழ்ந்துடன் பரவி வளம்பதி அதனிடை மருவி**
**"பொன்மணி மற்றுள் எடுத்தசே வடியார் புரிநடங் கும்பிடப் பெற்றால்**
**என்இனிப் புறம்போய் எய்துவ" தென்று மீண்டெழுந் தருளுதற்**
**கெழுவார். 91**

(இ - ள்.) அவ்வாறு பேரானந்தம் விளைதற்கேதுவாகிய திருவருளைப் பெற்ற ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் பேரின்ப வெள்ளத்தினால் பொருந்திய திருப்பதிகத்தை மகிழ்வுற்று உடனே துதித்து, வளப்பம் பொருந்திய அத்திருப்பேரூரில் வசித்து, அழகிய கனகசபையில் தூக்கிய திருவடியையுடைய ஸ்ரீநடராசப் பெருமான் செய்தருளுந்திருநடனத்தைத் தரிசிக்கப் பெற்றால், இனி, புறத்திற் சென்று அடையத் தக்க பயன் யாது என்று, அங்கு நின்றும் ஸ்ரீ சிதம்பரத்திற் சென்றருளுதற்குப் புறப்படுவாராயினார். - எ - று.

**ஆயிடை நீங்கி அருளினாற் செல்வார் அருவரைச் சுரங்களும் பிறவும்**
**பாயுநீர் நதியும் பலபல கடந்து பரமர்தம் பதிபல பணிந்து**
**மேயவண் டமிழால் விருப்பொடும் பரவி வெஞ்சமாக் கூடலும் பணிந்து**
**சேயிடை கழியப் போந்துவந் தடைந்தார் தென்றிசைக் கற்குடி**
**மலையில். 92**

(இ - ள்.) சிவபெருமான் றிருவருளினால் அத்திருப்பதி யின்று நீங்கிச் செல்லும் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அரிய மலைக்காடுகளும், மற்றக் காடுகளும் நீர்பாயும் நதிகளுமாகிய பலவற்றையுங் கடந்து, சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளை வணங்கிப் பொருந்திய தமிழ்த் திருப்பதிகத்தால் விருப்பத்துடன் துதித்து, திருவெஞ்சமாக்கூடலென்னுந் திருப் பதியையும் வணங்கி நெடுந்தூரம் நீங்கிச் சென்று, தென்றிசை யிலுள்ள திருக்கற்குடி மலையில் வந்து சேர்ந்தருளினார். - எ-று.

**வீடு தரும்இக் கற்குடியில் விழுமி யாரைப் பணிந்திறைஞ்சி**
**நீடுவிருப்பில் திருப்பதிகம் நிறைந்த சிந்தை யுடன்பாடிப்**
**பாடும் விருப்பில் தொண்டருடன் பதிகள் பலவும் அணைந்திறைஞ்சித்**
**தேடும் இருவர் காண்பரியார் திருவா றைமேற் றளிசென்றார். 93**

(இ - ள்.) (தரிசித்தவர்களுக்கு) மோட்சத்தைத் தருகின்ற இத் திருக்கற்குடி மலையில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானைச் சாஷ்டாங்கமாக வணங்கி, மிக்க விருப்பத்தோடு திருப்பதிகத்தை

நிறைந்த திருவுள்ளத்துடன் பாடியருளி, தாம் திருப்பதிகம் பாடும் விருப்பத்தினால் அடியார்களோடு பல திருப்பதிகளையு மடைந்து வணங்கி, (பன்றியாகவு மன்னமாகவு முருவமெடுத்து திருவடியையுந் திருமுடியையுந்) தேடிய (திருமால் பிரமனென் னும்) இருவர்க்குங் காணுதற்கரிய சிவபெருமானது திருவாறை மேற்றளியென்னுந் திருப்பதியை யடைந்தருளினார். - எ - று.

***செம்பொன் மேருச் சிலைவளைத்த சிவனார் ஆறை மேற்றளியில்***
***நம்பர் பாதம் பணிந்திறைஞ்சி நாளும் மகிழ்வார்க் கருள்கூட***
***உம்பர் போற்றுந் தானங்கள் பலவும் பணிந்து போந்தணைவார்***
***இம்பர் வாழ இன்னம்பர் நகரைச் சேர எய்தினார்.*** ***94***

(இ - ள்.) சிவந்த பொன்மயமாகிய மேருவை வில்லாக வளைத்தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருவாறைமேற் றளியில் அவ்வெம்பெருமானது திருவடிகளை வணங்கி நாள் தோறு மகிழ்கூர்ந்திருக்கு மவர்க்குத் திருவருள்கைகூட, அதனால், தேவர்களும் போற்றுகின்ற பல திருப்பதிகளையும் வணங்கிச் செல்கின்ற ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் இவ்வுலகத் தார் வாழும்படி திருவின்னம்பரென்னுந் திருப்பதியை யடைந் தருளினார். - எ - று.

***ஏரின் மருவும் இன்னம்பர் மகிழ்ந்த ஈசர் கழல்வணங்கி***
***ஆரும் அன்பிற் பணிந்தேத்தி ஆரா அருளால் அங்கமர்வார்***
***போரின் மலியுங் கரியுரித்தார் மருவும் புறம்ப யம்போற்றச்***
***சேரு உள்ளம் மிக்கெழ மெய்ப் பதிகம் பாடிச் செல்கின்றார்.*** ***95***

(இ - ள்.) அழகோடு விளங்குகின்ற திருவின்னம்பரை விரும்பியெழுந்தருளுஞ் சிவபெருமானது திருவடிகளை வணங்கிப் பொருந்திய அன்போடு பணிந்து துதித்து நீங்காத திருவருளினால் அங்கெழுந்தருளிய நம்பியாரூரர், போர் செய்தலிற் சிந்த கயாசுரனென்னும் யானையை யுரித்தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருப்புறம்பயமென்னுந் திருப்பதியைத் துதித்துப் பொருந்திய திருவுள்ளமானது அதிகரித்தெழ மெய்ம்மை பொருந்திய திருப்பதிகம்பாடிச் செல்வாராயினார். - எ - று.

***"அங்கம் ஓதியோர் ஆறை மேற்றளி" என்றெ டுத்தமர் காதலில்***
***பொங்கு செந்தமி ழால்விரும்பு "புறம்ப யந்தொழப் போதும்" என்***
***றெங்கும் மன்னிய இன்னி சைப்பதி கம்பு னைந்துடன் எய்தினார்*** ***96***
***திங்கள் சூடிய செல்வர் மேவு திருப்பு றம்பயஞ் சேரவே.***

(இ - ள்.) "அங்கமோதியோராறைமேற்றளி" என்று முதலெடுத்துப் பொருந்திய அன்பினால் விளங்கும் இனிய தமிழினால் யாவரும் விரும்புகின்ற "புறம்பயந்தொழப்போதும்" என்று இறுதியிலமைத்து, எங்கும் விளங்குகின்ற இனிய இசை பொருந்திய திருப்பதிகம் பாடியருளி, அடியார்களுடன் சந்திரசேகரராகிய சிவபெருமானெழுந்தருளுந் திருப்புறம்பய மென்னுந் திருப்பதியைச் சாரவந்தருளினார். - எ - று.

***அப்ப திக்கண் அமர்ந்த தொண்டரும் "அன்று வெண்ணெய்நல்லூரினில்***
***ஒப்ப ருந்தனி வேதி யன்பழ ஓலை காட்டிநின் றாண்டவர்***
***இப்ப திக்கண்வந் தெய்த என்ன தவங்கள்" என்றெதிர் கொள்ளவே***
***முப்பு ரங்கள் எரித்த சேவகர் கோயில் வாயிலின் முன்னினார். 97***

(இ - ள்.) அத்திருபுறம்பயமென்னும் திருப்பதியில் வாழ்கின்ற அடியார்களும், அந்நாளில் திருவெண்ணெய் நல்லூரில் ஒப்பற்ற (சிவபெருமானாகிய) விருத்த வேதியர் பழைய முறியோலையைக் காட்டி (திருமணத்தைத் தடுத்து) நின்று அடிமை கொள்ளப் பெற்றவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் இத்திருப்பதியி லெழுந்தருளுதற்கு யாங்களென்ன தவத்தைச் செய்தோமென்று அவரை யெதிர்கொண்டுவர, தாமும் திரிபுரதகனராகிய சிவ பெருமானது திருக்கோயிற் றிருவாயிலின் முன்பு வந்தருளினார்- எ - று.

***நீடு கோபுர முன்பி றைஞ்சி நிலாவு தொண்டரொ டுள்ளணைந்***
***தாடல் மேவிய அண்ண லாரடி போற்றி அஞ்சலி கோலிநின்(று)***
***ஏடு லாமலர்தூவி எட்டினொ டைந்து மாகும் உறுப்பினால்***
***பீடு நீடு நிலத்தின் மேற்பெரு கப்ப ணிந்து வணங்கினார். 98***

(இ - ள்.) உயர்ந்த திருக்கோபுரத்தை முன்னே வணங்கி விளங்குகின்ற அடியார்களோடு உள்ளே சென்று, நிருத்த மூர்த்தியாகிய சிவபெருமானது திருவடிகளைத் துதித்து அஞ்சலியஸ்தராய் நின்று இதழலர்ந்த மலர்களைக் கொண்ட ருச்சித்து அஷ்டாங்க பஞ்சாங்கமாகப் பூமியில் மிகுதியாகப் பணிந்து தொழுதார். - எ - று.

***அங்கு நீடருள் பெற்றுள் ஆர்வம் மிக்பெழிந்தெழும் அன்பினால்***
***பொங்கு நாண்மலர்ப்பாத முன்பணிந் தேத்தி மீண்டும் புறத்தணைந்து***
***எங்கு மாகி நிறைந்து நின்றவர் தாம கிழ்ந்த இடங்களில்***
***தங்கு கோலம் இறைஞ்சு வார்அருள் தாவில் அன்பரோ டெய்தினார். 99***

(இ - ள்.) அங்குச் சிவபெருமான் றிருவருளைப் பெற்றுத் தமதுள்ளத்துப் பெருவிருப்பானது அதிகரித்தெழுகின்ற பேரன்பினால், சிறந்த புதிய தாமரை மலர் போன்ற திருவடிகளை முன்னே வணங்கித் துதித்து, மீண்டு புறத்திற் சென்று எங்கும் வியாபித்து நின்ற சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளுந் திருப்பதி களில் பொருந்திய திருக்கோலத்தைை வணங்க விரும்பினவ ராய்த் திருவருணிறைந்த அடியார்களோடும் அடைந்தருளினார். - எ - று.

***வம்புநீ டலங்கல் மார்பின் வன்றொடர் வன்னி கொன்றை***
***தும்பைவெள் ளடம்பு திங்கள் தூயநீ ரணிந்த சென்னித்***
***தம்பிரான் அமர்ந்த தானம் பலபல சார்ந்து தாழ்ந்து***
***கொம்பினார் ஆடல் நீடு கூடலை யாற்றூர் சார. 100***

(இ - ள்.) மணம் வீசுகின்ற மலர் மாலையைத் தரிசித்த திருமார்பினையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள், வன்னிப் பத்திரமுங் கொன்றை மலருந் தும்பை மலரும் வெள்ளிய அடம்பமலரும் இளம்பிறையும் தூய்மையாகிய கங்கை நதியுமாகிய இவைகளையணிந்த திருமுடியையுடைய சிவபெருமானெழுந்தருளிய பற்பல திருப்பதிகளை யடைந்து வணங்கி, பூங்கொம்பு போன்ற மாதர்கள் நடனஞ் செய்கின்ற திருக்கூடலையாற்றூரையடைய. - எ - று.

***செப்பரும் பதியில் சேரார்திருமுது குன்றை நோக்கி***
***ஒப்பரும் புகழார் செல்லும் ஒருவழி உமையா ளோடு***
***மெய்ப்பரம் பொருளாய் உள்ளார் வேதிய ராகி நின்றார்***
***முப்புரி நூலுந் தாங்கி நம்பியா ரூரர் முன்பு. 101***

(இ - ள்.) ஒப்பற்ற புகழையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் சொல்லுதற்கரிய அத்திருக்கூடலையாற்றூரிற் சேராமல் ஸ்ரீ விருத்தாசலமென்னுந் திருப்பதியைக் கருதிப் போகின்ற மார்க்கத்தில், உண்மைப் பொருளாகிய சிவபெருமான் உமா தேவியாரோடு ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு முன்னே பூணூலையணிந்து பிராமணத் திருவுருவங் கொண்டு நின்றருளி னார். - எ - று.

***நின்றவர் தம்மை நோக்கி நெகிழ்ந்தசிந் தையராய்த் தாழ்வார்***
***'இன்றியாம் முதுகுன் றெய்த வழிஎமக் கியம்பும்' என்னக்***
***குன்றவில் லாளி யாரும் "கூடலை யாற்றூர் ஏறச்***
***சென்றதிவ் வழிதான்" என்று செல்வழித் துணையாய்ச் செல்ல. 102***

(இ - ள்.) அவ்வாறு நின்ற சிவபெருமானாகிய வேதியரைப் பார்த்து உருகிய மனமுடையவராய் வணங்கும் நம்பியாரூரர் யாம் இன்று விருத்தாசலத்திற்குச் செல்ல எமக்கு மார்க்கத்தைச் சொல்லுமென்று கேட்க, மேரு மலையை வில்லாக வுடைய சிவபெருமானாகிய வேதியரும் இம்மார்க்கம் திருக்கூடலை யாற்றூரையடையச் சென்றதென்று அவர்க்கு வழித்துணை யாகச் செல்ல - எ - று.

**கண்டவர் கைகள் கூப்பித் தொழுதுபின் தொடர்வார்க் காணார்**
**வண்டலர் கொன்றை யாரை "வடிவுடை மழு" என் றேத்தி**
**"அண்டர்தம் பெருமான் போந்த அதிசயம் அறியேன்" என்று**
**கொண்டெழும் விரும்பி னோடுங் கூடலை யாற்றூர் புக்கார். 103**

(இ - ள்.) அவரைப் பார்த்த ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் தமது திருக்கரங்களைக் கூப்பித் தொழுது, தமக்கு வழித் துணையாகச் செல்லுஞ் சிவபெருமானாகிய வேதியரைக் காணாமல், வண்டுகள் சப்திக்கின்ற கொன்றை மாலையை யணிந்த சிவபெருமானை "வடிவுடைமழு" என்று திருப்பதிகமுத லெடுத்துத் துதித்துத் தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் "போந்தவதிசயமறியேன்" என்று இறுதியிலமைத்துத் தமதுள் ளத்திற் குறித்தெழுகின்ற பெருவிருப் போடுந் திருக்கூடலை யாற்றூரை யடைந்தருளினார். - எ - று.

**கூடலை யாற்றூர் மேவுங் கொன்றைவார் சடையி னார்தம்**
**பீடுயர் கோயில் புக்குப் பெருகிய ஆர்வம் பொங்க**
**ஆடகப் பொதுவில் ஆடும் அறைகழல் வணங்கிப் போற்றி**
**நீடருள் பெற்றுப் போந்து திருமுது குன்றில் நேர்ந்தார். 104**

(இ - ள்.) திருக்கூடலையாற்றூரில் வீற்றிருந்தருளுங் கொன்றை மாலையை யணிந்த சடைமுடியையுடைய சிவ பெருமானது பெருமைமிக்க திருக்கோயிலை யடைந்து மிகுந்த பேரன்பு அதிகரிக்க, கனகசபையில் ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளிய சப்திக்கின்ற வீரக்கழலை யணிந்த திருவடியை வணங்கித் துதித்து மிக்க திருவருள் பெற்று அங்கு நின்றுஞ் சென்று, ஸ்ரீ விருத்தாசலத்தை யடைந்தருளினார். - எ - று.

**தடநிலைக் கோபு ரத்தைத் தாழ்ந்துமுன் இறைஞ்சிக் கோயில்**
**புடைவலங் கொண்டு புக்குப் போற்றினார் தொழுது வீழ்ந்து**
**நடநவில் வாரை "நஞ்சி யிடை" எனுஞ் செஞ்சொன் மாலைத்**
**தொடைநிகழ் பதிகம் பாடித் தொழுதுகை சுமந்து நின்று. 105**

(இ - ள்.) விசாலமாகிய உயர்ந்த நிலைகளையுடைய திருக்கோபுரத்தைச் சாஷ்டாங்கமாக வணங்கி முன்னின்று தொழுது திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ் செய்து உள்ளே புகுந்து துதித்து விழுந்து வணங்கி, தாண்டவமூர்த்தியாகிய ஸ்ரீபழமலைநாதரை "நஞ்சியிடை" என்னு முதலையுடைய செவ்விய சொற்களாலாகிய திருப்பதிகமாலையைப் பாடித் தொழுது, தமது திருக்கரங்களை அஞ்சலியாகக் கூப்பிநின்று. - எ - று.

***நாதர்பால் பொருள்தாம் வேண்டி நண்ணிய வண்ணம் எல்லாம்***
***கோதறு மனத்துட் கொண்ட குறிப்பொடும் பரவும்போது***
***தாதவிழ் கொன்றை வேய்ந்தார் தரஅருள் பெறுவார்சைவ***
***வேதியர் தலைவர் மீண்டும் "மெய்யில்வெண் பொடி"யும் பாட. 106***

(இ - ள்.) ஆதி சைவ வேதியர்குலத் தலைவராகிய ஸ்ரீ சுந்தர மூர்த்தி சுவாமிகள் சிவபெருமானிடத்துப் பொருளைவிரும்பித் தாம்வந்த வரலாறனைத்துங் குற்றமற்ற திருவுள்ளத்திற் கொண்ட குறிப்பினால் துதிக்கும்பொழுது, மகரந்தங்கள் சிந்துகின்ற கொன்றை மலர் மாலையை யணிந்த சிவபெருமான் அப் பொருள் கொடுத்தற் கேதுவாகிய திருவருளைப் பெறுகின்றவ ராய், மீண்டும் "மெய்யை முற்றப் பொடிபூசி" என்னு முதலை யுடைய திருப்பதிகத்தையும் பாடியருள. - எ - று.

***பனிமதிச் சடையார் தாமும் பன்னிரண் டாயி ரம்பொன்***
***நனியருள் கொடுக்கும் ஆற்றால் நல்கிட உடைய நம்பி***
***தனிவரும் மகிழ்ச்சி பொங்கத் தாழ்ந்தெழுந் தருகு சென்று***
***கனிவிட மியற்றி னார்முன் பின்னொன்று கழற லுற்றார். 107***

(இ - ள்.) குளிர்ந்த சந்திரனையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானும் பன்னிரண்டாயிரம் பொன்னை மிக்க திருவரு ளோடு கொடுத்தருளவும், நம்மையடிமையாகவுடைய ஸ்ரீ சுந்தர மூர்த்தி சுவாமிகள் ஒப்பற்ற மகிழ்ச்சி யதிகரிக்க வணங்கி யெழுந்து, சிவபெருமானருகிற் சென்று கொடுமை முதிர்ந்த விடத்தை யணிந்த கண்டத்தையுடைய அவவெம்பெருமான் திருமுன்னின்று பின்னொன்று சொல்லத் தொடங்குகின்றார். - எ - று.

***"அருளும்இக் கனக மெல்லாம் அடியனேற் காரூர் உள்ளோர்,***
***மருளுற வியப்ப அங்கே வரப்பெற வேண்டும்" என்னத்***
***தெருளுற எழுந்த வாக்கால் "செழுமணி முத்தாற் றிட்டிப்***
***பொருளினை முழுதும் ஆரூர்க் குளத்திற்போய்க் கொள்க"என்றார். 108***

(இ - ள்.) தேவரீர் கொடுத்தருளிய இப்பொன் முழுவதையும் அடியேனுக்காகத், திருவாரூரிலுள்ளவர்கள் மயங்கவும், வியப் படையவும் அங்கு வரும்படி செய்தருளவேண்டுமென்று வேண்டவும், (அப்பொழுது சிவபெருமான்) யாவரு முணரும் படி யெழுந்த அசரீரி வாக்கினால் (இப் பொன்னைச்) செழிய மணிமுத்தாநதியிலிட்டு முழுவதுந் திருவாரூரர்த் திருக்குளத்திற் சென்று நீ பெற்றுக் கொள்க வென்று அருளிச் செய்தார். -எ-று.

**என்றுதம் பிரானார் நல்கும் இன்னருள்பெற்ற பின்னர்**
**வன்றொண்டர் மச்சம் வெட்டிக் கைக்கொண்டு மணிமுத்தாற்றில்**
**பொன்றிரள் எடுத்து நீருள் புகவிட்டுப் போதுகின்றார்**
**"அன்றெனை வலிந்தாட் கொண்ட அருள்இதில் அறிவேன்" என்று. 109**

(இ - ள்.) இவ்வாறு சிவபெருமானருளிய இனிய திருவருளைப் பெற்ற பின்பு, ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் மச்சம் வெட்டி யெடுத்துக் கொண்டு அப்பொற்குவைகளை யெடுத்து மணிமுத்தாநதி நீருட் புகும்படி விட்டு, அந்நாளில் என்னைத் தடுத்தடிமை கொண்டருளிய திருவருட் பெருமையை இதனா லறியக் கடவேனென்று செல்வாராயினார். - எ - று.

**மேவிய காதல் தொண்டு விரவுமெய் விருத்தி பெற்றார்**
**"ஆவியின் விருத்தி யான அந்தணர் புலியூர் மன்றில்**
**காவியங் கண்டர் கூத்துக் கண்டுகும் பிடுவ" தென்று**
**வாவிசூழ் தில்லை மூதூர் வழிக்கொள்வான் வணங்கிப் போந்தார். 110**

(இ - ள்.) அன்போடு கூடிய திருத்தொண்டு செய்யும் மெய்ம்மையாகிய சித்தவிருத்தியைப் பெற்ற ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள், அவிப்பாகங் கொடுப்பதில் விருத்தி பெற்றவர்களா யுள்ள வேதியர்கள் வாழ்கின்ற ஸ்ரீசிதம்பரத்திலுள்ள கனகசபை யில் காளகண்டராகிய ஸ்ரீநடராசப் பெருமான் செய்தருளும் ஆனந்தத் தாண்டவத்தைத் தரிசித்து வணங்குவேனென்று, தடாகங்கள் சூழ்ந்த பழமையாகிய அச்சிதம்பரத்தையடையும் படி திருமுதுகுன்றை வணங்கிச் சென்றருளினார். - எ - று.

**மாடுள பதிகள் சென்று வணங்கிப்போய் மங்கை பாகர்**
**நீடிய கடம்பூர் போற்றி நிறைந்தஆ னந்தக் கூத்தர்**
**ஆடிய தில்லை மூதூர் அணைந்தணி வாயில் புக்குச்**
**சேடுயர் மாடம் மன்னுஞ் செழுந்திரு வீதி சார்ந்தார். 111**

(இ - ள்.) பக்கங்களிலுள்ள திப்பதிகளையடைந்து வணங்கிச் சென்று, பார்வதி பாகராகிய சிவபெருமான் சிறந்து வீற்றிருந் தருளிய திருக்கடம்பூரை வணங்கி, எங்கும் நிறைந்த ஆனந்தத்

தாண்டவமூர்த்தியாகிய சிவபெருமான் திருநடனஞ் செய் தருளும் பழமை பொருந்திய தில்லைப்பதியை யடைந்து அழகிய புறத்திருவாயிலிற்புகுந்து, மிகவு முயர்ந்த மாளிகைகள் பொருந் திய சிறந்த திருவீதியை யடைந்தருளினார். - எ - று.

**பொற்றிரு வீதி தாழ்ந்து புண்ணிய விளைவாய் ஓங்கும்**
**நற்றிரு வாயில் நண்ணி நறைமலி அலங்கல் மார்பர்**
**மற்றதன் முன்பு மண்மேல் வணங்கிஉட் புகுந்து பைம்பொற்**
**சுற்றுமா ளிகைசூழ் வந்து தொழுதுகை தலைமேற் கொள்வார். 112**

(இ - ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அழகிய திருவீதியை வணங்கி, சிவபுண்ணியத்தின் விளைவு போன்றுயர்ந்த நல்ல திருக்கோயிற்றிருவாயிலையடைந்து அத்திருவாயிலின்முன்னே பூமியில் சாஷ்டாங்கமாக வணங்கியுள்ளே புகுந்து, பசும்பொன் மயமாகச் சூழ்ந்த திருமாளிகையைப் பிரதட்சணஞ் செய்து வணங்கிக் கைகளைச் சிரத்திற்குவித்து அஞ்சலி செய்வாரா யினார். - எ - று.

**ஆடிய திருமுன பான அம்பொனின் கோபுர ரத்தின்**
**ஊடுபுக் கிறைஞ்சி ஓடும் ஒலிவளர் கனக மன்றில்**
**நாடகச் செய்ய தாளை நண்ணுற உள்நி றைந்து**
**நீடும்ஆ னந்த வெள்ளக் கண்கள்நீர் நிரந்து பாய. 113**

(இ - ள்.) ஸ்ரீநடராசப் பெருமான் திருநடனஞ் செய்தருளுந் திருமுன்னேயிருக்கும் அழகிய பொன்மயமாகிய திருக்கோபுரத் தினுள்ளே புகுந்து வணங்கி, மிக்க வொளிவீசுகின்ற கனகசபை யில் ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளுஞ் சிவந்த திருவடிகளை யடையும்பொழுது, தம்முள்ளே நிறைந்து பெருகுகின்ற பேரின்ப வெள்ளமாகிய ஆனந்தக் கண்ணீர் திருமேனியிற் பரவிப்பாயும் படி. - எ - று.

**பரவுவாய் குளறிக் காதல் படிதிருப் படியைத் தாழ்ந்து**
**விரவுமெய் அங்கம் ஐந்தும் எட்டினும் வணங்கி வேட்கை**
**உரனுறு திருக்கூத் துள்ளம் ஆர்தரப் பெருகி நெஞ்சில்**
**கரவிலா தவரைக் கண்ட நிறைவுதங் கருத்திற் கொள்ள. 114**

(இ - ள்.) துதிக்கின்ற வாய்குளறி விருப்பம் பொருந்திய திருப்படியை வணங்கிப் பொருந்திய பஞ்சாங்க அட்டாங்கமாக வணங்கி, விருப்பமிக்க திருநடனத்தைத் திருவுள்ள நிரம்பப் பருகி, தமதுள்ளத்தில் வெளிப்பட்டு நிற்கும் அவ்வெம்பெருமானைத் தரிசித்த பேரானந்த நிறைவானது தமதுள்ளத்திற் பொருந்த. - எ - று.

**"மடித்தாடும் அடிமைக்கண்" என்றெடுத்து மன்னுயிர்கட் கருளும் ஆற்றால்**
**அடுத்தாற்று நன்னெறிக்கண் நின்றார்கள் வழுவிநர கணையா வண்ணம்**
**தடுப்பானைப் பேரூரிற் கண்டநிலை சிறப்பித்துத் தனிக்கூத் தென்றும்,**
**நடிப்பானை நாம்மனமே பெற்றவா றெனுங் களிப்பால் நயந்து பாடி. 115**

(இ - ள்.) "மடித்தாடுமடிமைகள்" என்று தொடங்கி, நிலை பெற்ற ஆன்மகோடிகளுக்கு அருளும் முறைமைப்படி, சேர்ந்து நல்லொழுக்கத்தினின்றாலும் ஒரு சிறிது வழுவினார்கள் அப் பயனையடையாத வண்ணமாகத் தடுப்பவரைத் தாம் திருப் பேரூரென்னுந் திருப்பதியில்தரிசித்த நிலைமைய அத்திருப் பதிகத்தில் சிறப்பித்து, ஒப்பற்ற திருக்கூத்தை அனவரதமுஞ் செய்தருளும் எம்பெருமானை நாம் மனமே வண்ணமென்று கருதுங் களிப்பபினால் விரும்பிப் பாடியருளி. - எ - று.

**மீளாத அருள்பெற்றுப் புறம்போந்து திருவீதி மேவித் தாழ்ந்தே**
**ஆளான வன்றொண்டர் அந்தணர்கள் தாம்போற்ற அமர்ந்து வைகி**
**மாளாத பேரன்பாற் பொற்பதியை வணங்கிப்போய் மறலி வீழத்**
**தாளாண்மை கொண்டவர்தம் கருப்பறிய லூர்வணங்கிச் சென்று சார்ந்தார். 116**

(இ - ள்.) அன்பராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் நீங்காத திருவருளைப் பெற்று, புறத்திற் சென்று திருவீதியை யடைந்து வணங்கி, வேதியர்கள் தம்மைத் துதிக்க அங்குவிரும்பி வசித்தருளி, கெடாத பேரன்பினால் அழகிய அத்திருப்பதியை வணங்கிச் சென்று, இயமன் விழும்படி தமது திருவடியாலுதைத் தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கருப்பறியலூ ரென்னுந் திருப்பதியை வணங்கிச் சென்றடைந்தருளினார். - எ - று.

**கூற்றுதைத்தார் திருக்கொகுடிக் கோயில் நண்ணிக் கோபுரத்தைத் தொழுதுபுகுந் தன்பர் சூழ**
**ஏற்றபெருங் காதலினால் இறைஞ்சி ஏத்தி எல்லையிலாப் பெருமகிழ்ச்சி மனத்தில் எய்தப்**
**போற்றிசைத்துப் புறத்தணைந்தப் பதியில் வைகிப் புனிதரவர் தமைநினையும் இன்பங் கூறிச்**
**சாற்றியமெய்த் திருப்பதிகம் "சிம்மாந்(து)" என்னும் தமிழ்மாலை புனைந்தங்குச் சாரு நாளில். 117**

(இ - ள்.) இயமனையுதைத்தருளிய சிவபெருமான் வீற்றிருந் தருளுந் திருக்கொகுடிக்கோயிலென்னும் ஆலயத்தை யடைந்து திருக்கோபுரத்தை வணங்கி அடியார்கள் சூழ்ந்துவர உள்ளே புகுந்து, பொருந்திய பேரன்போடு வணங்கித் துதித்து, அளவற்ற பெருங்களிப்பானது மனதிற் பொருந்தத் துதித்து, புறத்திற் சென்று அத்திருப்பதியில் வசித்து, சிவபெருமானைத் தியானித் தலாலுண்டாகிய பேரின்பத்தைக் கூறிப் பாடியருளிய மெய்ம்மையான திருப்பதிகமாகிய "சிம்மாந்து" என்னு முதலை யுடைய தமிழ்ப் பாமாலையைப் பாடியருளி அங்கு வீற்றிருந் தருளும் நாள்களில். - எ - று.

***கண்ணுதலார் விரும்புகருப் பறிய லூரைக் கைதொழுது நீங்கிப்***
***போய்க் கயல்கள் பாயும்***
***மண்ணிவளம் படிக்கரையை நண்ணி அங்கு மாதொருபா கத்தவர்தாள்***
***வணங்கிப் போற்றி***
***எண்ணில்புகழ்ப் பதிகமும் "முன் னவன்" என் றேத்தி ஏகுவார்***
***வாழ்கொளிபுத் தூர்எய் தாது***
***புண்ணியனார் போம்பொழுது நினைந்து மீண்டு புகுகின்றார்***
***"தலைக்கலன்" என் றெடுத்துப் போற்றி. 118***

(இ - ள்.) புண்ணியசொரூபராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள், சிவபெருமானெழுந்தருளிய திருக்கருப்பறியலூரை வணங்கி, அவ்விடத்தினின்று நீங்கிச் சென்று, கயல்மீன்கள் பாய்கின்ற வளவிய திருப்பழமண்ணிப் படிக்கரையை யடைந்து! அங்குச் சிவபெருமான் திருவடிகளை வணங்கித் துதித்து, அளவற்ற புகழையுடைய திருப்பதிகத்தையும் "முன்னவன்" என்று முதலெடுத்துத் துதித்து அங்கு நின்றுஞ் செல்கின்றவர், திருவாழ்கொளிபுத்தூ ரென்னுந் திருப்பதியை யடையாது செல்லும்பொழுது, பின் அதை நினைந்து, "தலைக்கலன்" என்று முதலெடுத்துத் திருப்பதிகம் பாடித் துதித்து, அதனைத் திரும்பப் புகுகின்றவராயினார். - எ - று.

***திருப்பதிகம் பாடியே சென்றங் கெய்தித் தேவர்பெரு மானார்தம்***
***கோயில் வாயில்***
***உருப்பொலியும் மயிர்ப்புளகம் விரவத் தாழ்ந்தே உள்ளணைந்து***
***பணிந்தேத்தி உருகும் அன்பால்***
***பொருப்பரையன் மடப்பாவை இடப்பா லானைப் போற்றிசைத்துப்***
***புறம்போந்து தங்கிப் பூமென்***
***கருப்புவயல் வாழ்கொளிபுத் தூரை நீங்கிக் கானாட்டு முள்ளூரிற்***
***கலந்தபோது. 119***

(இ - ள்.) திருப்பதிகம் பாடியருளி அங்குச் சென்று சேர்ந்து, தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது திருக்கோயிற் றிருவாயிலில், திருமேனியில் விளங்குகின்ற மயிர்ப் புளகமடைய வணங்கி யுள்ளே சென்று பணிந்து துதித்து, மனமுருகுகின்ற பேரன்பினால் பர்வதராச புத்திரியாகிய உமாதேவியாரை இடப் பாகத்திலுடைய சிவபெருமானைத் துதித்துப் புறத்திற் சென்று அங்கு வீற்றிருந்து, பொலிவு தங்கிய மிருதுவாகிய கரும்பு வயல்கள் சூழ்ந்த திருவாழ்கொளிபுத்தூரை விட்டு நீங்கித் திருக்கானாட்டு முள்ளூர் என்னுந் திருப்பதியை யடைந்த பொழுது. - எ - று.

***கானாட்டு முள்ளூரைச்சாரும் போது கண்ணுதலார் எதிர்காட்சி***
***கொடுப்பக் கண்டு***
***"தூநாண்மென் மலர்க்கொன்றைச் சடையார் செய்ய துணைப்பாத***
***மலர்கண்டு தொழுதேன்" என்று***
***வானாளுந் திருப்பதிகம் "வள்வாய்" என்னும் வண்டமிழின்***
***தொடைமாலை மலரச் சாத்தித்***
***தேனாரும் மலர்ச்சோலை மருங்கு சூழ்ந்த திருஎதிர் கொள் பாடியினை***
***எய்தச் செல்வார். 120***

(இ - ள்.) திருக்கானாட்டு முள்ளூரை யடையும்பொழுது, சிவபெருமான் தம்மெதிரே காட்சி கொடுத்தருளத் தரிசித்து, தூய்மையாகிய புதிய மெல்லிய கொன்றை மலரை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானது செந்தாமரை மலர் போன்ற இரண்டு திருவடிகளைத் தரிசித்துத் தொழுதேனென்று சிறந்த திருப்பதிகமாகிய "வள்வாய்" என்னு முதலையுடைய வளவிய தமிழ் மாலையை விளங்கத்தரித்து, தேன்பொருந்திய மலர்கள் நிறைந்த சோலைகள் பக்கங்களிற் சூழ்ந்த திருஎதிர் கொள்பாடி என்னுந் திருப்பதியை யடையச் செல்வாராயினார்.- எ - று.

***எத்திசையுந் தொழுதேத்த "மத்த யானை" எடுத்(து) "எதிர்கொள்***
***பாடியினை அடைவோம்" என்னும்***
***சித்தநிலைத் திருப்பதிகம் பாடிவந்து செல்வமிகு செழுங்கோயில்***
***இறைஞ்சி நண்ணி***
***அத்தர்தமை அடிவணங்கி அங்குவைகி அருள்பெற்றுத் திருவேள்விக்***
***குடியில் எய்தி***
***முத்திதரும் பெருமானைத் துருத்தி கூட "மூப்பதிலை" எனும் பதிகம்***
***மொழிந்து வாழ்ந்தார். 121***

(இ - ள்.) எத்திசையிலுள்ளவர்களும் வணங்கித் துதிக்க, "மத்தயானை" என்று முதலெடுத்து, "எதிர்கொள்பாடியென் பதடைவோம்" என்னு மிறுதியையுடைய மனவுறுதியைத் தரத்தக்கதாகிய திருப்பதிகத்தை யருளிச் செய்து வந்து, செல்வங்கள் நிறைந்த திருக்கோயிலை வணங்கி யுள்ளே புகுந்து சிவபெருமான் திருவடிகளை வணங்கி யங்குத் தங்கித் திருவருள் பெற்று, திருவேள்விக் குடியென்னுந் திருப்பதியிற் சென்று, அடியார்களுக்குப் பரமுத்தியைத் தந்தருளுஞ் சிவபெருமானைத் திருத்துருத்தியோடு கூட வமைத்து "மூப்பதுமில்லை" என்னு முதலையுடைய திருப்பதிகத்தைப் பாடியருளி, அங்கு வசித் தருளினார். - எ - று.

***காட்டுநல் வேள்விக் கோலங் கருத்துற வணங்கிக் காதல்***
***நாட்டிய உள்ளத் தோடு நம்பிஆ ரூரர் போற்றி***
***ஈட்டிய தவத்தோர் சூழ அங்குநின் றேகி அன்பு***
***பூட்டிஆட் கொண்டார் மன்னும் தானங்கள் இறைஞ்சிப் போந்து. 122***

(இ - ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் தமக்குச் சிவ பெருமான் தரிசனங் கொடுத்தளிய திருவேள்விக்குடியி லெழுந்தருளிய திருக்கோலத்தைக் கருத்திற் பொருந்த வணங்கிப் பேரன்பு பொருந்திய திருவுள்ளத்தோடுந் துதித்து, அருமை யாகச் செய்த தவத்தினையுடைய அடியார்கள் தம்மைச் சூழ்ந்துவர அத்திருப்பதியினின்று நீங்கி, தமக்கு அன்பை விளைவித்துத் தடுத்தடிமை கொண்டருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளையும் வணங்கிச் சென்றருளி:- எ - று.

***எஞ்சாத பேரன்பில் திருத்தொண்டர் உடனெய்தி***
***நஞ்சாருங் கறைமிடற்றார் இடம்பலவும் நயந்தேத்தி***
***மஞ்சாரும் பொழிலுடுத்த மலர்த்தடங்கள் புடைசூழும்***
***செஞ்சாலி வயல்மருதத் திருவாரூர் சென்றடைந்தார். 123***

(இ - ள்.) விஷம் பொருந்திய கண்டத்தையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளையும் நிறைந்த பேரன்பினையுடைய அடியார்களோடுஞ் சென்று விரும்பித் துதித்து, மேகங்கள் தவழுஞ் சோலைகளையுடைய தாமரைத் தடாகங்கள் பக்கங்களிற் சூழ்ந்த செந்நெற் பயிர்களையுடைய வயல்கள் நெருங்கிய மருதநிலமாகிய திருவாரூரைச் சென்று சேர்ந்தருளினார். - எ - று.

**செல்வமலி திருவாரூரர்த் தேவரொடு முனிவர்களும்**
**மல்குதிருக் கோபுரத்து வந்திறைஞ்சி உள்புக்கங்(கு)**
**எல்லையிலாக் காதல்மிக எடுத்தமலர்க் கைகுவித்துப்**
**பல்குதிருத் தொண்டருடன் பரமர்திரு முன்அணைந்தார். 124**

(இ - ள்.) பலவகைச் செல்வங்கள் நிறைந்த திருவாரூரில், தேவர்களும் முனிவர்களும் நெருங்கிய திருக்கோபுரத்தை யடைந்து வணங்கி யுள்ளே புகுந்து, அங்கே அளவில்லாத பேரன்பு அதிகரிக்கச் சிரசின்மேலெடுத்த திருக்கரங்களைக் குவித்து, நெருங்கிய திருத்தொண்டர்களோடுஞ் சிவபெருமான் திருமுன்னே யடைந்தருளினார்.- எ - று.

**மூவாத முதலாகி நடுவாகி முடியாத**
**சேவாருங் கொடியாரைத் திருமூலட் டானத்துள்**
**ஓவாத பெருங்காத லுடன் இறைஞ்சிப் புறம்போந்து**
**தாவாத புகழ்ப்பரவை யார்திருமா ளிகைசார்ந்தார். 125**

(இ - ள்.) கெடாத முதல்வராகியும், எப்பொருட்கும் அந்தரியமியாகியும், முடிவற்ற பரம்பொருளாகியுமுள்ள இடபக் கொடியயையுடைய சிவபெருமானைத் திருமூலட்டானத்தில் நீங்காத பேரன்போடும் வணங்கிப் புறத்திற் சென்ற, அழியாத புகழையுடைய பரவை நாச்சியாரது திருமாளிகையை யடைந்தருளினார். - எ - று.

**பொங்குபெரு விருப்பினொடு புரிகுழலார் பலர்போற்றப்**
**பங்கயக்கண் செங்கனிவாய்ப் பரவையார்அடிவணங்கி**
**"எங்களையும் நினைந்தருளிற்" றெனஇயம்ப இனிதளித்து**
**மங்கைநல்லார் அவரோடு மகிழ்ந்துறைந்து வைகுநாள். 126**

(இ - ள்.) மிக்க பெருவிருப்போடும் பின்னிய கூந்தலை யுடைய பலமாதர்கள் துதிக்க, தாமரை மலர் போன்ற கண்ணை யும், சிவந்த கொவ்வைக் கனி போன்ற வாயையுமுடைய பரவை நாச்சியர் அவரது திருவடிகளில் வணங்கி எங்களையும் (இத்தனைநாள் சென்று) நினைத்தருளிய தென்னென்று கூற, அவ்வம்மையாருக்கு) இனிய வர்த்தைகளைக் கூறி, அப்பரவை நாச்சியாரோடு மகிழ்வுடன் வீற்றிருந்தருளும் நாள்களில். - எ-று.

**"நாயனார் முதுகுன்றர் நமக்களித்த நன்னிதியம்**
**தூயமணி முத்தாற்றிற் புகவிட்டோம்; துணைவரவர்**
**கோயிலின்மா மளிகைமேல்பாற் குளத்தில்அவர் அருளாலே**
**போயெடுத்துக் கொடுபோதப் போதுவாய்"எனப்புகல. 127**

(இ - ள்.) முதல்வராகிய முதுகுன்றநாதர் நமக்குக் கொடுத் தருளிய சிறந்த பொருளைத் தூய்மையாகிய மணிமுத்தா நதியில் புகவிட்டோம்; அப்பொருளை அவ்வெம்பெருமானனது திருக்கோயிற்றிருமாளிகைக்கு மேற்றிசையிலுள்ள கமலாலயத் தீர்த்தத்தில் அவரது திருவருளினால் போய் எடுத்துக்கொண்டு வர, எம்முடன் வருவாயாகவென்று கூறியருள. - எ - று.

***"என்னஅதி சயம்இதுதான்? என்சொன்ன வா"றென்று***
***மின்னிடையார் சிறுமுறுவ லுடன்விளம்ப மெய்யுணர்ந்தார்***
***"நன்னுதலாய்! என்னுடைய நாதன்அரு ளாற்குளத்தில்***
***பொன்னடைய எடுத்துனக்குத் தருவதுபொய் யா"தென்று. 128***

(இ - ள்.) மின்னல்போலும் இடையினையுடைய பரவை நாச்சியார் இது என்ன அதிசயம்; தேவரீர் இவ்வாறு கூறி யருளியது யாதென்று புன்சிரிப்போடுங் கூற, அதனுண்மையை யுணர்ந்த ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள், அவரைப் பார்த்து நல்ல நெற்றியை யுடையாளே! எமது சிவபெருமான் றிருவருளினால் இத்திருக்குளத்தில் பொன்முழுவதுமெடுத்து உனக்குக் கொடுப்பது தவறாதென்று கூறியருளி. - எ - று.

***ஆங்கவரும் உடன்போத அளவிறந்த விருப்பினுடன்***
***பூங்கோயில் உள்மகிழ்ந்த புராதனரைப் புக்கிறைஞ்சி***
***ஓங்குதிரு மாளிகையை வலம்வந்தங் குடன்மேலைப்***
***பாங்குதிருக் குளத்தணைந்தார்; பரவையார் தனித்துணைவர். 129***

(இ - ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அப்பரவை நாச்சியாருந் தம்முடன்வர, அளவற்ற பெருவிருப்போடும், பூங்கோயிலினுள் வீற்றிருந்தருளும் ஸ்ரீ தியாகராசப் பெருமா னது திருவடிகளை யடைந்து வணங்கி, உயர்ந்த திருமாளிகை யைப் பிரதட்சணஞ் செய்து, உடனே மேற்பாலுள்ள திருக்குளத் தருகிற் சென்றருளினார். - எ - று.

***மற்றதனில் வடகீழ்பாற் கரைமீது வந்தருளி***
***முற்றிழையார் தமைநிறுத்தி முனைப்பாடித் திருநாடர்***
***கற்றைவார் சடையாரைக் கைதொழுது குளத்தில்இழிந்(து)***
***அற்றைநாள் இட்டெடுப்பார் போல்அங்கத் தடவுதலும். 130***

(இ - ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அத்திருக்குளத்தின் வடகிழக்குத் திசையில் வந்தருளி, பரவை நாச்சியாரைக் கரையில் நிறுத்தி, கற்றையாகிய நீண்ட சடைமுடியையுடைய சிவ

பெருமானைக் கைகூப்பி வணங்கி அத்திருக்குளத்திலிறங்கி அந்நாளில் போட்டு எடுப்பவர்போல அங்குத் தடவவும். - எ-று.

**நீற்றழகர் பாட்டுவந்து திருவிளையாட் டினில்நின்று**
**மாற்றுறுசெம் பொன்குளத்து வருவியா தொழிந்தருள**
**"ஆற்றினில்இட் டுக்குளத்தில் தேடுவீர்! அருள்இதுவோ**
**சாற்றும்?"எனக் கோற்றொடியார் மொழிந்தருளத் தனித்தொண்டர். 131**

(இ - ள்.) திருநீற்றழகராகிய சிவபெருமான் (ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளது) திருப்பாடலை விரும்பி, திருவிளையாடற் காரணமாக மாற்றுயர்ந்த பசும்பொன்னைத் திருக்குளத்தில் வருவியாதிருக்க, (அதனையுணர்ந்த) அழகிய வளையலணைந்த பரவை நாச்சியார் ஆற்றிலிட்டுக் குளத்தல் தேடுகின்றவரே! திருவருளிதுதானோ? கூறுமென்றுரைக்க, (அதைக்கேட்ட) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள். - எ - று.

**"முன்செய்த அருள்வழியே முருகலர்பூங் குழற்பரவை**
**தன்செய்ய வாயில்நகை தாராமே தாரும்"என**
**மின்செய்த நூல்மார்பின் வேதியர்தாம் முதுகுன்றில்**
**பொன்செய்த மேனியினீர் எனப்பதிகம் போற்றிசைத்து. 132**

(இ - ள்.) முன்பு (மணிமுத்தா நதியிலிட்டுத் திருவாரூர்த் திருக்குளத்திற்கொள்கவென்று அசரீரியாகக்) கூறியருளிய திருவருளின்படியே, வாசனை வீசுகின்ற மலர்களையணிந்த கூந்தலையுடைய பரவையாரது சிவந்தவாயில் நகைப்பு உண்டாகாமல் அப்பொன்னைக் கொடுத்தருளுமென்று, மின்னலைப் போல் விளங்கும் பூணூலையணிந்த திருமார்பினை யுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருமுதுகுன்றத்தில் வீற்றிருந்தருளும் "பொன்செய்தமேனியினீர்" என்று திருப்பதிக முதலெடுத்துத் துதித்து. - எ - று.

**முட்டஇமை யோர்அறிய முதுகுன்றில் தந்தபொருள்**
**சட்டநான் பெறாதொழிந்த தளர்வினால் கையறவாம்**
**இட்டளத்தை இவளெதிரே கெடுத்தருளும் எனுந்திருப்பாட்(டு)**
**எட்டளவும் பொன்காட்டா தொழிந்தருள ஏத்துவார். 133**

(இ - ள்.) எல்லாத் தேவர்களுமறியத் திருமுதுகுன்றத்தில் அடியேனுக்குக் கொடுத்தருளிய பொருள் முழுவதும் நான் அடையாதொழிந்த தளர்ச்சியினால் வருந்துந் துன்பத்தை இப் பரவையாருக்கு முன்னே நீக்கி யருளுமென்னுங்கருத்தை யுடைய எட்டுத் திருப்பாடல்கள் பாடும் வரையிலும் பொன்குளத்திற் காட்டாது ஒழிய, பின்னுந் துதிப்பாராய். - எ - று.

***"ஏத்தாதே இருந்தறியேன்" எனுந்திருப்பாட் டெவ்வுலகும்***
***காத்தாடும் அம்பலத்துக் கண்ணுளனாங் கண்ணுதலைக்***
***"கூத்தா!தந் தருளாய்இக் கோமளத்தின் முன்என்று***
***நீத்தாருந் தொடர்வரிய நெறிநின்றார் பரவுதலும். 134***

(இ - ள்.) "ஏத்தாதிருந்தறியேன்" என்று முதலையுடைய ஒன்பதாந் திருப்பாடலை, சர்வலோகங்களையுங் காத்துப் பஞ்ச கிருத்தியத் திருத்தாண்டவஞ் செய்தருளுங் கனகசபையில் வாழும் நெற்றிக் கண்ணராகிய சிவபெருமானை, இப்பரவையாருக்கு முன்னே, "கூத்தாதந்தருளாய்" என்று இறுதியிலமைத்து எவ்வகைப் பற்றுமற்ற மெய்ஞ்ஞானிகளுமடைதற்கரிய திருவருணெறியில் நின்ற ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் துதிக்கவும். - எ-று.

***கொந்தவிழ்பூங் கொன்றைமுடிக் கூத்தனார் திருவருளால்***
***வந்தெழுபொன் திரளெடுத்து வரன்முறையாற் கரையேற்ற***
***அந்தரத்து மலர்மாரி பொழிந்திழிந்த(து) அவனியுளோர்***
***"இந்தஅதி சயம்என்னே! யார்பெறுவார்?" எனத்தொழுதார். 135***

(இ - ள்.) கொத்தாக மலர்ந்த கொன்றை மலர் மாலையணிந்த சடை முடியையுடைய சிவபெருமானது திருவருளினால், மணிமுத்தா நதியினின்றும் வந்து கமலாலயத் தீர்த்தத்திலெழுந்த பொற்குவையை யெடுத்து வருகின்ற முறைமைப்படியே கரையில் சேர்க்க, விண்ணுலகத்தில் தேவர்களால் புஷ்ப வருஷம் பொழியப்பட்டுப் பூமியில் சொரிந்தது; நிலவுலகத்திலுள்ளவர்கள் இது என்ன அதிசயம்; இத்தன்மையான பேற்றை யாவர் பெறுவாரென்று வணங்கினார்கள். - எ - று.

***ஞாலம்வியப் பெய்தவரு நற்கனக மிடைஎடுத்து***
***மூலமெனக் கொடுபோந்த ஆணியின்முன் உரைப்பிக்க***
***நீலமிடற் றவர்அருளால் உரைதாழப் பின்னும்நெடு***
***மாலயனுக் கரியகழல் வழுத்தினார் வன்றொண்டர். 136***

(இ - ள்.) உலகத்தார் வியப்படையும்படி தோன்றிய நல் பொற்குவைகளைக் கமலாலயத் திருக்குளத்திலெடுத்து, மாற்றுக்கு மூலமாகத் தாம் மச்சமெடுத்து வந்த ஆணியோடு உரைத்துப் பார்க்க, காளகண்டராகிய சிவபெருமானது திருவருளினால் மாற்றுக்குறையவும், ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் பின்னும் திருமால் பிரமனென்னு மிருவராலு மறிதற்கரிய அவ்வெம்பெருமானது திருவடிகளை வணங்கினார். - எ - று.

***மீட்டும்அவர் பரவுதலும் மெய்யன்பர் அன்பில்வரும்***
***பாட்டுவந்து கூத்துவந்தார் படுவாசி முடிவெய்தும்***
***ஓட்டறுசெம் பொன்னொக்க ஒருமாவுங் குறையாமல்***
***காட்டுதலும் மகிழ்ந்தெடுத்துக் கொண்டுகரை ஏறினார். 137***

(இ - ள்.) அவர் மீளவுந் துதிக்கவும், மெய்யன்பராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது அன்பு காரணமாக வருகின்ற திருப்பாடலை விரும்பி யானந்தத் தாண்டவமாடியருளுஞ் சிவபெருமான் அதிலுள்ள வாசி நீங்கிய மாற்றுயர்ந்த செம்பொன் முழுவதும் ஒரு மா அளவுபொன்னுங் குறையாமல் காட்டவும், மகிழ்ந்து எடுத்துக் கொண்டு கரையிலேறினார். -எ-று.

***கரையேறிப் பரவையா ருடன்கனக மானதெலாம்***
***நிரையேயா ளிற்சுமத்தி நெடுநிலைமா ளிகைபோக்கித்***
***திரையேறும் புனற்சடிலத் திருமூலட் டானத்தார்***
***விரையேறு மலர்ப்பாதந் தொழுதணைந்தார் வீதியினில். 138***

(இ - ள்.) திருக்குளக்கரையிலேறி பரவைநாச்சியாரோடு பொற்குவைகளனைத்தையும் வரிசையாகச் சுமையாள்களின் மேலெடுப்பித்து, உயர்ந்த நிலைகளையுடைய பரவை நாச்சியாரது திருமாளிகைக்கு அனுப்பி, அலைகள் பொருந்திய கங்கை நதியைத் தரித்த சடைமுடியையுடைய திருமூலட்டானத் தெழுந்தருளுஞ் சிவபெருமானது வாசனைப் பொருந்திய தாமரை மலர் போன்ற சிவந்த திருவடிகளை வணங்கித் திருவீதியில் வந்தருளினார். - எ - று.

***வந்துதிரு மாளிகையின் உட்புகுந்து மங்கலவாழ்த்(து)***
***அந்தமிலா வகைஏத்தும் அளவிறந்தார் ஒலிசிறப்பச்***
***சிந்தைநிறை மகிழ்ச்சியுடன் சேயிழையா ருடன்அமர்ந்தார்***
***கந்தமலி மலர்ச்சோலை நாவலர்தங் காவலனார். 139***

(இ - ள்.) திருவீதியில் வந்தருளித் திருமாளிகையி னுள்ளே புகுந்து, மங்கலவாழ்த்துக்களை அளவற்ற வகையெடுத்துக் கூறும் எண்ணறிந்த பரிசனங்களினொலி சிறப்படையத் திருவுள்ளத்தில் நிறைந்த மகிழ்ச்சியோடும் வாசனை கமழும் மலர்ச்சோலை சூழ்ந்த திருநாவலூரர் தலைவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் பரவை நாச்சியாரோடும் வீற்றிருந்தருளினார். -எ-று.

**அணியாரூர் மணிப்புற்றின் அமர்ந்தருளும் பரம்பொருளைப்**
**பணிவார்அங் கொருநாளிற் பாராட்டுந் திருப்பதிகம்**
**தணியாத ஆனந்தம் தலைசிறப்பத் தொண்டருடன்**
**துணிவாய பொருள் வினவித் தொழுதாடிப் பாடுவார். 140**

(இ - ள்.) அழகிய திருவாரூரில் மணிப்புற்றினிடத்து வீற்றிருந் தருளும் ஸ்ரீவன்மீகநாதரை வணங்குகின்றவர் அங்கொருதினத் தில் யாவருஞ் சிறப்பித்துக் கூறுந் திருப்பதிகத்தை நீங்காத பேரானந்தமதிகரிக்க, அடியார் திருக்கூட்டத்துடன் துணிவா கிய மெய்ப்பொருளை வினாவி வணங்கி, ஆனந்தக் கூத்தாடிப் பாடுவாராயினார். - எ - று.

**பண்ணிறையும் வகைபாறு தாங்கிஎன எடுத்தருளி**
**உண்ணிறையும் மனக்களிப்பால் உறுபுளகம் மயிர்முகிழ்ப்பக்**
**கண்ணிறையும் புனல்பொழியக் கரைஇகந்த ஆனந்தம்**
**எண்ணிறைந்த படிதோன்ற ஏத்திமகிழ்ந் தின்புற்றார். 141**

(இ - ள்.) இசைநிறையும் வகை "பாறுதாங்கிய" என்று முதலெடுத்துத் தமது திருவுள்ளத்தில் நிறைந்த களிப்பினோடும் பொருந்திய புளகத்தினால் மயிர்க்கூச்செறியவும், திருக்கண்களி னின்றும் ஆனந்தபாஷ்பஞ் சொரியவும், அளவுகடந்த பேரானந்த மானது திருவுள்ளத்தில் நிறைந்து தோன்றவுந் துதித்து மகிழ்ந்து இன்புற்றருளினார். - எ - று.

**இன்புற்றங் கமர்நாளில் ஈறில்அரு மறைபரவும்**
**வன்புற்றின் அரவணிந்த மன்னவனார் அருள்பெற்றே**
**அன்புற்ற காதலுடன் அளவிறந்த பிறபதியும்**
**பொன்புற்கென் றிடஒளிருஞ் சடையாரைத் தொழப்போவார். 142**

(இ - ள்.) அத்திருவாரூரில் பேரின்பமடைந்து வசித்தருளும் நாள்களில் அழிவில்லாத அரிய வேதங்களால் துதிக்கப் பெற்ற சர்ப்பாபரணராகிய சிவபெருமானது திருவருளைப் பெற்று, அன்பு பொருந்திய பெருவிருப்போடு அளவிறந்த பிறதிருப்பதி களிலும் பொன்னோடு கலந்த கபில நிறம் போல விளங்குகின்ற சடைமுடியையுடைய சிவபெருமானை வணங்கும் பொருட்டுச் செல்வாராயினார். - எ - று.

**பரிசனமும் உடன்போதப் பாங்கமைந்த பதிகள்தொறும்**
**கரியுரிவை புனைந்தார்தங் கழல்தொழுது மகிழ்ந்தேத்தித்**
**துரிசறுநற் பெருந்தொண்டர் நள்ளாறு தொழுவதற்குப்**
**புரிவுறுமெய்த் திருத்தொண்டர் எதிர்கொள்ளப் புக்கணைந்தார். 143**

(இ - ள்.) கோக்கப்படாத முத்தையும் வண்டுகள் மொய்க்காத செழிய மிருதுவாகிய அரும்பையுமொத்த சங்கிலி நாச்சியாரை இடபக் கொடியையுடைய சிவபெருமானது திருத்தொண்டராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் பார்த்த பொழுது, தம் மனநிலையைக் காவாமல், அவ்வம்மையாரிடத்துச் சென்று விழவும், தம்மிடத்து மன்மதன் பிரயோகித்த புஷ்பபாணங்கள் வந்து விழவும் மனந்தரியாமல் அம்மண்டபத்தின் புறத்தில் வந்து சொல்வாராயினார். - எ - று.

***இன்ன பரிசென் றறிவரிதால்: ஈங்கோர் மருங்கு திரைக்குள்ளால்***
***பொன்னும் மணியும் மலர்ந்தஒளி அமுதில் அளாவிப் புதியமதி***
***தன்னுள் நீர்மை யாற்குழைத்துச் சமைத்த மின்னுக் கொடிபோல்வாள்***
***என்னை உள்ளந் திரிவித்தாள்; யார்கொல்?" என்றங் கியம்புதலும். 228***

(இ - ள்.) இது இன்னவிதமென்று என்னாலறிதற்கருமையாயிருக்கின்றது; இம்மண்டபத்தின் ஒரு பக்கத்தில் கட்டிய திரையினுள்ளே, பொன்னினிடத்தும் மணியினிடத்துங் கலந்திருக்குமொளியை அமுதோடு கலந்து புதிய சந்திரனிடத்துள்ள குளிர்ச்சியோடு குழைத்துச் சமைத்த ஒரு மின்னற் கொடியைப் போல்பவள் என் மனம் வேறுபடச் செய்தாள்; அத்தன்மையையுடைய இவள் யார் என்று அங்குக் கேட்கவும். - எ - று.

***அருகு நின்றார் விளம்புவார்: "அவர்தாம் நங்கை சங்கிலியார்;***
***பெருகுந் தவத்தால் ஈசர்பணி பேணுங் கன்னி யார்" என்ன***
***"இருவ ரால்இப் பிறவியைஎம் பெருமான் அருளால் எய்துவித்தார்***
***மருவும் பரவை ஒருத்தி இவள் மற்றை யவளாம்" எனமருண்டார். 229***

(இ - ள்.) சமீபத்தில் நிற்கும் அடியார்கள் சொல்லுகின்றார்கள், அவர் சங்கிலி நாச்சியார்; மிக்க தவத்தினால் சிவபெருமானுக்குரிய திருத்தொண்டை விரும்பிச் செய்யுங் கன்னிகையா ரென்றுகூற, (அப்பொழுது ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள்) எமது சிவபெருமான் தமது திருவருளால் இம்மானுடப் பிறவியைக் (சுமலினி அநிந்திதை யென்னும், இரண்டு மாதர்கள் பொருட்டு அடைவித்தார்; அவ்விருவரில் திருவாரூரில் அவதரித்த பரவையார் ஒருத்தி; இவள் மற்றொருத்தியாமென்று கருதி மனமயங்கினார். - எ - று.

***"மின்னார் சடையார் தமக்காளாம் விதியால் வாழும் எனைவருத்தித்***
***தன்னார் அருளால் வரும்பேறு தவத்தால் அணையா வகைதடுத்தே***
***என்னா ருயிரும் எழில்மலருங் கூடப் பிணைக்கும் இவள்தன்னைப்***
***பொன்னார் இதழி முடியார்பால் பெறுவேன்" என்று போய்ப்புக்கார். 230***

(இ - ள்.) மின்போல் விளங்குஞ் சடைமுடையையுடைய சிவபெருமானுக்கு அடிமையாகும் முறைமையால் வாழ்கின்ற என்னை வருத்தி, அவ்வெம்பெருமானது திருவருளினால் அடைதற்குரிய பேற்றை நான் தவத்தினா லடையா வண்ணந் தடுத்து, எனது அருமையாகிய உயிரையும் அழகாகிய மலரையுஞ் சேர்த்துக் கட்டுகின்ற இப்பெண்ணை, பொன்போல் விளங்குங் கொன்றைமலர் மாலையை யணிந்த திருமுடியையுடைய சிவ பெருமானிடத்துப் பெறுவேனென்று திருக்கோயிலிற் சென்று புகுந்தருளினார். - எ - று.

***மலர்மேல் அயனும் நெடுமாலும் வானும் நிலனும் கிளைத்தறியா***
***நிலவு மலருந் திருமுடியும் நீடுங் கழலும் உடையாரை***
***உலக மெல்லாந் தாம்உடையா ராயும் ஒற்றி யூர்அமர்ந்த***
***இலகு சோதிப் பரம்பொருளை இறைஞ்சி முன்னின் றேத்துவார். 231***

(இ - ள்.) தாமரை மலரின் கண் வாழும் பிரமனும் விஷ்ணுவும் (அன்னமாகவும், பன்றியாகவு முருவங்கொண்டு) விண்ணுலகையும் மண்ணுலகையுங் கீண்டு அறியாத சந்திரனை யணிந்த திருமுடியையும் நீண்ட திருவடியையுமுடைய பெருமானை, சர்வலோகங்களையுந் தமக்குடைமைப் பொருளா யுள்ளவராக விருந்துந் திருவொற்றியூரில் விற்றிருந்தருளிய விளங்குகின்ற சோதி வடிவாகிய ஸ்ரீ படம்பக்கநாதரை வணங்கித் திருமுன்னின்று துதிப்பாராயினார். - எ - று.

***மங்கை யொருபால் மகிழ்ந்ததுவும் அன்றி மணிநீள் முடியின்கண்***
***கங்கை தன்னைக் கரந்தருளுங் காதல் உடையீர்! அடியேனுக்(கு)***
***இங்கு நுமக்குத் திருமாலை தொடுத்தென் உள்ளத் தொடைஅவிழ்த்த***
***திங்கள் வதனச் சங்கிலியைத் தந்தென் வருத்தந் தீரும்" என. 232***

(இ - ள்.) உமாதேவியாரை வாமபாகத்தில் விரும்பி வைத்தருளியதுமல்லாமல், அழகிய நீண்ட சடைமுடியில் கங்கை மங்கையையும் மறைத்து வைத்தருளிய பெருவிருப்பினை யுடைய பெருமானே! உமதடியவனாகிய எனக்கு இவ்விடத்தில் தேவரீருக்குத் திருப்பள்ளித் தாமந் தொடுத்துக்கொடுத்து எனது மனமாகிய கட்டை யவிழ்த்த பூரண சந்திரன் போலும் முகத்தினையுடைய சங்கிலியாரை மணஞ் செய்து கொடுத்து அடியேனுடைய மனவருத்தத்தைத் தீர்த்தருளுவீரென்று. - எ - று.

**அன்ண லார்முன் பலவும்அவர் அறிய உணர்த்திப் புறத்தணைந்தே**
**"எண்ண மெல்லாம் உமக்கடிமை யாமா றெண்ணும் என்நெஞ்சில்**
**திண்ண மெல்லாம் உடைவித்தாள் செய்வ தொன்றும் அறியேன்யான்**
**தண்ணிலா மின்னொளிர் பவளச்சடையீர்! அருளும்" எனத்தளர்வார். 233**

(இ - ள்.) சிவபெருமான் றிருமுன்னே பல வார்த்தைகளையும் அவரறியும் வண்ணமுரைத்துப் புறத்திற்சென்று, எனது எண்ணமனைத்துந் தேவரீருக்கு அடிமையாக வேண்டுமென்று கருதியிருக்கின்ற என் மனதின் கண்ணுள்ள உறுதியனைத்தையுங் கெடுத்தனள்; அடியேன் இனிச் செய்ய வேண்டியது சிறிது முணரேன் (ஆதலால்) குளிர்ந்த இளம்பிறையணிந்த மின்போல் விளங்குஞ் சிவந்த சடைமுடியையுடைய எம்பெருமானே! தேவரீர் திருவருள் செய்தருள்வீராகவென்று மனந்தளர்வாராயினார். - எ - று.

**மதிவாண் முடியார் மகிழ்கோயில் புறத்தோர் மருங்கு வந்திப்பக்**
**கதிரோன் மேலைக் கடல்காண மாலைக் கடலைக் கண்டயர்வார்**
**முதிரா முலையார் தம்மைமணம் புணர்க்க வேண்டி முளரிவளை**
**நிதியான் நண்பர் தமக்கருளும் நண்பால் நினைந்து நினைந்தழிய. 234**

(இ - ள்.) ஒளிபொருந்திய சந்திரனை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கோயிலின் ஓர்புறத்து ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் வந்திருக்க; சூரியன் மேற்றிசைக் கடலில் அஸ்தமித்தவுடன் மாலைக் காலமாகிய கடலைக் கண்டு வருந்துகின்றவர், இளமையாகிய ஸ்தனங்களையுடைய சங்கிலி நாச்சியாரைக் கலியாணஞ் செய்விக்க விரும்பி, பதுமநிதி சங்க நிதி யென்னு மிருநிதிகளையுடைய குபேரனுக்குத் தோழராகிய சிவபெருமான் தமக்குப் பேரருள் புரிந்த தோழமையினால் நினைந்து நினைந்து வருந்த. - எ - று.

**உம்பர் உய்ய உலகுய்ய ஓல வேலை விடம்உண்ட**
**தம்பி ரானார் வன்றொண்டர் தம்பால் எய்திச் "சங்கிலியை**
**இம்பர் உலகில் யாவருக்கும் எய்த ஒண்ணா இருந்தவத்துக்**
**கொம்பை உனக்குத் தருகின்றோம்; கொண்ட கவலை ஒழி"கென்ன. 235**

(இ - ள்.) விஷ்ணுப் பிரமேந்திராதி தேவர்கள் பிழைக்கவும், உலகத்திலுள்ள ஆன்மகோடிகள் பிழைக்கவும், ஒலிபொருந்திய சமுத்திரத்திற்றோன்றிய ஆலாகலவிஷத்தையுண்டருளிய சிவபெருமான் ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளிடத்து எழுந்தருளி, இவ்வுலகத்துள்ள யாவராலு மடைதற்கரிய பெருந் தவத்தை யுடைய பூங்கொம்பு போன்ற சங்கிலியாரை உனக்குக் கொடுக் கின்றோம் ஆதலால், நீ அடைந்திருக்கின்ற மனவருத்தைத் யொழிப்பாயாகவென்று கூறியருள. - எ - று.

***"அன்று வெண்ணெய் நல்லூரில் வலிய ஆண்டு கொண்டருளி***
***ஒன்றும் அறியா நாயேனுக் குறுதி யளித்தீர்; உயிர்காக்க***
***இன்றும் இவளை மணம்புணர்க்க ஏன்று நின்றீர்" எனப்போற்றி***
***மன்றல் மலர்ச்சே வடியிணைக்கீழ் வணங்கி மகிழ்ந்தார்***
***வன்றொண்டர். 236***

(இ - ள்.) அந்நாளில், திருவெண்ணெய் நல்லூரில் வலிய வந்து தடுத்தடிமை கொண்டருளி, ஒரு சிறிதுமறியாத எளியே னுக்கு உயிர்க்குறுதி தந்தருளினீர்; இன்றும் எனதுயிரைக் காக்கும் பொருட்டு இச்சங்கிலியாரை மணஞ் செய்விக்க உடன்பட்டு நின்றருளினீர்; (இனி அடியேனுக்கு யாதுகுறை) என்று துதித்து, ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் (சிவபெருமானது) மணம் பொருந்திய தாமரை மலர் போன்ற இரண்டு திருவடி களிலும் விழுந்து வணங்கி மகிழ்வடைந்தருளினார். - எ - று.

***ஆண்டு கொண்ட அந்தணனார் அவருக் கருளிக் கருணையினால்***
***நீண்ட கங்குல் யாமத்து நீங்கி வானில் நிறைமதியம்***
***தீண்டு கன்னி மாடத்துச் சென்று திகழ்சங் கிலியாராம்***
***தூண்டு சோதி விளக்கனையார் தம்பாற் கனவில் தோன்றினார். 237***

(இ - ள்.) (அந்நாளில்) தடுத்தாட் கொண்டருளிய வேதியராகிய சிவபெருமான் ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு அவ்வாறருளிச் செய்து, திருவருளினால், மிக்க அர்த்தராத்திரி யில் அவ்விடத்தினின்று நீங்கி, ஆகாயத்திலுள்ள பூரண சந்திரனைத் தொடுகின்ற உயர்ந்த கன்னிமாடத்தை யடைந்து, தூண்டப்பட்ட சோதியையுடைய தீபம்போன்றவராகிய சங்கிலி நாச்சியாரது சொப்பனத்தில் எழுந்தருளினார். - எ - று.

***தோற்றும் பொழுதிற் சங்கிலியார் தொழுது பரவசமாய்***
***ஆற்ற அன்பு பொங்கிஎழுந்(து) "அடியேன் உய்ய எழுந்தருளும்***
***பேற்றுக் கெள்யான் செய்வ" தெனப் பெரிய கருணை பொழிந்தனைய***
***நீற்றுக் கோல வேதியரும் நேர்நின் றருளிச் செய்கின்றார். 238***

(இ - ள்.) சொப்பனத்தில் லெழுந்தருளிய பொழுது சங்கலி நாச்சியார் சாஷ்டாங்கமாக வணங்கிப் பரவசமுற்றுப் பேன்பு அதிகரித்தெழுந்து, அடியேனுய்யும்படி தேவரீரெழுந்தருளிய பெருமைக்கு யான் யாதுசெய்வேனென்று கூற, மிக்க கிருபா வெள்ளம் பொழிந்ததுபோலுந் திருவெண்ணீற்றுத் திருக் கோலத்தையுடைய சிவபெருமான் அவ்வம்மையார்க்கெதிரில் நின்று அருளிச் செய்கின்றார். - எ - று.

***"சாருந் தவத்துச் சங்கிலி!கேள்; சால என்பால் அன்புடையான்;***
***மேரு வரையின் மேம்பட்ட தவத்தான்; வெண்ணெய் நல்லூரில்***
***யாரும் அறிய யான்ஆள உரியான்; உன்னை எனை இரந்தான்;***
***வார்கொள் முலையாய்! நீ அவனை மணத்தால்***
***அணைவாய்மகிழ்ந்"தென்றார். 239***

(இ - ள்.) பொருந்திய தவத்தினையுடைய சங்கிலியே! கேட்பாயாக; எம்மிடத்தில் மிக்க பேரன்புடையவன்; மேருமலை யினைப் பார்க்கிலும் மிக்க தவத்தினையுடையவன்; யாவரு மறியத் திருவெண்ணெய் நல்லூரில் யாம் தடுத்தடிமை கொள்ளப் பெற்றவன்; அவன் உன்னைத் தனக்குக் கலியாணஞ் செய்து கொடுக்கும்படி எம்மை வேண்டிக் கொண்டான்; கச்சணிந்த ஸ்தனங்களையுடைய சங்கிலியே! நீ அவ்வன்பனைக் கலியாணஞ் செய்து மகிழ்ந்து வாழ்வாயாகவென்று கூறியருளி னார். - எ - று.

***ஆதி தேவர் முன்நின்றங் கருளிச் செய்த பொழுதின்கண்***
***மாத ரார்சங் கிலியாரும் மாலும் அயனும் அறிவரிய***
***சீத மலர்த்தா மரையடிக்கீழ்ச் சேர்ந்து வீழ்ந்து செந்நின்று***
***வேத முதல்வர் முன்நடுக்கம் எய்தித் தொழுது விளம்புவார். 240***

(இ - ள்.) சிவபெருமான் அங்குச் சொப்பனத்தி லெழுந் தருளி யருளிச் செய்தபொழுது, சங்கிலிநாச்சியாரும் திருமால் பிரமனென்று மிருவராலு மறிதற்கரிய குளிர்ந்த தாமரை மலர் போன்ற திருவடிகளில் அடைந்து வீழ்ந்து வணங்கி எழுந்து நின்று, சிவபெருமான் திருமுன்னே நடுக்கமுற்று வணங்கிக் கூறுவார்ராயினார். - எ - று.

***"எம்பி ரானே! நீர்அருளிச் செய்தார்க் குரியேன் யான்; இமையோர்,***
***தம்பிரானே! அருள்தலைமேற் கொண்டேன்; தக்க விதிமணத்தால்,***
***நம்பி யாரூ ரருக்கென்னை நல்கி அருளும் பொழுதிமயக்***
***கொம்பின் ஆகங் கொண்டவர்க்குக் கூறுந் திறம்ஒன்றுள"தென்பார். 241***

(இ - ள்.) எமது ஆண்டவரே! தேவரீர் மணஞ்செய்யும்படி அருளிச் செய்தவர்க்கு யான் உரியவளாயினேன்; தேவர்கள் பெருமானே! உமது கட்டளையைச் சிரமேற்கொண்டேன்; நம்பியாரூரருக்கு என்னை வேதவிதிப்படி கலியாணஞ் செய்து கொடுக்கும்பொழுது, பார்வதிபாகராகிய தேவரீருக்கு அடியேன் விண்ணப்பஞ் செய்து கொள்வது ஒன்றிருக்கின்றது என்று கூறுவராயினார். - எ - று.

***பின்னும் பின்னல் முடியார்முன் பெருக நாணித் தொழுதுரைப்பார்;***
***"மன்னுந் திருவா ரூரின்கண் அவர்தாம் மிகவும் மகிழ்ந்துறைவ(து)***
***என்னுந் தன்மை அறிந்தருளும் எம்பிராட்டி திருமுலைதோய்***
***மின்னும் புரிநூல் அணிமார்பீர்!" என்றார் குன்றா விளக்கனையார். 242***

(இ - ள்.) மீண்டும் ஒளிகுன்றாத விளக்கினை யொத்த சங்கிலி நாச்சியார், பின்னலாகிய சடைமுடியையுடைய சிவபெருமான் திருமுன்னே மிக்கநாணங் கொண்டு வணங்கிக் கூறுவார்; எமது தாயாகிய பார்வதியாரது திருமுலை தோய்ந்த முப்புரி நூல் விளங்குந் திருமார்பினையுடைய பெருமானே! அவர் நிலை பெற்ற திருவாரூரில் மிக்க மகிழ்வுற்று வசித்தருள்வது என்னுந் தன்மையைத் தேவரீர் சிந்தித்தருளும் என்று கூறினார். - எ - று.

***மற்றவர்தம் உரைகொண்டு வன்றொண்டர் நிலைமையினை***
***ஒற்றிநகர் அமர்ந்தபிரான் உணர்ந்தருளி உரைசெய்வார்;***
***"பொற்றொடியாய்! உனைஇகந்து போகாமைக் கொருசபதம்***
***அற்றமுறு நிலைமையினால் அவன்செய்வான்" எனஅருளி. 243***

(இ - ள்.) திருவொற்றியூரில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமான் சங்கிலி நாச்சியார் கூறிய வார்த்தையைக் கேட்டருளி, ஸ்ரீசுந்தர மூர்த்தி சுவாமிகளது எண்ணத்தை யறிந்து அவ்வம்மையாரைப் பார்த்து கூறுவார்; சங்கிலியாரே! அவன் உன்னை விட்டுப் பிரியாதிருப்பதற்கு ஒரு சத்தியம் அச்சம் பொருந்திய நிலைமை யோடு செய்து கொடுப்பானென்று கூறியருளி. - எ - று.

***வேயனைய தோளியார் பால்நின்று மீண்டருளித்***
***தூயமனம் மகிழ்ந்திருந்த தோழனார் பால்அணைந்து***
***"நீஅவளை மணம்புணரும் நிலையுரைத்தோம்; அதற்கவள்பால்***
***ஆயதொரு குறைஉன்னால் அமைப்பதுள"தென்றருள. 244***

(இ - ள்.) மூங்கில் போலும் அழகிய தோள்களையுடைய சங்கிலி நாச்சியாரிடத்தினின்று மீண்டு, தூய்மையாகிய

திருவுள்ள மகிழ்வுற்றிருந்த ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளிடத்து வந்தருளி, நீ அந்தச் சங்கிலியாரைக் கலியாணஞ் செய்து கொள்ளுந்தன்மையை அவளிடத்துக் கூறினோம்; அதற்காக, அச்சங்கிலியாரிடத்தில் உன்னால் செய்து கொடுக்க வேண்டுவ தாகிய ஒரு குறையிருக்கின்றது என்று கூறியருள. - எ - று.

***வன்றொண்டர் மனங்களித்து வணங்கி"அடி யேன்செய்ய***
***நின்றகுறை யா"தென்ன "நீ அவளை மணம்புணர்தற்(கு)***
***ஒன்றியுட னேநிகழ்வ தொருசபதம் அவள்முன்பு***
***சென்றுகிடைத் திவ்விரவே செய்க"என அருள்செய்தார். 245***

(இ - ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவுள்ள மகிழ்ந்து வணங்கி, அடியேன் செய்ய வேண்டியதாக இருந்த குறை யாதென்று கேட்க, சிவபெருமான் நீ அச்சங்கிலியைக் கலியா ணஞ் செய்வதற்குச் சம்மதித்துப் பின் அவளைப் பிரியாதிருக்க ஒரு சத்தியத்தை அவள் முன்னே சென்றடைந்து இவ்விராப் பொழுதே செய்வாயாக வென்றருளிச் செய்தார். - எ - று.

***"என்செய்தால் இதுமுடியும் அதுசெய்வன் யான்அதற்கு***
***மின்செய்த புரிசடையீர்! அருள்பெறுதல் வேண்டும்" என***
***முன்செய்த முறுவலுடன் முதல்வரவர் முகநோக்கி***
***"உன்செய்கை தனக்கினிஎன் வேண்டுவ"தென் றுரைத்தருள. 246***

(இ - ள்.) யாது செய்தால் இக்கலியாண முடியுமோ, அதனை அடியேன் செய்வேன்; மின்போல் விளங்கும் முறுக்காகிய சடைமுடியையுடைய எமதாண்டவரே! இதற்குத் தேவரீரது திருவருள் பெறவேண்டுமென்று கூற, சிவபெருமான் அவர் முன்னே கொண்ட புன்சிரிப்போடும் அவரது திருமுகத்தைப் பார்த்து, நீ சபதஞ் செய்து கொடுப்பதற்கு இனி ஆக வேண்டியது யாதென்று கூறியருள. - எ - று.

***வம்பணிமென் முலையவர்க்கு மனங்கொடுத்த வன்றொண்டர்***
***"நம்பரிவர் பிறபதியும் நயன்தகோ லஞ்சென்று***
***கும்பிடவே கடவேனுக் கிதுவிலக்காம்" எனக் குறிப்பால்***
***தம்பெருமான் திருமுன்பு தாம்வேண்டுங் குறைஇரப்பார். 247***

(இ - ள்.) கச்சணிந்த ஸ்தனங்களையுடைய சங்கிலி நாச்சியா ருக்கு தமதுள்ளத்தைப் பறிகொடுத்த ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் இச் சிவபெருமான் வீற்றிருந்தருளும் பிறதிருப்பதிகளிலும் எழுந்தருளிய திருக்கோலத்தைச் சென்று வணங்குங் கடைமை

யுடையேனாகிய எனக்கு இது தடையாயிருக்கு மென்று குறிப்பி னால், தமது சிவபெருமான் திருமுன்னே தாம் விரும்பிய குறை கூறி வேண்டுவாராயினார். - எ - று.

***சங்கரர்தாள் பணிந்திருந்து தமிழ்வேந்தர் மொழிகின்றார்***
***"மங்கைஅவள் தனைப்பிரியா வகைசபதஞ் செய்தவனுக்(கு)***
***அங்கவளோ டியான்வந்தால் அப்பொழுது கோயில்விடத்***
***தங்கும்இடம் திருமகிழ்க்கீழ்க் கொளவேண்டும்" எனத்தாழ்ந்தார். 248***

(இ - ள்.) திருநெறித் தமிழ்த் தலைவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவபெருமானது திருவடிகளை வணங்கிக் கூறுகின் றார்; அச்சங்கிலியாரை விட்டுப் பிரியாதிருக்கும் வண்ணம் சபதஞ் செய்து கொடுப்பதற்கு யான் அவளுடன் திருக்கோயி லுக்கு வந்தால், அப்பொழுது, திருக்கோயிலினின்று நீங்கித் தேவரீர் எழுந்தருளுமிடம் அழகிய மகிழவிருக்ஷத்தின் கீழாகக் கொண்டருள வேண்டுமென்று கூறி வணங்கியருளினார். -எ-று.

***தம்பிரான் தோழரவர் தாம்வேண்டிக் கொண்டருள***
***உம்பர்நா யகரும்அதற் குடன்பாடு செய்வாராய்***
***"நம்பி! நீ சொன்னபடி நாம்செய்தும்" என்றருள***
***"எம்பிரா னே!அரிய தினிஎனக்கென்? எனஏத்தி. 249***

(இ - ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் தாம் இவ்வாறு வேண்டிக் கொள்ள, தேவர்கள் நாயகராகிய சிவபெருமானும் அவரது வேண்டுகோளுக்கிசைந்தவராய், நம்பியாரூரனே! நீ சொல்லியபடியே நாம் மகிழவிருக்ஷத்தின் கீழிருக்கின்றோ மென்று அருளிச் செய்ய, அந்நம்பியாரூரர் எமது பெருமானே! இனி அடியேனுக்கு அரிய பொருள் யாதிருக்கின்றதென்று துதித்து. - எ - று.

***அஞ்சலிசென் னியில்மன்ன அருளபெற்றுப் புறம்போதச்***
***செஞ்சடையார் அவர்மாட்டுத் திருவிளையாட் டினைமகிழ்ந்தோ?***
***வஞ்சிஇடைச் சங்கிலியார் வழியடிமைப் பெருமையோ?***
***துஞ்சிருள்மீ னவும் அணைந்தார் அவர்க்குறுதி சொல்லுவார். 250***

(இ - ள்.) அஞ்சலியாகக் குவித்த திருக்கரங்கள் சிரசிற் பொருந்தத் திருவருள் பெற்றுப் புறத்திற் செல்லவும், சிவந்த சடை முடியையுடைய சிவபெருமான் அச்சுந்தரமூர்த்திசுவாமிகளிடத் தில் ஓர் திருவிளையாடலைக் கருதியோ? அல்லது, பூங்கொடி போலும் சிற்றிடையையுடைய சங்கலிநாச்சியார் வழியடிமை

செய்யும் மேன்மையோ? அச்சங்கிலிநாச்சியாருக்கு உறுதி சொல்ல வேண்டி அந்நடுராத்திரியில் மீளவும் வந்தருளினார். - எ - று.

***சங்கிலியார் தம்மருங்கு முன்புபோல் சார்ந்தருளி***
***“நங்கை! உனக் காரூரன் நயந்துசூ ளுறக்கடவன்!***
***அங்குநமக் கெதிர்செய்யும் அதற்குநீ இசையாதே***
***கொங்கலர்பூ மகிழின்கீழ்க் கொள்க”எனக் குறித்தருள. 251***

(இ - ள்.) சங்கிலி நாச்சியாரிடத்து முன்போல வெழுந்தருளி, பெண்ணே! உனக்குச் சுந்தரன் விரும்பிச் சத்தியஞ் செய்து கொடுக்கக் கடவன்! அவன் திருக்கோயிலில் நமக்கு முன்னின்று செய்யுஞ் சத்தியத்திற்கு நீ உடன்படாமல், வாசனை வீசுகின்ற மலர்களையுடைய மகிழ விருட்சத்தின் கீழ்ச் செய்யும்படி செய்து கொள்வாயாகவென்று குறிப்பித்தருள. - எ - று.

***மற்றவருங் கைகுவித்து “மாலயனுக் கறிவரியீர்!***
***அற்றம்எனக் கருள்புரிந்த அதனில்அடி யேனாகப்***
***பெற்றதியான்” எனக்கண்கள் பெருந்தாரை பொழிந்திழிய***
***வெற்றிமழ விடையார்தஞ் சேவடிக்கீழ் வீழ்ந்தெழுந்தார். 252***

(இ - ள்.) சங்கிலி நாச்சியாருங் கைகூப்பி வணங்கி, பிரம விஷ்ணுக்களாலறிதற்கரிய பெருமானே! தேவரீர் இரகசியத்தை எனக்கு உரைத் தருளினமையால் யான் உமக்கு அடிமையாகப் பெற்றேன், என்று கண்களில் ஆனந்த பாஷ்பந் தாரைதாரையா யொழுக, வெற்றி பொருந்திய அழகிய இடப வாகனத்தை யுடைய சிவபெருமான் திருவடிகளில் வணங்கி யெழுந்தார். - எ - று.

***தையலார் தமக்கருளிச் சடாமகுடர் எழுந்தருள***
***எய்திபோ ததிசயத்தால் உணர்ந்தெழுந்தவ் விரவின்கண்***
***செய்யசடை யார்அருளின் திறம்நினைந்தே கண்துயிலார்***
***ஐயமுடன் அருகுதுயில் சேடியரை அணைந்தெழுப்பி. 253***

(இ - ள்.) சடைமுடியையுடைய சிவபெருமான் இவ்வாறு சங்கிலிநாச்சியாருக்குக் கூறி யெழுந்தருளவும், சொப்பனங் கண்டபொழுது ஆச்சரிய யத்தினால் விழித்தெழுந்து, அந் நடு ராத்திரியில் சிவபெருமானதுதிருவருட்டிறத்தைச் சிந்தித்து, நித்திரை கொள்ளாதவராய்ச் சந்தேகத்துடன் தம்மருகில் நித்திரை செய்கின்ற தோழியர்களை யடைந்து எழுப்பி. - எ - று.

***நீங்குதுயில் பங்கியர்க்கு நீங்கள்எழுந் தறியும்அவர்***
***தாங்கனவில் எழுந்தருளித் தமக்கருளிச் செய்ததெலாம்***
***பாங்கறிய மொழியஅவர் பயத்தினுடன் அதிசயமும்***
***தாங்குமகிழ்ச் சியும்எய்தச் சங்கிலியார் தமைப்பணிந்தார். 254***

(இ - ள்.) நித்திரை நீங்கிய தோழியர்களைப் பார்த்து, திருவொற்றியூர் நீங்கலென்று வரிபிளந்தெழுதிய சிவபெருமான் சொப்பனத்திலெழுந்தருளித் தமக்கு அருளிச் செய்தவை யனைத்தும் நன்றாயறியும்படி கூற, அத்தோழியர்கள் பயமும், ஆச்சரியமும், பொருந்திய மகிழ்வுமுண்டாகச் சங்கிலி நாச்சியாரை வணங்கினார்கள். - எ - று.

***சேயிழையார் திருப்பள்ளி எழுச்சிக்கு மலர்தொடுக்கும்***
***தூயபணிப் பொழுதாகத் தொழில்புரிவார் உடன்போதக்***
***கோயிலின்முன் காலமது வாகவே குறித்தணைந்தார்***
***ஆயசப தஞ்செய்ய வரவுபார்த் தாரூரர். 255***

(இ - ள்.) சிறந்த ஆபரணங்களை யணிந்த சங்கிலிநாச்சியார், சிவபெருமானது திருப்பள்ளியெழுச்சிக்கு மலர்மாலை தொடுக்குந் திருத்தொண்டிற்குரிய விடியற்காலம் வரவும், தாம் அத்தொண்டு செய்யுந் தோழியர்களுடன் திருக்கோயிலுக்கு வந்தருள, ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் சத்தியஞ் செய்து கொடுப் பதற்கு அதுவே காலமாக நிச்சயித்து சங்கிலிநாச்சியாரது வருகையை எதிர்பார்த்துக் கொண்டு திருக்கோயிலின் முன் னடைந்தருளினார். - எ - று.

***நின்றவர்அங் கெதிர்வந்த நேரிழையார் தம்மருங்கு***
***சென்றணைந்து தம்பெருமான் திருவருளின் திறங்கூற***
***மின்றயங்கு நுண்ணிடையார் விதியுடன்பட மடந்தார்விளம்பார்***
***ஒன்றியநா ணொடுமடவா ருடன்ஒதுங்கி உட்புகுந்தார். 256***

(இ - ள்.) அவ்வாறு எதிர்பார்த்து நின்ற ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் அங்குத் தமக்கு எதிரில் வந்த சங்கிலிநாச்சியாருக் கருகில் சென்று சேர்ந்து, தமதாண்டவராகிய சிவபெருமானது திருவருட்டிறத்தைக் கூறியருள, மின்னல் போல் விளங்கும் சிறிய இடையினையுடைய சங்கிலிநாச்சியார் சிவபெருமானது கட்டளைக்கு உடன்பட்டு எதிரில் ஒன்றுங் கூறாதவராய், பொருந்திய நாணத்தோடுந் தோழியர்களுடன் ஒதுங்கித் திருக் கோயிலினுள்ளே புகுந்தருளினார். - எ - று.

**அங்கவர்தம் பின்சென்ற ஆரூரர் "ஆயிழையீர்!**
**இங்குநான் பிரியாமை உமக்கிசையும் படிஇயம்பத்**
**திங்கள்முடி யார்திருமுன் போதுவீர்" எனச்செப்பச்**
**சங்கிலியார் கனவுரைப்பக் கேட்டதா தியர்மொழிவார். 257**

(இ - ள்.) அந்தச் சங்கிலிநாச்சியாருக்குப் பின் தொடர்ந்து சென்ற ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத்தமாகிய ஆபரணங் களை யணிந்த பெண்களே! நான் இங்கு உம்மைப் பிரியாதிருப்ப தற்குச் சம்மதிக்கும்படி சத்தியஞ் செய்து கொடுக்க, சந்திர சேகரராகிய சிவபெருமான் திருமுன்னே வாருங்களென்று கூறியருள, (அப்பொழுது) சங்கிலிநாச்சியார் தாம் கண்ட சொப்பனத்தைச் சொல்லக் கேட்ட தோழியர்கள் அவருக்குச் சொல்லுவார்கள். - எ - று.

**"எம்பெருமான்! இதற்காக எழுந்தருளி இமையவர்கள்**
**தம்பெருமான் திருமுன்பு சாற்றுவது தகா(து)" என்ன**
**நம்பெருமான் வன்றொண்டர் நாதர்செயல் அறியாதே**
**"கொம்பனையீர்! யான்செய்வ தெங்(கு)!" என்று கூறுதலும். 258**

(இ - ள்.) எமது பெருமானே! தேவரீர் இச்சபதத்திற்காக எழுந்தருளி, தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் சந்நிதியில் நின்று சொல்வது தகாதென்று கூறவும், நமது தலைவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவபெருமானது திருவருட்செயலை யுணராமல், பெண்களே! ஆனால் யான் எங்கு சபதஞ்செய்து கொடுப்பதென்று கேட்டருளவும். - எ - று.

**மாதரவர் "மகிழ்க்கீழே அமையும்" என மனமருள்வார்**
**ஈதலர்ஆ கிலும்ஆகும் இவர்சொன்ன படிமறுக்கில்**
**ஆதலினால் உடன்படலே அமையும்" எனத் துணிந்(து) "ஆகில்**
**போதுவீர்" எனமகிழ்க்கீழ் அவர்போதப் போய்அணைந்தார். 259**

(இ - ள்.) தோழியர்கள் மகிழவிருட்சத்தின் கீழே சபதஞ் செய்து கொடுத்தால் போதுமென்று கூற, அதற்கு மனமயக்கங் கொண்ட ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் இவர்கள் சொன்னபடி மகிழின்கீழ் சத்தியஞ் செய்யத் தடுத்தால், இது பழிமொழி யானாலு மாகும்; ஆகையால், இதற்கு உடன்படுதலே தக்க தென்று துணிந்து, ஆனால் எம்முடன் வாருங்களென்று கூறி, மகிழ விருக்ஷத்தின்கீழ் அவர்கள் செல்லத் தாமுஞ் சென்றடைந் தருளினார். - எ - று.

***தாவாத பெருந்தவத்துச் சங்கிலியா ருங்காண***
***மூவாத திருமகிழை முக்காலும் வலம்வந்து***
***"மேவாதிங் கியான்அகலேன்" என நின்று விளம்பினார்;***
***பூவார்தண் புனற்பொய்கை முனைப்பாடிப் புரவலனார். 260***

(இ - ள்.) மலர்கள் நிறைந்த குளிர்ந்த நீரையுடைய தடாகங்கள் சூழ்ந்த திருமுனைப்பாடி நாட்டுத் தலைவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் கெடாத பெருந்தவத்தினையுடைய சங்கிலிநாச்சியாரும் (தோழியர்களும்) பார்க்கும்படி, அழிவில்லாத அழகிய மகிழ விருக்ஷத்தை மூன்றுதரம் பிரதட்சணஞ் செய்து, அதின் முன்னின்று, யான் இங்கு இராமல்வேறெங்கும் நீங்கிச் செல்லேனென்று கூறியருளினார். - எ - று.

***மேவியசீர் ஆரூரர் மெய்ச்சபத வினைமுடிப்பக்***
***காவியினேர் கண்ணாருங் கண்டுமிக மனங்கலங்கிப்***
***"பாவியேன் இதுகண்டேன் தம்பிரான் பணியால்"என்று***
***ஆவிசோர்ந் தழிவார்அங் கொருமருங்கு மறைந்தயர்ந்தார். 261***

(இ - ள்.) நிலை பெற்ற சிறப்பினையுடைய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் (சங்கிலிநாச்சியாருக்கு உம்மைப் பிரியேனென்று) உண்மையாகச் சத்தியஞ் செய்து முடிக்க, நீலோற்பல மலர் போன்ற கரிய கண்களையுடைய சங்கிலிநாச்சியாரும் அதனைப் பார்த்து மிகவும் மனக் கலக்கமடைந்து சிவபெருமான் சொப்பனத்திற் கூறியருளிய கட்டளையினால் பாவியாகிய யான் இப்பொய்ச்சத்தியத்தைப் பார்த்தேனென்று உயிர் சோர்ந்து வருந்துகின்றவர், அங்கு ஒரு புறத்தில் மறைந்து துக்கிப்பாராயினார். - எ - று.

***திருநாவ லூரராளி தம்முடைய செயல்முற்றிப்***
***பொருநாகத் துரிபுனைந்தார் கோயிலினுட் புகுந்திறைஞ்சி***
***"அருள்நாளுந் தரஇருந்தீர் செய்தவா றழகி(து)!" எனப்***
***பெருநாமம் எடுத்தேத்திப் பெருமகிழ்ச்சி யுடன்போந்தார். 262***

(இ - ள்.) திருநாவலூரராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் தாம் செய்ய வேண்டிய சத்தியத்தைச் செய்து முடித்து, போர்செய்யும் (கயாசுரனென்னும்) யானையின் தோலைப் போர்த்தருளிய சிவபெருமானது திருக்கோயிலினுள்ளே சென்று வணங்கி, அடியேனுக்கு எந்நாளுந் திருவருள் தந்தருளும் பொருட்டு எழுந்தருளிய எம்பெருமானே! தேவரீர் செய்தருளிய

வகை அழகாயிருக்கின்ற தென்று அவரது சிறந்த திருநாமங் களைப் புகழ்ந்து துதித்து மிக்க மகிழ்ச்சியுடன் சென்றருளினார்.- எ.- று.

**வார்புனையும் வனமுலையார் வன்றொண்டர் போனதற்பின்**
**தார்புனையும் மண்டபத்துத் தம்முடைய பணிசெய்து**
**கார்புனையும் மணிகண்டர் செயல்கருத்திற் கொண்டிறைஞ்சி**
**ஏர்புனையுங் கன்னிமா டம்புகுந்தார் இருள்புலர. 263**

(இ - ள்.) கச்சணிந்த அழகிய ஸ்தனங்களையுடைய சங்கிலி நாச்சியார், ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் சென்ற பின்பு மாலை கட்டுந் திருமண்டபத்தில் தாம் செய்யுந் திருத்தொண்டைச் செய்து காளகண்டராகிய சிவபெருமானது திருவருளைத் திருவுள்ளத்திற் கருதி வணங்கி அழகு பொருந்திய கன்னி மாடத்தில் விடியற் காலத்தில் சென்றருளினார். - எ - று.

**அன்றிரவே ஆதிபுரி ஒற்றிகெண்டார் ஆட்கொண்ட**
**பொன்திகழ்பூண் வன்றொண்டர் புரிந்தவினை முடித்தருள**
**நின்றபுகழ்த் திருவொற்றி யூர்நிலவு தொண்டர்க்கு**
**மன்றல்வினை செய்வதற்கு மனங்கொள்ள உணர்த்துவார். 264**

(இ - ள்.) அன்றிரவிலேயே ஆதிபுரியை ஒற்றியூராகக் கொண் டருளிய சிவபெருமான் விளங்குகின்ற பொன்னாபரணங்களை யணிந்த ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் விரும்பிய திருக்கலியாணச் செயலை முடித்தருளும் பொருட்டு, நிலைபெற்ற புகழையுடைய திருவொற்றியூரில் வசிக்குந் திருத்தொண்டர்களுக்கு (அச் சுந்தர மூர்த்தி சுவாமிகளது) மணவினையைச் செய்து முடிப்பதற்கு அவர்கள் கருத்திற் கொள்ளும்படி உணர்த்துவாராயினார். - எ - று.

**"நம்பியா ரூரனுக்கு நங்கைசங் கிலிதன்னை**
**இம்பர்ஞா லத்திடைநம் ஏவலினால் மணவினைசெய்(து)**
**உம்பர்வா ழுலகறிய அளிப்பீர்" என் றுணர்த்துதலும்**
**தம்பிரான் திருத்தொண்டர் அருள்தலைமேற் கொண்டெழுவார். 265**

(இ - ள்.) நமது சுந்தரனுக்குச் சங்கிலிநாச்சியாரை இவ்வுலகத்தில், நமது ஏவலினால் மணம் புரிவித்துத் தேவருலக மறியும்படி கொடுப்பீர்களாக வென்று அவர்களுக்குச் சொப்பனஞ் சாதித்தருளவும், அதனையுணர்ந்த சிவனடியார்கள் யாவரும் சிவபெருமான் திருவருளைச் சிரமேற்கொண்டு நித்திரையினின்று நீங்கி யெழுவராயினார். - எ - று.

***மண்ணிறைந்த பெருஞ்செல்வந் திருவொற்றி யூர்மன்னும்***
***எண்ணிறைந்த திருத்தொண்டர் எழிற்பதியோ ருடன்ஈண்டி***
***உண்ணிறைந்த மகிழ்ச்சியுடன் உம்பர்பூ மழைபொழியக்***
***கண்ணிறைந்த பெருஞ்சிறப்பிற் கலியாணஞ் செய்தளித்தார்.*** ***266***

(இ - ள்.) உலகத்தில் நிறைந்த பெருஞ் செல்வத்தையுடைய திருவொற்றியூரில் வாழும் அளவற்ற திருத்தொண்டர்கள் மதில் சூழ்ந்த அத்திருப்பதியிலுள்ளவர்களுடன் சேர்ந்து, மனத்தில் நிறைந்த பெருமகிழ்ச்சியோடு தேவர்கள் புஷ்ப மாரி பொழியக் கண்களுக்கமைந்த மிக்க மேன்மையாகத் திருக்கலியாணஞ் செய்து கொடுத்தார்கள். - எ - று.

***பண்டுநிகழ் பான்மையினாற் பசுபதிதன் அருளாலே***
***வண்டமர்பூங் குழலாரை மணம்புணர்ந்த வன்றொண்டர்***
***புண்டரிகத் தவள்வனப்பைப் புறங்கண்ட தூநலத்தைக்***
***கண்டுகேட் டுண்டுயிர்த்துற்(று) அமர்ந்திருந்தார் காதலினால்.*** ***267***

(இ - ள்.) முன்னாளில் சிவபெருமான் திருக்கயிலையில் கட்டளையிட்டருளிய முறைமைப்படியே அவ்வெம்பெருமானது திருவருளினால், வண்டுகள் மொய்க்கும் மலர் மாலையை யணிந்த கூந்தலையுடைய சங்கிலிநாச்சியாரைத் திருக்கலியாணஞ்செய்துகொண்ட ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள், திருமகளது அழகைத் தோற்கச் செய்த பேரழகினையுடைய சங்கிலி நாச்சியாரை விருப்பத்துடன் கண்டும், கேட்டும், உண்டும், உயிர்த்தும், கலந்தும் அனுபவித்திருந்தார். - எ - று.

***யாழின்மொழி எழில்முறுவல் இருகுழைமேற் கடைபிறழும்***
***மாழைவிழி வனமுலையார் மணியல்குல் துறைபடிந்து***
***வீழுமவர்க் கிடைதோன்றி மிகும்புலவி புணர்ச்சிக்கண்***
***ஊழியாம் ஒருகணைந்தான் அவ்வூழி ஒருகணமாம்.*** ***268***

(இ - ள்.) யாழிசை போலும் வார்த்தையையும், அழகிய பற்களையும், இரு செவிகளின் மேலுங் கடைபிறழ்ந்து செல்லும் மாவடு போன்ற கண்களையும், அழகிய ஸ்தனங்களையுமுடைய சங்கிலிநாச்சியாரது சிறந்த காமவின்பத்தில் முழுகி, அதிலழுந்துகின்ற ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு இடையே தோன்றி யதிகரிக்கின்ற புலவியினும், புணர்ச்சியினும், முறையே ஒருகணம் ஊழியாகவும், அவ்வூழி ஒரு கணமாவுமிருக்கும். - எ - று.

**இந்நிலையிற் பேரின்பம் இனிதமர்வார் இறையுறையும்**
**மன்னுபுகழ் ஒற்றியூ ரதனில்மகிழ் சிறப்பினால்**
**சென்னிமதி புனைவார்தந் திருப்பாதந் தொழுதிருந்தார்**
**முன்னியகா லங்கள்பல முறைமையினால் வந்தகல. 269**

(இ - ள்.) இவ்வாறாகிய முறைமையோடு மிக்க இன்பத்தை இனிதாக விரும்பி வாழும் ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள். சிவபெருமான் வீற்றிருந்தருளும் நிலை பெற்ற புகழையுடைய திருவொற்றியூரில் மிக்க மனமகிழ்வோடும், திருமுடியில் இளம்பிறையணிந்த சிவபெருமானது திருவடிகளை வணங்கி நினைக்கத் தக்க பல நாள்கள் முறைமைப்படி நீங்க வசித்தருளி னார். - எ - று.

**பொங்குதமிழ்ப் பொதியமலைப் பிறந்துபூஞ் சந்தனத்தின்**
**கொங்கணைந்து குளிர்ச்சார லிடைவளர்ந்த கொழுந்தென்றல்**
**அங்கணையத் திருவாரூர் அணிவீதி அழகரவர்**
**மங்கலநாள் வசந்தம்எதிர் கொண்டருளும் வகைநினைந்தார். 270**

(இ - ள்.) சிறந்த தமிழையுடைய பொதியமலையில் தோன்றி, பொலிவினையுடைய சந்தனவிருட்சத்தின் வாசனையோடு கலந்து, குளிர்ந்த மலைச்சாரலில் வளர்ந்த செழிய சிறுதென்றற் காற்றானது அங்குவர, திருவாரூரிலெழுந்தருளிய ஸ்ரீ தியாக ராசப் பெருமான் சுபகரமாகிய திருவிழாக் காலத்தில் வசந்தோற் சவங் கொண்டருளுந் திறத்தை நினைந்தருளினார். - எ - று.

**வெண்மதியின் கொழுந்தணிந்த வீதிவிடங் கப்பெருமான்**
**ஒண்ணுதலார் புடைபரந்த ஓலக்கம் அதனிடையே**
**பண்ணமரும் மொழிப்பரவை யார்பாடல் ஆடல்தனைக்**
**கண்ணுறமுன் கண்டுகேட் டார்போலக் கருதினார். 271**

(இ - ள்.) வெண்மையாகிய இளம்பிறையைத் தரித்தருளிய ஸ்ரீ தியாகராசப் பெருமான்; ஒளிபொருந்திய நெற்றியையுடைய மாதர்கள் புடைசூழும்படி யெழுந்தருளி வருகின்ற திருவோலக் கத்தில் இசை பொருந்திய மொழிகளையுடைய பரவை நாச்சியார் செய்யும் பாட்டலையும் ஆடலையும் தமது கண்ணுக் கெதிரில் கண்டு, காதினால் கேட்டவரைப் போல மனதில் நினைந்தருளினார். - எ - று.

**பூங்கோயில் அமர்ந்தாரைப் புற்றிடங்கொண் டிருந்தாரை**
**நீங்காத காதலினால் நினைந்தாரை நினைவாரைப்**
**பாங்காகத் தாம்முன்பு பணியவரும் பயன்உணர்வார்**
**"ஈங்குநான் மறந்தேன்"என்(று) ஏசறவால் மிகஅழிவார். 272**

(இ - ள்.) பூங்கோயிலில் வீற்றிருந்தருள்பவரும், புற்றையிடமாகக் கொண்டெழுந்தருளியவரும், நீங்காத பேரன்பினால் தம்மைத் தியானிக்கும் அடியார்களை நினைந்து திருவருள் புரிபவருமாகிய ஸ்ரீ தியாகராசப் பெருமானை முறைமைப்படி தாம் முன்பு வணங்க அதனால் வருகின்ற திருவருட் பயனைச் சிந்தித்தருளும் ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் (அவ்வெம்பெருமானை) இங்கு நான் மறந்துவிட்டேனென்பது துன்பத்தினால் மிகவும் வருந்துவாராயினார். - எ - று.

**மின்னொளிர்செஞ் சடையானை வேதமுதல் ஆனானை**
**மன்னுபுகழ்த் திருவாரூர் மகிழ்ந்தானை மிகநினைந்து**
**பன்னியசொற் "பத்திமையும் அடிமையையும் கைவிடுவான்"**
**என்னும்இசைத் திருப்பதிகம் எடுத்தியம்பி இரங்கினார். 273**

(இ - ள்.) மின்போலுமொளி வீசுகின்ற சிவந்த சடைமுடியையுடையவரும், வேதமுதல்வரும், நிலைபெற்ற புகழையுடைய திருவாரூரை விரும்பி யெழுந்தருளிய வருமாகிய ஸ்ரீதியாகராசப் பெருமானை மிகவுஞ் சிந்தித்து, சிறந்த சொற்களால் "பத்திமையுமடிமையையுங் கைவிடுவான்" என்னு முதலையுடைய திருப்பதிகமெடுத்துப் பாடியருளி மனமிரங்கினார். - எ - று.

**பின்னொருநாள் திருவாரூர் தனைப்பெருக நினைந்தருளி**
**உன்னஇனி யார்கோவில் புகுந்திறைஞ்சி ஒற்றிநகர்**
**தன்னைஅக லப்புக்கார் தாம்செய்த சபதத்தால்**
**முன்னடிகள் தோன்றாது கண்மறைய மூர்ச்சித்தார். 274**

(இ - ள்.) பின்பு ஒரு தினம் திருவாரூர்த் திருப்பதியை மிகவுந் திருவுள்ளத்திற் சிந்தித்தருளி, நினைத்தற் கினியவராகிய சிவபெருமானது திருக்கோயிலை யடைந்து வணங்கித் திருவொற்றியூர்த் திருவெல்லையை நீங்கச் சென்ற ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள், முன்பு சங்கிலிநாச்சியாருக்குச் செய்து கொடுத்த சத்தியத்தினால், தாம் முன்னெடுத்து வைத்த அடிகள் தெரியாமல் கண்கள் மறைய, அதனால் மூர்ச்சையடைந்தருளினார். - எ - று.

**செய்வதனை அறியாது திகைத்தருளி நெடிதுயிர்ப்பார்**
**“மைவிரவு கண்ணார்பால் சூளுறவு மறுத்ததனால்**
**இவ்வினைவந் தெய்தியதாம்” எனநினைந்(து) “எம்பெருமானை**
**எய்தியஇத் துயர்நீங்கப் பாடுவேன்” எனநினைந்து. 275**

(இ - ள்.) தாம் செய்யும் வகை இன்னதென்றறியாமல் திகைப்புற்றுப் பெருமூச்சு விடுகின்றவராய், மைபூசிய கண்களையுடைய சங்கிலியாரிடத்துச் செய்து கொடுத்த சத்தியத்தை மறுத்து விட்டதனால் இத்தீங்கு வந்து சம்பவித்ததென்று சிந்தித்து, என்னை யடைந்த இத்துன்பம் நீங்கும்படி எமது ஆண்டவராகிய ஸ்ரீ படம்பக்கநாதரைத் திருப்பதிகம் பாடுவேனென்று திருவுள்ளத்திற்கருதி. - எ - று.

**“அழுக்கு மெய்கொ(டு)”என் றெடுத்தசொற் பதிகம்ஆதி நீள்புரி அண்ணலை ஓதி,**
**வழுத்து நெஞ்சொடு தாழ்ந்துநின் றுரைப்பார் மாதொர் பாகனார் மலர்ப்பதம் உன்னி,**
**‘இழுக்கு நீக்கிட வேண்டும்’என் றிரந்தே எய்து வெந்துயர்க் கையற வினுக்கும்,**
**பழிக்கும் வெள்கிநல் லிசைகொடு பரவிப் பணிந்து சாலவும் பலபல நினைவார். 276**

(இ - ள்.) “அழுக்குமெய்கொடு” என்று முதலெடுத்த இனிய சொற்களமைந்த திருப்பதிகத்தினால், சிறந்த திருவொற்றியூரில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானைப் பாடித் துதிக்குந் திருவுள்ளத்தோடு வணங்கி நின்று தங்குறையைக் கூறுகின்ற ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள், பார்வதிபாகராகிய சிவபெருமானது தாமரை மலர் போன்ற திருவடிகளைச் சிந்தித்து, எனது வருத்தத்தை நீக்கியருள வேண்டுமென்று இரங்கி, தாமடைந்திருக்கின்ற ஒழுக்கமின்மையாகிய துன்பத்திற்கும், பழிமொழிக்கும் வெட்கி, சிவபெருமானது சிறந்த புகழைத் துதித்து வணங்கி மிகவும் பல பலவாகச் சிந்திப்பாராயினார். - எ - று.

**அங்கு நாதர்செய் யருளது வாக அங்கை கூப்பிஆ ரூர்தொழ நினைந்தே,**
**பொங்கு காதல்மீ ளாநிலை மையினாற் போது வார்வழி காட்டமுன் போந்து,**
**திங்கள் வேணியார் திருமுல்லை வாயில் சென்றி றைஞ்சிநீ டியதிருப் பதிகம்,**
**“சங்கி லிக்காக என்கணை மறைத்தீர்”என்று சாற்றிய தன்மையிற் பாடி. 277**

(இ - ள்.) அவ்விடத்துச் சிவபெருமான் செய்தருளிய திருவருள் அவ்வாறிருக்க, திருவாரூரை அழகிய திருக்கரங்களைக் குவித்து வணங்கக் கருதி, பெருவிருப்பானது நீங்காத தன்மையினால் தம்முடன் வருகின்ற அடியார்கள் முன்னே வழிகாட்டச் சென்று, சந்திரனை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் வடதிருமுல்லைவாயில் என்னுந் திரப்பதியை யடைந்து வணங்கிச் சிறந்த திருப்பதிகத்தை "சங்கிலிக்காவென்கண் கொண்ட பண்ப" என்று அமைத்த தன்மையாகப் பாடியருளி. - எ - று.

**தொண்டை மானுக்கன் றருள்கொடுத் தருளுந் தொல்லை வண்புகழ்**
**முல்லைநா யகரைக்,**
**"கொண்ட வெந்துயர் களை"கெனப் பரவிக் குறித்த காதலின்**
**நெறிக்கொள வருவார்,**
**வண்டு லாமலர்ச் சோலைகள் சூழ்ந்து மாட மாளிகை நீடுவெண்**
**பாக்கம்,**
**கண்ட தொண்டர்கள் எதிர்கொள வணங்கிக் காயும் நாகத்தர்**
**கோயிலை அடைந்தார். 278**

(இ - ள்.) தொண்டைமான் சக்கரவர்த்திக்குத் திருவருள் செய்தருளிய பழமையாகிய வளவிய புகழையுடைய திருமுல்லைவாயிலில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானை, தாமடைந்த வெவ்விய துன்பத்தை நீக்கி யருளுமென்று துதித்துப் பொருந்திய பேரன்போடு வழிக் கெண்டு செல்கின்றவர், வண்டுகள் மொய்க் கின்ற சோலைகள் சூழப் பெற்று, மேல்மாடங்களும் மாளிகை களும் உயர்ந்திருக்கின்ற திருவெண்பாக்கமென்னுந் திருப்பதியை, தமது வருகையைக் கண்ட திருத்தொண்டர்கள் எதிர்கொண்டு வர அங்குச் சேர்ந்து, விஷச் சுவாலையையுடைய சர்ப்பா பரணத்தையணிந்த சிவபெருமானது திருக்கோயிலை யடைந் தருளினார். - எ - று.

**அணைந்த தொண்டர்கள் உடன்வல மாகஅங்கண் நாயகர்**
**கோயில்முன் எய்திக்,**
**குணங்கள் ஏத்தியே பரவிஅஞ் சலியாற் குவித்த கைதலை**
**மேற்கொண்டு நின்று,**
**வணங்கி "நீர்மகிழ் கோயிலு ளீரே"என்ற வன்றொண்டர்க்**
**கூன்றுகோல் அருளி,**
**இணங்கி லாமொழியால் "உளோம் போகீர்" என்றி யம்பினார் ஏதிலார்**
**போல. 279**

(இ - ள்.) தம்முடன் வந்த திருத்தொண்டர்களுடன் பிரதட்சணஞ் செய்து சிவபெருமானது திருக்கோயிலின் முன்னடைந்து அவ்வெம்பெருமானுடைய அருட்குணங்களைத் துதித்து அஞ்சலியாகக் குவித்த திருக்கரங்களைச் சிரமேல் வைத்துத் திருமுன்னின்று வணங்கித் தேவரீர் மகிழ்வோடு திருக்கோயிலுள் எழுந்தருளியிருக்கின்றீரே, என்று இரங்கிக் கூறியருளிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குச் சிவபெருமான் ஒரு ஊன்றுகோலைக் கொடுத்தருளி, கடுமையாகிய வன்மொழி யினால் அயலார் போல "யாமுளேம் போகீர்" என்று கூறி யருளினார். - எ - று.

**"பிழையுளன பொறுத்திடுவர்" என்றெடுத்துப் பெண்பாகம்**
**விழைவடிவிற் பெருமானை வெண்பாக்கம் மகிழ்ந்தானை**
**இழைஎன்மா சுணம்அணிந்த இறையானைப் பாடினார்**
**மழைதவழும் நெடும்புரிசை நாவலூர் மன்னவனார். 280**

(இ - ள்.) மேகங்கள் தவழும் உயர்ந்த மதில் சூழ்ந்த திருநாவலூரர் தலைவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள், "பிழை யுள்ளன பொறுத்திடுவர்" என்று முதலெடுத்து, பார்வதியை வாமபாகத்தில் விரும்பிக் கொண்டருளிய திருவுருவத்தை யுடையவரும், திருவெண்பாக்கமென்னுந் திருப்பதியில் மகிழ்ந் தெழுந்தருளியவரும், பாம்பை ஆபரணமாக வணிந்தவருமாகிய சிவபெருமானைத் திருப்பதிகம் பாடியருளினார். - எ - று.

**முன்நின்று முறைப்பாடு போல் மொழிந்த மொழிமாலைப்**
**பன்னும்இசைத் திருப்பதிகம் பாடியபின் "பற்றாய**
**என்னுடைய பிரான்அருளிங் கித்தனைகொ லாம்"என்று**
**மன்னுபெருந் தொண்டருடன் வணங்கியே வழிக்கொள்வார். 281**

(இ - ள்.) திருமுன்னின்று முறையிடுவதுபோலக் கூறியருளிய சொன் மாலையாகிய புகழப்பட்ட இனிய இசைபொருந்திய திருப்பதிகம் பாடியருளியபின்பு, உயிர்த் துணையாயுள்ள எமது சிவபெருமானுடைய திருவருள் இவ்வளவோவென்று கூறி, நிலைபெற்ற சிறந்த திருத்தொண்டர்களோடும் வணங்கி அவ்விடத்தினின்றுஞ் செல்வாராயினார். - எ - று.

**அங்கணர்தம் பதிஅதனை அகன்றுபோய் அன்பருடன்**
**பங்கயப்பூந் தடம்பணைசூழ் பழையனூர் உழைஎய்தித்**
**தங்குவார் அம்மைதிருத் தலையாலே வலங்கொள்ளும் 282**
**திங்கள்முடி யார்ஆடுந் திருவாலங் காட்டின்அயல்.**

(இ - ள்.) சிவபெருமான் விற்றிருந்தருளும் அத்திருவெண் பாக்கத்தினின்று நீங்கி, தாமரைத் தடாகங்களும் வயல்களுஞ் சூழ்ந்த பழையனூரில் அடியார்களுடன் அடைந்து, காரைக்கா லம்மையார் தமது தலையினால் பிரதட்ணஞ் செய்தருளிய சந்திரசேகரராகிய சிவபெருமான் திருநடனஞ் செய்தருளுந் திருவாலங்காட்டினருகில் தங்குவாராயினார். - எ - று.

***முன்நின்று தொழுதேத்தி "முத்தா" என் றெடுத்தருளிப்***
***பன்னும்இசைத் திருப்பதிகம் பாடிமகிழ்ந் தேத்துவார்***
***அந்நின்று வணங்கிப்போய்த் திருவூறல் அமர்ந்திறைஞ்சிக்***
***கன்னிமதில் மணிமாடக் காஞ்சிமா நகர்அணைந்தார். 283***

(இ - ள்.) எதிரில் நின்று வணங்கித் துதித்து, "முத்தா" என்று முதலெடுத்து, இசை பொருந்திய திருப்பதிகம் பாடியருளி மகிழ்வுற்றுத் துதிக்கின்றவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் அங்குநின்றும் வணங்கிச் சென்று, தக்கோலமென்னுந் திருப்பதியை யடைந்து வணங்கி, அழியாத மதில் சூழ்ந்த அழகிய மாளிகைகளையுடைய ஸ்ரீ காஞ்சிபுரமென்னும் திருப்பதியை யடைந்தருளினார். - எ - று.

***தேனிலவு பொழிற்கச்சித் திருக்காமக் கோட்டத்தில்***
***ஊனில்வளர் உயிர்க்கெல்லாம் ஒழியாத கருணையினால்***
***ஆனதிரு அறம்புரக்கும் அம்மைதிருக் கோயிலின்முன்***
***வானில்வளர் திருவாயில் வணங்கினார் வன்றொண்டர். 284***

(இ - ள்.) தேன் பொருந்திய மலர்களையுடைய சோலை சூழ்ந்த ஸ்ரீ காஞ்சிபுரத்திலுள்ள திருக்காமக் கோட்டமென்னும் ஆலயத்தில், உடம்போடு கூடிச் சீவித்திருக்கின்ற எல்லா வுயிர்களுக்கும் நீங்காத பெருங்கருணையினால், இன்பந் தருவதாகிய முப்பத்திரண்டு தருமங்களைச் செய்து காத்தருளிய ஸ்ரீ காமாட்சியம்மையாரது திருக்கோயிலின் முன்னுள்ள விண்ணுலகை யளாவிய திருவாயிலை ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் வணங்கியருளினார். - எ - று.

***தொழுதுவிழுந் தெழுந்தருளால் துதித்துப்போய்த் தொல்லுலகம்***
***முழுதும்அளித் தழித்தாக்கும் முதல்வர்திரு ஏகம்பம்***
***பழுதில்அடி யார்முன்பு புகப்புக்குப் பணிகின்றார்***
***'இழுதையேன் திருமுன்பே என்மொழிவேன்' என்றிறைஞ்சி. 285***

(இ - ள்.) பூமியில் சாஷ்டாங்கமாக வணங்கி யெழுந்து திருவருளினால் துதித்துச் சென்று, பழமையாகிய எல்லா வுலகங்களையும் படைத்துக் காத்து அழிக்கின்ற சிவபெருமானது திருவேகாம்பரமென்னுந் திருக்கோயிலைக் குற்றமற்ற அடியார்கள் முன்னே செல்ல அடைந்து வணங்குகின்றவர், பொய்யனாகிய அடியேன் தேவரீரது சந்நிதியில் யாது சொல்வேனென்று வணங்கி. - எ - று.

**"விண்ணாள்வார் அமுதுண்ண மிக்கபெரு விடமுண்ட**
**கண்ணாளா! கச்சிஏ கம்பனே! கடையானேன்**
**எண்ணாத பிழைபொறுத்திங் கியான்காண எழிற்பவள**
**வண்ணா!கண் ணளித்தருளாய்" எனவீழ்ந்து வணங்கினார். 286**

(இ - ள்.) விண்ணுலகத்தில் வாழுந் தேவர்களனைவரும் அமுதுண்ணச் செய்து (அவர்களைக் கொல்லவெழுந்த) மிகக் கொடிய ஆலாகலவிடத்தை யுண்டருளிய அருட்கண்ணரே! ஸ்ரீ காஞ்சிப்பதியிலெழுந்தருளிய திருவேகம்பநாதரே! அழகிய பவளம் போலுஞ் சிவந்த திருமேனியையுடைய பெருமானே! கடையேனாகிய சிறியேன் நினையாமற் செய்த குற்றத்தைப் பொறுத்து, இன்று அடியேன் தேவரீரைத் தரிசிக்கும் பொருட்டுக் கண்கொடுததருள்வீராகவென்று நிலமுறவிழுந்து வணங்கினார். - எ - று.

**பங்கயச்செங் கைத்தளிரால் பனிமலர்கொண் டருச்சித்துச்**
**செங்கயற்கண் மலைவல்லி பணிந்தசே வடிநினைந்து**
**பொங்கியஅன் பொடுபரவிப் போற்றியஆ ரூரருக்கு**
**மங்கைதழு வக்குழைந்தார் மறைந்தஇடக் கண்கொடுத்தார். 287**

(இ - ள்.) கயல் மீன் போலுஞ் சிவந்த திருக்கண்களையுடைய ஸ்ரீ காமாட்சியம்மையார் தாமரை மலர் போன்ற சிவந்த திருக்கரங்களினால் குளிர்ந்த மலர்களைக் கொண்டு அருச்சனை செய்து வணங்கிய திருவடிகளைச் சிந்தித்து, மிக்க பேரன்புடன் துதித்துப் போற்றிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு, அவ்வெம் பெருமாட்டியார் தழுவக்குழைந்த திருமேனியையுடைய திருவேகம்பநாதர் மறைந்திருந்த இடக்கண் விளங்கச் செய்தருளி னார். - எ - று.

**ஞாலந்தான் இடந்தவனும் நளிர்விசும்பு கடந்தவனும்**
**மூலந்தான் அறிவரியார் கண்ணளித்து முலைச்சுவட்டுக்**
**கோலந்தான் காட்டுதலுங் குறுகிவிழுந் தெழுந்துகளித்(து)**
**"ஆலந்தான் உகந்தவன்" என் றெடுத்தாடிப் பாடினார். 288**

(இ - ள்.) (பன்றியுருவங்கொண்டு) பூமியைக் கீண்டு சென்ற விஷ்ணுவினாலும், (அன்னவுருவங்கொண்டு) குளிர்ந்த விண்ணுலகைக் கடந்து சென்ற பிரமனாலும் திருவடியையுந் திருமுடியையுங் காண்பதற்கரியவராகிய சிவபெருமான் இடக்கண் கொடுத்தருளி, முலைத் தழும்பும் (வளைத்தழும்பும்) அணிந்த தமது திருக்கோலத்தைக் காட்டியருளவும், சமீபித்து நிலமுற நமஸ்கரித்தெழுந்து களிப்புற்று, "ஆலந்தானுகந்தமுது செய்தான்" என்று முதலெடுத்துத் திருப்பதிகம் பாடி ஆநந்தக் கூத்தாடி யருளினார். - எ - று.

***பாடிமிகப் பரவசமாய்ப் பணிவார்க்குப் பாவையுடன்***
***நீடியகோ லங்காட்ட நிறைந்தவிருப் புடன்இறைஞ்சிச்***
***சூடியஅஞ் சலியினராய்த் தொழுதுபுறம் போந்தன்பு***
***கூடியமெய்த் தொண்டருடன் கும்பிட்டங் கினிதமர்வார். 289***

(இ - ள்.) திருப்பதிகம் பாடியருளிப் பரவசப்பட்டு வணங்கும் ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு முன்னே (சிவபெருமான்) உமாதேவியாருடன் சிறந்து வீற்றிருந்தருளுந் திருக்கோலத்தைக் காட்டியருள, அவர் தமதுள்ளத்தில் நிறைந்த பேரன்புடன் வணங்கி, சிரசிற்குவித்த அஞ்சலியஸ்தராய்ப் பணிந்து, புறத்திற் சென்று அன்பு பொருந்திய மெய்யடியார்களோடும் வணங்கி அங்கு இனிமையோடு எழுந்தருளியிருந்தார். - எ - று.

***மாமலையாள் முலைச்சுவடும் வளைத்தழும்பும் அணிந்தமதிப்***
***பூமலிவார் சடையாரைப் போற்றிஅரு ளதுவாகத்***
***தேமலர்வார் பொழிற்காஞ்சித் திருநகரங் கடந்தகல்வார்***
***பாமலர்மா லைப்பதிகம் திருவாரூர் மேற்பரவி. 290***

(இ - ள்.) பெரிய பர்வதராஜபுத்திரியாக ஸ்ரீகாமாட்சியம்மையாரது முலைத் தழும்பும் வளைத்தழும்பு மணிந் தருளிய இளம்பிறையுங் கொன்றை மலர்மாலை யுந்தரித்த சடைமுடியையுடைய சிவபெருமானைத் துதித்துத் திருவருளிவ்வாறிருக்க, தேன் பொருந்திய மலர்களையுடைய உயர்ந்த சோலை சூழ்ந்த ஸ்ரீ காஞ்சிபுரத்தை நீங்கிச் செல்கின்றவர், செய்யுட்களாகிய மலர்களால் தொடுக்கப்பட்ட திருப்பதிகமாலையைத் திருவாரூர்த் திருப்பதியின்மேற் பாடித் துதித்து.

***"அந்தியும்நண் பகலும்"என எடுத்தார்வத் துடன்நசையால்***
***எந்தைபிரான் திருவாரூர் என்றுகொல்எய் துவ"தென்று***
***சந்தஇசை பாடிப்போய்த் தாங்கரிய ஆதரவு***
***வந்தணைய அன்பருடன் மகிழ்ந்துவழிக் கொள்கின்றார். 291***

(இ - ள்.) "அந்தியு நண்பகலும்" என்று முதலெடுத்துப் பேரன்புடன் மனநெகிழ்ச்சியினால் "தென்றிருவாரூர்புக்- கெந்தை பிரானாரை யென்று கொலெய்துவதே" என்று இறுதியிலமைத்து இசையமைந்த திருப்பதிகம் பாடிச் சென்று, தாங்குதற்கரிய பெருவிருப்புவந்துகூட, திருத்தொண்டர்களுடன் மகிழ்வுற்றுச் செல்வாராயினார். - எ - று.

***மன்னுதிருப் பதிகள்தொறும் வன்னியொடு கூவிளமும்***
***சென்னிமிசை வைத்துவந்தார் கோயிலின்முன் சென்றிறைஞ்சிப்***
***பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பரவியே போந்தணைந்தார்***
***அன்னமலி வயல்தடங்கள் சூழ்ந்ததிரு ஆமாத்தூர். 292***

(இ - ள்.) நிலைபெற்ற திருப்பதிகள் தோறும் வன்னிப் பத்திரத்தையும் வில்வப்பத்திரத்தையுந் திருமுடியிலணிந்து மகிழ்ந்தெழுந்தருளிய சிவபெருமானது திருக்கோயில்களின் முன்சென்று வணங்கி, புகழ்ந்து சொல்லப்பட்ட தமிழ்த் திருப்பதிகம் பாடித் துதித்து அன்னங்கள் நிறைந்த வயல்களுந் தடாகங்களுஞ் சூழ்ந்த திருவாமாத்தூரென்னுந் திருப்பதியைச் சென்றடைந்தருளினார். - எ - று.

***அங்கணரை ஆமாத்தூர் அழகர்தமை அடிவணங்கித்***
***தங்கும்இசைத் திருப்பதிகம் பாடிப் போய்த் தாரணிக்கு***
***மங்கலமாம் பெருந்தொண்டை வளநாடு கடந்தணைந்தார்***
***செங்கண்வள வன்பிறந்த சீர்நாடு நீர்நாடு. 293***

(இ - ள்.) அருட்கண்ணரும், திருவாமாத்தூரி லெழுந்தருளிய அழகருமாகிய சிவபெருமானைத் திருவடிகளில் வணங்கி இசையமைந்த திருப்பதிகம் பாடிச் சென்று, உலகத்தில் மங்கலகரமாக விளங்குகின்ற சிறந்த தொண்டைவள நாட்டை நீங்கி, கோச்செங்கட் சோழநாயனார் அவதரித்த சிறப்பு மிக்க சோழநாட்டை யடைந்தருளினார். - எ - று.

***அந்நாட்டின் மருங்குதிரு அரத்துறையைச் சென்றெய்தி***
***மின்னாரும் படைமழுவார் விரைமலர்த்தாள் பணிந்தெழுந்து***
***சொன்மாலை மலர்க்"கல்வாய் அகில்" என்னுந் தொடைசாத்தி***
***மன்னார்வத் திருத்தொண்ட ருடன்மகிழ்ந்து வைகினார். 294***

(இ - ள்.) அச்சோழ நாட்டினருகிலுள்ள திருநெல்வாயிலரத் துறை யென்னுந் திருப்பதியைச் சென்றடைந்து, மின்போல் விளங்கும் மழுப்படையை யுடைய சிவபெருமானது மணம்

பொருந்திய தாமரை மலர் போன்ற திருவடிகளைச் சாஷ்டாங்கமாக வணங்கி யெழுந்து, இனிய சொற்களாகிய மலர்களால் தொடுக்கப்பட்ட பாமாலையாகிய "கல்வாயகில்" என்னு முதலையுடைய திருப்பதிகத்தை யணிந்து, நிலைபெற்ற அன்பினையுடைய திருத்தொண்டர்களுடன் களிப்புற்று அங்கு வசித்தருளினார். - எ - று.

***பரமர்திரு அரத்துறையைப் பணிந்துபோய்ப் பலபதிகள்***
***விரவிமழ விடைஉயர்த்தார் விரைமலர்த்தாள் தொழுதேத்தி***
***உரவுநீர்த் தடம்பொன்னி அடைந்தன்ப ருடன்ஆடி***
***அரவணிந்தார் அமர்ந்ததிரு வாவடுதண் டுறை அணைந்தார். 295***

(இ - ள்.) சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருநெல் வாயிலரத்துறையை வணங்கிச் சென்று பல திருப்பதிகளை யடைந்து, இளமை பொருந்திய இடபத்தைக் கொடியாக வுயர்த்திய சிவபெருமானது நறுமணங் கமழுந் தாமரை மலர் போன்ற திருவடிகளை வணங்கித் துதித்து, மிக்க நீரையுடைய பெரிய காவிரி நதியையடைந்து அடியார்களுடன் ஸ்நானஞ் செய்து, பாம்பை யாபரணமாக வணிந்த சிவபெருமானெழுந் தருளிய திருவாவடுதுறை யென்னுந் திருப்பதியை யடைந்தளி னார். - எ - று.

***அங்கணைவார் தமைஅடியார் எதிர்கொள்ளப் புக்கருளிப்***
***பொங்குதிருக் கோயிலினைப் புடைவலங்கொண் டுள்ளணைந்து***
***"கங்கைவாழ் சடையாய்!ஓர் கண்ணிலேன்" எனக்கவல்வார்***
***"இங்கெனக்கார் உற(வு)" என்னுந் திருப்பதிகம் எடுத்திசைத்தார். 296***

(இ - ள்.) அத்திருப்பதியில் அடைகின்ற ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளை அங்குள்ள திருத்தொண்டர்கள் எதிர்கொண் டழைத்து வரச்சென்று, சிறந்த திருக்கோயிலை அருகில் வலமாக வந்து உள்ளே புகுந்து, ஒரு கண்ணிலாதிருக்கின்றேனென்று வருந்துகின்றவராய், "கங்கைவாழ் சடையாய்" என்று முதல் தொடங்கி, "ஆரெனக் குறவமரர்களேறே" என்னு மிறுதியை யுடைய திருப்பதிகத்தைப் பாடியருளினார்..- எ - று.

***திருப்பதிகங் கொடுபரவிப் பணிந்துதிரு அருளாற்போய்***
***விருப்பினொடுந் திருத்துருத்தி தனைமேவி விமலர்கழல்***
***அருத்தியினாற் புக்கிறைஞ்சி "அடியேன்மேல் உற்றபிணி***
***வருத்தம் எனைஒழித்தருள வேண்டும்" என வணங்குவார். 297***

(இ - ள்.) திருப்பதிகம் பாடித் துதித்து வணங்கிச் சிவபெருமான் றிருவருளினால் அங்கு நின்றும் நீங்கி, பெருவிருப் போடுந் திருத்துருத்தியென்னுந் திருப்பதியையடைந்து, சிவபெருமானது திருவடிகளை அன்புடன் சென்று வணங்கி அடியேன் மேலடைந்தநோய் வருத்தத்தினின்றும் என்னை நீக்கி யாண்டருள வேண்டுமென்று வணங்குவாராயினார். - எ - று.

**பரவியே பணிந்தவர்க்குப் பரமர்திரு அருள்புரிவார்**
**"விரவியஇப் பிணிஅடையத் தவிர்ப்பதற்கு வேறாக**
**வரமலர்வண் டறைதீர்த்த வடகுளத்துக் குளி" என்னக்**
**கரவில்திருத் தொண்டர்தாங் கைதொழுது புறப்பட்டார். 298**

(இ - ள்.) துதித்து வணங்கிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமி களுக்குச் சிவபெருமான் பெருங்கருணை புரிகின்றவராய், உன்னை யடைந்த இந்நோய் முழுவதும் நீங்கும்படி செய்வதற்கு, சிறந்த மலர்களில் வண்டுகள் சப்திக்கின்ற வட பாலுள்ள தீர்த்தத் தில் மூழ்குவாயென்று திருவாய் மலர்ந்தருள, மெய்த்தொண்ட ராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் தமது திருப்பங்களைக் கூப்பி வணங்கிச் சென்றருளினார். - எ - று.

**மிக்கபுனல் தீர்த்தத்தின் முன்அணைந்து வேதமெலாம்**
**தொக்கவடி வாயிந்த துருத்தியார் தமைத்தொழுது**
**புக்கதனில் மூழ்குதலும் புதியபிணி அதுநீங்கி**
**அக்கணமே மணியொளிசேர் திருமேனி ஆயினார். 299**

(இ - ள்.) மிக்க நீரையுடைய அவ்வடபாற்றீர்த்தத்தின் எதிரிலடைந்து, வேதத்திற்கூறும் முடிபுகளனைத்துமமைந்த ருவுருவமாக வெழுந்தருளிய திருத்துருத்திநாதரை வணங்கிச் சென்று அத்தீர்த்தத்தில் முழுகவும், புதிதாக வந்தடைந்த அந்நோயொழிந்து, அப்பொழுதே மாணிக்கத்தி னொளிபோல் விளங்குகின்ற திருமேனியை யுடையவராயினார். - எ - று.

**கண்டவர்கள் அதிசயிப்பக் கரையேறி உடைபுனைந்து**
**மண்டுபெருங் காதலினாற் கோயிலினை வந்தடைந்து**
**தொண்டர்எதிர் "மின்னுமா மேகம்" எனுஞ் சொற்பதிகம்**
**எண்டிசையும் அறிந்துய்ய ஏழிசையால் எடுத்திசைத்தார். 300**

(இ - ள்.) பார்த்தவர்கள் அதிசயமுறும்படி கரையிலேறி வஸ்திரமணிந்து மிக்க பேரன்பினால் திருக்கோயிலை வந்தடைந்து, அடியார்களுக்கெதிரில் "மின்னமா மேகம்" என்னு

முதலையுடைய நல்ல சொற்களமைந்த திருப்பதிகத்தை எட்டுத் திக்கிலுள்ளவர்களும் அறிந்துய்யும் பொருட்டு, சப்தசுரங்களும் பொருந்தப் பாடியருளினார். - எ - று.

**பண்ணிறைந்த தமிழ்ப்பாடிப் பரமர்திரு வருள்மறவா(து)**
**எண்ணிறைந்த தொண்டருடன் பணிந்தங்கண் உறைந்தேகி**
**உண்ணிறைந்த பதிபிறவும் உடையவர்தாள் வணங்கிப்போய்க்**
**கண்ணிறைந்த திருவாரூர் முன்தோன்றக் காண்கின்றார்.** **301**

(இ - ள்.) இசையமைந்த தமிழ்த் திருப்பதிகம் பாடியருளிச் சிவபெருமானது திருவருட்டிறத்தை மறவாதவராய், புகழ் நிறைந்த திருத்தொண்டர்களோடும் வணங்கி வசித்து அவ் விடத்தினின்றும் நீங்கித் தமதுள்ளத்திற் பெருகுகின்ற மற்றத் திருப்பதிகளையுமடைந்து சிவபெருமானது திருவடிகளை வணங்கிச் சென்று, கண்களுக்கு அழகாக நிறைந்து விளங்குகின்ற திருவாரூர்த் திருப்பதியானது முன்னே தோன்ற அதனைத் தரிசிக்கின்றவராயினார். - எ - று.

**அன்றுதிரு நோக்கொன்றால் ஆரக்கண் டின்புறார்**
**நின்றுநில மிசைவீழ்ந்து நெடிதுயிர்த்து நேர்இறைஞ்சி**
**வன்றொண்டர் திருவாரூர் மயங்குமா லையிற்புகுந்து**
**துன்றுசடைத் தூவாயர் தமைமுன்னந் தொழஅணைந்தார்.** **302**

(இ - ள்.) அப்பொழுது ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் தமது ஒரு பார்வையினால் பொருந்தத் தரிசித்து இன்பமடையாத வராய் நின்று பூமியில் விழுந்து வணங்கிப் பெருமூச்சு விட்டு எதிரில் வணங்கி, அத்திருவாரூர்த் திருப்பதியை மயங்கத்தக்க மாலைக் காலத்திற் புகுந்து, நெருங்கிய சடைமுடியையுடைய சிவபெருமானை முன்னே வணங்கும்படி சென்றருளினார். -எ-று.

**பொங்குதிருத் தொண்டருடன் உள்ளணைந்து புக்கிறைஞ்சித்**
**துங்கஇசைத் திருப்பதிகம் "தூவாயா" என்றெடுத்தே**
**"இங்கெமது துயர்களைந்து கண்காணக் காட்டாய்" என்று**
**அங்கணர்தம் முன்நின்று பாடிஅருந் தமிழ்புனைந்தார்.** **303**

(இ - ள்.) மிக்க திருத்தொண்டர்களோடுந் திருக்கோயிலி னுள்ளே புகுந்து வணங்கி, சிறந்த இசையமைந்த திருப்பதிகத்தை "தூவாயா" என்று தொடங்கி, இங்கு எமது துன்பத்தை யொழிந்துத் தேவரீரை தரிசிக்கக் கண்கொடுத்தருள்வீராக வென்று சிவபெருமான் திருமுன்னின்று அரிய தமிழ்மாலை பாடி யருளினார். - எ - று.

**ஆறணியுஞ் சடையாரைத் தொழுதுபுறம் போந்தங்கண்**
**வேறிருந்து திருத்தொண்டர் விரவுவார் உடன்கூடி**
**ஏறுயர்த்தார் திருமூலட் டானத்துள் இடைதெரிந்து**
**மாறில்திரு அத்தயா மத்திறைஞ்ச வந்தணைந்தார். 304**

(இ - ள்.) கங்கை நதியை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானை வணங்கிப் புறத்திற் சென்று அங்குத் தனித்திருந்து, தம்முடன் வந்த அடியார்களுடன் கலந்து, இடபக் கொடியையுயர்த்திய சிவபெருமானது திருமூலஸ்தானத்துள் காலமறிந்து, மாறுபாடில்லாத அர்த்தசாமத்தில் வணங்கும்படி வந்தடைந்தருளினார். - எ - று.

**ஆதிதிரு அன்பர்எதிர் அணையஅவர் முகநோக்கிக்**
**கோதில் இசையாற் "குருகு பாய" எனக் கோத்தெடுத்தே**
**ஏதிலார் போல்வினவி ஏசறவால் திருப்பதிகம்**
**காதல்புரி கைக்கிளையாற் பாடியே கலந்தணைவார். 305**

(இ - ள்.) சிவபெருமானது மெய்யடியார்கள் தம்முன்னே வர, அவர்களது திருமுகத்தைப் பார்த்தருளி, இனிய இசை யோடு "குருகுபாய" என்று முதலில் தொடுத்து, அயலார் போல வினவி, மனவருத்தத்தினால் திருப்பதிகத்தை விருப்பமிகு கின்றகைக்கிளையினால் பாடி யருளிச் செல்வாராயினார். - எ - று.

**சீர்பெருகுந் திருத்தேவா சிரியன்முன் சென்றிறைஞ்சிக்**
**கார்விரவு கோபுரத்தைக் கைதொழுதே உட்புகுந்து**
**தார்பெருகு பூங்கோயில் தனைவணங்கிச் சார்ந்தணைவார்**
**ஆர்வம்மிகு பெருங்காத லால்அவனி மேல்வீழ்ந்தார். 306**

(இ - ள்.) சிறப்புமிக்க தேவாசிரிய மண்டபத்தின் முன் சென்று வணங்கி, மேகங்கள் தவழுந் திருக்கோபுரத்தைக் கைகூப்பி வணங்கி உள்ளே புகுந்து, பூமாலை யணிந்துள்ள கமலாயலத்தை வணங்கி யடைகின்றவராய், விருப்பமிக்க பேரன்பினால் நிலமுறவிழுந்து வணங்கினார். - எ - று.

**வீழ்ந்தெழுந்து கைதொழுது முன்நின்று விம்மியே**
**வாழ்ந்தமலர்க் கண்ணொன்றால் ஆராமல் மனம்அழிவார்**
**"ஆழ்ந்ததுயர்க் கடலிடைநின் றடியேனை எடுத்தருளித்**
**தாழ்ந்தகருத் தினைநிரப்பிக் கண்டாரும்" எனத்தாழ்ந்தார். 307**

(இ - ள்.) சாஷ்டாங்கமாக வணங்கி யெழுந்து கைகூப்பித் தொழுது விம்மித் தரிசனத்தால் ஆனந்தமடைந்த ஒரு திருக் கண்ணினால் தரிசிக்க நிரம்பாமல் மனம் வருந்துகின்ற ஸ்ரீசுந்தர மூர்த்தி சுவாமிகள், ஆழ்ந்த துன்பமாகிய கடலினின்றும் அடியேனைக் கரையேற்றியருளி, சோர்ந்திருக்கின்ற எனது கருத்தைப் பூர்த்திசெய்து கண்ணைக் கொடுத்தருளுமென்று வணங்கினார். - எ - று.

***திருநாவ லூர்மன்னர் திருவாரூர் வீற்றிருந்த***
***பெருமானைத் திருமூலட் டானம்சேர் பிஞ்ஞகனைப்***
***பருகாஇன் னமுதத்தைக் கண்களாற் பருகுதற்கு***
***மருவார்வத் துடன்"மற்றைக் கண்தாரீர்"; என வணங்கி. 308***

(இ - ள்.) திருநாவலூரராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாரூரில் வீற்றிருந்தருளும் ஆண்டவரும், திருமூலஸ்தானத் திலெழுந்தருளி சடாதரரும், உண்ணுதற்கரிய இனிய அமுதம் போல் பவருமாகிய சிவபெருமானைத் தமது திருக்கண்களால் தரிசிப்பதற்கு நிலைபெற்ற பேரன்போடும் வலக்கண்ணைத் தந்தருளுமென்று வணங்கி. - எ - று.

***"மீளா அடிமை" எனஎடுத்து மிக்க தேவர் குலமெல்லாம்***
***மாளா மேநஞ் சுண்டருளி மன்னி இருந்த பெருமானைத்***
***"தாளா தரிக்கும் மெய்யடியார் தமக்காம் இடர்நீர் தரியீர்என்(று)***
***ஆளாந் திருத்தோ ழமைத்திறத்தால் அஞ்சொற் பதிகம் பாடினார். 309***

(இ - ள்.) "மீளாவடிமை" என்று முதலெடுத்து, சிறந்த தேவர் கூட்டங்களனைத்து மிறவாதிருக்கும் பொருட்டு(ச் சமுத்திரத்திற் றோன்றிய) ஆலகால விஷத்தையுண்டு (இறவாமல்) நிலைபெற் றோங்கிய சிவபெருமானை, திருவடிகளில் அன்பு செலுத்து கின்ற மெய்யடியார்களுக்கு நேர்ந்த துன்பத்தைத் தேவரீர் பொறுத்திருக்கமாட்டீரென்று, தாமடிமைப்பட்டிருக்கும் நட்புத் தன்மையினால் அழகிய சொற்களமைந்த திரப்பதிகம் பாடியருளினார். - எ - று.

***பூத முதல்வர் புற்றிடங்கொண் டிருந்த புனிதர் வன்றொண்டர்***
***காதல் புரிவே தனைக்கிரங்கிக் கருணைத் திருநோக் களித்தருளிச்***
***சீத மலர்க்கண் கொடுத்தருளச் செவ்வே விழித்து முகமலர்ந்து***
***பாத மலர்கள் மேற்பணிந்து வீழ்ந்தார் உள்ளம் பரவசமாய். 310***

(இ - ள்.) பூதகணத்தலைவரும், புற்றையிடமாகக் கொண்டெழுந்தருளிய வருமாகிய ஸ்ரீவன்மீகநாதர், ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் அன்போடு வருந்துகின்ற துன்பத்திற் கிரக்கங் கொண்டு கருணாகடாட்சஞ் செய்தருளிக் குளிர்ந்த தாமரை மலர் போன்ற வலக்கண் கொடுத்தருளவும், நன்றாக விழித்துப் பார்த்து முக மலர்ச்சியடைந்து திருவுள்ளம் பரவசமுற்று, அவ்வெம் பெருமானது திருவடிகளில் விழுந்து வணங்கினார். - எ - று.

***விழுந்தும் எழுந்தும் பலமுறையால் மேவிப் பணிந்து மிகப்பரவி***
***எழுந்த களிப்பி னால்ஆடிப் பாடிஇன்ப வெள்ளத்தில்***
***அழுந்தி இரண்டு கண்ணாலும் அம்பொற் புற்றின்இடை எழுந்த***
***செந்தண் பவளச் சிவக்கொழுந்தின் அருளைப் பருகித்***
***திளைக்கின்றார். 311***

(இ - ள்.) பலதரமாக நிலமுறவிழுந்து வணங்கியும், எழுந்தும், அடைந்து வணங்கி மிகுதியாகத் துதித்து, தமதுள்ளத்தெழுந்த மகிழ்ச்சியினால் ஆனந்தக் கூத்தாடி (அவ்வெம்பெருமானது திருப்புகழைப்) பாடிப் பேரின்பவெள்ளத்தில் முழுகி, தமது இரண்டு திருக்கண்களினாலும் அழகிய பொன்மயமாகிய புற்றினிடத்து எழுந்தருளிய செழுமையாகிய குளிர்ந்த பவளம் போலுஞ் (சிவந்த திருமேனியையுடைய) சிவபெருமானது திருவருளாகிய அமுதத்தையுண்டு (பேரின்பக் கடலில்) மூழ்குகின்றவராயினார். - எ - று.

***காலம் நிரம்பத் தொழுதேத்திக் கனக மணிமா ளிகைக்கோயில்***
***ஞாலம் உய்ய வரும்நம்பி நலங்கொள் விருப்பால் வலங்கொண்டு***
***மாலும் அயனும் முறையிருக்கும் வாயில் கழியப் புறம்போந்து***
***சீல முடைய அன்பருடன் தேவாசிரியன் மருங்கணைந்தார். 312***

(இ - ள்.) உலகத்தார் கடைத்தேறும் பொருட்டு அவதரித்தருளிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் அர்த்தயாமகாலமுழுதும் வணங்கித் துதித்து, பொன்மயமாகிய அழகிய திருமாளிகைகள் சூழ்ந்த திருக்கோயிலை நன்மைமிக்க பெருவிருப்போடு பிரதட்சணஞ்செய்து, திருமால் பிரமனென்னுமிருவரும் முறையே தங்கியிருக்கின்ற திருவாயிலை நீங்கிப் புறத்திற்சென்று நல்லொழுக்கமுடைய அடியார்களோடுந் தேவாசிரிய மண்டபத்தின் அருகில் அடைந்தருளினார். - எ - று.

***நங்கை பரவை யார்தம்மை நம்பி பிரிந்து போனதற்பின்***
***தங்கு மணிமா ளிகையின்கண் தனிமை கூரத் தளர்வார்க்குக்***
***கங்குல் பகலாய்ப் பகல்கங்கு லாகிக் கழியா நாளெல்லாம்***
***பொங்கு காதல் மீதூரப் புலர்வார் சிலநாள் போனதற்பின். 313***

(இ - ள்.) பரவை நாச்சியாரை ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் விட்டு நீங்கின பின்பு, அழகு பொருந்திய தமது திருமாளிகையில் தனித்திருக்கத் தளர்கின்றவராகிய அவ்வம்மையாருக்கு இரவு பகலாகவும், பகல் இரவாகவும் சேர்ந்து, நாள்களனைத்தையுங் கழித்துப் பெருவிருப்பானது அதிகரிக்க, அதனால் வாட்டமுற்றிருக்கின்ற அப்பரவை நாச்சியார் சிலகாலஞ் சென்றபின்பு. - எ - று.

***செம்மை நெறிசேர் திருநாவ லூரர் ஒற்றி யூர்சேர்ந்து***
***கொம்மை முலையார் சங்கிலியார் தம்மைக் குலவு மணம்புணர்ந்த***
***மெய்ம்மை வார்த்தை தாம்அவர்பால் விட்டார் வந்து கட்டுரைப்பத்***
***தம்மை அறியா வெகுளியினால் தரியா நெஞ்சி னொடும்தளர்வார். 314***

(இ - ள்.) நல்லொழுக்கமாகிய மார்க்கத்திற் செல்கின்ற ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவொற்றியூரை யடைந்து, குவிந்த ஸ்தனங்களையுடைய சங்கிலி நாச்சியாரை விளங்குகின்ற திருகக்லியாணஞ் செய்து கொண்ட உண்மை வார்த்தையை அவரிடத்தில் அனுப்பப்பட்டவர்கள் வந்து சொல்ல, (அதனால்) தம்மை யறியாமல் வந்த பெருங்கோபத்தினால் சகிக்கமுடியாத திருவுள்ளத்தோடும் வருந்துவாராயினார். - எ - று.

***மென்பூஞ் சயனத் திடைத்துயிலும் மேவார் விழித்தும் இனிதமரார்***
***பொன் பூந்தவிசின் மிசையினிரார் நில்லார்செல்லார் புறம்பொழியார்***
***மன்பூ வாளி மழைகழியார் மறவார் நினையார் வாய்விள்ளார்***
***என்பூ டுருக்கும் புலவியோ? பிரிவோ? இரண்டின் இடைப்பட்டார். 315***

(இ - ள்.) மிருதுவாகிய புஷ்பசயனத்திலும் நித்திரை கொள்ளார்; இனிமையாக விழித்தும் இரார்; பொன்னாலாகிய அழகிய ஆசனத்தின் மேலுமிரார்; (பூமியிலும்) நில்லார்; நடவார்; வேறிடத்திற் செல்லார், (மன்மதனது) நிலைபெற்ற புஷ்பபாணமாகிய மழையினின்று நீங்கார்; (அச்சுந்தரமூர்த்தி சுவாமிகளை) மறக்கவுமாட்டார்; நினைத்தலுஞ் செய்யார்; வேறு யாது செய்வார்; எலும்பை யுள்ளுருகச் செய்யும் ஊடலோ? (அல்லது) பிரிவோ? இவ்விரண்டிலும் அகப்பட்டு வருந்துவாராயினார். - எ - று.

**ஆன கவலைக் கையறவால் அழியும் நாளில் ஆரூரர்**
**கூனல் இளவெண் பிறைக்கண்ணி முடியார் கோயில் முன்குறுகப்**
**பானல் விழியார் மாளிகையிற் பண்டு செல்லும் பரிசினால்**
**போன பெருமைப் பரிசனங்கள் புகுதப் பெறாது புறம்நின்றார். 316**

(இ - ள்.) மனக் கிலேசத்தினாலுண்டாகிய செயலின்மையினால் வருந்தியிருக்கும் நாள்களில், ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் வளைந்த இளமையாகிய வெண்பிறையையணிந்த திருமுடியையுடைய சிவபெருமானது திருக்கோயிலின் முன்னேயடைய, கருங்குவளை மலர் போலுங் கண்களையுடைய பரவைநாச்சியாரது திருமாளிகையில் முன்பு செல்லும் முறைமைப்படி சென்ற மேன்மைமிக்க பரிசனங்களாகிய அடியார்கள் உள்ளே செல்லப் பெறாமல் வெளியில் தடைபட்டு நின்றார்கள். - எ - று.

**நின்ற நிலைமை யவர்கள்சிலர் நிலவு திருவா ரூரர்எதிர்**
**சென்று மொழிவார்; "திருவொற்றி யூரில் நிகழ்ந்த செய்கைஎலாம்**
**ஒன்றும் ஒழியா வகையறிந்தங் குள்ளார்தள்ள மாளிகையில்**
**இன்று புறமுஞ் சென்றெய்தப் பெற்றி லோம்"என் றிறைஞ்சினார். 317**

(இ - ள்.) அவ்வாறு தடைபட்டு நின்ற அடியார்களில் சிலர், விளங்குகின்ற ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு எதிரில் சென்று சொல்வார்கள்; தேவரீர் திருவொற்றியூரில் சங்கிலிநாச்சியாரைக் கலியாணஞ் செய்து கொண்ட சங்கதிகளனைத்தும் சிறிதும் விடாமலுணர்ந்து அங்குள்ளவர்கள் தள்ளிவிட, திருமாளிகையின் புறத்துஞ் சென்றடையப் பெற்றிலோமென்று கூறி வணங்கினார்கள். - எ - று.

**மற்ற மாற்றங் கேட்டழிந்த மனத்த ராகி வன்றொண்டர்**
**"உற்ற இதனுக் கினிஎன்னோ? செயல்"என் றுணர்வார் உலகியல்பு**
**கற்ற மாந்தர் சிலர்தம்மைக் காதற்பரவை யார்கொண்ட**
**செற்ற நிலைமை அறிந்தவர்க்குத் தீர்வு சொல்லச் செலவிட்டார். 318**

(இ - ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் அவ்வார்த்தையைக் கேட்டு மனநிலையழிந்தவராய், நேர்ந்த இதற்கு இனியாது செய்வதென்று ஆலோசித்து, தாம் விருப்பமுற்றிருக்கும் பரவை நாச்சியார் அடைந்துள்ள கோபத்தன்மையை யறிந்து அவ்வம்மையாருக்குச் சமாதானஞ்சொல்லும்படி உலகியல்பையுணர்ந்த சில பெரியோர்களை அனுப்பியருளினார். - எ - று.

**நம்பி அருளாற் சென்றவரும் நங்கை பரவை யார்தமது**
**பைம்பொன் மணிமா ளிகைஅணைந்து பண்பு புரியும் பாங்கினால்**
**வெம்பு புலவிக் கடல்அழுந்தும் மின்னேரிடையார் முன்எய்தி**
**"எம்பி ராட்டிக் கிதுதகுமோ?" என்று பலவும் எடுத்துரைப்பார். 319**

(இ - ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது திருவருளை மேற்கொண்டு சென்ற அம்முதியோர்களும் பரவை நாச்சியாரது பசும்பொன்மயமாகிய அழகிய திருமாளிகையை யடைந்து இனிய மொழிகளைக் கூறுந்தன்மையினால், கலங்குகின்ற ஊடற்கடலில் மூழ்கியிருக்கின்ற மின்போலும் இடையினை யுடைய பரவை நாச்சியாருக் கெதிரிலடைந்து, எமது பெருமாட்டியாகிய உமக்கு இது தக்கதோ வென்று பல நியாயங்களையும் எடுத்துக் கூறுவாராயினார். - எ - று.

**பேத நிலைமை நீதியினாற் பின்னும் பலவும் சொன்னவர்முன்**
**மாத ரவரும் மறுத்துமனம் கொண்ட செற்றம் மாற்றாராய்**
**"ஏதம் மருவும் அவர்திறத்தில் இந்த மாற்றம் இயம்பில் உயிர்**
**போதல் ஒழியா" தெனஉரைத்தார்; அவரும் அஞ்சிப் புறம்போந்தார். 320**

(இ - ள்.) (அவ்வம்மையாரது ஊடற் கருத்தை) வேறுபடுத்தும் நீதிமொழிகளால் பின்னும் பல வார்த்தைகளை யெடுத்துரைத்த அம் முதியோர்களுக்கு முன்னே, பரவை நாச்சியார் தடுத்துத் தமதுள்ளத்திற் கொண்ட கோபத்தைத் தணிக்காதவராய், குற்றம் பொருந்திய அவர் விஷயத்தில் (நீங்கள்) இத்தகைய வார்த்தைகளைச் சொல்வீராயின், எனது உயிர் போய்விடுமென்று கூறியருளினார்; (அதனைக் கேட்ட) அவர்களும் பயந்து வெளியில் வந்தார்கள். - எ - று.

**போந்து புகுந்த படியெல்லாம் பூந்தண் பழன முனைப்பாடி**
**வேந்தர் தமக்கு விளம்புதலும் வெருவுற் றயர்வார் துயர்வேலை**
**நீந்தும் புணையாந் துணைகாணார் நிகழ்ந்த சிந்தா குலம்நெஞ்சில்**
**காந்த அழிந்து தோய்ந்தெழார் கங்குல் இடையா மக்கடலுள். 321**

(இ - ள்.) அவர்கள் வந்து நடந்த சங்கதியனைத்தும் பொலிவினையுடைய குளிர்ந்த வயல்சூழ்ந்த திருமுனைப்பாடி நாட்டுத் தலைவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளிடத்துக் கூறுதலும், (அவர்) அச்சமுற்றுச் சோர்ந்து, துன்பமாகிய கடலை நீந்துகின்ற தெப்பமாகிய துணையைக் காணாமல் தோன்றிய மனவருத்தமானது தமதுள்ளத்திற் சுட, (அதனால்) மன நிலை தளர்ந்து, இரவு அர்த்தசாமமாகிய கடலில் முழுகி மேலெழாரா யினார். - எ - று.

**அருகு சூழ்ந்தார் துயின்றுதிரு அத்த யாமம் பணிமடங்கிப்**
**பெருகு புவனம் சலிப்பின்றிப் பேயும் உறங்கும் பிறங்கிருள்வாய்**
**முருகு விரியும் மலர்க்கொன்றை முடிமேல் அரவும் இளமதியும்**
**செருகும் ஒருவர் தோழர்தனி வருந்தி இருந்து சிந்திப்பார். 322**

(இ - ள்.) தம்மருகில் சூழ்ந்துள்ள அடியார்கள் நித்திரை கொண்டு, (சிவபெருமானுக்குச் செய்யும்) அர்த்தசாமபூசை முடிந்து, மிக்க உலகமானது அசைவற்று, பேய்களுந் தூங்குகின்ற மிக்க இருட்காலத்தில் வாசனை வீசுகின்ற கொன்றை மலர் மாலையை யணிந்த திருமுடியின்மேல் பாம்பையும் இளம்பிறை யையுமணிந்த சிவபெருமானது திருத்தோழராகிய ஸ்ரீசுந்தர மூர்த்தி சுவாமிகள் தனியே வருத்தமுற்றிருந்து சிந்திப்பாராயி னார். - எ - று.

**"முன்னை வினையால் இவ்வினைக்கு மூலம் ஆனாள் பால்அணைய**
**என்னை உடையாய்! நினைந்தருள்வாய் இந்த யாமத் தெழுந்தருளி**
**அன்னம் அனையாள் புலவியினை அகற்றில் உய்ய லாம்;அன்றிப்**
**பின்னை இல்லைச் செயல்" என்று பெருமான் அடிகள்**
**தமைநினைந்தார். 323**

(இ - ள்.) என்னை யடிமையாகவுடைய பெருமானே! பூர்வகர்மத்தினால் இவ்வினைக்குக் காரணமாக நின்ற பரவை யாரிடத்துச் செல்ல, தேவரீர் திருவுள்ளங் கொண்டருள்வீராக, நீர் இந்த அர்த்தசாமத்தெழுந்தருளி அன்னம்போலும் நடை யினையுடைய பரவையாரது ஊடலைத் தணித்தால்பிழைக்க லாம்; அன்றி, இனி வேறு செயலில்லையென்று சிவபெருமா னது திருவடிகளைச் சிந்தித்தார். - எ - று.

**அடியார் இடுக்கண் தரியாதார் ஆண்டு கொண்டதேழர்குறை**
**முடியா திருக்க வல்லரே முற்றும் அளித்தாள் பொற்றளிர்க்கைத்**
**தொடியார்தழும்பும் முலைச்சுவடும் உடையார்தொண்டர் தாம்காணும்**
**படியால் அணைந்தார் நெடியோனும் காணா அடிகள் படிதோய. 324**

(இ - ள்.) தமது அடியவர்களுக்கு நேர்ந்த துன்பத்தைச் சிறிதுந் தரியாதவராகிய சிவபெருமான் தாம் தடுத்தடிமை கொண்டருளிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது துன்பத்தை நீக்காதிருப்பரோ? சர்வலோகங்களையு மீன்றளிய ஸ்ரீகாமாட்சி யம்மையாரது அழகிய தளிர்போலுந் திருக்கரத்தி லணிந்த வளைத்தழும்பும், முலைத்தழும்பு மணிந்தவராகிய அவ்வெம் பெருமான் விஷ்ணுவினாலுங் காணப்படாத திருவடிகள் பூமியிற் பொருந்த ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் தரிசிக்கும்படி எழுந்தருளினார். - எ - று.

***தம்பி ரானார் எழுந்தருளத் தாங்கற் கரிய மகிழ்ச்சியினால்***
***கம்பி யாநின் றவயவங்கள் கலந்த புளகம் மயிர்முகிழ்ப்ப***
***நம்பி யாரூ ரரும்எதிரே நளின மலர்க்கை தலைக்குவிய***
***அம்பி காவல் லவர்செய்ய அடித்தா மரையின் கீழ்வீழ்ந்தார். 325***

(இ - ள்.) சிவபெருமான் எழுந்தருள, ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளும் தாங்குதற்கரிய பேரானந்தத்தினால் திருமேனி ஸ்தம்பித்து அவயவங்களிலரும்பிய புளகத்தினால் மயிர்க்கூச் செறியத் திருமுன்னே தாமரைமலர்போன்ற திருக்கரங்களைச் சிரமேற் குவித்து, பார்வதிபாகராகிய அவ்வெம்பெருமானது சிவந்த திருவடித் தாமரைகளில் வீழ்ந்து வணங்கினார். - எ - று.

***விழுந்து பரவி மிக்கபெரு விருப்பி னோடும் எதிர்போற்றி***
***எழுந்த நண்பர் தமைநோக்கி "என்நி யுற்ற(து)?" என்றருளத்***
***தொழுந்தங் குறையை விளம்புவார் யானே தொடங்குந்துரிசிடைப்பட்***
***டழுந்தும் என்னை இன்னம்எடுத் தாளவேண்டும் உமக்"கென்று. 326***

(இ - ள்.) விழுந்து வணங்கி மிக்க பெருமகிழ்ச்சியோடும் எதிரில் துதித்து எழுந்தருளிய திருத்தோழராகிய ஸ்ரீசுந்தர மூர்த்தி சுவாமிகளைப் பார்த்தருளி, (அன்பனே!) நீ அடைந்த குறை யாதென்று வினாவியருள, வணங்குகின்ற தமது குறையைக் கூறுகின்றவராய், யானே செய்யத் தொடங்கிய குற்றத்தில் (வலிய) அகப்பட்டு மூழ்கியிருக்கின்ற சிறியேனைத் தேவரீருக்கு அடிமையாகும் வண்ணம் இன்னமெடுத்து ஆண்டருளவேண்டு மென்று கூறியருளி. - எ - று.

***"அடியேன் அங்குத் திருவொற்றி யூரில் நீரே அருள்செய்ய,***
***வடிவேல் ஒண்கண் சங்கிலியை மணஞ்செய் தணைந்த திறமெல்லாம்***
***கொடியே ரிடையாள் பரவைதான் அறிந்து தன்பால் யான்குறுகில்,***
***'முடிவேன்' என்று துணிந்திருந்தாள்; என்நான் செய்வ(து)?"***
***எனமொழிந்து. 327***

(இ - ள்.) அடியேன் திருவொற்றியூரில் தேவரீர் திருவருள் புரிய, வடித்த வேல்போலும் ஒளியமைந்த கண்களையுடைய சங்கிலியாரை மணம்புரிந்து சேர்ந்த சங்கதியனைத்தும் பூங்கொடி போலும் அழகிய இடையையுடைய பரவையார் தெரிந்து, யான் தன்னிடத்தில் வந்தால் தான் இறந்து விடுவே னென்று துணிவு கொண்டிருக்கின்றாள்; (இதற்கு) யான் யாது செய்வேனென்று கூறி. - எ - று.

***"நாயன் நீரே நான்உமக்கிங் கடியே னாகில் நீர்எனக்குத்***
***தாயின் நல்ல தோழருமாம் தம்பி ரானா ரேயாகில்***
***ஆய அறிவும் இழந்தழிவேன் அயர்வு நோக்கி அவ்வளவும்***
***போய்இவ் விரவே பரவையுறு புரவி தீர்த்துத் தாரும்" என. 328***

(இ - ள்.) எமது ஆண்டவரே யான் உமக்கு அடியவனாகவும், நீர் எனக்குத் தாயினுஞ் சிறந்த தோழராகவும், முதற்பெருங் கடவுளாகவும் இருப்பது உண்மையானால், முன்னுணர்வையு மிழந்து வருந்துகின்ற எனது துன்பத்தை நோக்கி, அவை யனைத்தயும் தேவரீர் இவ்விராப் பொழுதே சென்று (கூறி) பரவையார் கொண்டிருக்கும் ஊடலைத் தணித்துக் கிருபை செய்தருளுமென்று பிரார்த்திக்க. - எ - று.

***அன்பு வேண்டும் தம்பெருமான் அடியார் வேண்டிற் றேவேண்டி***
***முன்பு நின்று விண்ணப்பஞ் செய்த நம்பி முகநோக்கித்,***
***துன்பம் ஒழிநீ யாம்உனக்கோர் தூதனாகி இப்பொழுதே,***
***பொன்செய் மணிப்பூண் பரவையால் போகின் றோம்" என்***
***றருள்செய்தார். 329***

(இ - ள்.) அன்பையே விரும்பி யேற்றருளுஞ் சிவபெருமான் தமது அடியவர் வேண்டியதையே செய்ய விருப்புற்று, தமது திருமுன்னே நின்று விண்ணப்பஞ் செய்து கொண்ட ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது திருமுகத்தைப் பார்த்தருளி, நீ வருத்தம் நீங்கக்கடவாய்; யாம் உனக்கு ஒரு தூதுவனாகி, பொன்னால் செய்யப்பட்ட இரத்தினாபரணத்தை யணிந்த பரவையாரிடத்து இப்பொழுதே செல்கின்றோமென்று அருளிச் செய்தார். - எ - று.

***எல்லை இல்லாக் களிப்பினராய் இறைவர் தாளில் வீழ்ந்தெழுந்து,***
***வல்ல பரிசெல் லாந்துதித்து வாழ்ந்து நின்ற வன்றொண்டர்,***
***"முல்லை முகைவெண் ணகைப்பரவை முகில்சேர் மாடத் திடைச்செல்ல,***
***நில்லா தீண்ட எழுந்தருளி நீக்கும் புலவி" எனத்தொழுதார். 330***

(இ - ள்.) (அதைக் கேட்டு) அளவற்ற பெருமகிழ்ச்சியோடுஞ் சிவபெருமான் றிருவடிகளில் நமஸ்கரித் தெழுந்து, அவ்வெம் பெருமானது பராக்கிரமங்களைத் துதித்துச் சிவாநந்தப் பெருவாழ்வடைந்து நின்ற ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள், (எப்பெருமானே!) முல்லையரும்பு போலும் வெள்ளிய தந்த பந்தியையுடைய பரவையாரது மேகங்கள் தவழுந் திருமாளிகை யிற் செல்வதற்கு ஈண்டு நில்லாது எழுந்தருளி இவள் கொண்ட ஊடலைத் தணித்தருளவேண்டு மென்று வணங்கினார். - எ - று.

**அண்டர் வாழக் கருணையினால் ஆல காலம் அமுதாக**
**உண்ட நீலக் கோலமிடற் றொருவர் இருவர்க் கறிவரியார்**
**வண்டு வாழும் மலர்க்கூந்தல் பரவை யார்மா ளிகைநோக்கித்**
**தொண்ட னார்தம் துயர்நீக்கத் தூத னாராய் எழுந்தருள. 331**

(இ - ள்.) தேவர்களுயிர் வாழும்படி திருவருளினால் ஆலாகலவிஷத்தை யமுதாக வுண்டருளிய அழகிய காளகண்டத்தை யுடையவரும், திருமால் பிரமனென்னும் மிருவராலுங் காண்பதற்கரியவருமாகிய சிவபெருமான் வண்டுகள் மொய்க்கு மலர் மாலை யணிந்த கூந்தலையுடைய பரவை நாச்சியாரது திருமாளிகையை நோக்கித் தமதன்பராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது வருத்தத்தை யொழிக்கும் பொருட்டுத் தூதுவராக வெழுந்தருள. - எ - று.

**தேவா சிரியன் முறையினருக்குந் தேவ ரெல்லாஞ் சேவித்துப்**
**போவார் தம்மில் வேண்டுவார் போத ஒழிந்தார் புறத்தொழிய**
**ஓவா அணுக்கச் சேவகத்தில் உள்ளோர் பூத கணநாதர்**
**மூவா முனிவர் யோகிகளின் முதலா னார்கள் முன்போக. 332**

(இ - ள்.) தேவாசிரிய மண்டபத்தில் முறையே வசிக்கின்ற தேவர்களனைவருந் தொழுது பின்றொடர்ந்து செல்பவர்களில் விரும்பினவர்கள் பின்செல்லவும், மற்றவர்கள் புறத்தில் தங்கவும், நீங்காத அணுக்கத் தொண்டிலுள்ளவர்களும், பூதகணத் தலைவர்களும், கெடாத தவமுனிவர்களும், சிவயோகிகள் முதலானவர்களும் முன்னே செல்லவும். - எ - று.

**அருகு பெரிய தேவருடன் அணைந்து வரும்அவ் விருடிகளும்**
**மருவு நண்பின் நிதிக்கோனும் முதலா யுள்ளோர் மகிழ்ந்தேத்தத்**
**தெருவும் விசும்பும் நிறைந்துவிரைச் செழும்பூ மாரி பொழிந்தலையப்**
**பொருவில் அன்பர் விடுந்தூதர் புனித வீதி யினிற்போத. 333**

(இ - ள்.) சமீபத்தில் சிறந்த தேவர்களுடன் சேர்ந்து வருகின்ற இருடிகளும், பொருந்திய நண்பினையுடைய குபேரன் முதலானவர்களும் மகிழ்ந்து துதிக்கவும், வீதிகளும் ஆகாயமும் நிறைந்து வாசனை பொருந்திய செழிய கற்பக மலர்மாரி பொழிந்து வீசவும், ஒப்பற்ற மெய்யன்பராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளா லனுப்பப்பட்ட தூதுவராகிய சிவபெருமான் பரிசுத்தம் பொருந்திய திருவீதியில் சென்றருள. - எ - று.

***"மாலும் அயனும் காணாதார் மலர்த்தாள் பூண்டு வந்திறைஞ்சும்
காலம் இது"என் றங்கவரை அழைத்தால் என்னக் கடல்விளைத்த
ஆலம் இருண்ட கண்டத்தான் அடித்தா மரைமேற் சிலம்பொலிப்ப
நீல மலர்க்கண் பரவையார் திருமா ளிகையை நேர்நோக்கி. 334***

(இ - ள்.) திருமால் பிரம னென்னு மிருவராலு மறிதற்கரிய சிவபெருமானது திருவடிகளை வந்தடைந்து வணங்குஞ் சமய மிதுவே யென்று அவ்விருவரையு மழைப்பது போலச் சமுத்திரத் திற் றோன்றிய ஆலாகலவிஷமானது இருட்டிருக்கப் பெற்ற கண்டத்தையுடைய சிவபெருமானது திருவடித் தாமரைகளின் மேல் திருச்சிலம்புகள் சப்திக்க, கருங்குவளை மலர் போலுங் கண்களையுடைய பரவை நாச்சியாரது திருமாளிகையை நேரே குறித்து. - எ - று.

***இறைவர் விரைவில் எழுந்தருள எய்தும் அவர்கள் பின்தொடர
அறைகொள் திரைநீர் தொடர்சடையில் அரவு தொடர அரியஇளம்
பிறைகொள் அருகு நறைஇதழிப் பிணையல் சுரும்பு தொடரஉடன்
மறைகள் தொடர வன்றொண்டர் மனமும் தொடர வரும்பொழுது. 335***

(இ - ள்.) சிவபெருமான் விரைவோ டெழுந்தருளும் பொழுது தம்முடன் வருபவர்கள் பின்றொடரவும், சப்திக்கின்ற அலைபொருந்திய கங்கை நீர் தங்கிய சடைமுடியில் பாம்புகள் தொடரவும், அரிய இளம்பிறையி னருகிலுள்ள தேன் பொருந் திய கொன்றை மாலையில் வண்டுகள் தொடரவும், வேதங்கள் தொடரவும், ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது திருவுள்ளமானது பின் தொடரவும் வந்தருளும் பொழுது. - எ - று.

***பெருவீ ரையினும் மிகமுழங்கிப் பிறங்கு மதகுஞ் சரம்உரித்து
மருவீர் உரிவை புனைந்தவர்தம் மருங்கு சூழ்வார் நெருங்குதலால்
திருவீ தியினில் அழகர்அவர் மகிழுஞ் செல்வத் திருவாரூர்
ஒருவீ தியிலே சிவலோகம் முழுதுங் காண உளதாமால். 336***

(இ - ள்.) பெரிய சமுத்திரத்தைப் பார்க்கிலும் மிகுதியாக முழங்கி விளங்குகின்ற (கயாசுரனென்னும்) மதயானையை யுரித்துப் பொருந்திய தோலை ஆடையாக வணிந்தருளிய சிவபெருமானருகில் சூழ்ந்து வருபவர்கள் ஒருவரோடொருவர் நெருங்கியிருந்தால், ஸ்ரீ வீதிவிடங்கப் பெருமானெழுந்தருளிய செல்வங்கள் நிறைந்த திருவாரூர்த் திருப்பதியானது தனது ஒரு திருவீதியில் சிவலோகமுழுவதுங் காணும்படி விளங்கியிருந்தது.- எ - று.

**ஞாலம் உய்ய எழுந்தருளும் நம்பி தூதர் பரவையார்**
**கோல மணிமா ளிகைவாயில் குறுகு வார்முன் கூடத்தம்**
**பாலங் கணைந்தார் புறநிற்பப் பண்டே தம்மை அர்ச்சிக்கும்**
**சீலம் உடைய மறைமுனிவ ராகித் தனியே சென்றணைந்தார். 337**

(இ - ள்.) உலகத்தார் கடைத்தேறும் பொருட்டு அவதரித் தருளிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது தூதுவராகிய சிவ பெருமான் பரவை நாச்சியாரது அழகிய மணிகளழுத்திய திருமாளிகைத் திருவாயிலையடைகின்றவராய் முன்னே செல்லவும், தம் மருகில் சூழ்ந்து வந்த சிவகணங்கள் புறத்தில் நிற்க, பழமையாகத் தம்மைப் பூசிக்கின்ற நல்லொழுக்கம்மைந்த ஆதிசைவ வேதியராகத் திருவுருவங் கொண்டு தனித்துச் சென்றருளினார். - எ - று.

**சென்று மணிவா யிற்கதவஞ் செறிய அடைத்த அதன்முன்பு**
**நின்று "பாவாய்! திறவாய்" என் றழைப்ப நெறிமென் குழலாரும்**
**ஒன்றுந் துயிலா துணர்ந்தயர்வார் "உடைய பெருமான் பூசனைசெய்**
**துன்றும் புரிநூல் மணிமார்பர் போலும் அழைத்தார்" எனத்துணிந்து. 338**

(இ - ள்.) இவ்வாறு சென்று, அழகிய திருவாயிற் கதவைப் பொருந்த அடைத்திருக்கின்ற அதற்கு முன்னே நின்றருளி, பரவையே! கதவைத் திறப்பாயென் றழைத்தருள, சிறிதும் நித்திரையின்றி விழித்திருக்கின்ற நெறிப்பாகிய மெல்லிய கூந்தலையுடைய சங்கிலிநாச்சியாரும் இப்பொழுது நம்மை யழைத்தவர் நம்மை யடிமையாகவுடைய சிவபெருமானுக்குப் பூசனை செய்கின்ற முப்புரி நூலை யணிந்த திருமார்பினை யுடைய அருச்சகர் போலுமென்று துணிவுற்று. - எ - று.

**"பாதி மதிவாழ் முடியாரைப் பயில்பூ சனையின் பணிபுரிவார்**
**பாதி இரவில் இங்கணைந்த தென்னோ!" என்று பயமெய்திப்**
**பாதி உமையாள் திருவடிவிற் பரம ராவ தறியாதே**
**பாதி மதிவா ணுதலாரும் பதைத்து வந்து கடைதிறந்தார். 339**

(இ - ள்.) இளம்பிறையணிந்த சடைமுடியையுடைய சிவ பெருமானுக்கு விளங்குகின்ற பூசைத் தொண்டு செய்கின்ற அருச்சகர் இந் நடுராத்திரியில் இங்கு வந்தது யாது காரணமோ வென்று அச்சமுற்று, உமாதேவியாரை வாம பாகத்திற் கொண்ட திருவுருவினையுடைய சிவபெருமானென்ப தறியாமல் அர்த்தசந்திரன் போலு மொளிபொருந்திய நெற்றியினையுடைய பரவை நாச்சியாரும் மனம் பதைத்து வந்து கதவைத் திறந்தருளி னார். - எ - று.

**மன்னும் உரிமை வன்றொண்டர் வாயில் தூதா வாயிலிடை**
**முன்நின் றாரைக் கண்டிறைஞ்சி "முழுதும் உறங்கும் பொழுதின்கண்**
**என்னை ஆளும் பெருமான்இங் கெய்தி அருளி னார்என்ன**
**மின்னு மணிநூல் அணிமார்பீர்!" எய்த வேண்டிற் றென்" என்றார். 340**

(இ - ள்.) நிலைபெற்ற அன்பினுரிமையையுடைய ஸ்ரீசுந்தர மூர்த்தி சுவாமிகளிடத்தினின்றும் வந்த தூதுவராய், திருவாயிலின் முன்னே நின்றருளிய சிவபெருமானைத் தரிசித்து வணங்கி, முழுவதுந் துயில்கின்ற இந்நடுராத்திரியில் என்னை யடிமை கொண்டருளுஞ் சிவபெருமானே இங்கெழுந்தருளினார் போலுமென்று, விளங்குகின்ற அழகிய பூணூலையணிந்த மார்பினையுடைய வேதியரே! (தேவரீர் இந்நேரத்தில்) இங்கு வரவேண்டிய காரணம் யாதென்று வினாவினார். - எ - று.

**கங்கைநீர் கரந்த வேணி கரந்தவர் அருளிச் செய்வார்**
**"நங்கைநீ மறாது செய்யின் நன்வந்த துரைப்ப"தென்ன**
**அங்கயல் விழியி னாரும் "அதனைநீர் அருளிச் செய்தால்**
**இங்கெனக் கிசையு மாகில் இசையலாம்" என்று சொல்லி. 341**

(இ - ள்.) கங்கை நீரை யொளித்த சடைமுடியை மறைத்து வேதியராக வெழுந்தருளிய சிவபெருமானருளிச் செய்கின்றார்; பெண்ணே! நீ மறுக்காமல் செய்ய உடன்படுவதானால் நான் வந்த காரணத்தைச் சொல்லக் கூடுமென்றருளிச் செய்ய, அழகிய கெண்டை மீன்போலும் விழியினையுடைய பரவை நாச்சியாரும் நீர் அதனைக் கூறியருளின், இங்கு எனக்கது செய்யக்கூடுமானால் சம்மதிக்கலாமென்று கூறி. - எ - று.

**"என்நினைந் தணைந்த தென்பால் இன்னதென் றருளிச் செய்தால்**
**பின்னைய தியலுமாகில் ஆம்"எனப் பிரானார் தாமும்**
**"மின்னிடை மடவாய்! நம்பி வரஇங்கு வேண்டும்" என்ன**
**நன்னுத லாருஞ் "சால நன்று! நம் பெருமை" என்பார். 342**

(இ - ள்.) என்னிடத்தில் யாது கருதி வந்தருளியதோ, அதனை இன்னதென்று அருளிச் செய்தால் பின்பு அது கூடுமானால் செய்வோமென்றுகூற, (வேதியராகிய) சிவபெருமானும் மின்போலு மிடையினை யுடைய பரவையே! இங்கு நம்பியாரூரர் வருதல் வேண்டுமென்று கூறியருள, பரவை நாச்சியாரும் நமது பெருமை மிக நன்றாயிருக்கின்றதென்று கூறுவாராயினார். - எ - று.

***"பங்குனித் திருநா ளுக்குப் பண்டுபோல் வருவா ராகி***
***இங்கெனைப் பிரிந்து போகி ஒன்றியூர் எய்தி அங்கே***
***சங்கிலித் தொடக்குண் டாருக் கிங்கொரு சார்வுண் டோ?நீர்***
***கங்குலின் வந்து சொன்ன காரியம் அழகி(து)" என்றார். 343***

(இ - ள்.) பங்குனி யுத்திரத் திருவிழாவிற்கு முன்பு போல வருகின்றவராய், இவ்விடத்தில் என்னை விட்டு நீங்கிச் சென்று திருவொற்றியூரை யடைந்து, அங்குச் சங்கிலி யென்பவளோடு சம்பந்தப்பட்டிருந்தவருக்கு, பின் இங்கேயொரு சார்பிருக்கின் றதோ? தேவரீர் இந்நடுராத்திரியில் வந்து சொன்ன காரியம் மிகவும் அழகாயிருக்கின்றதென்று கூறியருளினார். - எ - று.

***நாதரும் அதனைக் கேட்டு "நங்கைநீ நம்பி செய்த***
***ஏதங்கள் மனத்துக் கொள்ளா தெய்திய வெகுளி நீங்கி***
***நோதக ஒழித்தற் கன்றோ? நுன்னையான் வேண்டிக் கொண்ட(து)***
***ஆதலின் மறுத்தல் செய்ய அடா"தென அருளிச் செய்தார். 344***

(இ - ள்.) சிவபெருமானும் அவ்வார்த்தையைக் கேட்டு, பெண்ணே! நீ நம்பியாரூரர் செய்த குற்றங்களை மனதில் வையாமல், அடைந்திருக்கின்ற கோபத்தினின்று நீங்கித் துன்ப மொழிதற்கன்றோ? யான் உன்னை வேண்டிக் கொண்டது; ஆதலால் எனது வேண்டுகோளைத் தடுப்பது உனக்குத் தகாதென்று அருளிச் செய்தனர். - எ - று.

***அருமறை முனிவ ரானஐயரைத் தைய லார்தாம்***
***"கருமம்ஈ தாக நீர்இக் கடைத்தலை வருகை மற்(று)உம்***
***பெருமைக்குத் தகுவ தன்றால்; ஒற்றியூர் உறுதி பெற்றார்***
***வருவதற் கிசையேன்; நீரும் போம்"என மறுத்துச் சொன்னார். 345***

(இ - ள்.) அரிய வேதியத் திருவுருவங் கொண்டெழுந்தருளிய சிவபெருமானைப் பரவை நாச்சியார் பார்த்து, நீர் இக் காரியத்தை மேற்கொண்டு இத்தலை வாசலில் வருவது உமது மேன்மைக்குத் தகுதியல்ல. திருவொற்றியூரே தமக்கு ஸ்திரமாகப் பெற்ற நம்பியாரூரர் இங்கு வருவதற்குச் சம்மதியேன்; நீரும் போவீராக வென்று மறுத்துக் கூறியருளினார். - எ - று.

***நம்பர்தாம் அதனைக் கேட்டு நகையும்உட் கொண்டு மெய்ம்மைத்***
***தம்பரி சறியக் காட்டார் தனிப்பெருந் தோழ னார்தம்***
***வெம்புறு வேட்கை காணுந் திருவிளை யாட்டின் மேவி***
***வம்பலர் குழலி னார்தாம் மறுத்ததே கொண்டு மீண்டார். 346***

(இ - ள்.) சிவபெருமான் அவ்வார்த்தையைக் கேட்டுத் தமதுள்ளத்தில் புன்சிரிப்படைந்து, உண்மையாகிய தமது திருவுருவத்தை அவ்வம்மையாரறியும்படி காட்டாமல், ஒப்பற்ற பெரிய திருத்தோழராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது கலங்கியிருக்கும் விருப்பத்தைக் காணவேண்டிய திருவிளையாட்டினால், நறுமணங் கமழுங் கூந்தலையுடைய பரவை நாச்சியார் தடுத்து விட்டதையே உறுதியாகக் கொண்டு திரும்பினார். - எ - று.

***தூதரைப் போக விட்டு வரவுபார்த் திருந்த தொண்டர்***
***"நாதரை அறிவி லாதே நன்னுதல் புலவி நீக்கிப்***
***போதரத் தொழுதேன்" என்று புலம்புவார்; பரவையாரைக்***
***காதலில் இசைவு கொண்டு வருவதே கருத்துட் கொள்வார். 347***

(இ - ள்.) தூதுவரைப் பரவை நாச்சியாரிடத்தனுப்பி அவரது வருகையை எதிர்பார்த்திருந்த ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் அறிவில்லாதவனாகிய யான் பரவையாரது ஊடலைத் தீர்க்கும் பொருட்டுச் சிவபெருமானைத் தூது செல்லும்படி வணங்கி விடுத்தேனென்று அழுவார்; பரவையாரை விருப்பத்தோடும் சம்மதிக்கச் செய்து வருவதையே தமதுள்ளத்திற் சிந்திப்பார். - எ - று.

***போயவள் மனையில் நண்ணும் புண்ணியர் என்செய் தாரோ?***
***நாயனார் தம்மைக் கண்டால் நன்னுதல் மறுக்கு மோ?தான்***
***ஆயஎன் அயர்வு தன்னை அறிந்தெழுந் தருளி னார்தாம்***
***சேயிழை துனிதீர்த் தன்றி மீள்வது செய்யார்" என்று. 348***

(இ - ள்.) தூது சென்று அப்பரவையார் திருமாளிகையை யடைந்த சிவபெருமான் யாது செய்தனரோ? சிவபெருமானைப் பார்த்தால் பரவை நாச்சியார் தடை சொல்வாளோ? யானடைந்திருக்குந் துன்பத்தை யறிந்து தூதாக வெழுந்தருளிய சிவபெருமான் பரவையாரது மனவருத்தத்தை நீக்கியன்றித் திரும்பாரென்று சிந்தித்து. - எ - று.

***வழிஎதிர் கொள்ளச் செல்வர் வரவுகா ணாது மீள்வர்***
***அறிவுற மயங்கி நிற்பர் அசைவுடன் இருப்பர் "நெற்றி***
***விழியவர் தாழ்ந்தார்" என்று மீளவும் எழுவர் மாரன்***
***பொழிமலர் மாரி வீழ ஒதுங்குவர் புன்க ணுற்றார். 349***

(இ - ள்.) வழியை யெதிர்கொள்ளும்படி செல்லுவார் அவரது வருகையைக் காணாமல் திரும்புவார்; மனமழிய மயக்கங் கொண்டு நிற்பார்; தேகமசைவுற்றிருப்பார்; நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான் இன்னம் வரவில்லையென்று திரும்பவும் எழுவார்; மன்மதன் பிரயோகிக்கும் புஷ்ப பாண மாகிய மழை பொழிய ஒதுங்கி நிற்பார்; இவ்வாறு மனவருத்த மடைந்தனர். - எ - று.

***பரவையார் தம்பால் நம்பி தூதராம் பாங்கிற் போன***
***அரவணி சடையார் மீண்டே அறியுமா றணையும் போதில்***
***இரவும்தான் பகலாய்த் தோன்ற எதிரெழுந் தணையை விட்ட***
***உரவுநீர் வெள்ளம் போல ஓங்கிய களிப்பிற் சென்றார். 350***

(இ - ள்.) பரவை நாச்சியாரிடத்தில் ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமி களுக்காகத் தூதுவராகச் சென்றருளிய பாம்பை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் அவரறியும்படி யெதிரில் வரும்பொழுது, அவ்விரவு பகலாகத் தோன்ற அவ்வெம் பெருமானுக் கெதிரிலெழுந்து, அணை கடந்து செல்லும் வலிய நீர்ப்பிரவாகம் போல மிக்க மகிழ்வோடுஞ் சென்றருளினார். - எ - று.

***சென்றுதம் பிரானைத் தாழ்ந்து திருமுகம் முறுவல் செய்ய***
***ஒன்றிய விளையாட் டோரார் உறுதிசெய் தணைந்தார் என்றே***
***அன்றுநீர் ஆண்டு கொண்ட அதனுக்குத் தகவே செய்தீர்***
***இன்றிவள் வெகுளி எல்லாந் தீர்த்தெழுந் தருளிஎன்றார். 351***

(இ - ள்.) தமது திருமுகத்தில் மகிழ்வுண்டாகச் சென்று சிவபெருமானை வணங்கி, அவர் செய்யுந் திருவிளையாட்டை யுணராமல், (தமது காரியத்தை) ஸ்திரப்படுத்தி வந்தனரென்று கருதித் தேவரீரெழுந்தருளி, இன்று பரவையார் கொண்ட கோபங்க ளனைத்துந் தணித்து, அந்நாளில் என்னைத் தடுத் தடிமை கொண்டருளிய தன்மைக்குத் தகுதியாகவே செய் தருளினீரென்று கூறினார். - எ - று.

***அம்மொழி விளம்பும் நம்பிக் கையர்தாம் அருளிச் செய்வார்***
***நம்மைநீ சொல்ல நாம்போய்ப் பரவைதன் இல்லம் நண்ணிக்***
***கொம்மைவெம் முலையி னாட்குன் திறமெலாங் கூறக் கொள்ளாள்***
***வெம்மைதான் சொல்லி நாமே வேண்டவும் மறுத்தாள் என்றார். 352***

(இ - ள்.) அவ்வார்த்தையைக் கூறி ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குச் சிவபெருமானருளிச் செய்கின்றார்; நீ நம்மைத் தூது செல்லும்படி சொல்ல, நாம் சென்று பரவையாரது திருமாளிகையையடைந்து, குவிவாகிய வெவ்விய ஸ்தனங்களை யுடைய அப்பெண்ணுக்கு உன் வருத்தங்களனைத்தும் எடுத் துரைத்து நாமே வேண்டிக் கொள்ளவும் ஏற்றுக் கொள்ளாமல் கடுமொழி கூறித் தடுத்தனளென்று கூறியருளினார். - எ - று.

**அண்ணலார் அருளிச் செய்யக் கேட்டஆ ரூரர் தாமும்**
**துண்ணென நடுக்கம் உற்றே தொழுதுநீர் அருளிச் செய்த**
**வண்ணமும் அடியா ளான பரவையோ மறுப்பாள் நாங்கள்**
**எண்ணஆர் அடிமைக் கென்ப தின்றறி வித்தீர்என்று. 353**

(இ - ள்.) சிவபெருமான் அவ்வாறு அருளிச் செய்ய, அதனைக் கேட்ட ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளும் திடுக்கென்று நடுங்கங்கொண்டு வணங்கி, தேவரீரருளிச் செய்த வகைகளை அடியவளாகிய பரவையோ? தடுப்பவள்; நாங்கள் உமக்கடிமை யாதற்குத் தகாதவர்களென்பதை இன்று தெரிவித்தருளினி ரென்று கூறி, - எ - று.

**வானவர் உய்ய வேண்டி மறிகடல் நஞ்சை உண்டீர்**
**தானவர் புரங்கள் வேவ மூவரைத் தவிர்த்தாட் கொண்டீர்**
**நான்மறைச் சிறுவர்க் காகக் காலனைக் காய்ந்து நட்டீர்**
**யான்மிகை உமக்கின் றானால் என்செய்வீர் போதா தென்றார். 354**

(இ - ள்.) தேவர்களுயிர்பெற்று வாழும் பொருட்டு (அலைகள்) மடங்குகின்ற கடலிற்றோன்றிய விஷத்தை யுண்டருளினீர்; அசுரர்களது முப்புரங்களெரியச் செய்து (அப்புரத்திற்குத் தலவர்களாகிய தாரகாக்ஷன் - கமலாக்ஷன் - வித்துன்மாலியென்னும்) மூவர்களையும் நீக்கி யடிமை கொண் டருளினீர்; பிராமணச் சிறுவராகிய மார்க்கண்டேயர் பொருட்டு இயமனையுதைத்து, அவரையடிமை கொண் டருளினீர்; யான் தேவரீருக்கு அத்தகைய அன்பு சிறிது மின்றிக் குற்றமுடையேனாயிருப்பின் தேவரீர் திரும்பிவராமல் வேறு யாது செய்வீர்; என்று கூறியருளினார். - எ - று.

**ஆவதே செய்தீர் இன்றென் அடிமைநீர் வேண்டா விட்டால்**
**பாவியேன் தன்னை அன்று வலியஆட் கொண்ட பற்றென்**
**நோவுமென் அழிவுங் கண்டீர் நுடங்கிடை அவள்பால் இன்று**
**மேவுதல் செய்யீ ராகில் விடும்உயிர் என்று வீழ்ந்தார். 355**

(இ - ள்.) எனதன்பிற்குத் தக்கவாறே செய்தருளினீர்; இன்று எனதடிமையைத் தேவரீர் ஏற்றுக் கொள்ளாவிடின், கொடியேனாகிய என்னை அந்நாளில் தடுத்தடிமை கொண்டருளிய கருணை யாது? எனது வருத்தத்தையுங்கேட்டையும் பார்த்திருக்கின்ற எப்பெருமானே! துவளுகின்ற இடையினையுடைய பரவையாரிடத்தில், இப்பொழுது மறுபடியுந் தூது சென்று அவள் ஊடலைத் தணியீராயின், எனது பிராணன் போய்விடுமென்று வருந்திப் பூமியில் விழுந்தார். - எ - று.

***தம்பிரான் அதனைக் கண்டு தரியாது தளர்ந்து வீழ்ந்த***
***நம்பியை அருளால் நோக்கி நாம்இன்னம் அவள்பாற் போய்அக்***
***கொம்பினை இப்போ தேநீ குறுகுமா கூறு கின்றோம்***
***வெம்புறு துயர்நீங் கென்றார் வினைஎலாம் விளைக்க வல்லார். 356***

(இ - ள்.) சிவபெருமானதனையுணர்ந்து, மனந்தரியாமல் சோர்ந்து விழுந்த ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளைக் கருணையோடு பார்த்தருளி, நாம் இன்னம் பரவையாரிடத்துச் சென்று, பூங்கொம்பு போன்ற அந்தப் பெண்ணை இப்பொழுதே நீயடையும்படி சொல்லுகின்றோம்; ஆதலால் நீ வருந்துகின்ற துன்பத்தினின்று நீங்குவாயாகவென்று கூறியருளினார்; எல்லாச் செயல்களையுந் தோற்றுவிக்க வல்லவராகிய சிவபெருமான். - எ - று.

***மயங்கிய நண்பர் உய்ய வாக்கெனும் மதுர வாய்மை***
***நயங்கிளர் அமுதம் நல்க நாவலூர் மன்னர் தாமும்***
***முயங்கிய கலக்கம் நீக்கி உம்மடித் தொழும்ப னேனைப்***
***பயங்கெடுத் திவ்வா றன்றோ பணிகொள்வ(து) என்று போற்ற. 357***

(இ - ள்.) மனநிலை கலங்கிய தமது தோழராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளுய்யும்படி தமது திருவாக்கென்னு மதுரமாகிய மெய்ம்மை பொருந்திய நன்மை மிக்க அமுதத்தைத் தந்தருள, ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளும் வருந்துகின்ற மனக்கலக்க மொழிந்து, உமது திருவடித் தொண்டனாகிய என்னை அச்சத்தினின்று நீக்கி, இத்தன்மையாகவல்லவோ? அடிமை கொள்வதென்று துதிக்க. - எ - று.

***அன்பர்மேற் கருணை கூர ஆண்டவர் மீண்டுஞ் செல்லப்***
***பின்புசென் றிறைஞ்சி நம்பி பேதுற வோடு மீண்டார்***
***முன்புடன் போதா தாரு முறைமையிற் சேவித் தேகப்***
***பொன்புரி சடையார் மாதர் புதினமா ளிகையிற் சென்றார். 358***

(இ - ள்.) மெய்யன்பராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளிடத்துத் திருவருள் சுரந்து சிவபெருமான் மீண்டுந் தூது செல்ல, அந்நம்பியாரூரர் அவர் பின்னே சென்று வணங்கி மனக் கலக்கத்துடன் திரும்பினார்; முன்பு தம்முடன் வராதிருந்த தேவர்கள் முதலியோரும் வரிசையாக வணங்கிப் பின்செல்ல, பொன்போல் விளங்கும் முறுக்காகிய சடைமுடியையுடைய சிவபெருமான் பரவை நாச்சியாரது தூய்மையாகிய திருமாளிகையிற் சென்றருளினார். - எ - று.

***மதிநுதற் பரவை யார்தாம் மறையவர் போன பின்பு***
***முதிர்மறை முனியாய் வந்தார் அருளுடை முதல்வ ராகும்***
***அதிசயம் பலவுந் தோன்ற "அறிவுற்றே அஞ்சிக் கெட்டேன்***
***எதிர்மொழி எம்பி ரான்முன் என்செய மறுத்தேன்" என்பார். 359***

(இ - ள்.) பிறைச் சந்திரன் போன்ற நெற்றியையுடைய பரவை நாச்சியார் தூதுவராக வந்த வேதியர் சென்றபின்பு பல அதிசயங் களுண்டாக, அதனால், விருத்த வேதியராக வந்தவர் நம்மை யடிமை கொண்டளிய சிவபெருமானாகுமென்று தெளிந்து அச்சங்கொண்டு, ஐயோ! கெட்டேன்; எமது சிவபெருமான் முன்னே யாதுசெய்ய, அவரருளிச் செய்ததை எதிர்வார்த்தை கூறித் தடுத்தேனென்று வருந்துவாராயினார். - எ - று.

***கண்துயில் எய்தார் வெய்ய கையற வெய்தி ஈங்கின்(று)***
***அண்டர்தம் பிரானார் தோழர்க் காகஅர்ச் சிப்பார் கோலம்***
***கெண்டணைந் தவரை யான்உட் கொண்டிலேன் பாவி யேன்என்***
***றொண்சுடர் வாயி லேபார்த் துழையரோ டழியும் போதில். 360***

(இ - ள்.) நித்திரைகொள்ளாமல் கொடிய வருத்தமுற்று, இங்கு இப்பொழுது தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் தமது திருத்தோழராகிய நம்பியாரூரர் பொருட்டு அருச்சகர் போலத் திருவுருவங் கொண்டெழுந்தருளிய அவ்வெம்பெருமானைப் பாவியாகிய யான் சிறிதும் மனதிற்சிந்திக்கவில்லை யென்று கருதி, ஒளி விளங்குகின்ற திருவாயிலைப் பார்த்து அருகிலுள்ள தோழியர்களுடன் வருந்தும் பொழுது. - எ - று.

***வெறியுறு கொன்றை வேணி விமலருந் தாமாந் தன்மை***
***அறிவுறு கோலத் தோடும் அளவில்பல் பூத நாதர்***
***செறிவுறு தேவர் யோக முனிவர்கள் சூழ்ந்து செல்ல***
***மறுவில்சீர்ப் பரவை யார்தம் மாளிகை புகுந்தார் வந்து. 361***

(இ - ள்.) வாசனை பொருந்திய கொன்றை மாலையை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானும் தம்மை யுணரத் தக்க திருவுருவத்தோடும் அளவற்ற பல பூதகணத்தலைவர்களும், நெருங்கிய தேவர்களும், சிவயோகத்தையுடைய முனிவர்களும் அருகில் சூழ்ந்துவர, குற்றமற்ற சிறப்பினையுடைய பரவை நாச்சியாரது திருமாளிகையை வந்தடைந்தருளினார். - எ - று.

***பாரிடத் தலைவர் முன்னாம் பல்கண நாதர் தேவர்***
***நேர்வுறு முனிவர் சித்தர் இயக்கர்கள் நிறைத லாலே***
***பேரரு ளாளர் எய்தப் பெற்றமா ளிகைதான் தென்பால்***
***சீர்வளர் கயிலை வெள்ளித் திருமலை போன்ற தன்றே. 362***

(இ - ள்.) பூதகணத் தலைவர் முதலாகிய பல கணநாதர் களும், தேவர்களும், நல்லொழுக்கமமைந்த முனிவர்களும், சித்தர்களும், இயக்கர்களும் நிறைந்திருத்தலால், சிறந்த அருள் வள்ளலாகிய சிவபெருமான் தூதாக வெழுந்தருளப் பெற்ற பரவை நாச்சியாருடைய திருமாளிகையானது சிறப்பு வளர்க் கின்ற தென்றிசைத் திருக்கயிலை போன்று விளங்கியது. - எ - று.

***ஐயர்அங் கணைந்த போதில் அகிலலோ கத்துள் ளாரும்***
***எய்தியே செறிந்து சூழ எதிர்கொண்ட பரவை யார்தாம்***
***மெய்யுறு நடுக்கத் தோடு மிக்கெழும் மகிழ்ச்சி பொங்கச்***
***செய்யதா ளிணைமுன் சேர விரைவினாற் சென்று வீழ்ந்தார். 363***

(இ - ள்.) சர்வலோகத்திலுள்ளவர்களுமடைந்து நெருங்கிச் சூழும்படி சிவபெருமான் அங்கெழுந்தருளிய பொழுது எதிர் கொண்டு சென்ற பரவை நாச்சியார் தமது திருமேனியிலுண் டாகிய நடுக்கத்துடன் மிகுந்தெழுகின்ற மகிழ்ச்சியதிகரிக்க விரைவோடு சென்று சிவந்த இரண்டு திருவடிகளில் விழுந்து வணங்கினார். - எ - று.

***அரிஅயற் கரியார் தாமும் ஆயிழை யாரை நோக்கி***
***"உரிமையால் ஊரன் ஏவ மீளவும் உன்பால் வந்தோம்***
***முருகலர் குழலாய்! இன்னம் முன்புபோல் மறாதே நின்பால்***
***பிரிவுற வருந்து கின்றான் வரப்பெற வேண்டும்" என்றார். 364***

(இ - ள்.) திருமால் பிரமனென்னு மிருவராலுங் காணப் படாதவராகிய சிவபெருமான் பரவைநாச்சியாரைப் பார்த் தருளி, நறுமணங்கமழுங் கூந்தலையுடைய பரவையே! நம்பியா ரூரனனுப்ப மீண்டும் உன்னிடத்து வந்தோம்; அன்பினுரிமை யினால் இன்னம் முன்போலத் தடைசொல்லாமல், பிரிவினால்

வருந்துகின்ற அந்தச் சுந்தரன் உன்னிடத்தில் வரும்படி சம்மதிக்க வேண்டுமென்று கூறியருளினார். - எ - று.

**பெருந்தடங் கண்ணி னாரும் பிரான்முப்பு மிகவும் அஞ்சி**
**வருந்திய உள்ளத்தோடு மலர்க்கரங் குழல்மேற் கொண்டே**
**"அருந்திரு மறையோ ராகி அணைந்தீர்முன் அடியேன் செய்த**
**இருந்தவப் பயனாம் என்ன எய்திய நீரோ?" என்பார். 365**

(இ - ள்.) மிக்க விசாலமாகிய கண்களையுடைய பரவை நாச்சியாரும் சிவபெருமான் திருமுன்னே மிக்க அச்சமுற்று, வருந்துகின்ற திருவுள்ளத்துடன் தாமரை மலர் போன்ற திருக்கரங்களைக் குவித்துக் கூந்தலின் மேல்வைத்து, அடியேன் செய்த பெரிய தவப் பயன்போல வெழுந்தருளிய தேவரீரோ? முன்பு அரிய வேதியர் போலத் திருவுருவங்கொண் டெழுந்தருளி வந்தவரென்று கூறுவாராயினார். - எ - று.

**துளிவளர் கண்ணீர் வாரத் தொழுதுவிண் ணப்பஞ் செய்வார்**
**"ஒளிவளர் செய்ய பாதம் வருந்தஓர் இரவு மாறா(து)**
**அளிவரும் அன்பர்க் காக அங்கெடிங் குழல்வீ ராகி**
**எளிவரு வீருமானால் என்செய்கேன் இசையா(து)!" என்றார். 366**

(இ - ள்.) துளிக்கின்ற கண்ணீர் பெருக வணங்கி விண்ணப் பஞ் செய்கின்றார்; (எம்பெருமானே! தேவரீர்) ஒளி விளங்கு கின்ற சிவந்த திருவடிகள் வருந்தும் வண்ணம் ஓரிரவு முழுவதும் நீங்காமல், அன்பினையுடைய நம்பியாரூரர் பொருட்டு அங்கு மிங்கும் திரிபவராய் எளிதாகத் தூதுவருபவருமானால் சம்மதியாமல் யாதுசெய்வேனென்று கூறினார். - எ - று.

**"நங்கை!நின் தன்மைக் கேற்கும் நன்மையே மொழிந்தாய்" என்று**
**மங்கையோர் பாகம் வைத்த வள்ளலார் விரைந்து போகத்**
**திங்கள்வா ணுதலி னாருஞ் சென்றுபின் இறைஞ்சி மீண்டார்**
**எங்களை ஆளும் நம்பி தூதர்மீண் டேகு கின்றார். 367**

(இ - ள்.) பெண்ணே! உனது பெருந்தன்மைக்கேற்ற நன் மொழியையே கூறினை என்றருளிச் செய்து, உமாதேவியாரை வாமபாகத்தில் வைத்தருளிய சிவபெருமான் விரைந்து சென் றருள, அர்த்தசந்திரன்போலும் நெற்றியையுடைய பரவை நாச்சியாரும் பின்சென்று வணங்கித் திரும்பினார்; எம்மை யடிமை கொண்டருளிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது தூதுவ ராகிய சிவபெருமான் அவ்வம்மையாரது சம்மதம் பெற்றுத் திரும்பிச் செல்வாராயினார். - எ - று.

***ஆதியும் மேலும் மாலயன் நாடற் கருளாதார்***
***தூதினில் ஏகித் தொண்டரை ஆளுந் தொழில்கண்டே***
***வீதியில் ஆடிப் பாடி மகிழ்ந்தே மிடைகின்றார்***
***பூதியில் நீடும் பல்கண நாதப் புகழ்வீரர். 368***

(இ - ள்.) திருவடியையுந் திருமுடியையுந் திருமால் பிரம னென்னு மிருவருங் காண்பதற்கரியவராகிய சிவபெருமான் தூதுசென்று ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளை யாண்டருளிய செய்கையைப் பார்த்து, விபூதியினாற் சிறந்து விளங்கும் பல சிவகணத்தலைவர்களாகிய புகழையுடைய வீரர்கள் திருவீதி யில் ஆனந்தக்கூத்தாடியுந் திருப்புகழைப் பாடியும் நெருங்குகின்ற வராயினார். - எ - று.

***அன்னவர் முன்னும் பின்னும் மருங்கும் அணைவெய்த***
***மின்னிடை யார்பால் அன்பரை உய்க்கும் விரைவோடும்***
***சென்னியில் நீடுங் கங்கை ததும்பத் திருவாரூர்***
***மன்னவ னார்அம் மறையவ னார்பால் வந்துற்றார். 369***

(இ - ள்.) அச்சிவகணநாதர்கள் தமக்கு முன்னும் பின்னும் அருகிலுஞ் சூழ்ந்துவர, மின்போலு மிடையினையுடைய பரவை நாச்சியாரிடத்து ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளை யனுப்ப வேண்டு மென்னும் விரைவுடன் திருமுடியிலணிந்த கங்கைநீர் ததும்பும் படி திருவாரூரிலெழுந்தருளிய சிவபெருமான் அச் ஸ்ரீசுந்தர மூர்த்தி சுவாமிகளிடத்து வந்தடைந்தருளினார். - எ - று.

***அன்பரும் "என்பால் ஆவி அளிக்கும் படிபோனார்***
***என்செய்து மீள்வார் இன்னமும்?" என்றே இடர்கூரப்***
***பொன்புரி முந்நூல் மார்பினர் செல்வப் பொலிவீதி***
***முன்புற நேருங் கண்ணிணை தானும் முகிழாரால். 370***

(இ - ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளும் என்னிடத்து உயிர்தரிக்கும்படி சென்றருளிய சிவபெருமான் இன்னமும் யாதுசெய்து திரும்புவரோ வென்று துன்பமிகும்படி பொன் போல் விளங்கும் பூணூலையணிந்த திருமார்பினையுடைய சிவபெருமான் தூது சென்ற காரணமாக விளங்குகின்ற திருவீதியை முன்னே பொருந்தப் பார்க்கின்ற இரண்டு கண்களையும் மூடாராயினார். - எ - று.

***அந்நிலல மைக்கண் மன்மதன் வாளிக் கழிவார்தம்***
***மன்னுயிர் நல்குந் தம்பெரு மானார் வந்தெய்த***
***முன்னெதிர் சென்றே மூவுல குஞ்சென் றடையுந்தாள்***
***சென்னியில் வைத்"தென் சொல்லுவர்"என்றே தெளியாதார். 371***

(இ - ள்.) அவ்வாறாகிய நிலைமையில் மன்மதன் விடுகின்ற புஷ்ப பாணத்தினால் வருந்துகின்ற ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது நிலைபெற்ற உயிரைத்தரும்படி தூதுசென்ற தமது சிவபெருமான் வந்தடைய, மூவுலகத்திலுள்ளவர்களும் அடைக்கலமாக வந்தடையுந் திருவடிகளை முற்பட்டுச் சென்று தமது சிரசிற்சூடி (அவர் தூதுசென்ற காரியத்தைக் குறித்து) யாது சொல்வரோ வென்று தெளியாதவராயினார். - எ - று.

***"எம்பெரு மான்!நீர் என்னுயிர் காவா திடர்செய்யும்***
***கொம்பனை யாள்பால் என்கொடு வந்தீர் குறை" என்னத்***
***தம்பெரு மானும் "தாழ்குழல் செற்றந் தணிவித்தோம்;***
***நம்பி! இனிப்போய் மற்றவள் தன்பால் நணு"கென்ன. 372***

(இ - ள்.) எமது ஆண்டவரே! தேவரீர் எனதுயிரைக் காவாமல துன்பத்தைச் செய்கின்ற பரவையாரிடத்தினின்றும் யாது குறைகொண்டு வந்தீரென்று வினாவ, சிவபெருமானும் நம்பியாரூரனே! நாம் தாழ்ந்த கூந்தலையுடைய பரவையார் கொண்டிருந்த கோபத்தைத் தணிவித்தோம்; இனி நீசென்று அப்பரவையாரிடத்து அடைகவென்று கூறியருள. - எ - று.

***நந்தி பிரானார் வந்தருள் செய்ய நலமெய்தும்***
***சிந்தையுள் ஆர்வங் கூர்களி எய்தித் திகழ்கின்றார்***
***'பந்தமும் வீடும் தீர்அருள் செய்யும் படிசெய்தீர்;***
***எந்தைபி ரானே! என்இனி என்பால் இடர்?'! என்றார்; 373***

(இ - ள்.) சிவபெருமான் வந்தருளி யிவ்வாறருளிச் செய்ய, நன்மை பொருந்திய தமது திருவுள்ளத்தில் விருப்ப மிக்க மகிழ்ச்சி யடைந்து விளங்குகின்றவராய், எமதாண்டவரே! போகத்தையும் மோட்சத்தையுந்தேவரீரே கொடுத்தருளும் வகைக்கேற்பச் செய்தருளினீர்; இனி என்னிடத்தில் யாது துன்பமுளதென்று கூறி வணங்கினார். - எ - று.

***என்றடி வீழும் நண்பர்தம் அன்புக் கெளிவந்தார்***
***"சென்றணை நீஅச் சேயிழை பால்"என் றருள்செய்து***
***வென்றுயர் சேமேல் வீதி விடங்கப் பெருமாள்தம்***
***பொன்திகழ் வாயிற் கோயில் புகுந்தார் புவிவாழ. 374***

(இ - ள்.) என்று கூறித் திருவடிகளில் விழுந்து வணங்கி திருத்தோழராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது பேரன்பிற்குச் சுலபமாக வெழுந்தருளிய சிவபெருமான், (சுந்தரா!) நீ அப்பரவையாரிடத்துச் சென்று சேரக்கடவையென்று திருவருள் புரிந்து, வெற்றி பெற்றுயர்ந்த இடபவாகனத்தின் மேலெழுந் தருளும் ஸ்ரீ தியாகராசப் பெருமான் உலகத்தார் சிவாநந்தப் பெருவாழ்வடையும் பொருட்டுப் பொன்மயமாக விளங்குந் திருவாயிலையுடைய தமது திருக்கோயிலுக்கெழுந்தருளினார். - எ - று.

**தம்பிரா னார்பின் சென்று தாழ்ந்தெழுந் தருளால் மீள்வார்**
**"எம்பிரான் வல்ல வா"றென் றெய்திய மகிழ்ச்சி யோடும்**
**வம்பலர் குழலார் செம்பொன் மாளிகை வாயில் நோக்கி**
**நம்பியா ரூரர் காதல் நயந்தெழுந் தருளும் போது.** *375*

(இ - ள்.) (அவ்வாறெழுந்தருளிய) சிவபெருமான் பின்னே சென்று நமஸ்கரித்தெழுந்து திருவருளினால் திரும்புகின்றவ ராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் இஃது எமதாண்டவரது திருவட்டிறமென்று பொருந்திய பெருங்களிப்பினோடும் வாசனை வீசுகின்ற கூந்தலையுடைய பரவை நாச்சியாரது செம்பொன்மயமாகிய திருமாளிகைத் திருவாயிலை நோக்கி விருப்பங் கொண்டு சென்றருளும் பொழுது. - எ - று.

**முன்துயில் உணர்ந்து சூழ்ந்த பரிசனம் மருங்கு மொய்ப்ப**
**மின்றிகழ் பொலம்பூ மாரி விண்ணவர் பொழிந்து வாழ்த்த**
**மன்றல்செய் மதுர சீத சீகாரங் கொண்டு மந்தத்**
**தென்றலும் எதிர்கொண் டெய்துஞ் சேவகம் முன்பு காட்ட.** *376*

(இ - ள்.) முன்னே நித்திரை நீங்கி யெழுந்து சூழ்ந்த பரிசனங்கள் அருகில் நெருங்கவும், மின்போல் விளங்குகின்ற அழகிய புஷ்பவருஷத்தைத் தேவர்கள் பொழிந்து துதிக்கவும், நறுமணங்கமழும் மதுரமாகிய குளிர்ந்த கவரியைக் கொண்டு சிறு தென்றற்காற்று மெதிர்கொண்டு வருகின்ற வீரத் தன்மையை முன்னே காட்டவும். - எ - று.

**மாலைதண் கலவைச் சேறு மான்மதச் சாந்து பொங்கும்**
**கோலநற் பகங்கர்ப் பூரங் குங்குமம் முதலாயுள்ள**
**சாலுமெய்க் கலன்கள் கூடச் சாத்தும்பூண் ஆடை வர்க்கம்**
**பாலனம் பிறவும் ஏந்தும் பரிசனம் முன்பு செல்ல.** *377*

(இ - ள்.) பூமாலையும், குளிர்ந்த கலவைச் சந்தனமும், கஸ்தூரிச்சாந்தும், அழகு மிக்க நறிய பச்சைக் கர்ப்பூரமும், குங்குமச் சாந்தும் முதலாயுள்ளவைகளையும், மிக்க திருமேனிக் கணியு மாபரணங்களுடன், அணிகின்ற வஸ்திரவர்க்கங்களும் முதலிய பகுப்பினையுடைய மற்றப் பொருள்களையுந் தாங்கி வருகின்ற பரிசனங்கள் முன்னே போகவும். - எ - று.

***இவ்வகை இவர்வந் தெய்த எய்திய விருப்பி னோடும்***
***மைவளர் நெடுங்கண் ணாரும் மாளிகை அடைய மன்னும்***
***செய்வினை அலங்கா ரத்துச் சிறப்பணி பலவுஞ் செய்து***
***நெய்வளர் விளக்குத் தூபம் நிறைகுடம் நிரைத்துப் பின்னும். 378***

(இ - ள்.) இத்தகைய சிறப்பினோடும் ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் வந்தடையவும், மை தீட்டிய நீண்ட கண்களையுடைய பரவை நாச்சியாரும் பொருந்திய பெருவிருப்போடுந் தமது திருமாளிகை முழுதும் செய்தொழிலால் அழகினையுடைய பல சிறப்புகளையுஞ் செய்து, நெய்விளக்குகளையுந் தூபங்களையும் பூரணகும்பங்களையும் வரிசையாக வைத்துப் பின்னும். - எ - று.

***பூமலி நறும்பொற் றாமம் புனைமணிக் கோவை நாற்றிக்***
***காமர்பொற் சுண்ணம் வீசிக் கமழ்நறுஞ் சாந்து நீவித்***
***தூமலர் வீதி சூழ்ந்த தோகையர் வாழ்த்தத் தாமும்***
***மாமணி வாயில் முன்பு வந்தெதிர் ஏற்று நின்றார். 379***

(இ - ள்.) பொலிவினையுடைய சிறந்த பொன்னரிமாலை களையும், அலங்கரித்த இரத்தின ஆரங்களையுந் தொங்கக்கட்டி, அழகிய பொற்சுண்ணந் தெளிந்து, நறுமணங்கமழுங் கலவைச் சாந்தினால் மெழுகி, தூய்மைமிக்க திருவீதியைச் சூழ்ந்த மாதர்கள் துதிக்க, தாமும் சிறந்த மணிகளழுத்திய திருவாயிலின் முன்பு வந்து (ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது வருகையை) எதிர்பார்த்து நின்றனர். - எ - று.

***வண்டுலாங் குழலார் முன்பு வன்றொண்டர் வந்து கூடக்***
***கண்டபோது துள்ளங் காதல் வெள்ளத்தின் கரைகா ணாது***
***கொண்டநாண் அச்சங் கூர வணங்கஅக் குரிசி லாரும்***
***தண்டளிர்ச் செங்கை பற்றிக் கொண்டுமா ளிகையுட் சார்ந்தார். 380***

(இ - ள்.) வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலையுடைய பரவை நாச்சியாருக்கு முன்னே ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் வந்தடைய, அவரைப் பார்த்த பொழுது தமதுள்ளமானது ஆசையாகிய வெள்ளத்தின் கரையைக் காணாமல் தாமடைந்த நாணமும் அச்சமு மிகும்படி வணங்க, ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளும் (பரவை நாச்சியாரது) குளிர்ந்த தளிர்போன்ற சிவந்த திருக்கரத்தைப் பிடித்துக் கொண்டு திருமாளிகையினுள்ளே யடைந்தருளினார். - எ - று.

***இருவரும் தம்பி ரானார் தாம்இடை யாடிச் செய்த***
***திருவருட் கருணை வெள்ளத் திறத்தினைப் போற்றிச் சிந்தை***
***மருவிய இன்ப வெள்ளத் தழுந்திய புணர்ச்சி வாய்ப்ப***
***ஒருவருள் ஒருவர் மேவும் நிலைமையில் உயிர்ஒன் றானார். 381***

(இ - ள்.) அவர்களிருவரும் சிவபெருமான் இடையில் தூது நடந்து செய்தருளிய திருவருட் பெருங்கருணைத் திறத்தைத் துதித்து, தமதுள்ளத்தமைந்த இன்பவெள்ளத்தில் முழுகிய புணர்ச்சியானது பொருந்த ஒருவரோடொருவர் கலந்திருக்குந் தன்மையினால் உயிரொன்றாயிருந்தார்கள். - எ - று.

***ஆரணக் கமலக் கோயில் மேவிப்புற் றிடங்கொண் டாண்ட***
***நீரணி வேணி யாரை நிரந்தரம் பணிந்து போற்றிப்***
***பாரணி விளக்குஞ் செஞ்சொற் பதிகமா லைகளுஞ் சாத்தித்***
***தாரணி மணிப்பூண் மார்பர் தாம்மகிழ்ந் திருந்த நாளில். 382***

(இ - ள்.) வேதவடிவமாகிய கமலாலயத்தை யடைந்து, புற்றை யிடமாகக் கொண்டு தம்மை யடிமை கொண்டருளிய கங்கை நீரையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானைத் தினந்தோறம் வணங்கித் துதித்து, உலகத்திலுள்ள ஆன்மாக் களை இனிது தெளிவிக்கின்ற செவ்விய சொற்களமைந்த திருப்பதிகம் பாடி யணிந்தருளி, இரத்தினாபரணங்களை மாலையாக வணிந்த திருமார்பினையுடைய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் மகிழ்வுற்று அங்கு வசித்தருளும் நாள்களில். - எ - று.

***"நம்பியா ரூரர் நெஞ்சில் நடுக்கம்ஒன் றின்றி நின்று***
***தம்பிரா னாரைத் தூது தையல்பால் விட்டார்" என்னும்***
***இம்பரின் மிக்க வார்த்தை ஏயர்கோ னார்தாம் கேட்டு***
***வெம்பினார் அதிச யித்தார் வெருவினார் விளம்ப லுற்றார். 383***

(இ - ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் தமதுள்ளத்தில் சிறிதும் அச்சமின்றி நின்று, சிவபெருமானைப் பரவை நாச்சியாரிடத்துத் தூதனுப்பினாரென்று கூறும் உலகத்தில் அதிகரித்து வழங்கும் வார்த்தையை ஏயர்கோன்கலிக்கமநாயனார் கேள்வியுற்றுக் கோபித்து அதிசயித்து நடுங்கிச் சொல்வாராயினார். - எ - று.

**"நாயனை அடியான ஏவுங் காரியம் நன்று! சால**
**ஏயும்என் றிதனைச் செய்தான் தொண்டனாம் என்னே பாவம்!**
**பேயனேன் பொறுக்க ஒண்ணாப் பிழையினைச் செவியாற் கேட்ப**
**தாயின பின்னும் மாயா திருந்ததென் ஆவி" என்பார். 384**

(இ - ள்.) சிவபெருமானை அடியான் தூதுவிட்டகாரியம் மிகவும் நன்று; இது மிகத்தகுமென்று சிந்தித்து, இக்காரியத்தைச் செய்தவனும் ஒரு தொண்டனாம், இது என்ன பாவம்; பொறுக்கமுடியாத பெருங்குற்றத்தைப் பேயேனாகிய யான் காதினால் கேட்கப் பெற்றபின்னும் என்னுயிர் நீங்காதிருக்கின்றதென்று கூறுவார் - எ - று.

**"காரிகை தன்பாற் செல்லுங் காதலால் ஒருவன் ஏவப்**
**பாரிடை நடந்து செய்ய பாததா மரைகள் நோவத்**
**தேரணி வீதி யூடு செல்வது வருவ தாகி**
**ஓரிர வெல்லாந் தூதுக்(கு) உழல்வராம் ஒருவர்" என்று. 385**

(இ - ள்.) பெண்ணிடத்துப் போகவேண்டுமென்னும் ஆசையினால் ஒருவனனுப்ப, ஒப்புயர்வில்லாச் சிவபெருமான் சிவந்த திருவடித் தாமரைகள் வருந்தப் பூமியில் நடந்து அழகிய தேரோடுந் திருவீதியில் போவதும் வருவதுமாய்த் தூதுக்காக ஓரிரவு முழுதும் உழன்றனராம் என்று. - எ - று.

**நம்பர்தாம் அடிமை ஆற்றா ராகியே நண்ணி னாரேல்**
**உம்பரார் கோனும் மாலும் அயனும்நேர் உணர ஒண்ணா**
**எம்பிரான் இசைந்தால் ஏவப் பெறுவதே? இதனுக் குள்ளம்**
**கம்பியா தவனை யான்முன் காணுநாள் எந்நாள்?" என்று. 386**

(இ - ள்.) தேவர்கள் தலைவனாகிய இந்திரனும் திருமாலும் பிரமனும் நேரிலுணரவொண்ணாத எமது முதல்வராகிய சிவபெருமான் அடிமைத் தன்மையராகித் தூதுசெல்ல விசைந்தால் அவரை யேவுதல் தகுதியோ? இதற்கு மனநடுங்காத துஷ்டனை யான் எதிரில் பார்க்குநாள் எந்நாளோ? என்று கூறி.- எ - று.

**"அரிவைகா ரணத்தி னாலே ஆளுடைப் பரமர் தம்மை**
**இரவினில் தூது போக ஏவிஅங் கிருந்தான் தன்னை**
**வரவெதிர் காண்பே னாகில் வருவதென் னாங்கொல்?" என்று**
**விரவிய செற்றம் பற்றி விள்ளும்உள் ளத்த ராகி. 387**

(இ - ள்.) ஒரு பெண் அடைந்த ஊடல் காரணமாக நம்மை யடிமையாக வுடைய சிவபெருமானை இரவினில் தூதுசெல்ல விடுத்த அங்கிருந்த துரோகியை வர எதிரே காண்பேனாயின் யாது சம்பவிக்குமோவென்று, மிகுந்த கோபங்கொண்டு வேறுபட்ட திருவுள்ளமுடையவராகி. - எ - று.

**ஈறிலாப் புகழின் ஓங்கும் ஏயர்கோ னார்தாம் எண்ணப்**
**பேறிது பெற்றார் கேட்டுப் பிழைஉடன் படுவா ராகி**
**வேறினி இதற்குத் தீர்வு வேண்டுவார் விரிபூங் கொன்றை**
**ஆறிடு சடைய னாருக் கதனைவிண் ணப்பஞ் செய்து. 388**

(இ - ள்.) முடிவில்லாத புகழோடும் விளங்குகின்ற ஏயர் கோன் கலிக்காமநாயனார் இவ்வாறெண்ணத்தக்க பேற்றைப் பெற்றவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் அதனைக் கேள்வி யுற்று, (தாம் தூதனுப்பிய) குற்றத்திற்கு உடன்பட்டவராய், இனி இதற்குப் பரிகாரம் வேண்டுகின்றவர், அலர்ந்த கொன்றை மலர் மாலையையுங் கங்கைநதியையுந் தரித்த சடைமுடியையுடைய சிவபெருமானுக்கு அதனை விண்ணப்பஞ்செய்து. - எ - று.

**நாடொறும் பணிந்து போற்ற நாதரும் அதனை நோக்கி**
**நீடிய தொண்டர் தம்முள் இருவரும் மேவும் நீர்மை**
**கூடுதல் புரிவார் ஏயர் குரிசிலர் தம்பால் மேனி**
**வாடுறு சூலை தன்னை அருளினார் வருந்து மாற்றால். 389**

(இ - ள்.) தினந்தோறும் வணங்கித் துதிக்க, சிவபெருமான் அதனைக்கேட்டு, சிறந்த திருத்தொண்டர்களிருவருங் கலந்திருக் குந் தன்மையால் கூட்டியருள்பவராய், ஏயர்கோன்கலிக்காம நாயனாரிடத்துத் திருமேனி வாடத்தக்க சூலை நோயை அவர் வருந்தும் வண்ணம் ஏவியருளினார். - எ - று.

**ஏதமில் பெருமைச் செய்கை ஏயர்தம் பெருமான் பக்கல்**
**ஆதியார் ஏவும் சூலை அனல்செய்வேல் குடைவதென்ன**
**வேதனை மேன்மேற் செய்ய மிகஅதற்(கு) உடைந்து வீழ்ந்து**
**[illegible]நா யகர்தம் பொற்றாள் பற்றியே போற்று கின்றார். 390**

(இ - ள்.) குற்றமற்ற பெருஞ் செய்கையையுடைய ஏயர்கோன் கலிக்காம நாயனாரிடத்துச் சிவபெருமானா லேவப்பட்ட சூலை நோயானது நெருப்பில் காய்ச்சிய வேலானது குடைவதுபோல மேலுமேலுந் துன்பத்தைச் செய்ய, அதனால் மிகவும் வருந்தி விழுந்து சிவபெருமானது அழகிய திருவடிகளைச் சிந்தித்துத் துதிக்கின்றவராயினார். - எ - று.

**சிந்தையால் வாக்கால் அன்பர் திருந்தடி போற்றி செய்ய**
**எந்தமை யாளும் ஏயர் காவலர் தம்பால் ஈசர்**
**வந்"துனை வருத்துஞ் சூலை வன்றொண்டர் தீர்க்கில் அன்றி**
**முந்துற ஒழியா" தென்று மொழிந்தருள் செய்யக் கேட்டு. 391**

(இ - ள்.) மெய்யன்பராகிய ஏயர்கோன்கலிக்காமநாயனார் மனத்தினாலும் வாக்கினாலும் (கடவுளுடைய) செவ்விய திருவடிகளைத் துதிக்க, சிவபெருமான் எம்மை யடிமை கொண்டருளிய அவ்வேயர்கோன்கலிக்காமநாயனாரிடத்தில் எழுந்தருளி, உன்னை வருத்துகின்ற இச்சூலை நோயானது சுந்தரன் தீர்த்தாலன்றி முற்பட்டு நீங்காதென்று அருளிச் செய்ய அதனைக் கேட்டு. - எ - று.

**எம்பிரான்! எந்தை தந்தை தந்தைஎங் கூட்ட மெல்லாம்**
**தம்பிரான் நீரே என்று வழிவழி சார்ந்து வாழும்**
**இம்பரின் மிக்க வாழ்க்கை என்னைநின் றிருஞ் சூலை**
**வம்பென ஆண்டு கொண்டான் ஒருவனே? தீர்ப்பான் வந்து. 392**

(இ - ள்.) எம்பெருமானே! என் தந்தையும் என்றந்தைதக்குத் தந்தையும் அவன் றந்தையு முதலாகவுள்ள எங்கள் சந்ததி யனைத்துந் தேவரீரே மெய்க்கடவுளென்று பரம்பரையாக அடிமைப்பட்டு வாழ்கின்ற இவ்வுலகத்தில் சிறந்த குடியிற் பிறந்த அடியேனை இன்று வருந்துகின்ற சூலைநோயைப் புதிதாக அடிமை கொள்ளப்பட்ட ஒருவனோ? வந்து தீர்க்கின்றவன். - எ - று.

**"மற்றவன் தீர்க்கில் தீரா தொழிந்தெனை வருத்தல் நன்றால்;**
**பெற்றம்மேல் உயர்த்தீர்! செய்யும் பெருமையை அறிந்தார் யாரே!**
**உற்றவன் றொண்டற் கேஆம் உறுதியே செய்தீர்" என்னக்**
**கற்றைவார் சடையார் தாமும் அவர்முன்பு கரந்தார் அன்றே. 393**

(இ - ள்.) அச் சுந்தரன் தீர்த்தலினுந் தீராதொழிந்து, அது என்னை வருத்துவது நல்லது; இடபத்தைக் கொடியாக வுயர்த்திய எம்பெருமானே! தேவரீர் செய்யும் பெருமையை அறியவல்லவர்கள் யாவர்; உமக்கடிமைப்பட்ட அந்நம்பியா ரூரனுக்கு ஆகும் உறுதியையே செய்யுமென்று கூற, கற்றை யாகிய நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமானும் அந் நாயனாருக்கு எதிரில் மறைந்தருளினார். - எ - று.

***வன்றொண்டர் தம்பால் சென்று வள்ளலார் அருளிச் செய்வார்***
***"இன்றுநம் ஏவ லாலே ஏயர்கோன் உற்ற சூலை***
***சென்றுநீ தீர்ப்பா யா"கென் றருள்செயச் சிந்தை யோடு***
***நன்றுமெய்ம் மகிழ்ந்து போற்றி வணங்கினார்நாவ லூரர். 394***

(இ - ள்.) அருள் வள்ளலாகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமி களிடத்துச் சென்று அருளிச் செய்வார், இன்று நமது ஏவுதலி னாலே ஏயர்கோன் கலிக்காமனடைந்திருக்குஞ் சூலைநோயை நீபோய்த் தீர்க்கக் கடவையென் றருளிச் செய்ய, ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் தமது திருவுள்ளத்தோடு திருமேனியும் பூரித்துத் துதித்து வணங்கியருளினார். - எ - று.

***அண்ணலார் அருளிச் செய்து நீங்கிஆ ரூரர்தாமும்***
***விண்ணவர் தம்பி ரானார் ஏவலால் விரைந்து செல்வார்***
***கண்ணிய மனத்தின் மேவுந் காதலால் கலிக்கா மர்க்குத்***
***திண்ணிய சூலை தீர்க்க வருதிறஞ் செப்பி விட்டார். 395***

(இ - ள்.) இவ்வாறு சிவபெருமானருளிச் செய்து மறைந் தருள, ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளும் தேவர்கள் நாயகராகிய அவ்வெம்பெருமானது ஏவுதலினாலே விரைந்து செல்கின்றவர், சிந்திக்கின்ற தமது திருவுள்ளத்தில் பொருந்திய பெருவிருப்பி னால் ஏயர்கோன்கலிக்காம நாயனாருக்கு வலிய சூலை நோய் தீர்க்கும்படி தாம்வருஞ் சமாசாரத்தைச் சொல்லியனுப்பினார்.- எ - று.

***நாதர்தம் அருளால் நண்ணுஞ் சூலையும் அவர்பாற் கேட்ட***
***கேதமும் வருத்த மீண்டும் வன்றொண்டர் வரவும் கேட்டுத்***
***"தூதனாய் எம்பி ரானை ஏவினார் சூலை தீர்க்கும்***
***ஏதம்இங் செய்த எய்தில் யாள்செய்வ தென்னாம்?" என்பார். 396***

(இ - ள்.) சிவபெ' நமானது திருவருளினால் வந்தடைந்த சூலைநோயும், ஸ்ரீச ரமூர் தி சுவாமிகளிடத்தில் கேள்வியுற்ற

(தூதுவிடுத்தலாகிய) குற்றமும் தம்மை வருத்த, பின்னும் அச்சுந்தரமூர்த்தி சுவாமிகளது வருகையைக் கேள்வியுற்று, எமது சிவபெருமானைத் தூதாக அனுப்பினவன் சூலை நோய் தீர்க்குங் குற்றமானது இங்குண்டாக வருவானாயின், யான் யாது செய்வ தென்று சிந்திப்பவராய். - எ - று.

**"மற்றவன் இங்கு வந்து தீர்ப்பதன் முன்நான் மாயப்**
**பற்றிநின் றென்னை நீங்காப் பாதகச் சூலை தன்னை**
**உற்றஇவ் வயிற்றி னோடுங் கிழிப்பன்" என் றுடைவாள் தன்னால்**
**செற்றிட உயிரி னோடும் சூலையுந் தீர்ந்த தன்றே. 397**

(இ - ள்.) அவன் இங்கு வந்து சூலை நோயைத் தீர்ப்பதற்கு முன்னே, நானிறக்கும்படி தொடர்ந்து நின்று என்னைவிட்டு நீங்காத பாதகமாகிய சூலைநோயை, அடைந்த இவ்வயிற்றி னோடுங் கிழித்துத் தீர்ப்பேனென்று உடைவாளினாலே வயிற்றைக் கிழிக்க, உயிரோடு சூலைநோயும் நீங்கியது. - எ - று.

**கருதரும் பெருமை நீர்மைக் கலிக்காமர் தேவி யாரும்**
**பொருவருங் கணவ ரோடு போவது புரியுங் காலை**
**"மருவிஇங் கணைந்தார் நம்பி" என்றுமுன் வந்தார்கூற**
**"ஒருவரும் அழுதல் செய்யா தொழிக"என் றுரைத்துப் பின்னும். 398**

(இ - ள்.) நினைத்தற்கரிய பெருங்கற்புத் தன்மையையுடைய அவ்வேயர் கோன் கலிக்காமநாயனாரது மனைவியாரும் ஒப்பற்ற தமது கணவனாரோடு இறக்கப் புகுந்தபொழுது, ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் இங்கு வந்தருளினாரென்று முன்னே வந்தவர்கள் சொல்ல, (அந்நாயனரது மனைவியார்) ஒருவரும் அழாதிருங்களென்று சொல்லிப் பின்பு. - எ - று.

**கணவர்தஞ் செய்கை தன்னைக் கரந்துகா வலரை நம்பி**
**அணைவுறும் பொழுது சால அலங்கரித் தெதிர்போம் என்னப்**
**புணர்நிலை வாயிற் றீபம் பூரண கும்பம் வைத்துத்**
**துணர்மலர் மாலை தூக்கித் தொழுதெதிர் கொள்ளச் சென்றார். 399**

(இ - ள்.) கணவரது செய்கையை மறைத்துத் தமது சுற்றத் தாரை (நோக்கி,) ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் இங்கெழுந்தருளும் பொழுது மிகவு மலங்கரித்து அவரை எதிர்கொள்ளுங்க ளென்று கூற, உயர்ந்த நிலைகளையுடைய திருவாயிலில் திருவிளக்குகளும் பூரண கும்பங்களும் வைத்து, கொத்தாகிய மலர் மாலைகளை வரிசையாகக் கட்டி அவரை வணங்கி யெதிர் கொள்ளும்படி சென்றார்கள். - எ - று.

***செம்மைசேர் சிந்தை மாந்தர் சென்றெதிர் கொண்டு போற்ற***
***நம்மைஆ ளுடைய நம்பி நகைமுகம் அவர்க்கு நல்கி***
***மெய்ம்மையாய் விருப்பி னோடும் மேவிஉட் புகுந்து மிக்க***
***மொய்ம்மலர்த் தவிசின் மீது முகமலர்ந் திருந்த போது. 400***

(இ - ள்.) நற்குணமமைந்த மனத்தினையுடைய உறவினர்கள் அவரை எதிர்கொண்டு சென்று துதிக்க, நம்மை யடிமையாக வுடைய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் அவர்களுக்கு மகிழ்முகங் காட்டியருளி உண்மையாகிய பெருவிருப்போடுஞ் சென்று திருமாளிகையினுள்ளே புகுந்து, சிறந்த மலர்கள் நிறைந்த புஷ்பாசனத்தில் முகமலர்ச்சியுட னெழுந்தருளியிருந்த பொழுது. - எ - று.

***பான்மைஅர்ச் சனைகள் எல்லம் பண்பினில் வழாமை ஏய்ந்த***
***நான்மறை தொடர்ந்த வாய்மை நம்பியா ரூரர் கொண் "டிங்***
***கியான்மிக வருந்து கின்றேன்; ஏயர்கோ னார்தாம் உற்ற***
***ஊனவெஞ் சூலை நீங்கி உடன்இருப் பதனுக்" கென்றார். 401***

(இ - ள்.) சிறப்புமிக்க அருச்சனைகளனைத்தும் முறைப்படி தவறாமல் பொருந்திய நான்கு வேதங்களிலுஞ் சொல்லப்பட்ட உண்மைகளைத் தேவாரத் திருப்பதிகங்களாகப் பாடியருளும் ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் ஏற்றுக் கொண்டு, இங்கு ஏயர் கோன் கலிக்காம நாயனாரடைந்திருக்கும் ஊனமாகிய கொடிய சூலை நோயை நீக்கி அவருடனிருப்பதற்கு யான் மிகவும் வருந்தி விரும்புகின்றனென்று கூறியருளினார். - எ - று.

***மாதர்தம் ஏவ லாலே மனைத்தொழில் மாக்கள் "மற்றிங்***
***கேதமொன் றில்லை உள்ளே பள்ளிகொள் கின்றார்" என்னத்***
***"தீதணை வில்லை யேனும் என்மனந் தெருளா தின்னம்***
***ஆதலால் அவரைக் காண வேண்டும்" என் றருளிச் செய்தார். 402***

(இ - ள்.) அப்பொழுது, நாயனாருடைய மனைவியாரது ஏவலினால் திருமாளிகையில் வேலை செய்பவர்கள் (சுவாமீ! அவருக்கு) இங்கு ஒரு தீங்குமில்லை, உள்ளே பள்ளி கொள்கின் றார் என்று விண்ணபஞ் செய்ய, அவருக்கு ஒரு தீங்குமில்லையா யினும் இன்னம் என்மனந் தெளியவில்லையாதலால், அவரை நான் காணவேண்டுமென்று கூறியருளினார். - எ - று.

**வன்றொண்டர் பின்னுங் கூற மற்றவர் தம்மைக் காட்டத்**
**துன்றிய குருதி சோரத் தொடர்குடர் சொரிந்துள் ளாவி**
**பொன்றியே கிடந்தார் தம்மைக் கண்டபின் "புகுந்த வாறு**
**நன்(று)என மொழிந்து "நானும் நண்ணுவேன் இவர்முன்"பென்பார். 403**

(இ - ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் பின்னுங் கூறியருள, அவர்கள் அதைக் கேட்டு ஏயர்கோன் கலிக்காமநாயனாரைக் காட்ட, திருமேனியிற் பொருந்திய உதிரமொழுகும்படி, தொடர்ந்த குடல் சரிந்து உயிர் நீங்கிக் கிடக்கின்றவரைப் பார்த்த பின்பு, நடந்தவகை நன்றென்று கூறி, நானு மிவருக்கு முன்னே இறப்பேனென்று கூறுவாராயினார். - எ - று.

**கோளுறு மனத்த ராகிக் குற்றுடை வாளைப் பற்ற**
**ஆளுடைத் தம்பி ரானார் அருளினார் அவரும் உய்ந்து**
**"கேளிரே யாகிக் கெட்டேன்" எனவிரைந் தெழுந்து கையில்**
**வாளினைப் பிடித்துக் கொள்ள வன்றொண்டர் வணங்கி வீழ்ந்தார். 404**

(இ - ள்.) திடசித்தமுடையவராய் உடைவாளைக் கையி லெடுக்க, நம்மை யடிமை கொண்டருளிய சிவபெருமான் திருவருளினால் அவ்வேயர்கோன் கலிக்காம நாயனார் உயிர் பெற்று நண்புடைய வராய், ஐயோ! கெட்டேன் என்று விரைந் தெழுந்து அவர் கையிலுள்ள உடைவாளைப் பிடித்துக் கொள்ள, ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் அவரைச் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார். - எ - று.

**மற்றவர் வணங்கி வீழ வாளினை மாற்றி ஏயர்**
**கொற்றவ னாரும் நம்பி குறைகழல் பணிந்து வீழ்ந்தார்**
**அற்றைநாள் நிகழ்ந்த இந்த அதிசயங் கண்டு வானோர் 405**
**பொற்றட மலரின் மாரி பொழிந்தனர் புவனம் போற்ற.**

(இ - ள்.) ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் வீழ்ந்து வணங்க, உடைவாளையகற்றி ஏயர்கோன் கலிக்காமநாயனாரும் ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது சப்திக்கின்ற வீரக்கழலை யணிந்த திருவடியை விழுந்து நமஸ்கரித்தார்; அக்காலத்தில் நடந்த இந்த அற்புதத்தைப் பார்த்து உலகத்தார் துதிக்கத் தேவர்கள் பொன்மயமாகிய பெரிய கற்பக மலர்மாரி பொழிந்தார்கள். - எ - று.

**இருவரும் எழுந்து புல்லி இடைவிடா நண்பி னாலே**
**பொருவரும் மகிழ்ச்சி பொங்கத் திருப்புன்கூர்ப் புனிதர் பாதம்**
**மருவினர் போற்றி நின்று வன்றொண்டர் தம்பி ரானார்**
**அருளினை நினைந்தே "அந்த ணாளன்" என் றெடுத்துப் பாடி. 406**

(இ - ள்.) பின்பு இருவரும் எழுந்து ஒருவரோடொருவர் தழுவி, நீங்காத தோழமையினால் ஒப்பற்ற பெருமகிழ்ச்சி யதிகரிக்கத் திருப்புன்கூரில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானது திருவடிகளை யடைந்து துதித்து நின்று, ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் அவ்வெம்பெருமானது திருவருளைச் சிந்தித்து "அந்தணாளன்" என்று முதலெடுத்துத் திருப்பதிகம் பாடியருளி. எ - று.

**சிலபகல் கழிந்த பின்பு திருமுனைப் பாடி நாடர்**
**மலர்புகழ்த் திருவா ரூரில் மகிழ்ந்துடன் வந்த ஏயர்**
**குலமுதற் றலைவ னாருங் கூடவே குளிர்பூங் கோயில்**
**நிலவினார் தம்மைக் கும்பிட் டுறைந்தனர் நிறைந்த அன்பால். 407**

(இ - ள்.) அங்குச் சிலநாள்கள் சென்றபின்பு, ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் பரந்த புகழையுடைய திருவாரூர்த் திருப்பதியில், மகிழ்வுற்றுத் தம்முடன் வந்த ஏயர்கோன் கலிக்காம நாயனாருடன் குளிர்ந்த ஸ்ரீ கமலாலயமென்னுந் திருக்கோயிலில் வீற்றிருந்தருளும் ஸ்ரீ தியாகராசப் பெருமானை வணங்கி மிக்க அன்போடும் வசித்தருளினார். - எ - று.

**அங்கினி தமர்ந்து நம்பி அருளினால் மீண்டும் போந்து**
**பொங்கிய திருவின் மிக்க தம்பதி புகுந்து பொற்பில்**
**தங்குநாள் ஏயர் கோனார் தமக்கேற்ற தொண்டு செய்தே**
**செங்கண்மால் விடையார் பாதஞ் சேர்ந்தனர் சிறப்பி னோடும். 408**

(இ - ள்.) ஏயர்கோன் கலிக்காமநாயனார் அங்குச் சிலநாள் சுவாமி தரிசனஞ் செய்து கொண்டிருந்து, ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது திருவருளினால் அவ்விடத்தினின்று நீங்கிச் சென்று, சிறந்த செல்வத்தின் மிக்க தமது திருப்பெருமங்கல மென்னுந் திருப்பதியை யடைந்து மேன்மையோடு வாழுநாள்களில், அவர் தமக்கிசைந்த திருத்தொண்டுகளைச் செய்து, சிவந்த கண்களையுடைய விஷ்ணுவாகிய இடபவாகனத் தெழுந்தருளுஞ் சிவபெருமானது திருவடிகளை மிக்க சிறப்போடும் அடைந்தருளினார். - எ - று.

***நள்ளிருள் நாய னாரைத் தூதுவிட் டவர்க்கே நண்பாம்***
***வள்ளலார் ஏயர் கோனார் மலரடி வணங்கிப் புக்கேன்***
***உள்ளுணர் வான ஞானம் முதலிய ஒருநான் குண்மை***
***தெள்ளுதீந் தமிழாற் கூறுந் திருமூலர் பெருமை செப்ப. 409***

(இ - ள்.) நடுராத்திரியில் சிவபெருமானை(ப் பரவை நாச்சியாரிடத்துத்) தூதாக அனுப்பிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கே யுரிய நண்பராகிய ஏயர்கோன் கலிக்காம நாயனாரது தாமரை மலர் போன்ற திருவடிகளை நமஸ்கரித்து, உள்ளத்திலுணர்த்தற்குரிய மெய்ஞ்ஞானபாத முதலிய ஒப்பற்ற நான்குபாதங்களின் உண்மைகளைத் தெளிவாக இனிய தமிழ் மொழியினால் அருளிச் செய்த திருமூலநாயனாரது மேன்மை யைச் சொல்லத் தொடங்கினேன். - எ - று.

# ௩௦. திருமூல நயானார் புராணம்

***அந்திஇளம் பிறைக்கண்ணி அண்ணலார் கயிலையினில்***
***முந்தைநிகழ் கோயிலுக்கு முதற்பெருநா யகமாகி***
***இந்திரன்மால் அயன்முதலாம் இமையவர்க்கு நெறியருளும்***
***நந்திதிரு வருள்பெற்ற நான்மறையோ கிகள்ஒருவர். 1***

(இ - ள்.) மாலைக் காலத்தில் தோன்றுகின்ற இளம்பிறை யாகிய மாலையை யணிந்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் ஸ்ரீமகா கயிலாசத்தில் முற்பட்டு விளங்குகின்ற திருக்கோயிலுக்கு முதன்மை பொருந்திய சிறந்த தலைவராய், இந்திரன் - திருமால்- பிரமன் முதலிய தேவர்களுக்கு மார்க்கத்தைத் தெரிவித்தருள் கின்ற திருநந்திதேவரது திருவருளைப் பெற்ற நான்கு வேதங் களையுமுணர்ந்த சிவயோகிகளுள் ஒருவர். - எ - று.

***மற்றவர்தாம் அணிமாதி வருஞ்சித்தி பெற்றுடையார்***
***கொற்றவனார் திருக்கயிலை மலைநின்றுங் குறுமுனிபால்***
***உற்றதொரு கேண்மையினால் உடன்சிலநாள் உறைவதற்கு***
***நற்றமிழின் பொதியமலை நண்ணுதற்கு வழிக்கொண்டார். 2***

(இ - ள்.) அச்சிவயோகியார் அணிமா முதலாகச் சொல்லப் பட்டு வருகின்ற அட்டமாசித்திகளையும் பெற்றுள்ளவர்; அவர், சிவபெருமான் வீற்றிருந்தருளிய ஸ்ரீகயிலாசகிரியினின்றும் அகஸ்திய முனிவரிடத்திற் பொருந்திய நண்பினாலே அவருடன் சிலகாலம் வசிப்பதற்கு நல்ல தமிழினையுடைய பொதிய மலையை யடையும் பொருட்டுப் புறப்பட்டருளினார். - எ - று.

மன்னுதிருக் கேதாரம் வழிபட்டு மாமுனிவர்
பன்னுபுகழ்ப் பசுபதிநே பாளத்தைப் பணிந்தேத்தித்
துன்னுசடைச் சங்கரனார் ஏற்றதூ நீர்க்கங்கை
அன்னமலி அகன்துறைநீர் அருங்கரையின் மருங்கணைந்தார். 3

(இ - ள்.) சிறந்த அச்சிவயோகியார் நிலைபெற்ற திருக் கேதாரத் திருமலையை வணங்கி, துதிக்கத்தக்க புகழையுடைய பசுபதி நேபாளத்தை வணங்கித் துதித்து, சிவபெருமான் தமது சடைமுடியில் தரித்தருளிய தூய்மையாகிய நீரையுடைய கங்கைநதியின் அன்னங்கள் நெருங்கிய அகன்ற நீர்த்துறைகள் பொருந்திய அரிய கரையினரு கடைந்தருளினார். - எ - று.

கங்கைநீர்த் துறையாடிக் கருத்துறைநீள் கடலேற்றும்
அங்கணர்தாம் மகிழ்ந்தருளும் அவிமுத்தம் பணிந்தேத்தி
மங்குல்வளர் வரைவிந்த மன்னுபருப் பதம்இறைஞ்சித்
திங்களணி சடையர்திருக் காளத்தி மலைசேர்ந்தார். 4

(இ - ள்.) பெரிய கங்கைநதித் துறையில் முழுகி, சனனமாகிய துறையினையுடைய நீண்ட கடலினின்றுங் கரையேற்றுகின்ற சிவபெருமான் விருப்புற்றெழுந்தருளிய ஸ்ரீகாசிக்ஷேத்திரத்தை வணங்கித் துதித்து, மேகங்கள் தவழும் மூங்கில்களையுடைய விந்தமலைக் கருகிலுள்ள ஸ்ரீசைலத்தை வணங்கி, சந்திர சேகரராகிய சிவபெருமானது திருக்காளத்தித் திருமலையை யடைந்தருளினார். - எ - று.

நீடுதிருக் காளத்தி நிலவுதா ணுவைவணங்கி
ஆடுதிரு அரங்கான ஆலவனந் தொழுதேத்தித்
தேடும்இரு வர்க்கரியார் திருஏகாம் பரம்பணிந்து
மாடுயர்மா மதிற்காஞ்சி வளநகரின் வைகினார். 5

(இ - ள்.) சிறந்த திருக்காளத்தியில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானை வணங்கி, அவ்வெம்பெருமான் ஊர்த்தவதாண்டவஞ் செய்தருளும் இரத்தின சபையாக வுள்ள திருவாலங் காட்டை வணங்கித் துதித்து, (திருவடியையுந் திருமுடியையுந்) தேடிய திருமால் பிரமனென்னு மிருவராலுங் காணுதற்கரியவ ராகிய ஸ்ரீஏகாம்பரநாதர் வீற்றிருந்தருளும் திருவேகாம்பர மென்னுந் திருக்கோயிலை வணங்கி, பக்கங்களி லுயர்ந்த பெரிய மதில் சூழ்ந்த வளப்பமிக்க காஞ்சி நகரத்தில் வசித்தருளினார். - எ - று.

***நற்பதிஅங் கமர்யோக முனிவர்களை நயந்துபோய்க்***
***கற்புரிசைத் திருவதிகை கலந்திறைஞ்சிக் கறைக்கண்டர்***
***அற்புதக்கூத் தாடுகின்ற அம்பலஞ்சூழ் திருவீதிப்***
***பொற்பதியாம் பெரும்பற்றப் புலியூரில் வந்தணைந்தார். 6***

(இ - ள்.) சிறந்த திருப்பதியாகிய அக்காஞ்சிபுரத்தில் வசிக்கின்ற சிவயோகிகளை நட்புற்றுச் சென்று, கருங்கற்களாலாகிய மதில்சூழ்ந்த திருவதிகைத் திருப்பதியை யடைந்து வணங்கி, காளகண்டராகிய சிவபெருமான் ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளுங் கனகசபையைச் சூழ்ந்த திருவீதியினையுடைய அழகிய திருப்பதியாகிய ஸ்ரீ சிதம்பரத்தில் வந்தடைந்தருளினார். - எ - று.

***எவ்வுலகும் உய்யஎடுத் தருளியசே வடியாரைச்***
***செவ்வியஅன் புறவணங்கிச் சிந்தைகளி வரத்திளைத்து***
***வவ்வியமெய் யுணர்வின்கண் வரும்ஆனந் தக்கூத்தை***
***அவ்வியல்பிற் கும்பிட்டங் காராமை அமர்ந்திருந்தார். 7***

(இ - ள்.) எவ்வுலகத்திலுள்ளவர்களுங் கடைத்தேறும் பொருட்டுத் தூக்கி நடித்தருளிய திருவடியையுடைய ஸ்ரீ நடராசப் பெருமானை மெய்யன்பு பொருந்த வணங்கித் திருவுள்ளத்தில் மகிழ்வுண்டாகச் சிவாநந்த வெள்ளத்தில் முழுகி, பொருந்திய மெய்யுணச்சியில் தோன்றுகின்ற ஆனந்தத் தாண்டவத்தை அம்மெய்யுணர்ச்சி வாயிலாகத் தரிசித்து வணங்கி ஆராமையால் அங்கு வசித்தருளினார். - எ - று.

***தடநிலைமா ளிகைப்புலியூர் தன்னிலுறைந் திறைஞ்சிப்போய்***
***"அடல்விடையின் மேல்வருவார் அமுதுசெய அஞ்சாதே***
***விடம்அளித்த" தெனக்கருதி மேதினிக்கு வளம்நிறைத்தே***
***கடல்வயிறு நிறையாத காவிரியின் கரைஅணைந்தார். 8***

(இ - ள்.) உயர்ந்த மேனிலைகளையுடைய திருமாளிகைகள் சூழந்த ஸ்ரீசிதம்பரத்தில் வசித்து அங்கு வணங்கிச் சென்று, வலிய இடபவாகனத்தின்மேல் வருகின்ற சிவபெருமான் அமுது செய்யும்படி சிறிதுமஞ்சாமல் ஆலாகல விஷத்தைக் கொடுத்த தென்று கருதிப் பூமிக்குப் பல வளங்களை நிறைத்துக் கடலின் வயிறு நிறையப் பெறாத காவிரிநதியின் கரையை யடைந்தருளினார். - எ - று.

***காவிரிநீர்ப் பெருந்தீர்த்தம் கலந்தாடிக் கடந்தேறி***
***ஆவின்அருங் கன்றுறையும் ஆவடுதண் டுறைஅணைந்து***
***சேவில்வரும் பசுபதியார் செழுங்கோயில் வலம்வந்து***
***மேவுபெருங் காதலினால் பணிந்தங்கு விருப்புறுவார். 9***

(இ - ள்.) காவிரி நீராகிய பெரிய தீர்த்தத்தை யடைந்து முழுகிக் கடந்து சென்று, பசுவினது அரிய கன்றானது வசிக்கின்ற திருவாவடுதுறை யென்னுந் திருப்பதியை யடைந்து, இடப வாகனத்தில் எழுந்தருளுகின்ற சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ் செய்து பொருந்திய பேரன்போடு வணங்கி அங்கு விருப்புற்று வசித்தருளுவாராயினார். - எ - று.

***அந்நிலைமைத் தானத்தை அகலாத தொருகருத்து***
***முன்னிஎழுங் குறிப்பினால் மூளும்ஆ தரவெய்தப்***
***பின்னும்அகன் றேகுவார் பேணவருங் கோக்குலங்கள்***
***பொன்னிநதிக் கரைப்புறவிற் புலம்புவன எதிர்கண்டார். 10***

(இ - ள்.) அத்தகைய நிலைமையினையுடைய திருப்பதியை விட்டு நீங்காத ஒரு கருத்தானது சிந்தித்தெழுகின்ற குறிப்பினால் அதிகரிக்கின்ற பேரன்பு பொருந்தப் பின்னும் அத்தலத்தை யகன்று செல்கின்றவர் (யாவரும்) விரும்பத்தக்க பசுக் கூட்டங்கள் காவிரி நதிக்கரையிலுள்ள வனத்தில் அழுதலைத் தமக்கு எதிரில் பார்த்தருளினார். - எ - று.

***அந்தணர்தஞ் சாத்தனூர் ஆமேய்ப்பார் குடித்தோன்றி***
***முந்தைமுறை நிரைமேய்ப்பான் மூலன்எனும் பெயருடையான்***
***வந்துதனி மேய்க்கின்றான் வினைமாள வாழ்நாளை***
***வெந்தொழில்வன் கூற்றுண்ண வீடிநிலத் திடைவீழ்ந்தான். 11***

(இ - ள்.) வேதியர்கள் வாழுஞ் சாத்தனூரில் இடையர் குலத்திற் பிறந்து, பழைய முறைமைப்படி தனியே வந்து அப்பசுநிரைகளை மேய்க்கின்றவனாகிய மூலனென்னும் பெயருடையவன்; அவனது ஊழ்வினை கெட, ஆயுள் நாளைக் கொடுந்தொழிலையுடைய யமனானவ னுண்ணுதலால் பூமியில் விழுந்து இறந்தான். - எ - று.

***மற்றவன்தன் உடம்பினைஅக் கோக்குலங்கள் வந்தணைந்து***
***சுற்றிமிகக் கதறுவன சுழல்வனமோப் பனவாக***
***நற்றவயோ கியர்காணா "நம்பர்அரு ளாலேஆ***
***உற்றதுயர் இவைநீங்க ஒழிப்பன்" என உணர்கின்றார். 12***

(இ - ள்.) அப்பசுக் கூட்டங்கள் அவ்விடையனுடைய சரீரத்தை வந்தடைந்து சூழ்ந்து மிகக்கதறுவனவும், சூழ்வனவும், மோப்பனவுமாக இருக்க, அதனை நல்ல தவத்தினையுடைய சிவயோகியார் பார்த்தருளிச் சிவபெருமானது திருவருளினாலே இப்பசுக்களடைந்த துன்ப நீங்கும்படி யொழிப்பேனென்று ஆலோசிப்பாராயினார். - எ - று.

**"இவனுயிர்பெற் றெழிலன்றி ஆக்களிடர் நீங்கா" என்(று)**
**அவனுடலிற் றம்முயிரை அடைவிக்க அருள்புரியும்**
**தவமுனிவர் தம்முடம்புக்(கு) அரண்செய்து தாம்முயன்ற**
**பவனவழி அவனுடலில் தம்முயிரைப் பாய்த்தினார். 13**

(இ - ள்.) இவ்விடையனுயிர் பெற்றெழுந்தாலல்லாமல் பசுக்கள் துன்ப நீங்காவென்று, அவனுடலில் தமதுயிரைச் செலுத்தும்படி திருவுள்ளங்கொண்டருளிய சிவயோகியார் தமது திருமேனிக்குக் காவல் செய்து, தாம் முயன்று செய்த பிராணாதார வாயுமார்க்கமாகத் தமது உயிரை அவனுடைய சரீரத்திற் பிரவேசிக்கச் செய்தருளினார். - எ - று.

**பாய்த்தியபின் திருமூல ராய்எழலும் பசுக்களெலாம்**
**நாத்தழும்ப நக்கிமோந் தணைந்துகனைப் பொடுநயந்து**
**வாய்த்தெழுந்த களிப்பினால் வாலெடுத்துத் துள்ளிப்பின்**
**நீத்ததுய ரினவாகிய நிறைந்துபோய் மேய்ந்தனவால். 14**

(இ - ள்.) அவ்வாறு பிரவேசிக்கச் செய்தபின்பு திருமூலராய் எழுதலும் பசுக்களெல்லாம் நாத்தழும்பேறும்படி நக்கி மோந் தணைந்து கனைப்புடன் விரும்பி, அதிகரித்தெழுந்த மகிழ்ச்சி யினால் வாலைச் சுழற்றித் துள்ளிப்பின்பு துன்ப மொழிந்தவ னாகிய வரிசையாகப் பரவிச் சென்று மேய்ந்தன. - எ - று.

**ஆவின்நிரை மகிழ்வுறக்கண் டளிகூர்ந்த அருளினராய்**
**மேவியவை மேய்விடத்துப் பின்சென்று மேய்ந்தவைதாம்**
**காவிரிமுன் துறைத்தண்ணீர் கலந்துண்டு கரைஏறப்**
**பூவிரிதண் புறவின்நிழல் இனிதாகப் புறங்காத்தார். 15**

(இ - ள்.) பசு நிரைகள் களிப்படையப் பார்த்து அன்புமிக்க பேரருளினை யுடையவராய் அப்பசுக்கள் சென்று மேயுமிடங் களில் பின்னே சென்று, மேய்ந்தவைகள் காவிரி நதியின் முன்னுள்ள துறைகளில் தண்ணீரையடைந்து கரையில் ஏற, பூக்களலர்ந்த குளிர்ந்த வனத்தினிழலில் நன்றாகப் புறத்தினின்று காத்தருளினார். - எ - று.

***வெய்யசுடர்க் கதிரவனும் மேல்பாலை மலைஅணையச்***
***சைவநெறி மெய்யுணர்ந்தோர் ஆனினங்கள் தாமேமுன்***
***பையநடப் பனகன்றை நினைந்துபடர் வனவாகி***
***வையநிகழ் சாத்தனூர் வந்தெய்தப் பின்போனார். 16***

(இ - ள்.) வெவ்விய கிரணங்களையுடைய சூரியனும் மேற்றிசையிலுள்ள அஸ்தகிரியிற் செல்ல, சைவ சமய நெறியி னுண்மையை யுணர்ந்த சிவயோகியார் அப்பசுக் கூட்டங்கள் தாமே முற்பட்டுப் பைய நடப்பனவும், தத்தங்கன்றுகளை நினைந்து செல்வனவுமாய் உலகத்தில் விளங்குகின்ற சாத்த னூரை வந்தடைய, அவற்றின்பின் சென்றருளினார். - எ - று.

***போனவர்தாம் பசுக்களெலாம் மனைதோறும் புகநின்றார்***
***மானமுடை மனையாளும் "வைகியபின் தாழ்த்தார்" என்(று)***
***ஆனபயத் துடன்சென்றே அவர்நின்ற வழிக்கண்டாள்***
***"ஈனம்இவர்க் கடுத்த"தென மெய்தீண்ட அதற்கிசையார். 17***

(இ - ள்.) அவ்வாறு சென்ற சிவயோகியார் பசுக்களனைத் தும் வீடுகடோறும் போகத் தாம் வெளியில் நின்றார், பெருமை பொருந்திய (மூலனுடைய) மனைவியும் அவர் நின்றபின்பு (நாயகர் இன்றைக்குவர) மிகத் தாழ்ந்தாரென்று பயங்கொண்டு சென்று அவர் நின்றவிடத்தைக் கண்டடைந்து இவருக்கு யாதோ மனக்குறை நேர்ந்தது போலுமென்று அவரது திருமேனி யைத் தீண்ட, சிவயோகியார் அதற்கு இசையாராயினார். -எ-று.

***அங்கவளும் மக்களுடன் அஞ்சுற்றம் இல்லாதாள்***
***தங்கிவெரு வுறமயங்கி "என்செய்தீர்!" எனத்தளர***
***"இங்குனக்கென் னுடன்அணைவொன் றில்லை" என எதிர்மறுத்துப்***
***பொங்குதவத் தோர்ஆங்கோர் பொதுமடத்தி னுட்புகுந்தார். 18***

(இ - ள்.) அவளும் பிள்ளைகளுடன் அரிய உறவினரு மில்லாதவள்; ஆதலால், முன்னின்று அச்சங்கொண்டு மயங்கி யாது செய்தீரென்று தளர்ச்சியடைய, மிக்க தவத்தினையுடைய அச்சிவயோகியார் இங்கு என்னுடன் உனக்கு யாதொரு சம்பந்தமுமில்லையென்று எதிரில் மறுத்து, ஒரு பொதுமடத்தி னுள்ளே சென்றருளினார். - எ - று.

***இல்லாளன் இயல்புவே றானமைகண் டிரவெல்லாம்***
***சொல்லாடா திருந்தவர்பால் அணையாது துயிலாதாள்***
***பல்லார்முன் பிற்றைநாள் இவர்க்கடுத்த பரிசுரைப்ப***
***நல்லார்கள் அவர்திறந்து நாடியே நயந்துரைப்பார். 19***

(இ - ள்.) தங்கணவனுடைய இயற்கைக் குணம் வேறுபட்டத்தைக் கண்டு அவ்விரவு முழுதும் ஒருவரோடும் வார்த்தை சொல்லாதிருந்து, அவரிடத்து அணையாமல் நித்திரை கொள்ளாதவளாய், மறுநாள் பல விவேகிகளுக்கு முன்னே இவருக்குண்டாகிய தன்மையைத் தெரிவிக்க, அவர்கள் அவரது தன்மையை ஆராய்ந்துணர்ந்து விருப்பிக் கூறுவார்கள். - எ - று.

**"பித்துற்ற மயலன்று; பிறிதொருசார் புளதன்று;**
**சித்தவிகற் பங்கவளைந்து தெளிந்தசிவ யோகத்தில்**
**வைத்தகருத் தினராகி வரம்பில்பெரு மையிலிருந்தார்;**
**இத்தகைமை அளப்பரிதால் யாராலும்" எனஉரைப்பார். 20**

(இ - ள்.) பயித்தியத்தினாலுண்டாகிய மயக்கமன்று; வேறொரு சார்புள்ளதுமன்று; மன விகற்பங்களைக் களைந்து தெளிவுற்ற சிவயோகத்தில் செலுத்திய கருத்தினையுடையவராய் அளவு கடந்த பெருமையோடு மிருக்கின்றார்; இத்தன்மையை எவர்களாலும் அளவிட்டுரைப்பது அருமையாகுமென்று சொல்வார்கள். - எ - று.

**"பற்றறுத்த உபதேசப் பரமர்பதம் பெற்றார்போல்**
**முற்றும்உணர்ந்த தனராகும் முன்னைநிலை மையில்உங்கள்**
**சுற்றஇயல் பினுக்கெய்தார்" என்றுரைப்பத் துயர்எய்தி**
**மற்றவளும் மையலுற மருங்குள்ளார் கொண்டகன்றார். 21**

(இ - ள்.) இவர் இருவகைப் பற்றையு மறுத்த சிவஞானோபதேசத்தினால் சிவபெருமானது திருவடியைப் பெற்றவரைப் போல முற்றுமுணர்ந்தவராவர்; பழைய நிலைமைப்படி உங்கள் சுற்றவியல்புக்குப் பொருந்தார் என்று சொல்ல, அதுகேட்டு அவள் துயரங்கொண்டு மயங்க, அருகிலுள்ளவர்கள் அவளையழைத்துக் கொண்டு சென்றார்கள். - எ - று.

**இந்தநிலை மையிலிருந்தார் எழுந்திருந்தாங் கான்நிரைகள்**
**வந்தநெறி யேசென்று வைத்தகாப் பினில்உய்த்த**
**முந்தையுடற் பொறைகாணார் முழுதுணர்ந்த மெய்ஞ்ஞானச்**
**சிந்தையினில் வந்தசெயல் ஆராய்ந்து தெளிகின்றார். 22**

(இ - ள்.) இவ்வாறாகிய சிவயோக நிலைமையிலிருந்த திருமூலநாயனார் அவ்விடத்தினின்று மெழுந்து, (முன்னாள்) பசுநிரைகள் வந்த வழியே சென்று, தாம் காவல் செய்து வைத்த முன்னைய சரீரத்தைக் காணாதவராய் எல்லா முணர்ந்த மெய்ஞ்ஞானத்தையுடைய தமது திருவுள்ளத்தில் நிகழ்ந்த செயலை ஆராய்ந்து தெளிகின்றவராயினார். - எ - று.

***தண்ணிலவார் சடையார்தாம் தந்தஆ கமப்பொருளை***
***மண்ணின்மிசைத் திருமூலர் வாக்கினால் தமிழ்வகுப்பக்***
***கண்ணியஅத் திருவருளால் அவ்வுடலைக் கரப்பிக்க***
***எண்ணிறைந்த உணர்வுடையார் "ஈசர்அருள்" எனஉணர்ந்தார். 23***

(இ - ள்.) குளிர்ச்சி பொருந்திய இளம்பிறையை யணிந்த சடைமுடியை யுடைய சிவபெருமன் (தமது திருமுகத்தி னின்றுந்) தோற்றுவித்தருளிய சைவாகமங்களின் உண்மைப் பொருளை உலகத்தில் திருமூலரது வாக்கினால் தமிழ் மொழியில் ஒரு நூல் செய்விக்கும் பொருட்டுத் திருவுள்ளங் கொண்டருளிய அப்பெருங் கருணையினால் அச்சரீரத்தை மறைத்தருள, சிவசிந்தனை நிறைந்த பேருணர்ச்சியையுடைய திருமூலநாயனார் இது சிவபெருமானது திருவருளாகுமென்று உணர்ந்தருளினார். - எ - று.

***சுற்றியஅக் குலத்துள்ளார் தொடர்ந்தார்க்குத் தொடர்வின்மை***
***முற்றவே மொழிந்தருள அவர்மீண்டு போனதற்பின்***
***பெற்றமீ துயர்த்தவர்தாள் சிந்தித்துப் பெருகார்வச்***
***செற்றமுதல் கடிந்தவர்தாம் ஆவடுதண் டுறைசேர்ந்தார். 24***

(இ - ள்.) பந்துக்களாகச் சூழ்ந்து அவ்விடைக்குலத்திலுள்ள வர்களாய்த் தம்மைத் தொடர்ந்து வந்தவர்களுக்கு யாதொரு சம்பந்தமில்லாமையைக் கண்டிப்பாகக் கூறியருள, அவர்கள் திம்பிப் போனபின்பு, இடபத்தைக் கொடியாக மேலுயர்த்திய சிவபெருமானது திருவடிகளைச் சிந்தித்து, அதிகரிக்கின்ற பாசபந்தங்களை யறவே யொழித்தருளிய திருமூலநாயனார் திருவாவடுதுறை யென்னுந் திருப்பதியை யடைந்தருளினார். - எ - று.

***ஆவடுதண் டுறைஅணைந்தங் கரும்பொருளை உறவணங்கி***
***மேவுவார் புறக்குடபால் மிக்குயர்ந்த அரசின்கீழ்த்***
***தேவிருக்கை அமர்ந்தருளிச் சிவயோகம் தலைநின்று***
***பூவலரும் இதயத்துப் பொருளோடும் உணர்ந்திருந்தார். 25***

(இ - ள்.) திருவாவடுதுறையை யடைந்து அங்கெழுந்தருளிய மெய்ப் பொருளாகிய சிவபெருமானைத் திருவுள்ளத்திற் பொருந்த வணங்கிச் செல்கின்றவர் புறத்தில் மேற்குப் பக்கத் திலே மிக உயர்ந்திருக்கின்ற அரசமரத்தின்கீழ்த் தெய்வீகமாகிய இருக்கையமர்ந்து சிவயோகநிலையில் நின்ற, தமது இதய தாமரையில் விற்றிந்தருளும் (சிவபரம் பொருளாகிய) மெய்ப் பொருளுடன் கலந்திருந்தருளினார். - எ - று.

**ஊனுடம்பிற் பிறவிவிடந் தீர்ந்துலகத் தோர்உய்ய**
**ஞானமுதல் நான்குமலர் நற்றிருமந் திரமாலை**
**பான்மைமுறை ஓராண்டுக் கொன்றாகப் பரம்பொருளாம்**
**ஏனஎயி றணிந்தாரை "ஒன்றவன்தான்" எனஎடுத்து. 26**

(இ - ள்.) ஊனுடம்பினால் வருகின்ற சனனமென்னும் விஷத்தினின்று நீங்கி, உலகத்தாருய்யும் பொருட்டு, ஞானம்-யோகம்-கிரியை-சரியை யென்னும் நான்கு பாதங்களும் இனிது விளங்குகின்ற சிறந்த திருமந்திரமாலையைத் தகுந்த முறைமைப் படி ஒருவருஷத்திற்கு ஒரு திருப்பாடலாகப், பரம்பொருளாகிய பன்றிக் கொம்பையணிந்த சிவபெருமானை "ஒன்றவன்றானே" என்று முதலெடுத்து. - எ - று.

**முன்னியஅப் பொருள்மாலைத் தமிழ்மூவா யிரஞ் சாத்தி**
**மன்னியமூ வாயிரத்தாண் டிப்புவிமேல் மகிழ்ந்திருந்து**
**சென்னிமதி அணிந்தார்தம் திருவருளால் திருக்கயிலை**
**தன்னில்அணைந் தொருகாலும் பிரியாமைத் தாளடைந்தார். 27**

(இ - ள்.) சிந்திக்கத் தக்க மெய்ப்பொருளமைந்த அத் திருமந்திரமாலையாகிய மூவாயிரந் திருப்பாடல்களைப் பாடியருளி, நிலைபெற்ற மூவாயிரம் வருஷம் இவ்வுலகத்தில் விரும்பிச் சிவயோகஞ்சாதித்தருளிப், பின்பு திருமுடியில் இளம்பிறையை யணிந்த சிவபெருமானது திருவருளினால் ஸ்ரீ மகாகயிலாசத்தை யடைந்து எக்காலத்தும் நீங்காவண்ணம் அவ்வெம்பெருமான் றிவடியை யடைந்தருளினார். - எ - று.

**நலஞ்சிறந்த ஞானயோகக்கிரியா சரியையெலாம்**
**மலர்ந்தமொழித் திருமூல தேவர்மலர்க் கழல்வணங்கி**
**அலர்ந்தபுகழ்த் திருவாரூர் அமணர்கலக் கங்கண்ட**
**தலங்குலவு விறல்தண்டி அடிகள்திறஞ் சாற்றுவாம். 28**

(இ - ள்.) நன்மைமிக்க ஞானம், யோகம், கிரியை, சரியை யாதிய இவை முழுதும் அருளிச் செய்த திருமொழியையுடைய திருமூலநாயனாரது தாமரை மலர் போன்ற திருவடிகளை வணங்கி, பரவி புகழையுடைய திருவாரூரிலிருந்த சமணர்கள் மனங்கலங்கி வருந்தும்படி பார்த்தருளிய, உலகத்தில் விளங்கு கின்ற திருவருட்டிறத்தையுடைய தண்டியடிகணாயனாரது திருத்தொண்டின் முறைமையைச் சொல்லத் தொடங்குவாம். - எ - று.

# 31. தண்டியடிகள் புராணம்

**தண்டி யடிகள் திருவாரூர்ப் பிறக்கும் பெருமைத் தவமுடையார்**
**அண்ட வாணர்மறைபாட ஆடுஞ் செம்பொற் கழல்மனத்துக்**
**கொண்ட கருத்தின் அகநோக்குங் குறிப்பே அன்றிப் புறநோக்குங்**
**கண்ட உணர்வு துறந்தார்போல் பிறந்த பொழுதே கண்காணார். 1**

(இ - ள்.) தண்டியடிகணாயனார் திருவாரூரின்கண் அவதரிக்கும் பெருந் தவத்தினையுடையவர், வேதங்கள் கோஷிக்கும்படி சிவபெருமான் திருநடனஞ் செய்தருளுஞ் செம்பொன்னாலாகிய வீரக்கழலையணிந்த திருவடிகளைத் திருவுள்ளத்திற் கொண்டகருத்தினால் அகக்கண்ணினால் தரிசிக்குங் குறிப்பேயன்றி முகக் கண்ணினால் நோக்கும் உணர்வு ஒழிந்தவர்போலப் பிறந்த பொழுதே கண்ணிலாதவர். - எ - று.

**காணுங் கண்ணாற் காண்பதுமெய்த் தொண்டேயான கருத்துடையார்**
**பேணுஞ் செல்வத் திருவாரூர்ப் பெருமா னடிகள் திருவடிக்கே**
**பூணும் அன்பி னாற்பரவிப் போற்றும் நிலைமை புரிந்தமரர்**
**சேணும் அறிய அரியதிருத் தொண்டிற் செறியச் சிறந்துள்ளார். 2**

(இ - ள்.) காணுதற்குரிய அகக்கண்ணினால் தரிசித்தலே மெய்ம்மையான திருத்தொண்டாகவெண்ணுங் கருத்துடையவர்; யாவரும் விரும்பத்தக்க செல்வங்கணிறைந்த திருவாரூரில் வீற்றிருந்தருளும் ஸ்ரீவீதிவிடங்கப் பெருமானது திருவடிகளையே பொருந்திய பேரன்பினால் வணங்கித் துதிக்கும் நிலைமையையடைந்து, தேவர்கள் வாழும் விண்ணுலகுமறியும்படி அருமையாகிய திருத்தொண்டில் மிகவுஞ் சிறந்துள்ளவர். - எ - று.

**பூவார் சடிலத் திருமுடியார் மகிழ்ந்த செல்வப் பூங்கோயில்**
**தேவா சிரியன் முன்றிறைஞ்சி வலஞ்செய் வாராய்ச் செம்மைபுரி**
**நாவால் இன்ப முறுங்காதல் நமச்சி வாய நற்பதமே**
**ஓவ அன்பில் எடுத்தோதி ஒருநாள் போல வருநாளில். 3**

(இ - ள்.) கொன்றை மலரையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளும் தெய்வத் தன்மை பொருந்திய கமலாலயத்திலுள்ள தேவாசிரிய மண்டபத்தை முன்னே வணங்கி வலஞ்செய்கின்றவராய், நன்மை மிக்க தமது நாவினால் பேரின்பம் பொருந்திய விருப்பினையுடைய

"நமச்சிவாய" என்னுஞ் சிறந்த மந்திரத்தினையே கெடாத அன்பினால் பலமுறை ஜபித்து ஒரு தினம் போலவே நடந்த வரும் நாள்களில். - எ - று.

**செங்கண் விடையார் திருக்கோயிற் குடபால் தீர்த்தக் குளத்தின்**
**பாங்(கு),**
**எங்கும் அமணர் பாழிகளாய் இடத்தாற் குறைபா டெய்துதலால்,**
**அங்கந் நிலைமை தனைத்தண்டி யடிகள் அறிந்தே ஆதரவால்,**
**"இங்கு நான்இக் குளம்பெருகக் கல்ல வேண்டும்" என்றெழுந்தார். 4**

(இ - ள்.) சிவந்த கண்களையுடைய இடபத்தை வாகனமாகக் கொண்டருளிய ஸ்ரீ தியாகராசப் பெருமானது திருக்கோயிலுக்கு மேற்றிசையிலுள்ள திருக்குளத்தினரு கெங்கும் சமணர்மடங் களாய் இடத்தினால் குறைவடைந்திருந்தமையால், தண்டியயடி கணாயனார் அதனை யறிந்து பெருவிருப்போடும் நான் இங்கு இத்திருக்குளம் பெருகும்படி கல்லவேண்டுமென்று எழுந்தருளி னார். - எ - று.

**குழிவா யதனிற் குறிநட்டுக் கட்டுங் கயிறு குளக்குலையின்**
**இழிவாய்ப் புறத்து நடுத்தறியோ டிசையக் கட்டி இடைதடவி**
**வழியால் வந்து மண்கல்லி எடுத்து மறித்துந் தடவிப் போய்**
**ஒழியா முயற்சி யாலுய்த்தார் ஓதும் எழுத்தஞ் சுடனுய்ப்பார். 5**

(இ - ள்.) குளத்தினுள்ளே ஒரு தறிநட்டு அதில் கட்டிய கயிற்றைத் திருக்குளக்கரையி னிறங்குமிடத்து நட்ட தறியோடு இசையக்கட்டி, அக்கயிற்றை இடையில் தடவிக்கொண்டு அதன் வழியே வந்து மண்ணைவெட்டி யெடுத்து மீண்டுந் தடவிச் சென்று விடாமுயற்சியோடு கரையில் போட்டார்; திருவைந் தெழுத்தையும் இடைவிடாமல் ஜெபித்துக் கொண்டிருக்குந் தண்டியடிகணாயனார். - எ - று.

**நண்ணி நாளும் நற்றொண்டர் நயத்த விருப்பால் மிகப்பெருகி**
**அண்ணல் தீர்த்தங் குளங்கல்லக் கண்ட அமணர் பொறாராகி**
**எண்ணித் தண்டி யடிகள்பால் எய்தி முன்நின்றியம்புவார்**
**மண்ணைக் கல்லிற் பிராணிபடும் வருத்த வேண்டாம் என்றுரைத்தார். 6**

(இ - ள்.) நல்ல தண்டியடிகணாயனார் நாடோறு மடைந்து மிகுந்த விருப்பத்துடன் மகிழ்கூர்ந்து சிவபெருமானது தீர்த்தத் திருக்குளத்தைக் கல்லக்கண்ட சமணர்கள் மனம் பொறாமல் (அதற்குத் தடை செய்யக்) கருதி, தண்டியடிகண [illegible]

வந்து முன்னே நின்று சொல்வார்கள், (தண்டியே!) நீ மண்ணைக் கல்லினால் பிராணிகள் இறந்துபோம்; (ஆதலால்) அவைகளை வருத்த வேண்டாம் என்று கூறினார்கள். - எ - று.

***மாசு சேர்ந்த முடையுடலார் மாற்றங் கேட்டு மறுமாற்றம்***
***தேசு பெருகுந் திருத்தொண்டர் செப்பு கின்றார் "திருவிலிகாள்!***
***பூசு நீறு சாந்தமெனப் புனைந்த பிரானுக் கானபணி***
***ஆசி லாநல் லறமாவ தறிய வருமோ உமக்(கு)?" என்றார். 7***

(இ - ள்.) அழுக்கடைந்த முடைநாற்றத்தையுடைய சமணர்கள் கூறிய வார்த்தையைத் திவ்யதேஜசு விளங்குந் தண்டியடிகணாயனார் கேட்டு, அதற்கு மறுமொழி கூறுகின் றார். அருட்செல்வமற்ற அறிவீனர்களே! பூசுகின்ற திருவெண் ணிற்றைச் சாந்து போல அணிந்தருளிய சிவபெருமானுக்குச் செய்யுந் திருப்பணியானது குற்றமற்ற புண்ணியமென்பது உங்களுக்குத் தெரியுமோவென்று கூறியருளினார். - எ - று.

***அந்த மில்லா அறிவுடையார் உரைப்பக் கேட்ட அறிவில்லார்***
***"சிந்தித் திந்த அறங்கேளாய் செவியும் இழந்தா யோ?"என்ன***
***மந்த உணர்வும் விழிக்குருடும் கேளாச் செவியும் மற்றுமக்கே***
***இந்த உலகத் துள்ளன"என் றன்பர் பின்னும் இயல்புவார். 8***

(இ - ள்.) கெடாத பேரறிவினையுடைய தண்டியடிகணாய னார் இவ்வாறு சொல்லக்கேட்ட அறிவீனர்களாகிய சமணர் கள் (கூறுவார்கள், ஏ தண்டியே!) யாஞ் சொன்ன இந்தத் தரும முறைமையைக் கேட்டாயில்லை; (நீ கண்ணே யன்றிக்) காதினையு மிழந்தனையோ வென்று கூற, (அதற்கு நாயனார்) மந்தபுத்தியும் கண்குருடும் செவிட்டுக் காதும் இவ்வுலகத்தில் உங்களுக்கே புள்ளனவென்று கூறிப்பின்னுங் கூறுவாராயினார். - எ - று.

***"வில்லால் எயில்மூன் றெத்தபிரான் விரையார் கமலச் சேடிவகள்***
***அல்லால் வேறு காணேன்யான் அதுநீர் அறிதற் கார்?" என்பார்***
***"நில்லா நிலையீர்! உணர்வின்றி நுங்கண் குருடாய் என்கண்உல***
***கெல்லாங் காண்பான் யான்கண்டால் என்செய் வீர்?" என்***
***றெடுத்துரைத்தார். 9***

(இ - ள்.) (மேருவாகிய) வில்லைக் கொண்டு திரிபுரங்களை யெரித்தருளிய சிவபெருமானது நறுமணங்கமழுந் தாமரை மலர் போன்ற திருவடிகளையன்றி வேறொன்றையும் யானறியேன்;

அதனையறிதற்கு நீங்கள் யாரென்பவராய், நன்னிலையில் நில்லாத நிலைமையையுடைய சமணர்களே! உங்களுக்குப் (பிறபொருள்களையுணரும்) உணர்வற்று உங்கள் கண்கள் குருடாகவும், என்னுடைய கண்கள் உலகமெல்லாங்காணவும் யானடைந்தால் (அதற்கு) நீங்கள் யாதுசெய்வீர்களென்று எடுத்துக் கூறியருளினார். - எ - று.

**அருகர் அதுகேட்(டு) "உன்தெய்வத் தருளால் கண்நீ பெற்றாயேல்**
**பெருகும் இவ்வூ ரினில்நாங்கள் பின்னை இருக்கி லோம்" என்று**
**கருகு முருட்டுக் கைகளால் கொட்டை வாங்கிக் கருத்தின்வழித்**
**தருகைக் கயிறுந் தறியுமுடன் பறித்தார் தங்கள் தலைபறித்தார். 10**

(இ - ள்.) சமணர்கள் அதனைக்கேட்டு, உன் தெய்வத்தினது கிருபையினால் அதனை நீ பெறுவாயானால், பின்பு சிறந்த இத்திருவாரூரில் யாங்கள் இருக்கமாட்டோம் என்று கூறி, கருகிய அவர்களது முருடாகிய கைகளினால் மண்வெட்டியைப் பிடுங்கி, எண்ணத்தின் வழியே (திருத்தொண்டு செய்தற்கு) உதவியாகக் கட்டிய கயிறையும் குறித்தறிகளையும் தங்கள் தலைமயிரைப் பறித்த சமணர்கள் பிடுங்கி யெறிந்தார்கள். - எ - று.

**வெய்ய தொழிலார் செய்கையின்மேல் வெகுண்ட தண்டி யடிகள்தாம்,**
**மைகொள் கண்டர் பூங்கோயில் மணிவா யிலின்முன் வந்திறைஞ்சி,**
**"ஐய னே!இன் றமணர்கள்தாம் என்னை அவமானஞ்செய்ய**
**நைவ தானேன் இதுதீர நல்கும் அடியேற்" கெனவீழ்ந்தார். 11**

(இ - ள்.) கொடுந்தொழிலையுடைய சமணர்கள் செய்த தீயசெய்கையினால் கோபங்கொண்டருளிய தண்டியடிகணாயனார் காளகண்டராகிய சிவபெருமானது ஸ்ரீ கமலாலயத்தின் அழகிய திருவாயிலின்முன் வந்து வணங்கி, எம்பெருமானே! சமணர்கள் இன்று என்னை யவமானஞ் செய்தமையால் அடியேன் மிக வருந்துகின்றேன்; இவ்வருத்த நீங்கும்படி, எனக்குத் திருவருள் புரிய வேண்டுமென்று வீழ்ந்து நமஸ்கரித்தார். - எ-று.

**பழுது தீர்ப்பார் திருதொண்டர் பரவி விண்ணப் பஞ்செய்து**
**தொழுது போந்து மடம்புகுந்து தூய பணிசெய் யப்பெறா(து)**
**அழுது கங்குல் அவர்துயிலக் கனவில் அகில லோகங்கள்**
**முழுதும் அளித்த முதல்வனார் முன்நின் றருளிச் செய்கின்றார். 12**

(இ - ள்.) (மெய்யடியார்களது மும்மலங்களாகிய) குற்றங் களை நீக்கியருளுஞ் சிவபெருமானது திருத்தொண்டராகிய தண்டியடிகணாயனார் துதித்து விண்ணப்பஞ் செய்து வணங் கிச் சென்று தமது திருமடத்தை யடைந்து தூய்மையாகிய திருப் பணி செய்யப் பெறாமல் அழுது, அன்றிரவு நித்திரை செய்ய, சர்வலோகங்களையு மளித்தருளிய சிவபெருமான் அவரது சொப்பனத்தில் தோன்றி அருளிச் செய்கின்றார். - எ - று.

***"நெஞ்சில் மருவுங் கவலையினை ஒழிநீ நின்கண் விழித்தந்த***
***வஞ்ச அமணர் தங்கண்கள் மறையு மாறு காண்கின்றாய்***
***அஞ்ச வேண்டாம்" என்றருளி அவர்பால் நீங்கி அவ்விரவே***
***துஞ்சும் இருளில் அரசன்பால் தோன்றிக் கனவில் அருள்புரிவார். 13***

(இ - ள்.) அன்பனே! நீ மனதிற் கொண்ட வருத்தத்தை யொழிக்கக்கடவை; (நாளைக்கு) உன் கண் விழித்து, அந்த வஞ்சகராகிய சமணர்களது கண்கள் மறையும் வகையைக் காணப்போகிறாய், நீ சிறிதுமஞ்சவேண்டாமென்று அருளிச் செய்து அவரிடத்தினின்று நீங்கி, அன்றிரவே மிக்க இருளில் சோழராஜனுடைய சொப்பனத்தில் தோன்றி அருளிச் செய்வாராயினார். - எ - று.

***"தண்டி நமக்குக் குளங்கல்லக் கண்ட அமணர் தரியாராய்***
***மிண்டு செய்து பணிவிலக்க வெகுண்டான் அவன்பால் நீமேவிக்***
***கொண்ட குறிப்பால் அவன்கருத்தை முடிப்பாய்" என்றுகொள அருளித்***
***தொண்டர் இடுக்கண் நீங்களழுந் தருளி னார்அத் தொழிலுவப்பார். 14***

(இ - ள்.) தண்டியென்பவன் நமக்குத் திருக்குளங்கல்ல, அதைக் கண்ட சமணர்கள் மனம் பொறாமல் அதற்குவிக்கினஞ் செய்து அத்திருப்பணியைத் தடுக்க அதனால், கோபித்து மனம் வருந்தியிருக்கின்றான்; நீ அவனிடத்திற் சென்று, அவன் கொண்ட குறிப்பின்படி அவனுடைய எண்ணத்தை முடிக்கக் கடவாயென்று (அவ்வரசன்) ஏற்றுக் கொள்ளும்படி கட்டளை யிட்டு, தண்டியடிகணாயனாரது துன்ப நீங்கும்படி அவரது திருத்தொண்டை விரும்பிய சிவபெருமான் மறைந்தருளினார். - எ - று.

***வேந்தன் அதுகண்டப் பொழுதே விழித்து மெய்யின் மயிர்முகிழ்ப்பப்***
***பூந்தண் கொன்றை வேய்ந்தவரைப் போற்றிப் புலரத் தொண்டர்பால்***
***சார்ந்து புகுந்த படிவிளம்பத் தம்பி ரானார் அருள்நினைந்தே***
***ஏய்ந்த மன்னன் கேட்பஇது புகுந்த வண்ணம் இயம்புவார். 15***

(இ - ள்.) சோழராசன் அச்சொப்பனங் கண்டு உடனே விழித்துத் தனதுடம்பில் மயிர்க்கூச் செறிய, பொலிவினை யுடைய குளிர்ந்த கொன்றைமலர் மாலையையணிந்த சிவ பெருமானைத் துதித்து, பொழுது விடியத் தண்டியடிகணாயனா ரிடத்து வந்து தான் கண்ட சொப்பனத்தையுரைக்க, அவர் சிவபெருமான் றிருவருளைச் சிந்தித்து, அங்கு வந்த சோழராசன் கேட்கும்படி, இது நடந்த கூகையைக் கூறுவாராயினார். - எ - று.

***"மன்ன! கேள்யான் மழவிடையார் மகிழுந் தீர்த்தக் குளங்கல்லத்,***
***துன்னும் அமணர் அங்கணைந் தீ(து) அறம் அன்(று) என்று பல சொல்லிப்,***
***பின்னுங் கயிறு தடவுதற்கியான் பிணைத்த தறிகள் அவை வாங்கி,***
***என்னை வலிசெய் தியான்கல்லுங் கொட்டைப் பறித்தார்" என்றியம்பி.***
***16***

(இ - ள்.) மகாராஜாவே! கேட்பாயாக; யான் இளமை பொருந்திய இடபவாகனத்தையுடைய சிவபெருமான் மகிழ்வு கொண்டருளுந் தீர்த்தத் திருக்குளத்தைக் கல்லும்பொழுது, கொடுமை பொருந்திய சமணர்கள் அங்கு வந்து இது தரும மல்லவென்று பலகொடுஞ் சொற்களைக் கூறி யான் தடவிச் செல்வதற்குப் பின்னிய கயிற்றைக் கட்டிய குறித்தறிகளைப் பிடுங்கி என்னை வலிசெய்து, யான் மண்கல்லுகின்ற மண்வெட் டியை பிடுங்கிக் கொண்டார்களென்று கூறியருளி. - எ - று.

***"அந்த னான உனக்கறிவும் இல்லை என்றார் யான்அதனுக்(கு)***
***எந்தை பெருமான் அருளால்யான் விழிக்கில் என்செய் வீர்?என்ன***
***'இந்த ஊரில் இருக்கிலோம்' என்றே ஓட்டி னார்இதுமேல்***
***வந்த வாறு கண்டிந்த வழக்கை முடிப்ப" தெனமொழிந்தார். 17***

(இ - ள்.) குருடனான உனக்குச் (செவி) யுணர்ச்சியு மில்லையோவென்றார்கள்; அதற்கு யான் எமது சிவபெருமா னது திருவருளினால் யான் விழிக்கப் பெற்றால் நீங்கள் யாது செய்வீர்களென்று கேட்க, (அதற்கு அவர்கள் நீ அவ்வாறு பெற்றால்) நாங்கள் இந்த ஊரி லிரோமென்று உடன் பட்டார்கள்; இது, நடந்த சங்கதியாகும்; இனி நிகழ்வதைக் கண்டு இந்த வழக்கைத் தீர்க்கவேண்டுமென்று கூறியருளினார். - எ - று.

***அருகர் தம்மை அரசனும்அங் கழைத்துக் கேட்க அதற்கிசைந்தார்;***
***மருவுந் தொண்டர் முன்போக மன்னர் பின்போய் மலர்வாவி***
***அருகு நின்று விறல்தண்டி யடிகள் தம்மை முகநோக்கிப்***
***'பெருகுந் தவத்தீர்! கண்அருளாற் பெறுமா காட்டும்' எனப்பெரியோர். 18***

(இ - ள்.) (அப்பொழுது) சோழராசன் சமணர்களை அங்கு அழைத்துக் கேட்க, அவர்கள் அதற்கு உடன்பட்டார்கள்; சிவஞானம் பொருந்திய திருத்தொண்டராகிய தண்டியடிகணாயனார் முன்னே செல்ல, சோழராசன் பின்சென்று, மலர்களையுடைய அத்திருக்குளக்கரையில் நின்று, அன்பி னுறுதியையுடைய அத்தண்டியடிகணாயனாரது திருமுகத்தைதப் பார்த்து, மிக்க தவமுனிவரே! சிவபெருமான் திருவருளினால் நீர்கண் பெறும் வகையினைக் காட்டுமென்று கூற, (அப்பொழுது) அந்நாயனார். - எ - று.

***"ஏய்ந்த அடிமை சிவனுக்கியான் என்னில் இன்றென் கண்பெற்று***
***வேந்தன் எதிரே திருவாரூர் விரவுஞ் சமணர் கண்ணிழப்பார்;***
***ஆய்ந்த பொருளுஞ் சிவபதமே ஆவ" தென்றே அஞ்செழுத்தை***
***வாய்த்த தொண்டர் எடுத்தோதி மணிநீர் வாவி மூழ்கினார். 19***

(இ - ள்.) சிவபெருமானக்கு யான் மெய்யடிமை யென்பது சத்தியமானால், சோழராஜனெதிரில் இன்று என் கண் தெரியப் பெற்று, திருவாரூரில் நிறைந்திருக்குஞ் சிவபதமேயாவதென்று சிறந்த தண்டியடிகணாயனார் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை யுச்சரித்துக் கொண்டு அழகிய நீரையுடைய அத்திருக்குளத்தில் முழுகி யருளினார். - எ - று.

***தொழுது புனல்மேல் எழுந்தொண்டர்தூய மலர்க்கண் பெற்றெழுந்தார்,***
***பொழுது தெரியா வகைஅமரர் பொழிந்தார் செழுந்தண் பூமாரி,***
***இழுதை அமணர் விழித்தேகண் ணிழந்து தடுமா றக்கண்டு,***
***"பழுதுசெய்த அமண்கெட்ட" தென்று மன்னன் பகர்கின்றான். 20***

(இ - ள்.) சிவபெருமானை வணங்கி நீரில் முழுகி மேலெழுகின்றவர் தூய்மையாகிய தாமரை மலர் போன்ற திருக்கண்பெற் றெழுந்தருளினார்; தேவர்கள் பொழுது தெரியாவண்ணம் செழுமையாகிய குளிர்ந்த கற்பக மலர்மாரி பொழிந்தார்கள்; அறிவீனர்களாகிய சமணர்கள் விழித்துக் கண்ணிழந்து தடுமாறக் கண்டு, குற்றம் புரிந்த சமண சமய மழிந்ததென்று சோழராஜன் தன் னேவலாளரைப் பார்த்துக் கூறுவானாயினான். - எ - று.

***"தண்டி யடிகள் தம்முடனே ஒட்டிக் கெட்ட சமண்குண்டர்***
***அண்டர் போற்றுந் திருவாரூர் நின்றும் அகன்று போய்க்கழியக்***
***கண்ட அமணர் தமைஎங்குங் காணா வண்ணந் துரக்க" என***
***மண்டி வயவர் சாடுதலும் கண்கள் காணார் மனங்கலங்கி.*** 21

(இ - ள்.) தண்டியடிகணாயனாருடனே உடன்பாடு செய்து கெட்ட கீழ்மக்களாகிய சமணர்கள், தேவர்களால் துதிக்கப் பெற்ற திருவாரூரினின்று நீங்கி யொழிய அச்சமணர்களை யெங்குங் காணாத விதமாகத் துரத்துங்களென்று கட்டளையிட, உடனே தன்னேரில்வீரர்கள் அவர்களை நெருங்கி அடித்துத் துரத்தவும் அவர்கள் கண்தெரியாதவர்களாய் மனக்கலக்கங் கொண்டு. - எ - று.

***குழியில் விழுவார்; நிலைதளர்வார்; "கோலும்இல்லை" என உரைப்பார்;***
***"வழியீ(து)" என்று தூறடைவார்; "மாண்டோம்" என்பார்; "மதிகெட்டீர்!,***
***அழியும் பொருளை வட்டித்திங் கழிந்தோம் என்பார்; "அரசனுக்குப்,***
***பழியீ தாமோ" என்றுரைப்பார்; பாய்கள் இழப்பார் பறிதலையர்.*** 22

(இ - ள்.) மயிர் பறித்த தலையினையுடைய சமணர்கள், குழியிலே விழுவார்கள்; மனநிலை தளர்வார்கள்; ஊன்றுகோலு மில்லையே யென்று கூறுவார்கள்; இது வழியென்று கருதித் தூறையடைவார்கள்; இறந்தோமென்பார்கள்; அறிவீனர்களே! நிலையற்ற பொய்ப்பொருளை மெய்ப்பொருளாக வுறுதி கூறி, அதனால், அழிந்தோமென்பார்கள்; இது, சோழராசனுக்குப் பழியாகுமோவென்று கூறுவார்கள்; பாயுடைகளை யிழப் பார்கள். - எ - று.

***பீலி தடவிக் காணாது பெயர்வார்; நின்று பேதுறுவார்;***
***காலி னோடு கைமுறியக் கல்மேல் இடறி வீழ்வார்கள்;***
***சால நெருங்கி எதிரெதிரே தம்மிற் றாமே முட்டிடுவார்;***
***மாலும் மனமும் அழிந்தோடி வழிகள் அறியார் மயங்குவார்.*** 23

(இ - ள்.) மயிற்பீலிகளைத் தடவிக்காணாமல் திரும்பு வார்கள்; நின்று மதி மயங்குவார்கள்; காலுங்கையு முறியும்படி கற்களின்மேல் இடறி விழுவார்கள்; ஒருவரை யொருவர் மிக நெருங்கி எதிருக்கெதிரே தங்கட்குத் தாங்களே முட்டிக் கொள் ளுவார்கள், மயங்குகின்ற மனமழிந்தோடி வழிதெரியாமல் மயங்குவார்கள். - எ - று.

***அன்ன வண்ணம் ஆரூரில் அமணர் கலக்கங் கண்டவர்தாம்
சொன்ன வண்ண மேஅவரை ஓடத் தொடர்ந்து துரந்ததற்பின்
பன்னும் பாழிப் பள்ளிகளும் பறித்துக் குளஞ்சூழ் கரைபடுத்து
மன்ன னவனும் மனகிழ்ந்து வந்து தொண்டர் அடிபணிந்தான். 24***

(இ - ள்.) அவ்விதமாகத் திருவாரூரிலே சமணர்கள் மனங் கலங்கக் கண்டு, அவர்கள் உடன்பட்டுக் கூறிய வண்ணமே அவர்களை ஓடும்படி பின்றொடர்ந்து துரத்திய பின்பு, சோழராசன் சொல்லப்பட்ட சமண மடங்களையும் அவர்களுடைய கோயில்களையுங் கல்லியெறிந்து, திருக்குளத்தைச் சூழ்ந்த கரையைக் கட்டுவித்துப் பின்பு மனமகிழ் வுற்று வந்து தண்டியடிகணாயனாரது திருவடிகளை வணங்கினான். - எ - று.

***மன்னன் வணங்கிப் போயினபின் மாலும் அயனும் அறியாத
பொன்னங் கழல்கள் போற்றிசைத்துப் புரிந்த பணியுங் குறைமுடித்தே
உன்னும் மனத்தால் அஞ்செழுத்தும் ஓதி வழுவா தொழுகியே
மின்னுஞ் சடையார் அடிநீழல் மிக்க சிறப்பின் மேவினார். 25***

(இ - ள்.) சோழராசன் வணங்கிச் சென்ற பின்பு, (தண்டியடிகணாயனார்) திருமால் பிரமனென்னு மிருவராலும் மறியப்படாத பொன்னாலாகிய அழகிய வீரக் கழலை யணிந்த திருவடிகளைத் துதித்துத் தாம் செய்து வந்த திருத்தொண்டின் குறையைப் பூர்த்தி செய்து, தியானிக்கின்ற தமது திருவுள்ளத்தினால் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைச் செபித்து, நன்னெறியில் தவறா தொழுகி, விளங்குகின்ற சடைமுடியையுடைய சிவபெருமானது திருவடிநிழலை மிக்க சிறப்போடும் அடைந்தருளினார். - எ - று.

***கண்ணின் மணிக ளவையின்றிக் கயிறு தடவிக் குளந்தொட்ட,
எண்ணில் பெருமைத் திருத்தொண்டர் பாதம் இறைஞ்சி இடர்நீக்கி,
விண்ணில் வாழ்வார் தாம் வேண்டப் புரங்கள் வெகுண்டார் வேற்காட்டூர்,
உண்ணி லாவும் புகழ்த்தொண்டர் மூர்க்கர் செய்கை உரைக்கின்றாம். 26***

(இ - ள்.) கண்ணிற் கருமணிகளில்லாமல் கயிற்றைக் குறியாகப் பிடித்துச் சென்று திருக்குளத்தைத் தோண்டிய அளவற்ற புகழையுடைய தண்டியடிகணாயனாரது திருவடிகளை வணங்கிப் பிறவித் துன்பத்தினின்று நீங்கி, அரி பிரமேந்திராதி தேவர்கள் வேண்டுதலால் திரிபுரங்களை யழித்தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருவேற்காடு என்னுந் திருப்பதியிலுள்ள விளங்குகின்ற புகழையுடைய திருத்தொண்டராகிய மூர்க்கநாயனாரது திருத்தொண்டின் தன்மையைச் சொல்லத் தொடங்குகின்றோம். - எ - று.

# 32. மூர்க்க நாயனார் புராணம்

**மன்னிப் பெருகும் பெருந்தொண்டைவளநா டதனில் வயல்பரப்பும்**
**நன்னித் திலவெண் டிரைப்பாலி நதியின் வடபால் நலங்கொள்பதி**
**அன்னப் பெடைகள் குடைவாவி அலர்புக் காட அரங்கினிடை**
**மின்னுக் கொடிகள் துகிற்கொடிகள் விழவிற் காடு வேற்காடு. 1**

(இ - ள்.) நிலை பெற்றோங்கிய சிறந்த தொண்டைவள நாட்டிலே வயல் பரப்புகளில் நல்ல முத்துக்களைக் கொழிக் கின்ற வெள்ளிய அலைகளையுடைய பாலிநதியின் வடதிசையி லுள்ள நன்மைமிக்க திருப்பதியாவது, அருகிலுள்ள தடாகங் களில் பூத்த தாமரை மலர்களில் அன்னப் பேடுகளாடவும், நாடகசாலைகளில் மின்னற்கொடி போன்ற மாதர்களுங் கொடிச் சீலைகளும் விழவின் பொருட்டு ஆடுகின்ற திருவேற் காடு என்னு மூராகும். - எ - று.

**செம்பொற் புரிசைத் திருவேற்கா டமர்ந்த செய்ய சடைக்கற்றை**
**நம்பர்க்(கு) உம்பர்க் கமுதளித்து நஞ்சை அமுது செய்தவருக்(கு)**
**இம்பர்த் தலத்தில் வழிஅடிமை என்றுங் குன்றா இயல்பில்வரும்**
**தம்பற் றுடைய நிலைவேளாண் குலத்திற் றலைமை சார்ந்துள்ளார். 2**

(இ - ள்.) செம்பொன்மயமாகிய மதில் சூழ்ந்த திருவேற் காட்டில் வீற்றிருந்தருளுங் கற்றையாகிய சிவந்த சடைமுடியை யுடையவரும், தேவர்களுக்கு அமுதத்தைக் கொடுத்து, (அத்தேவர்களைக் கொல்லவெழுந்த) விஷத்தைத் திருவமுது செய்தருளியவருமாகிய சிவபெருமானுக்கு இவ்வுலகத்தில் வழியடிமை செய்வதில் என்றுங் குறையாத முறைமைப்படி வந்த அன்பினுறுதியையுடைய நிலைமையாகிய வேளாளர் குலத் திலே தலைமை பெற்றுள்ளவர். - எ - று.

**கோதில் மரபில் பிறந்துவளர்ந் தறிவு கொண்ட நாள்தொடங்கி**
**"ஆதி முதல்வர் திருநீற்றின் அடைவே பொருள்" என் றறிந்தரனார்**
**காதல் அடியார்க் கமுதாக்கி அமுது செய்யக் கண்டுண்ணும்**
**நீதி முறைமை வழுவாத நியதி பூண்ட நிலைமையார். 3**

(இ - ள்.) குற்றமற்ற நல்ல மரபிற் பிறந்து வளர்ந்து அறிவு தோன்றிய நாள் தொடங்கி, முதற்பெருங் கடவுளாகிய சிவபெருமானது திருவெண்ணீற்றுச் சார்பே மெய்ப்பொரு ளென் றுணர்ந்து, சிவபெருமானடியார்களுக்குத் திருவமுது சமைத்து, அவர்கள் முன்னே திருவமுது செய்யப் பார்த்துப் பின் தாம் அமுதுசெய்கின்ற முறைமை தவறாத விரதத்தை மேற் கொண்டொழுகுந் தன்மையினையுடையவர்.- எ - று.

**தூய அடிசில் நெய்கன்னல் சுவையின் கறிக ளவை அமைத்து**
**மேய அடியார் தமைப்போற்ற விருப்பாமல் அமுது செய்வித்தே**
**ஆய பொருளும் அவர்வேண்டும் படியால் உதவி அன்புமிக**
**ஏயு மாறு நாடோறும் இனைய பணிசெய் தின்புற்றார். 4**

(இ - ள்.) தூய்மையாகிய திருவமுது - நெய் - சருக்கரை - சுவையினையுடைய பதார்த்தவகை முதலியவைகளை யமைத்து, அடைந்த சிவனடியார்களை வணங்கித் துதித்து, பெருவிப்புடன் திருவமுது செய்வித்து, தம்மிடத்துள்ள பொருள்களையும் அவர்கள் விரும்பிய வண்ணங் கொடுத்து, மிக அன்பு பொருந்த நாடோறும் இத்தகைய திருப்பணி செய்து மகிழ்வுற்றிருந்தார். - எ - று.

**இன்ன செயலில் ஒழுகுநாள் அடியார் மிகவும் எழுந்தருள**
**முன்னம் உடைமை யானபொருள் முழுதும் மாள அடிமையுடன்**
**மன்னும் காணி யானநிலம் மற்றும் உள்ள திறம்விற்றே**
**அன்னம் அளித்தே மேன்மேலும் ஆரா மனத்தா ராயினார். 5**

(இ - ள்.) இத்தன்மையாகிய திருத்தொண்டில் ஒழுகும் நாள்களில், சிவனடியார்கள் மிகுதியாக வருதலால், முன்பு தம்மிடத்துள்ள திரவியங்களெல்லாஞ் செலவாகிவிட, அடிமைகளையும், பொருந்திய காணியாகவுள்ள நிலங்களையும் மற்றுமுள்ள எல்லாப் பொருள்களையும் விற்று அடியார்களுக்குத் திருவமுது படைத்து மேலுமேலும் நீங்காத திருவுள்ளமுடையவராகினார். - எ - று.

**அங்கண் அவ்வூர் தமக்கொருபற் றடியார் தங்கட் கமுதாக்க**
**எங்கும் காணா வகைதோன்ற இலம்பா டெய்தி இருந்தயர்வார்**
**தங்கும் வகையால் தான்முன்பு கற்றதன்மை நற்சூதால்**
**பொங்கும் பொருளாக் கவும்அங்கப் பொருவார் இன்மை யினிற்**
**போவார். 6**

(இ - ள்.) அடியார்களுக்குத் திருவமுதாகும்படி அவ்வூரெங்குந் தமக்கொரு பற்றுங் காணாமையால் வறுமையடைந்து சோர்ந்திருக்கின்றவர், பொருந்திய முறைமையினால் தாம் முன்பு கற்றுள்ள நல்ல சூதினால் மிக்க பொருள் சம்பாதிக்கவும் அவ்வூரில் சூதாடுவோரில்லாமையால், அவ்விடத்தினின்றுஞ் செல்வாராயினர். - எ - று.

**பெற்றம் ஏறிப் பலிக்குவரும் பெருமான் அமருந் தானங்கள்**
**உற்ற அன்பாற் சென்றெய்தி உருகும் உள்ளத் தொடும்பணிந்து**
**கற்ற சூதால் நியதியாங் கருமம் முடித்தே கருதாரூர்**
**செற்ற சிலையார் திருக்குடந்தை அடைந்தார் வந்து சிலநாளில். 7**

(இ - ள்.) இடபத்தின் மேலேறிப் பிச்சைக்கு வந்தருளுஞ் சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருப்பதிகடோறும் பொருந்திய அன்போடு சென்றடைந்து, உருகுகின்ற திருவுள்ளத்துடன் வணங்கி, தாம் பயின்றுள்ள சூதாடலினால் நியதியாகச் செய்து வருகின்ற மகேசுசுர பூசையை முடித்து, பகைவர்களது திரிபுரங்களை யழித்தருளிய மேருமலையாகிய வில்லையுடைய சிவபெருமானெழுந்தருளிய ஸ்ரீ கும்பகோணமென்னுந் திருப்பதியைச் சிலநாளில் வந்தடைந்தருளினார். - எ - று.

**இருளாரும் மணிகண்டர் அடியார்க்கின் னமுதளிக்கப்**
**பொருளாயம் எய்துதற்குப் புகழ்க்குடந்தை அம்பலத்தே**
**உருளாயச் சூதாடி உறுபொருள்வென் றனநம்பர்**
**அருளாக வேகொண்டங் கமுதுசெய்வித் தின்புறுவார். 8**

(இ - ள்.) காளகண்டராகிய சிவபெருமானது மெய்யடியார்களுக்கு இனிய திருவமுது செய்விக்கப் பொருளை இலாபமாக வடைதற்குப் புகழையுடைய ஸ்ரீ கும்பகோணத்தின் வெளியிடங்களிலே, உருள்கின்ற பாய்ச்சிகையினாலாகிய சூது ஆடிக் கெலித்த பொருள்களைச் சிவபெருமானது திருவருளாகக் கொண்டு திருவமுது செய்வித்து மகிழ்ந்தருளுவார். -எ-று.

**முற்சூது தாந்தோற்று முதற்பணைய மவர்கொள்ளப்**
**பிற்சூது பலமுறையும் வென்றுபெரும் பொருளாக்கிச்**
**சொற்சூதால் மறுத்தாரைச் சுரிகைஉரு விக்குத்தி**
**நற்சூதர் மூர்க்கர்எனும் பெயர்பெற்றார் நானிலத்தில். 9**

(இ - ள்.) முதலிற் கட்டிய பந்தயத்தை அவர்கள் கெலித்துக் கொள்ளும்படி முதற்சூதாட்டத்திலே தாம் தோற்று, பின் ஆட்டங்களிலே பல முறையுங் கெலித்துப் பொருள் சேகரித்து, சூதுவார்த்தையினால் மறுத்துப் பேசினவர்களை உடைவாளை யுருவிக் குத்தி உலகத்தில் நல்ல சூதர் மூர்க்கர் என்னும் பெயர்களைப் பெற்றருளினார். - எ - று.

***சூதினில்வென் றெய்துபொருள் துரிசற்ற நல்லுணர்வில்***
***தீதகல அமுதாக்கு வார்கொள்ளத் தாந்தீண்டார்***
***காதலுடன் அடியார்கள் அமுதுசெயக் கடைப்பந்தி***
***ஏதமிலா வகைதாமும் அமுதுசெய்தங் கிருக்குநாள்.*** *10*

(இ - ள்.) சூதாட்டத்தில் கெலித்துப் பெற்ற பொருளைக் குற்றமற்ற நல்லுணர்ச்சியோடும் தாம் தீண்டாமல், குற்றம் நீங்கத் திருவமுது சமைப்பவர்கள் கொள்ளச் செய்து, சிவனடியார்கள் பெருவிருப்போடுந் திருவமுது செய்ய, பின் கடைப்பந்தியிலே குற்றமில்லா வண்ணந் தாமும் அமுது செய்து அங்கு வாழும் நாள்களில். - எ - று.

***நாதன்தன் அடியார்க்கு நல்லடிசில் நாடோறும்***
***ஆதரவி னால்அமுது செய்வித்தங் கருளாலே***
***ஏதங்கள் போயகல இவ்வுலகை விட்டதற்பின்***
***பூதங்கள் இசைபாட ஆடுவார் புரம்புக்கார்.*** *11*

(இ - ள்.) சிவபெருமானது அடியவர்களுக்குச் சிறந்த போஜன வகைகளை நாடோறும் பேரன்புடன் அமுது செய்வித்து, அவ்வெம்பெருமானது திருவருளினால் குற்றங்கள் விட்டு நீங்க, இம்மண்ணுலகவாசையை யொழித்த பின்பு, பூதகணங்க ளிசைபாடத் திருநடனஞ் செய்தருளுஞ் சிவ பெருமான் வீற்றிருந் தருளிய ஸ்ரீமகாகயிலாசத்தை யடைந் தருளினார். - எ - று.

***வல்லார்கள் தமைவென்று சூதினால் வந்தபொருள்***
***அல்லாருங் கறைக்கண்டர் அடியவர்கள் தமக்காக்கும்***
***நல்லார்நற் சூதராம் மூர்க்கர்கழல் நாம்வணங்கிச்***
***சொல்லார்சீர்ச் சோமாசி மாறர்திறஞ் சொல்லுவாம்.*** *12*

(இ - ள்.) சூதில் வல்லவர்களை ஆட்டத்தில் கெலித்து, அதனால் வந்த பொருளைக் காளகண்டராகிய சிவபெருமானது மெய்யடியார்களுக்குத் திருவமுது சமைத்தூட்டிய மேலோ ராகிய நல்ல சூதாடுகின்ற மூர்க்கநாயனாரது திருவடிகளை வணங்கி, புகழமைந்த சிறப்பினையுடைய சோமாசிமாற நாயனாரது திருத்தொண்டின் வகையைச் சொல்லுகின்றோம். - எ - று.

# 33. சோமாசிமாற நாயனார் புராணம்

*சூதம்பயி லும்பொழில் அம்பரில் தூய வாய்மை*
*வேதம்பயி லும்மறை யாளர் குலத்தின் மேலோர்*
*ஏதம்புரி யும்எயில் செற்றவர்க் கன்பர் வந்தால்*
*பதம்பணிந் தார்அமு தூட்டுநற் பண்பின் மிக்கார்.* 1

(இ - ள்.) மாவிருட்சங்கள் பொருந்திய சோலை சூழ்ந்த திருவம்பரென்னுந் திருப்பதியில் தூய்மையாகிய மெய்ம்மையை யுடைய வேதங்களை யோதும் பிராமண குலத்திற் சிறந்துள்ள வர்; (உலகத்திற்குத்) துன்பஞ் செய்து வந்த திரிபுரங்களை யழித்தருளிய சிவபெருமானுக்குரிய மெய்யன்பர்கள் வந்தால் அவர்களது திருவடிகளை வணங்கி அரிய திருவமு தூட்டுகின்ற நற்குணத்தில் மேம்பட்டுள்ளவர் (சோமாசிமாற நாயனா ரென்னும் பெரியோர்). - எ - று.

*"யாழின்மொழி யாள்தனிப் பாகரைப் போற்றும் யாகம்*
*ஊழின்முறை மைவழு வாதுல கங்க ளான*
*ஏழும்உவப் பப்புரிந் தின்புறச் செய்த பேற்றால்*
*வாழுந்திறம் ஈசர் மலர்க்கழல் வாழ்த்தல்" என்பர்.* 2

(இ - ள்.) யாழினிசை போலும் இனிய மொழியினையுடைய உமாதேவியாரை வாமபாகத்திலுடைய சிவபெருமானைத் துதித்துச் செய்யும் வேள்விகளைப் பழைய முறைமை தவறாமல் ஏழுலகத்தாரும் மகிழ்வுறும்படி யியற்றி இன்பமுறச் செய்த தன்மையினால், சிவபெருமானுடைய தாமரை மலர் போன்ற திருவடிகளைத் துதித்தலே பேரின்ப வாழ்வடையுந் திறமென்று கருதி யொழுகின்றவர். - எ - று.

*எத்தன்மைய ராயினும் "ஈசனுக் கன்பர் என்றால்*
*அத்தன்மையர் தாம்நமை யாள்பவர்" என்று கொள்வார்*
*"சித்தந்தெளி யச்சிவன் அஞ்செழுத் தோதும் வாய்மை*
*நித்தந்நிய மம்" எனப் போற்றும் நெறியில் நின்றார்.* 3

(இ - ள்.) (குலங்குணம் முதலியவற்றால்) எவ்வளவு உயர்வ தாழ்வுகளை யுடையவர்களாயினும் சிவபெருமானுக்கன்பர் களாயிருந்தால், அவர்களே நம்மை யடிமை கொள்பவர்க ளென்று சிந்திக்கும் பேரறிவினையுடைவர்; மனநிலை தெளியும்படி சிவபெருமானது திருவைந்தெழுத்தைச் செபிக்கும் மெய்ம்மையே நித்திய நியமமென்று விரும்பிச் செய்கின்ற நல்லொழுக்கத்தில் நின்றவர். - எ - று.

***சீருந்திரு வும்பொழி யுந்திரு வாரூர் எய்தி***
***ஆரந்திகழ் மார்பின் அணுக்கவன் றொண்டர்க் கன்பால்***
***சாரும்பெரு நண்பு சிறப்ப அடைந்து தங்கிப்***
***பாரும்விசும் பும்பணி யும்பதம் பற்றியுள்ளார். 4***

(இ - ள்.) மேன்மையும் பலவகைச் செல்வங்களும் நிறைந்த திருவாரூரை யடைந்து, இரத்தின மாலைகள் விளங்குகின்ற திருமார்பினையுடைய அணுக்கத் தொண்டராகிய ஸ்ரீசுந்தர மூர்த்தி சுவாமிகளுக்கு அன்போடு பொருந்திய மிக்க நண்பு சிறக்கும்படி யடைந்து மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் வணங்குகின்ற அவரது திருவடிகளையடைந்து பத்தி செய் துள்ளவர். - எ - று.

***துன்றும்புலன் ஐந்துடன் ஆறு தொகுத்த குற்றம்***
***வென்(று)“இங் கிதுநன் னெறிசேரும் விளக்கம்” என்றே***
***வன்றொண்டர் பாதந்தொழு தான சிறப்பு வாய்ப்ப***
***என்றும்நில வுஞ்சிவ லோகத்தில் இன்பம் உற்றார். 5***

(இ - ள்.) பொருந்திய ஐம்புலன்களையும், தொடுக்கப்பட்ட அறுவகைக் குற்றங்களையும் வென்று, இதுவே நன்மார்க்கமடையும் விளக்கமென்று கருதி, ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது திருவடிகளைத் தொழுது அதனாலுண்டாகிய சிறப்புப் பொருந்திய, எப்பொழுதும் விளங்குகின்ற சிவோகத்தில் பேரின்பமுற்றடைந்தருளினார். - எ - று.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் துதி

***பணையுந் தடமும் புடைசூழும் ஒற்றி யூரில் பாகத்தோர்***
***துணையுந் தாமும் பிரியாதார் தோழத் தம்பி ரானாரை***
***இணையுங் கொங்கைச் சங்கிலியார் எழில்மென் பணைத்தோள் எய்து விக்க***
***அணையும் ஒருவர் சரணமே அரணமாக அடைந்தோமே. 6***

(இ - ள்.) வயல்களுந் தடாகங்களும் பக்கங்களில் சூழ்ந்துள்ள திருவொற்றியூரில் இடப்பாகத்திலுள்ள உமாதேவியாருந் தாமும் பிரியாதவராகிய சிவபெருமான், தம்பிரான் றோழ ராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளை நெருங்கிய ஸ்தனங்களை யுடைய சங்கிலிநாச்சியாரது அழகிய மிருதுவாகிய மூங்கில் போன்ற தோள்களைத் தழுவும்படி (தூது சென்று) கூட்டுவிக்க, அது காரணமாகச் சென்று அச்சங்கிலி நாச்சியாரைத்திருமணம் புரிந்தருளிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது திருவடிகளையே எமக்குத் துணையாக வடைந்தோம். - எ - று.

**சருக்கம் ஆறுக்குத் திருவிருத்தம் 1737**

## 7. வார்கொண்ட வனமுலையாள் சருக்கம்

# 34. சாக்கிய நாயனார் புராணம்

*அறுசமயத் தலைவராய் நின்றவருக் கன்பராய்*
*மறுசமயச் சாக்கியர்தம் வடிவினால் வருந்தொண்டர்*
*உறுதிவரச் சிவலிங்கங் கண்(டு) உவந்து கல்லெறிந்து*
*மறுவில்சரண் பெற்றதிறம் அறிந்தபடி வழுத்துவாம்.* 1

(இ - ள்.) அறுவகைச் சமயங்களுக்கு முதல்வராயெழுந் தருளுஞ் சிவபெருமானுக்குரிய மெய்யன்பராய், புறச்சமயமாகிய பௌத்த வடிவத்தினால் வந்த திருத்தொண்டராகிய சாக்கிய நாயனாரென்பவர் தமக்கு அன்பினுறுதி வரும்படி சிவலிங்கப் பெருமானைத் தரிசித்து மகிழ்ந்து கல்லால் எறிந்து, (அவ்வெம் பெருமானது) குற்றமற்ற திருவடிகளை யடைந்த தன்மையை எமக்குத் தெரிந்தவாறு சொல்லத் தொடங்குவாம். - எ - று.

*தாளாளர் திருச்சங்க மங்கையினில் தகவுடைய*
*வேளாளர் குலத்துதித்தார் மிக்க பொருள் தெரிந்துணர்ந்து*
*கேளாகிப் பல்லுயிர்க்கும் அருளுடைய ராய்க்கெழுமி*
*"நீளாது பிறந்திறக்கும் நிலைஒழிவேன்" எனநிற்பார்.* 2

(இ - ள்.) நன்முயற்சியையுடைய மேலோர்கள் வாழ்கின்ற திருச்சங்கமங்கை யென்னு மூரிலே வேளாளர் குலத்தி லவதரித்தவர்; சிறந்த மெய்ப்பொருளை யாராய்ந்துணர்ந்து நட்பினராய்ப் பல வுயிர்களிடத்தும் பேரருளுடையவராய் விளங்கி, சனனமரண துக்கங்களாகிய நிலையானது அதிகரித்து வராமல், அத்துக்கத்தினின்று நீங்குவேனென்று (அதனை யறியுமார்க்கத்தில்) நிற்பாராயினார். - எ - று.

*அந்நாளில் எயிற்காஞ்சி அணிநகரஞ் சென்றடைந்து*
*நன்ஞானம் அடைவதற்குப் பலவழியும் நாடுவார்*
*முன்னாகச் சாக்கியர்தாம் மொழிஅறத்தின் வழிச்சார்ந்து*
*மன்னாத பிறப்பறுக்குந் தத்துவத்தின் வழிஉணர்வார்.* 3

(இ - ள்.) அந்நாளிலே மதில் சூழ்ந்த அழகிய ஸ்ரீகாஞ்சி புரத்தை யடைந்து, மெய்ஞ்ஞானமடைவதற்குப் பலவழிகளை யும் விசாரிக்கின்றவராய், முதலில் பௌத்தர்கள் கூறுகின்ற தருமமார்க்கத்தின் வழியைச் சார்ந்து, நிலைபெறாத பிறப்பினை யொழிக்கின்ற தத்துவநெறியை யுணர்வாராயினார். - எ - று.

***அந்நிலைமைச் சாக்கியர்தம் அருங்கலைநூல் ஓதிஅது***
***தன்நிலையும் புறச்சமயச் சார்வுகளும் பொருளல்ல***
***என்னும்அது தெளிந்(து) ஈசர் அருள்கூட "ஈறில்சிவ***
***நன்னெறியே பொருளாவ" தெனஉணர்வு நாட்டுவார்.*** **4**

(இ - ள்.) அப் பௌத்த சமயத்தில் பிரவேசித்து அவர்களது சமய நூல்களை யோதி, அப்பௌத்த சமயத்தி னியல்பும் மற்றப் புறச்சமயச் சார்புகளும் மெய்ப்பொரு ளல்ல வென்று தெளிந்து, பின் சிவபெருமானது திருவருள் கூடுதலால், கெடாத சற்சமய மாகிய சைவநெறியே மெய்ப்பொருளாவதென்று கருதி, தம் மறிவை அவ்விஷயத்தில் செலுத்துவாராயினார். - எ - று.

***"செய்வினையுஞ் செய்வானும் அதன்பயனுங் கொடுப்பானும்***
***மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள்" எனக்கொண்டே***
***"இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றுக் கில்லை"என***
***உய்வகையாற் "பொருள்சிவன்" என்று அருளாலே உணர்ந்தறிந்தார்.*** **5**

(இ - ள்.) செய்யப்படும் புண்ணிய பாவங்களாகிய கர்மங்களும், அக்கர்மங்களைச் செய்யும் ஆன்மாக்களும், அக்கர்மங்களால் விளையும் சுக துக்கங்களாகிய பலன்களும், அப்பலன்களை யறிந்தூட்டுகின்ற சர்வஞ்ஞனாகிய பதியும் என்று வேதாகமங்களில் விதிக்கப்பட்ட பொருள்கள் நான்காகுமெனக் கருதி, இவ்வியல்பு சைவசமயமல்லாத வேறு புறச்சமயங்களுக்குக் கிடையாவென்றும், அருள் பெற்றுய்யு முறைமையினால் மெய்ப் பொருளா யுள்ளவர் சிவபெருமானே யென்றும், அவ்வெம்பெருமானது திருவருளினாலே யுணர்ந் தருளினார். - எ - று.

***"எந்நிலையில் நின்றாலும் எக்கோலங் கொண்டாலும்***
***மன்னியசீர்ச் சங்கரன்தாள் மறவாமை பொருள்" என்றே***
***துன்னியவே டந்தன்னைத் துறவாதே தூயசிவந்***
***தன்னைமிகும் அன்பினால் மறவாமை தலைநிற்பார்.*** **6**

(இ - ள்.) எந்த நிலைமையில் நின்றாலும், எந்த வேடங் கொண்டிருந்தாலும், நிலைபெற்ற சிறப்பினையுடைய சிவபெருமானது திருவடிகளை இடைவிடாது சிந்தித்திருத்தலே மெய்ப் பொருளென்று கருதி, தாமடைந்த அந்தப் பௌத்த வேடத்தை யொழிக்காமல், மலரகிதராகிய சிவபெருமானை மிக்க பேரன்பினால் மறவாதிருத்தலையே தலைமையான விரதமாகக் கொண்டு அந்நெறியே நிற்பாராயினார். - எ - று.

**'எல்லாம் உடைய ஈசனே இறைவன்' என்ன அறியாதார்**
**பொல்லா வேடச் சாக்கியரே யாகிப் புல்ல ராகுவார்;**
**அல்லார் கண்டர் தமக்கிந்த அகிலமெல்லாம் ஆள்என்ன**
**வல்லார் இவர்அவ் வேடத்தை மாற்றா தன்பின் வழிநிற்பார். 7**

(இ - ள்.) எல்லாப் பொருள்களையுந் தமக்குரிமையாகவுள்ள சிவபெருமானே முதற்பெருங்கடவுளென்றுணராதவர்கள் கொடிய வேடத்தையுடைய பௌத்தர்களாய் அறிவீனர்களா வார்கள்; (அதுநிற்க) காளகண்டராகிய சிவபெருமானுக்குச் சர்வ லோகங்களும் அடிமைப் பொருளென்று கூற வல்லவ ராகிய இச்சக்கியநாயனார் அப்பௌத்த வேடத்தை யொழிக் காமல் மெய்யன்பின் வழியே நிற்பாராயினார். - எ - று.

**காணாத அருவினுக்கும் உருவினுக்குங் காரணமாய்**
**நீணாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாஞ் சிவலிங்கம்**
**நாணாது நேடியமால் நான்முகனுங் காணநடுச்**
**சேணாருந் தழற்பிழம்பாய்த் தோன்றியது தெளிந்தாராய். 8**

(இ - ள்.) காணப்படாத அருவம் உருவ மென்னு மிரண்டிற்குங் காரணமாய், பெரிய பாம்பை யாபரணமாக வணிந்தருளிய சிவபெருமானைத் தரிசிப்பதற்கு விளங்குகின்ற அறிகுறியாகவுள்ள சிவலிங்கமானது நாணமடையாமல் திருவடி யையுந் திருமுடியையுந் தேடிய திருமால் பிரமனென்னு மிருவருங்காணும்படி, நடுவில் உயர்ந்த அக்கினிப் பிழம்பாகத் தோன்றியதைத் தெளிந்தவராய். - எ - று.

**நாடோறும் சிவலிங்கம் கண்டுண்ணு மதுநயந்து**
**மாடோர்வெள் ளிடைமன்னுஞ் சிவலிங்கங் கண்டுமனம்**
**நீடோடு களியுவகை நிலைமைவரச் செயலறியார்**
**பாடோர்கல் கண்டதனைப் பதைப்போடும் எடுத்தெறிந்தார். 9**

(இ - ள்.) தினந்தோறுஞ் சிவலிங்கப் பெருமானைத் தரிசித்துப் போசனஞ் செய்யும் நியதியை மேற்கொண்டு, சமீபத்தில் ஓர் வெள்ளிடையிலிருக்கின்ற சிவலிங்கத்தைத் தரிசித்துத் திருவுள்ளப் பெருக்குடன் பேரானந்தக் களிப்புண் டாகத் தாம் செய்யுஞ் செயலிதுவென்றுணராமல், அருகிலிருந்த ஒரு செங்கல்லைப் பார்த்து, மனப்பதைப்புடன் எடுத்து அச்சிவலிங்கத்தின் மேலெறிந்தருளினார். - எ - று.

***அகநிறைந்த பேருவகை அடங்காத ஆதரவால்***
***மகவுமகிழ்ந் துவப்பார்கள் வன்மைபுரி செயலினால்***
***இகழ்வனவே செய்தாலும் இளம்புதல்வர்க் கின்பமே***
***நிகழுமது போலதற்கு நீள்சடையார் தாம்கிழ்வார்.*** ***10***

(இ - ள்.) மனத்தில் நிறைந்த பெருமகிழ்ச்சியானது அடங்காத பெருவிருப்பினால் (தாய் தந்தையார்கள் தங்கள் குழந்தைகள் செய்யும்) வன்செய்கையினால் இழிவானவை களைச் செய்தாலும் தங்கள் குழந்தையை மகிழ்ந்து கூறு வார்கள்; அதனால் அவ்விளங்குழந்தைகளுக்கு இன்பமே தோன்றும்; அத்தன்மைபோல, நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமான் (அச் சாக்கியநாயனாரது செய்கைக்குத்) திருவுள்ள மகிழ்ந்தருளினார். - எ - று.

***அன்றுபோய்ப் பிற்றைநாள் அந்நியதிக் கணையுங்கால்***
***கொன்றைமுடி யார்மேல்தாங் கல்லெறிந்த குறிப்பதனை***
***நின்றுணர்வார் "எனக்கப்போ திதுநிகழ்நத் தவர்அருளே"***
***என்றதுவே தொண்டாக என்றும்அது செயநினைந்தார்.*** ***11***

(இ - ள்.) அன்று கழிந்து மறுநாள் அக்கல்லெறியுந் திருத்தொண்டைக் குறித்துச் செல்லும் பொழுது, கொன்றை மலர்மாலையை யணிந்த சிவலிங்கப் பெருமான்மேல், தாம் கல்லெறிந்த குறிப்பை நின்று ஆலோசித்தவராய், நேற்று எனக்கு இவ்வெண்ணம் நிகழ்ந்தது சிவபெருமான் றிருவருளே யென்று கருதி, அதனையே திருத்தொண்டாகத் துணிந்து எப்பொழுதும் அக் கல்லெறிதலையே செய்யும்படி எண்ணங் கொண்டருளி னார். - எ - று.

***தொடங்கியநாள் அருளியஅத் தொழிலொழியா வழிதொடரும்***
***கடன்பரிவார் அதுகண்டு கல்லெறிவார் துவராடைப்***
***படம்புனைவே டந்தவிரார் பகபதியார் தஞ்செயலே***
***அடங்கலும்என் பதுதெளிந்தார் ஆதலினால் மாதவர்தாம்.*** ***12***

(இ - ள்.) மிக்க தவத்தினையுடைய சாக்கியநாயனார் (தாம் அன்பு செய்யத்) தொடங்கிய நாளில் (சிவபெருமானது திருவருள்) உணர்த்திய அத்திருத்தொண்டை விடாமல் தொடர்ந்து வருகின்ற அக்கடமையைச் செய்பவராய்ச் சிவலிங்கப் பெருமானைக் கண்டு கல்லா லெறிகின்றவர் துவர் ஆடையைத் தரிக்கும் பௌத்த வேடத்தை நீங்காதவராய், அதனைத்தும் சிவபெருமானது திருவருட்செயலே யென்பதைத் தெளிந்தனர்; ஆதலால். - எ - று.

***இந்நியதி பரிவோடும் வழுவாமல் இவர்செய்ய***
***முன்னுதிருத் தொண்டர்நிலை முடிந்தபடி தான்மொழியில்***
***துன்னியமெய் யன்புடனே எழுந்தவினை தூயவர்க்கு***
***மன்னுமிகு பூசனையாம் அன்புநெறி வழக்கினால்.*** ***13***

(இ - ள்.) இக்கல்லெறியும் நியதியை அன்புடன் தவறாமல் இந்நாயனார் செய்துவர, அது யாவரும் சிந்திக்கத் தக்க மெய்த் தொண்டாகி முற்றுப் பெற்ற தன்மையைக் கூறுமிடத்து, பொருந்திய மெய்யன்புடனே செய்யத் தொடங்கிய (கல்லெறி தலாகிய) திருத்தொண்டானது, மெய்யன்பின் நெறிமுறைமை யினால், மலரகிதராகிய சிவபெருமானுக்கு நிலைபெற்ற சிறந்த அருச்சனையாக முடிந்தது. - எ - று.

***கல்லாலே எறிந்ததுவும் அன்பான படிகாணில்***
***வில்வேடர் செருப்படியுந் திருமுடியின் மேவிற்றால்***
***நல்லார்மற் றவர்செய்கை அன்பாலே நயந்ததனை***
***அல்லாதார் கல்லென்பார் அரனார்க்கஃ தலராமல்.*** ***14***

(இ - ள்.) (அந் நாயனார்) கல்லினாலெறிந்ததுவும் மெய்யன் பான தன்மையைப் போல, வனத்தில் வசித்திருந்த வில்லைப் பிடித்த வேடர் குலத்தினாராகிய ஸ்ரீ கண்ணப்பநாயனாரது செருப்படியும் சிவபெருமானுடைய திருமுடியில் பொருந்தியது; நல் திருத்தொண்டராகிய அச் சாக்கியநாயனார் அன்பினால் விரும்பிச் செய்தலாகிய (கல்லெறியுந்) திருத்தொண்டினை, திருத்தொண்டர்களல்லாத கீழ்மக்கள் கல்லென்று கூறுவார்; அது, சிவபெருமானுக்குச் சிறந்த மலராகும். - எ - று.

***அங்கொருநாள் அருளாலே அயர்ந்துண்ணப் புகுகின்றார்***
***"எங்கள்பிரான் தனைஎறியா தயர்ந்தேன்யான்" எனஎழுந்து***
***பொங்கியதோர் காதலுடன் மிகவிரைந்து புறப்பட்டு***
***வெங்கரியின் உரிபுனைந்தார் திருமுன்பு மேவினார்.*** ***15***

(இ - ள்.) அவ்வாறு திருத்தொண்டு செய்து வருநாள்களில் ஒருநாள் சிவபெருமான் றிருவருளினால் மறந்து போசனஞ் செய்யத் தொடங்குகின்ற அந்நாயனார், யான் இன்று எமது சிவபெருமானைக் கல்லாலெறியாமல் மறந்து விட்டேனென்று எழுந்து, அதிகரித்த பேரன்புடன் மிகவும் விரைந்து புறப்பட்டுக் (கயாசுரனென்னுங்) கொடிய யானையினது தோலை யாடையாக வணிந்தருளிய சிவலிங்கப் பெருமானது திருமுன்பு அடைந்தருளினார். - எ - று.

***கொண்டதொரு கல்லெடுத்துக் குறிகூடும் வகைஎறிய
உண்டிவினை ஒழித்தஞ்சி ஓடிவரும் வேட்கையொடும்
கண்டருளுங் கண்ணுதலார் கருணைபொழி திருநோக்கால்
தொண்டரெதிர் நெடுவிசும்பில் துணைவியொடுந் தோன்றினார். 16***

(இ - ள்.) போசனஞ் செய்தலை யொழித்து அஞ்சி யோடி வருகின்ற பெரு விருப்போடும் தாம் கருதிய ஒரு கல்லை யெடுத்துக் குறிபொருந்தும்படி சிவலிங்கத்தின் மேலேறிய, கருணை பொழிகின்ற திருநோக்கத்தினால் அதனைக் கண் டருளிய சிவபெருமான் அச் சாக்கிய நாயனாருக் கெதிரே உயர்ந்த ஆகாயத்தில் உமாதேவியாரோடும் எழுந்தருளுவாராயி னார். - எ - று.

***மழவிடைமேல் எழுந்தருளி வந்ததொரு செயலாலே
கழலடைந்த திருத்தொண்டர் கண்டுகரம் குவித்திறைஞ்சி
விழஅருள்நோக் களித்தருளி மிக்கசிவ லோகத்தில்
பழஅடிமைப் பாங்கருளிப் பரமரெழுந் தருளினார். 17***

(இ - ள்.) இளமை பொருந்திய இடபவாகனத்தின் மேலெழுந்தருளித் தரிசனங் கொடுத்தருளிய திருவருட் செயலினால், திருவடியை யடைந்த சாக்கிய நாயனார் கண்டு திருக்கரங்களைக் குவித்து வீழ்ந்து வணங்க, அவருக்குக் கிருபா நோக்கம் பாலித்துச் சிறந்த சிவலோகத்தில் பழமையாகிய அடிமைப் பாங்கை யருளிச் செய்து சிவபெருமானெழுந் தருளினார். - எ - று.

***ஆதியார் தம்மை நாளுங் கல்லெறிந் தணுகப் பெற்ற
கோதில்சீர்த் தொண்டர் கொண்ட குறிப்பினை அவர்க்கு நல்கும்
சோதியார் அறித லன்றித் துணிவதென் னவர்தாள் சூடித்
தீதினை நீக்க லுற்றேன் சிறப்புலி யாரைச் செப்பி. 18***

(இ - ள்.) சிவலிங்கப் பெருமானை நாடோறுங் கல்லா லெறிந்து சிவபதமடையப் பெற்ற குற்றமற்ற சிறப்பினையுடைய சாக்கியநாயனார் தமது திருவுள்ளத்திற் கொண்டருளிய குறிப்பை அந்நாயனாருக்குத் திருவருள் புரிந்தருளிய சிவ பெருமானறிவதன்றி, வேறு துணிந்து சொல்லப்படுவது யாது? அத்தகைய சாக்கியநாயனாரது திருவடிகளைச் சிரமேற் கொண்டு, (இனி) சிறப்புலி யாரைக் குறிக்கத் தொடங்கினேன். - எ-று.

# 35. சிறப்புலி நாயனார் புராணம்

***பொன்னிநீர் நாட்டின் நீடும் பொற்பதி "புவனத் துள்ளோர்***
***இன்மையால் இரந்து சென்றோர்க் கில்லைஎன் னாதே ஈயும்***
***தன்மையார்" என்று நன்மை சார்ந்தவே தியரைச் சண்பை***
***மன்னனார் அருளிச் செய்த மறைத்திரு வாக்கூர் அவ்வூர். 1***

(இ - ள்.) காவிரிநதி நீரானது (பல வளங்களைத் தருகின்ற) சோழ நாட்டில் சிறந்து விளங்கும் அழகிய திருப்பதியானது, உலகத்துள்ளவர்களில், 'வறுமையினால் யாசித்துச் சென்றவர் களுக்கு இல்லை யென்னாமல் கொடுக்கின்ற தன்மையையுடைய வர்கள்' என்று, நல்லொழுக்கத்தையுடைய வேதியர்களைச் (சிறப்பித்துச்) சீகாழித் தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் பாடியருளிய திருநெறித் தமிழ் வேதமாகிய தேவாரப்பதிகமென்னும் அருட்செல்வ நிறைந்த ஊராகும் திருவாக்கூர் என்னுந் திருப்பதி. - எ - று.

***தூமலர்ச் சோலை தோறும் சுடர்தொடு மாடந் தோறும்***
***மாமழை முழக்கந் தாழ மறையொலி முழக்கம் ஓங்கும்***
***பூமலி மறுகில் இட்ட புகைஅகில் தூபந் தாழ***
***ஓமநல் வேள்விச் சாலை ஆகுதித் தூபம் ஓங்கும். 2***

(இ - ள்.) தூய்மையாகிய மலர்களையுடைய சோலைகளி லும், சந்திரசூரிய மண்டலத்தை யளாவிய மாடங்களிலும் சிறந்த மேகமுழக்கம் தாபம்படி வேதாத்தியயனஞ் செய்யுமுழக்கங்க ளதிகரித்தோங்கும்; அழகு நிறைந்த வீதிகளில் இட்ட அகிற் புகை தாழும்படி ஓமஞ் செய்யும் சிறந்த யாகசாலையில் ஆகுதி செய்தலா லுண்டாகும் புகை யதிகரித்தோங்கும். - எ - று.

***ஆலைசூழ் பூக வேலி அத்திரு வாக்கூர் தன்னில்***
***ஞாலமார் புகழின் மிக்கார் நான்மறைக் குலத்தி னுள்ளார்***
***நீலமார் கண்டத் தெண்டோள் நிருத்தர்தம் திருதொண் டேற்ற***
***சீலராய்ச் சாலும்ஈகைத் திறத்தினில் சிறந்த நீரார். 3***

(இ - ள்.) கரும்பாலைகள் சூழ்ந்த கமுகம் வேலியினையுடைய அத்திருவாக்கூரென்னுந் திருப்பதியில் உலகத்தில் நிறைந்த பெரும்புகழில் மிக்கவரும், நான்கு வேதங்களையு முணர்ந்த வேதியர் குலத்தி லவதரித்தவரும்; கருநிறம் விளங்குங் கண்டத்

தையும் எட்டுத் திருத்தோள்களையுமுடைய சிவபெருமானுக் குரிய திருத்தொண்டை விரும்பிச் செய்கின்ற நல்லொழுக்க முடையவருமாய் மிக்க கொடைத் திறத்திற் சிறந்த பெருங் குணத்தை யுடைய சிறப்புலி நாயனாரென்பவ ரொருவரிருந்தார். - எ - று.

***ஆளும்அங் கணருக் கன்பர் அணைந்தபோ தடியிற் றாழ்ந்து***
***மூளும்ஆ தரவு பொங்க முன்புநின் றினிய கூறி***
***நாளும்நல் லமுத மூட்டி நயந்தன எல்லாம் நல்கி***
***நீளும்இன் பத்துள் தங்கி நிதிமழை மாரி போன்றார்.*** 4

(இ - ள்.) (அவர்) நம்மை யடிமை கொண்டருளுஞ் சிவபெருமானுக்குரிய மெய்யடியார்கள் எழுந்தருளிய பொழுது அவர்களது திருவடிகளில் வணங்கி மிக்க பெருவிருப்ப மதிகரிக்க, முன்னின்று இன்மொழிகள் கூறி, நாடோறும் நல்ல திருவமுதுண்பித்து, அவர்கள் விருபியவனைத் துங்கொடுத்து மிக்க பேரின்பமுற்று (அதனால்) நவநிதிகளையும் பொழியும் மேகவருஷம் போன்று வாழ்ந்தனர். - எ - று.

***அஞ்செழுத் தோதி அங்கி வேட்டுநல் வேள்வி எல்லாம்***
***நஞ்சணி கண்டர் பாதம் நண்ணிடச் செய்து ஞாலத்(து)***
***எஞ்சலில் அடியார்க் கென்றும் இடையறா அன்பால் வள்ளல்***
***தஞ்செயல் வாய்ப்ப ஈசர் தாள்நிழல் தங்கி னாரே.*** 5

(இ-ள்.) ஸ்ரீ பஞ்சாட்சரத்சை செபித்து அக்கினி காரியத்தை விரும்பிச் சிறந்த வேள்விப் பயன்களனைத்துங் காளகண்ட ராகிய சிவபெருமானது திருவடிகளைப் பொருந்தச் செய்து, உலகத்திலுள்ள குறைவற்ற மெய்யடியார்களிடத்தில் என்றும் நீங்காத பேரன்பினால் வள்ளற்றன்மையை யுடைய தமது கொடைத் தொழிலானது பொருந்தச் செய்து சிவபெருமானது திருவடி நிழலை யடைந்தனர். - எ - று.

***அறத்தினில் மிக்க மேன்மை அந்தணர் ஆக்கூர் தன்னில்***
***மறைப்பெரு வள்ள லார்வண் சிறப்புலி யார்தாள் வாழ்த்திச்***
***சிறப்புடைத் திருச்செங் காட்டாங் குடியினிற் செம்மை வாய்த்த***
***விறற்சிறுத் தொண்டர் செய்த திருத்தொழில் விளம்ப லுற்றேன்.*** 6

(இ - ள்.) (மெய்யடியார்களுக்குத்) தருமஞ் செய்தலில் சிறந்த மேன்மையையுடைய வேதியர்கள் வாழுந் திருவாக்கூரில் வேதங்களையுணர்ந்த பெரு வள்ளாகிய சிறப்புலி நாயனாரது

திருவடிகளைத் துதித்து, பலவகைச் சிறப்பினையுடைய திருச் செங்காட்டங்குடி யென்னுந் திருப்பதியில் திருவருள் வாய்க்கப் பெற்று வாழ்ந்தருளிய திருவருட்டிறத்தையுடைய சிறுத் தொண்ட நாயனார் செய்த திருத்தொண்டின் தன்மையினைச் சொல்லத் தொடங்கினேன். - எ - று.

# 36. சிறுத்தொண்ட நாயனார் புராணம்

***உருநாட்டுஞ் செயல்காமன் ஒழியவிழி பொழிசெந்தீ***
***வருநாட்டத் திருநுதலார் மகிழ்ந்தருளும் பதிவயலில்***
***கருநாட்டக் கடைசியர்தங் களிகாட்டுங் காவேரித்***
***திருநாட்டு வளங்காட்டுஞ் செங்காட்டங் குடியாகும்.*** 1

(இ - ள்.) தனது உருவத்தை நாட்டிக் காமப் போர் செய்ய வந்த மன்மதனெரியும்படி திருக்கண் பொழிந்த சிவந்த அக்கினி யானது தோன்றிய நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளுந் திருப்பதியாவது, வயல்களில் நாற்று முளைகளை நடுகின்ற உழத்தியர்கள் தங்கள் களிப்பைக் (குரவை யாட்டு முதலியவற்றால்) காட்டுகின்ற காவிரி நதி சூழ்ந்த சோழ நாட்டில் பல வளங்களையுங் காட்டுகின்ற திருச்செங்காட்டாங் குடியாகும். - எ - று.

***நிலவியஅத் திருப்பதியில் நெடுஞ்சடையார் நீற்றடைவால்***
***உலகில்வளர் உயிர்க்கெல்லாம் உயர்காவற் றொழில்பூண்டு***
***மலர்புகழ்மா மாத்திரர்தங் குலம்பெருக வந்துள்ளார்***
***பலர்புகழுந் திருநாமம் பரஞ்சோதி யார்என்பார்.*** 2

(இ - ள்.) விளங்குகின்ற அத்திருச் செங்காட்டங்குடி யென்னுந் திருப்பதியில் நீண்ட சடைமுடியையுடைய சிவ பெருமானது திருவெண்ணீற்றுச் சார்பினால், உலகத்தில் ஜீவிக்கின்ற எல்லா வுயிர்களுக்கும் உயர்ந்த காவற்றொழிலை மேற்கொண்டு, பரவிய புகழையுடைய மாமாத்திரர் குலஞ் சிறந் தோங்கும்படி அவதரித்தவர்; பலரும் புகழத்தக்க பரஞ்சோதியா ரென்னுந் திருநாமமுடையவர். - எ - று.

***ஆயுள்வே தக்கலையும் அலகில்வட நூற்கலையும்***
***தூயபடைக் கலத்தொழிலும் துறைநிரம்பப் பயின்றவற்றால்***
***பாயுமதக் குஞ்சரமும் பரியும்உகைக் கும்பண்பு***
***மேயதொழில் விஞ்சையினும் மேதினியில் மேலானார்.*** 3

(இ - ள்.) ஆயுள் வேதங்களும், அளவற்ற வடமொழி நூலாகிய வேதாகமங்களும், தூய்மையாகிய தனுர்வேதங்களு மாகிய அவ்வத் துறைகளில் நிரம்பப் பழகியுள்ளவர்; பாய்கின்ற மதத்தினையுடைய யானையேற்றமும், குதிரையேற்றமுமாகிய வித்தையிலும் உலகத்தில் சிறந்துள்ளவர். - எ - று.

***உள்ளநிறை கலைத்துறைகள் ஒழிவின்றிப் பயின்றவற்றால்***
***தெள்ளிவடித் தறிந்தபொருள் சிவன்கழலிற் செறிவென்றே***
***கொள்ளும்உணர் வினில்முன்னே கூற்றுதைத்த கழற்கன்பு***
***பள்ளமடை யாய்என்றும் பயின்றுவரும் பண்புடையார்.*** 4

(இ - ள்.) உள்ளத்தில் நிறைந்த பல வகைக் கலைஞானங் களை இடைவிடாமற் கற்றுணர்ந்து அக்கலைஞான்ங்களால் தெளிந்து தேர்ந்த பொருளாவது சிவபெருமானுடைய திருவடி களிற் பொருந்துதலேயென்று, கருதிய பேருணர்ச்சியோடும், முற்காலத்து (மார்க்கண்டேயர் பொருட்டு) இயமனையுதைத் தருளிய சிவபெருமான் திருவடிகளில் பேரன்பானது பள்ளத்திற் செல்லும் நீர்மடைபோலச் செய்து வருகின்ற பெருங்குணத்தை யுடையவர். - எ - று.

***ஈசனடி யார்க்கென்றும் இயல்பான பணிசெய்தே***
***ஆசில்புகழ் மன்னவன்பால் அணுக்கராய் அவற்காகப்***
***பூசல்முனைக் களிறுகைத்துப் போர் வென்று பொரும்அரசர்***
***தேசங்கள் பலகொண்டு தேர்வேந்தன் பாற்சிறந்தார்.*** 5

(இ - ள்.) சிவபெருமானடியார்களுக்கு எக்காலத்துந் தகுதியான திருத்தொண்டுகளைச் செய்து, குற்றமற்ற புகழை யுடைய சோழராசனிடத்தில் அணுக்கராகி, அவ்வரசனுக்காகப் போர்முனையில் யானையைச் செலுத்திச் சென்று ஜெயித்து, எதிர்த்துப் போர் செய்த அரசர்களுடைய பல தேசங்களைக் கைப்பற்றி, தேரையுடைய சோழராசனிடத்தில் சிறப்புற்றிருந் தனர். - எ - று.

***மன்னவர்க்குத் தண்டுபோய் வடபுலத்து வாதாவித்***
***தொன்னகரந் துகளாகத் துளைநெடுங்கை வரையுகைத்துப்***
***பன்மணியும் நிதிக்குவையும் பகட்டினமும் பரித்தொகையும்***
***இன்னனஎண் ணிலகவர்ந்தே இகலரசன் முன்கொணர்ந்தார்.*** 6

(இ - ள்.) சோழராசன் பொருட்டுப் படையெடுத்துச் சென்று வடதேசத்திலே வாதாவியென்னும் பழைய நகர

மழியும்படி துளைபொருந்திய நீண்ட துதிக்கையினையுடைய யானையேறிச் செலுத்தி, பலவகை இரத்தினங்களும் நிதிக்குவை களும், யானைக் கூட்டங்களும், குதிரைக் கூட்டங்களும் இவை போன்றனவாகிய அளவற்ற பொருள்களையுங் கவர்ந்து வலி பொருந்திய சோழராசன் முன்னே கொண்டு வந்தார். - எ - று.

**கதிர்முடிமன் னனும்இவர்தங் களிற்றுரிமை ஆண்மையினை**
**அதிசயித்துப் புகழ்ந்துரைப்ப அறிந்தஅமைச் சர்களுரைப்பார்**
**"மதியணிந்தார் திருத்தொண்டு வாய்த்தவலி யுடைமையினால்**
**எதிரிவருக் கிவ்வுலகில் இல்லை" என எடுத்துரைத்தார். 7**

(இ - ள்.) ஒளிவிளங்குகின்ற மணிமுடியையுடைய சோழராசனும் இவரது யானையேற்றத்தின் வல்லமையை யதிசயித்துப் புழ்ந்துபேச, அதனை யறிந்த மந்திரிகள் (அரசனை நோக்கிக்) கூறுவார்கள்; சந்திரனையணிந்த திருமுடியையுடைய சிவபெருமானது திருத்தொண்டு வாய்க்கப் பெற்ற வலிமை யினால், இந்நிலவுலகத்தில் இவருக்கெதிர் ஒருவருமிலையென்று சிறப்பித்துக் கூறினார்கள். - எ - று.

**"தம்பெருமான் திருத்தொண்டர்" எனக்கேட்ட தார்வேந்தன்**
**"உம்பர்பிரான் அடியாரை உணராதே கெட்டொழிந்தேன்**
**வெம்புகொடும் போர்முனையில் விட்டிருந்தேன்" எனவெருவுற்று**
**"எம்பெருமான்! இதுபொறுக்க வேண்டும்" என இறைஞ்சினான். 8**

(இ - ள்.) இவர் சிவபெருமானது திருத்தொண்டரென்று (மந்திரிகள்) சொல்லக் கேட்ட மாலையையணிந்த சோழ மகாராசன் தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது மெய்யடிய வராகிய இவரை யான் சிறிதுமறியாமல், ஐயோ - கெட்டேன்; அஞ்சத்தக்க கொடிய போர் முனையில் விட்டிருந்தேனென்று அஞ்சி, (அப்பரஞ்சோதியாரை நோக்கி) சுவாமீ! இக்குற்றத்தை மன்னித்தருள வேண்டுமென்று வணங்கினான். - எ - று.

**இறைஞ்சுதலும் முன்னிறைஞ்சி "என்னுரிமைத் தொழிற்கடுத்த**
**திறம்புரிவேன்; அவற்கென்னோ? தீங்கென்ன" ஆங்கவர்க்கு**
**நிறைந்தநிதிக் குவைகளுடன் நீடுவிருத் திகள்அளித்தே**
**அறம்புரிசெங் கோலரசன் அஞ்சலிசெய் துரைக்கின்றான். 9**

(இ - ள்.) சோழராசன் தம்மை வணங்கவும், பரஞ்சோதியார் அவனை முன்னே வணங்கி, நான் எனது உரிமைத் தொழிலுக் கடுத்த காரியத்தைச் செய்வேன்; அதனால் தீங்கு என்னவென்று

கூற, அதற்கு, தருமத்தைச் செய்கின்ற செங்கோன்மையையுடைய சோழராசன் அப்பரஞ்சோதியாருக்கு நிறைந்த பொருட்குவை களையும் மிக்க விருத்திகளையுங் கொடுத்து வணங்கிக் கூறுகின்றான். - எ - று.

***"உம்முடைய நிலைமையினை அறியாமை கொண்டுய்த்தீர்;***
***எம்முடைய மனக்கருத்துக் கினிதாக இசைந்(து) உமது***
***மெய்ம்மைபுரி செயல்விளங்க வேண்டியவா றேசரித்துச்***
***செம்மைநெறித் திருத்தொண்டு செய்யும்" என விடைகொடுத்தான். 10***

(இ - ள்.) (தேவரீர் இதுவரையில்) உம்முடைய அன்பின் நிலைமையை யான் அறியாவண்ணம் மறைந்து நடத்திக் கொண்டு வந்தீர்; இனி என் மனக் கருத்துக்கு இனிமையாக இசைந்து, உமது மெய்ம்மையைச் செய்கின்ற திருத்தொண்டின் செயலானது விளங்க நீர் விரும்பிய வண்ணம் வசித்து, நன்னெறி யாகிய திருத்தொண்டினைச் செய்வீராக வென்று விடை கொடுத்தான். - எ - று.

***மன்னவனை விடை கொண்டு தம்பதியில் வந்தடைந்து***
***பன்னுபுகழ்ப் பரஞ்சோதி யார்தாமும் பனிமதிவாழ்***
***சென்னியரைக் கணபதீச் சரத்திறைஞ்சித் திருத்தொண்டு***
***முன்னைநிலை மையில்வழுவா முறைஅன்பிற் செய்கின்றார். 11***

(இ - ள்.) துதிக்கத்தக்க புகழையுடைய பரஞ்சோதியாரும், சோழராசனைவிடைபெற்றுக் கொண்டு தமது திருப்பதியில் வந்து சேர்ந்து, கணபதீச்சரத்தி லெழுந்தருளிய குளிர்ந் இளம் பிறை வாழ்கின்ற திருமுடியையுடைய சிவபெருமானை வணங்கி, தாம் செய்யுந் திருத்தொண்டுகளை முன்னைய நிலைமையில் சிறிதுந் தவறாமல் முறைமைப்படி பேரன்போடுஞ் செய்கின்ற வராயினார். - எ - று.

***வேதகா ரணர்அடியார் வேண்டியமெய்ப் பணிசெய்யத்***
***தீதில்குடிப் பிறந்ததிரு வெண்காட்டு நங்கைஎனும்***
***காதல்மனைக் கிழத்தியார் கருத்தொன்ற வரும்பெருமை***
***நீதிமனை அறம்புரியும் நீர்மையினை நிலைநிற்பார். 12***

(இ - ள்.) வேதகாரணராகிய சிவபெருமானடியார்கள் விரும்பிய மெய்ம்மையாகிய திருத்தொண்டுகளைச் செய்ய, குற்றமற்ற நற்குடியிற் பிறந்த திருவெண்காட்டுநங்கையென்னும் விருப்பமிக்க மனைவியார் தமது கருத்துக்கு இசைய வருகின்ற

பெருமையையுடைய இல்லறத்தை நடத்துந் தன்மையில் நிலையாக நிற்பாராயினார். - எ - று.

**நறைஇதழித் திருமுடியார் அடியாரை நாடோறும்**
**முறைமையினில் திருவமுது முன்னூட்டிப் பின்னுண்ணும்**
**நிறையுடைய பெருவிருப்பால் நியதியா கக்கொள்ளும்**
**துறைவழுவா வகையொழுகுந் தூயதொழிற் றலைநின்றார். 13**

(இ - ள்.) தேன் பொருந்திய கொன்றை மலர் மாலையை யணிந்த திருமுடியையுடைய சிவபெருமானடியார்களைத் தினந்தோறும் முறைமைப்படி முன்னே திருவமுதுண்பித்துப் பின்பு தாம் உணவு கொள்ளுதலாகிய நிறைந்த பெருவிருப் பினால், அதனையே நியதியாகக் கொண்டு செய்கின்ற முறைமை வழுவாவண்ணம் ஒழுகுகின்ற நல்ல திருத்தொண்டில் முதன்மை யாக நின்றனர். - எ - று.

**தூயதிரு அமுதுகனி கன்னல்அறு சுவைக்கறிநெய்**
**பாயதயிர் பால்இனிய பண்ணியம்உண் நீர்அமுதம்**
**மேயபடி யால்அமுது செய்விக்க மிசைந்தடியார்**
**மாயிருஞா லம்போற்ற வரும்இவர்பால் மனமகிழ்ந்தார். 14**

(இ - ள்.) தூய்மையாகிய திருவமுதும், கனிவர்க்கங்களும், சருக்கரையும், அறுசுவைக்கறிகளும், நறுநெய்யும், நல்லதயிரும், பாலும், இனிய பலகாரங்களும் உண்ணுகின்ற நீரமுதமும் பொருந்திய வகையினால் திருவமுது செய்விக்க, பெரிய நில வுலகமானது துதிக்கும்படி அவதரித்தருளிய இப்பரஞ்சோதி யாரிடத்து அடியார்கள் மிகுதியாக வடைந்து மனமகிழ்ந் தார்கள். - எ - று.

**சீதமதி அரவினுடன் செஞ்சடைமேற் செறிவித்த**
**நாதனடி யார்தம்மை நயப்பாட்டு வழிபாட்டால்**
**மேதகையா ரவர்முன்பு மிகச்சிறிய ராய்அடைந்தார்**
**ஆதலினாற் சிறுத்தொண்டர்என நிகழ்ந்தார் அவனியின்மேல். 15**

(இ - ள்.) குளிர்ந்த சந்திரனைப் பாம்புடனே (பகையின்றிச்) சிவந்த சடைமுடியில் தரித்தருளிய சிவபெருமானது அடியார் களை விரும்பச் செய்கின்ற வழிபாட்டினால், மேன்மையாகிய பெருங்குணத்தையுடைய பரஞ்சோதியார் அவ்வடியார்களுக்கு முன்னே மிகச் சிறியராய் ஒழுகுகின்றமையால், இவ்வுலகத்தில் சிறுத்தொண்டரென்னுந் திருநாமம் விளங்கப் பெற்றனர்.

***கண்ணுதலார் கணபதீச் சரத்தின்கட் கருத்தமர***
***உண்ணிறைஅன் பிற்பணிசெய் தொழுகுவார் வழுவின்றி***
***எண்ணில்பெருஞ் சீரடியார் இடைவிடா தமுதுசெய***
***நண்ணியபே ருவகையுடன் நயந்துறையு நாளின்கண்.*** 16

(இ - ள்.) நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானது கணபதீச்சரமென்னும் ஆலயத்தில் தமது கருத்துப் பொருந்த திருவுள்ளத்தில் நிறைந்த பேரன்பினால் திருப்பணி செய் தொழுகுகின்றவர், தவறாமல் அளவற்ற பெருஞ் சிறப்பினை யுடைய மெய்யடியார்கள் இடைவிடாமல் திருவமுதுசெய் தருளுதலால், பொருந்திய பெருமகிழ்ச்சியோடும் விரும்பி வாழும் நாள்களில். - எ - று.

***நீராருஞ் சடைமுடியார் அருளினால் நிறைதவத்துப்***
***பேராள ரவர்தமக்குப் பெருகுதிரு மனையறத்தின்***
***வேராகி விளங்குதிரு வெண்காட்டு நங்கைபால்***
***சீராள தேவர் எனுந் திருமைந்தர் அவதரித்தார்.*** 17

(இ - ள்.) கங்கை நதி தங்கிய சடைமுடியை யுடைய சிவபெருமானது திருவருளினால் நிறைந்த தவத்தினையுடைய அச்சிறுத் தொண்ட நாயனாருக்கு, பெருகுகின்ற இல்லற வொழுக்கத்தின் வேர்போல விளங்குகின்ற திருவெண்காட்டு நங்கையாரென்னும் மனைவியாரிடத்திலே சீராளவேதரென் னுந் திருப் பெயரையுடைய ஒரு சற்புத்திரர் அவதரித்தனர். - எ - று.

***அருமையினிற் றனிப்புதல்வர் பிறந்தபொழு தலங்கரித்த***
***பெருமையினிற் கிளைகளிப்பப் பெறற்கரிய மணிபெற்று***
***வருமகிழ்ச்சி தாதையார் மனத்தடங்கா வகைவளரத்***
***திருமலிநெய் யாடல்விழாச் செங்காட்டங் குடிஎடுப்ப.*** 18

(இ - ள்.) அருமையோடு ஒப்பற்ற சற்புத்திரர் அவதரித்த பொழுது (அந்நகரை) அலங்கரித்த பெருமையோடு உறவினர் களிப்படையவும்; பெறுதற்கரிய மாணிக்கம் போன்ற அப்புதல் வரைப் பெற்று, அதனால் வருகின்ற பெருமகிழ்ச்சியானது தந்தையாராகிய சிறுத்தொண்டநாயனாரது திருவுள்ளத்தி லடங்காவண்ணம் வளரவும், அழகு மிக்க நெய்யாட்டு விழாவைத் திருச்செங்காட்டங் குடியிலுள்ளவர்கள் கொண்டா டவும். - எ - று.

**மங்கலநல் லியம்முழக்கம் மறைமுழக்கம் வானளப்ப**
**அங்கணர்தஞ் சீரடியார்க் களவிறந்த நிதியளித்துத்**
**தங்கள்மர பினிலுரிமைச் சடங்குதச தினத்தினிலும்**
**பொங்குபெரு மகிழ்ச்சியுடன் புரிந்துகாப் பணிபுனைந்தார். 19**

(இ - ள்.) மங்கலகரமாகிய நல்ல வாத்திய முழக்கமும், வேத கோஷங்களின் முழக்கமும் விண்ணுலகத்தையளாவவும், சிவபெருமானது மெய்யடியார்களுக்கு அளவற்ற பொருள் களைத் தானங்கொடுத்து, தங்கள் குலமரபுக்குரிய சடங்குகளைப் பத்துத் தினங்களிலும் மிக்க பெருமகிழ்வோடுஞ் செய்து காப்பு நாணணிந்தார். - எ - று.

**ஆர்வநிறை பெருஞ்சுற்றம் அகமலர அளித்தவர்தாம்**
**பார்பெருகு மகிழ்ச்சியுடன் பருவமுறைப் பாராட்டுச்**
**சீர்பெருகச் செய்யவளர் திருமகனார் சீரடியில்**
**தார்வளர்கிண் கிணி அசையத் தளர்நடையின் பதஞ்சார்ந்தார். 20**

(இ - ள்.) விருப்பமிக்க பெரிய சுற்றத்தார்கள் மனமகிழும்படி, புத்திரரைப் பெற்ற சிறுத் தொண்ட நாயனார் உலகத்தில் பெருகிய களிப்போடு அவ்வப் பருவங்கடோறும் முறைப்படி செய்யுஞ் சிறப்புக்களை மேன்மையோடு செய்து வர, அதனால், (குறைவின்றி) வளர்ந்து வருகின்ற அந்தச் சற்புத்திரர் தமது சிறந்த கால்களில் ஒழுங்காகக் கோத்த கிங்கிணிச் சதங்கை யசையத் தளர் நடைப்பருவமடைந்தருளினார். - எ - று.

**சுருளுமயிர் நுதற்சுட்டி துணைக்காதின் மணிக்குதம்பை**
**மருவுதிருக் கண்டநாண் மார்பினில்ஐம் படைகையிற்**
**பொருவில்வயி ரச்சரிகள் பொன்னரைஞாண் புனைசதங்கை**
**தெருவினொளி விளங்கவளர் திருவிளையாட் டினிலமர்ந்தார். 21**

(இ - ள்.) சுருண்ட முன்மயிரில் கோக்கப்பட்ட நெற்றிச் சுட்டியும், இரண்டு திருக்காதுகளில் மணிக்குதம்பைகளும், பொருந்திய திருக்கழுத்தில் கண்டசரமும், திருமார்பில் ஐம்படை யும், கைகளில் ஒப்பற்ற வயிரக்கடகமும், (இடையில்) பொன்னா லாகிய அரைஞாணும் (கால்களில்) அழகிய சிறுசதங்கையும் வீதியில் ஒளி விளங்கும்படி திருவிளையாடல் செய்தருளினார்.- எ - று.

**வந்துவளர் மூவாண்டில் மயிர்வினைமங் கலஞ்செய்து**
**தந்தையா ரும்பயந்த தாயாருந் தனிச்சிறுவர்**
**சிந்தைமலர் சொற்றெளிவிற் செழுங்கலைகள் பயிலத்தம்**
**பந்தமற வந்தவரைப் பள்ளியினில் இருத்தினார். 22**

(இ - ள்.) இவ்வாறு விளையாடி வளர்ந்து வருகின்ற மூன்றாம் பருவத்தில் சவுளகன்மஞ் செய்வித்து, சிறுத்தொண்ட நாயனாரும் பெற்றதாயாகிய திருவெண்காட்டு நங்கையாரும் ஒப்பற்ற தமது புத்திரர் சிந்தை மலரத்தக்க சொற்களின் தெளிவினால் செழிய வேதமுதலிய கலைகளைக் கற்கும்படி, தமது பாசபந்தங்க ளொழியும் பொருட்டு அவதரித்தருளிய சீராள தேவரைப் பள்ளியிலிட்டு வித்தியாரம்பஞ் செய்வித் தார்கள். - எ - று.

**அந்நாளிற் சண்பைநகர் ஆண்டகையார் எருத்தருள**
**முன்னாக எதிர்கொண்டு கொடுபுகுந்து முந்நூல்சேர்**
**பொன்மார்பிற் சிறுத்தொண்டர் புகலிகா வலனார்தம்**
**நன்னாமச் சேடிவகள் போற்றிசைத்து நலஞ்சிறந்தார். 23**

(இ - ள்.) அந்நாளிலே சீகாழித் தலைவராகிய திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் (அத்திருச் செங்காட்டங்குடிக்கு) எழுந்தருள, பூணூலை யணிந்த அழகிய திருமார்பினையுடைய சிறுத்தொண்டநாயனார் முன்னே எதிர்சென்று அவரை யழைத்துக் கொண்டு வந்து, அத்திருஞானசம்பந்தப்பிள்ளையா ரது நல்ல புகழமைந்த திருவடிகளைத் துதித்து நன்மை சிறந்திருந் தனர். - எ - று.

**சண்பையர்தம் பெருமானும் தாங்கரிய பெருங்காதல்**
**பண்புடைய சிறுத்தொண்ட ருடன்பயின்று மற்றவரை**
**மண்பரவுந் திருப்பதிகத் தினில்வைத்துச் சிறப்பித்து**
**நண்பருளி எழுந்தருளத் தாமினிது நயப்புற்றார். 24**

(இ - ள்.) திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளும் தாங்குதற் கரிய பேரன்பினையுடைய சிறுத்தொண்ட நாயனாருடன் சிலநாள் பழகி, அந்நாயனாரை உலகத்தார் துதிக்கின்ற தமது திருப்பதிகத்தில் சிறப்பித்துப் பாடியருளி நட்புக் கூறி யெழுந் தருள, தாமும் இனிமையாக விருப்பமுற்றருளினார். - எ - று.

**இத்தன்மை நிகழுநாள் இவர்திருத்தொண் டிருங்கயிலை**
**அத்தர்திரு வடியிணைக்கீழ்ச் சென்றணைய அவருவடைய**
**மெய்த்தன்மை அன்புநுகர்ந் தருளுதற்கு விடையவர்தாம்**
**சித்தமகிழ் வயிரவராய்த் திருமலைநின் றணைகின்றார். 25**

(இ - ள்.) இவ்வாறு நிகழும் நாள்களில் இச்சிறுத் தொண்ட நாயனாரது திருத்தொண்டானது ஸ்ரீ மகாகயிலாசத்தில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானது திருவடிகளில் சென்றடைய, அந்நாயனாரது மெய்யன்பாகிய அமுதத்தையுண்டருளும் பொருட்டுச் சிவபெருமான் திருவுள்ள மகிழ்ந்த வைரவத்துக் குரிய திருவேடங்கொடு திருக்கயிலாசத்தினின்று நீங்கித் திருச்செங்காட்டங்குடியை யடைவாராயினார். - எ - று.

**மடல்கொண்ட மலரிதழி நெடுஞ்சடையை வனப்பெய்தக்**
**கடல்மண்டி முகந்தெழுந்த, காளமே கச்சுருள்போல்**
**தொடர்பங்கி சுருண்டிருண்டு தூறிநெறித் தசைந்துசெறி**
**படர்துஞ்சின் கருங்குஞ்சி கொந்தளமா கப்பரப்பி. 26**

(இ - ள்.) இதழமைந்த கொன்றை மலரை யணிந்த நீண்ட சடையை அழகு பொருந்தும்படி கடலையடைந்து நீரைப் பருகி யெழுந்த கரியமேகச் சுருள் போலத் தொடர்ந்த புறமயிரானது சுருண்டு இருண்டு சிலிர்த்து நெறித்து அசைவுற்று நெருங்கிய கெடாத கருமயிரைக் குழற்சியாகப் பரப்பி. - எ - று.

**அஞ்சனமஞ் சனஞ்செய்த தனையஅணி கிளர்பம்பை**
**மஞ்சினிடை இடைஎழுந்த வானமீன் பரப்பென்னப்**
**புஞ்சநிரை வண்டுதேன் கரும்புபுடை படர்ந்தார்ப்பத்**
**துஞ்சினுனி தனிப்பரப்புந் தும்பைநறு மலர்தோன்ற. 27**

(இ - ள்.) மேகத்தின் இடையிடையே தோன்றிய நக்ஷத்திரக் கூட்டங்களைப் போல, இருளுக்கிருளூட்டிய தொத்த அழகிய மயிர்க்குழற்சியில் கூட்டமாகவும் வரிசையாகவும் வருகின்ற கருவண்டுகளுந் தேன் வண்டுகளும் பொறிவண்டுகளும் அருகில் படர்ந்தொலிக்கும்படி, கெடாத நுனியில்தனிமையாக ஒளிரப்பு கின்ற நறுமணங் கமழுந் தும்பை மலர் விளங்கவும். - எ - று.

**அருகுதிரு முடிச்செருகும் அந்திஇளம் பிறைதன்னைப்**
**பெருகுசிறு மதியாக்கிப் பெயர்த்துச்சாத் தியதென்ன**
**விரிசுடர்ச்செம் பவளஒளி வெயில்விரிக்கும் விளங்குசுடர்த்**
**திருநுதன்மேல் திருநீற்றுத் தனிப்பொட்டுத் திகழ்ந்திலங்க. 28**

(இ - ள்.) திருமுடியினருகில் தரித்த மாலைக் காலத்திற் றோன்றும் இளம் பிறையை ஒளிபெருகுகின்ற சிறிய பூரண சந்திரனாகச் சமைத்துப் பெயர்த்துத் தரித்ததுபோல, விரிந்த சுடரையுடைய செம்பவளத்தி னொளிபோலும் பிரகாசத்தை வீசுகின்ற ஒளிவிளங்குந் திருநெற்றியில் ஒப்பற்ற திருவெண்ணீற் றுத் திலதம் விளங்கவும். - எ - று.

***வெவ்வருக்கன் மண்டலமும் விளங்குமதி மண்டலமும்***
***அவ்வனற்செம் மண்டலமும் உடன்அணைந்த தெனஅழகை***
***வவ்வுதிருக் காதின்மணிக் குழைச்சங்கு வளைத்ததனுள்***
***செவ்வரத்த மலர்செறித்த திருத்தோடு புடைசிறக்க.*** **29**

(இ - ள்.) வெவ்விய கிரணங்களையுடைய சூரிய மண்டலமும், விளங்குகின்ற (குளிர்ந்த) சந்திர மண்டலமும், உஷ்ணத்தைச் செய்கின்ற அக்கினி மண்டலமும் ஒருங்கு சேர்ந்து வந்தாற் போல, அழகைக் கிரகிக்கின்ற திருக்காதின் கண் இரத்தின குழையில் சங்கை வளைத்து, அதனுள்ளே செங்கழுநீர் மலரைச் செருகப் பெற்றுள்ள அழகிய காதணிகள் பக்கங்களில் விளங்கவும். - எ - று.

***களங்கொள்விடம் மறைத்தருளக் கடலமுதக் குமிழிநிரைத்***
***துளங்கொளிவெண் திரட்கோவைத் தூயவடம் அணிந்ததென***
***உளங்கொள்பவர் கரைந்துடலும் உயிரும்உரு கப்பெருக***
***விளங்குதிருக் கழுத்தினிடை வெண்பளிங்கின் வடந்திகழ.*** **30**

(இ - ள்.) கண்டத்திலணிந்த விடத்தை மறைந்தருளும் பொருட்டுக் கடலிற்றோன்றிய அமுதமாகிய குமிழிகளின் வரிசையையுடைய ஒளிவிளங்குகின்ற வெள்ளிய திரட்சியாகிய சிறந்த கோவை வடத்தை யணிந்தாற்போல, தம்மைச் சிந்திக்கின்ற மெய்யடியார்களது உடலுமுயிருங் கரைந்துருகும்படி, சிறந்து விளங்குகின்ற அழகிய கழுத்தில் வெள்ளிய பளிங்குக் கற்களாலாகிய மாலை விளங்கவும். - எ - று.

***செம்பரிதி கடலளித்த செக்கரொளி யினை அந்திப்***
***பம்புமிருள் செறிபொழுது படர்ந்தணைந்து சூழ்வதெனத்***
***தம்பழைய கரியுரிவை கொண்டுசமைத் ததுசாத்தும்***
***அம்பவளத் திருமேனிக் கஞ்சுகத்தின் அணிவிளங்க.*** **31**

(இ - ள்.) சிவந்த கிரணங்களையுடைய சூரியன் மேற்றிசைக் கடலில் அஸ்தமித்த போதுண்டாகிய செவ்வானத்தினொளியை மிக்க இருள் நிறைந்த மாலைப் பொழுதானது பரவிச் சூழ்வதுபோல, அழகிய பவளம் போலுந் திருமேனியில் தமது பழைமையாகிய யானைத் தோலைக் கொண்டு வேறாகச் சமைத்து அதனைச் சாத்திய மேற்போர்வையின் அழகு விளங்கவும். - எ - று.

***மிக்கெழும்அன் பர்கள்அன்பு திருமேனி விளைந்ததென***
***அக்குமணி யாற்சன்ன வீரமும்ஆ ரமும்வடமும்***
***கைக்கணிகொள் வளைச்சரியும் அரைக்கடிசூத் திரச்சரியும்***
***தக்கதிருக் காற்சரியும் சாத்தியஒண் சுடர்தயங்க.*** **32**

(இ - ள்.) சிறந்தெழுகின்ற மெய்யடியார்களது பேரன்பானது தமது திருமேனியிற் றோன்றியதுபோல, சங்குமணிகளாற் கோக்கப்பட்ட சன்னவீரமும், முத்து மாலையும், தாவடமும், திருக்கரங்களில் அழகிய கடகமும், இடையில் அரைஞாணும், சிறந்த திருவடிச் சரியுந் தரித்த ஒள்ளிய சுடரானது விளங்கவும். - எ - று.

***பொருவில்திருத் தொண்டர்க்குப் புவிமேல்வந் தருள்புரியும்***
***பெருகருளின் திறங்கண்டு "பிரானருளே பேணுவீர்!***
***வரும்அன்பின் வழிநிற்பீர்" எனமறைபூண் டறைவனபோல்***
***திருவடிமேல் திருச்சிலம்பு திசைமுழுதுஞ் செலஒலிப்ப.*** **33**

(இ - ள்.) மிகுதியாக வருகின்ற அன்பின் வழியே யொழுகுகின்றவர்களே! ஒப்பற்ற சிறுத் தொண்டநாயகனாருக்கு நிலவுலகத்திலெழுந்தருளித் திருவருள் புரிகின்ற திருவருட்டிறத்தை யுணர்ந்து, அவ்வெம்பெருமானது திருவருளையே விரும்பக் கடவீர்களென்று வேதங்கள் பொருந்திய யுரைப்பனபோல, திருவடிகளி லணிந்த திருச்சிலம்புகள் (எட்டுத்) திக்குகளிலுஞ் செல்லும்படி யொலிக்கவும். - எ - று.

***அயன்கபா லந்தரித்த இடத்திருக்கை யால்அணைத்த***
***வயங்கொளமூ விலைச்சூல மணித்திருத்தோள் மிசைப்பொலியத்***
***தயங்குசுடர் வலத்திருக்கைத் தமருகத்தின் ஒலிதழைப்பப்***
***பயன்தவத்தால் பெரும்புவியும் பாததா மரைசூட.*** **34**

(இ - ள்.) பிரமகபாலத்தை யேந்திய இடத் திருக்கரத்தினால் அணைத்த ஒளி விளங்குகின்ற மூவிலைச் சூலமானது அழகிய திருத்தோளில் விளங்கவும், மழுவானது விளங்குகின்ற வலத் திருக்கரத்தில் தமருகத்தின் ஒலி தழைக்கவும், நற்பயனைத் தவத்தினாற் பெற்ற பூமியும் திருவடித் தாமரைகளைத் தன்மேல் தரித்துக் கொள்ளவும். - எ - று.

***அருள்பொழியுந் திருமுகத்தின் அணிமுறுவல் நிலவெறிப்ப***
***மருபொழிமும் மலஞ்சிதைக்கும் வடிச்சூலம் வெயிலெறிப்பப்***
***பொருள்பொழியுந் பெருகன்பு தழைத்தோங்கிப் புவிஏத்தத்***
***தெருள்பொழிவண் டமிழ்நாட்டுச் செங்காட்டங் குடிசேர்ந்தார்.*** **35**

(இ - ள்.) திருவருள் பொழிகின்ற திருமுகத்தினின்றுந் தோன்றிய அழகிய புன்சிரிப்பானது நிலவொளியை வீசவும், மயக்கத்தைத் தரும் மும்மலங்களைக் கெடுக்கின்ற வடித்த முத்தலைச் சூலமானது ஒளி வீசவும், மெய்ஞ்ஞானத்தைத் தருகின்ற பேரன்பு மிகுந்தோங்கி நிலவுலகத்தார் துதிக்கவும், நல்லுணர்வைத் தருகின்ற வளவிய தமிழ்வளம் பொருந்திய சோழநாட்டிலுள்ள திருச்செங்காட்டங்குடி யென்னுந் திருப்பதியை யடைந்தருளினார். - எ - று.

***தண்டாத தொருவேட்கைப் பசியுடையார் தமைப்போலக்***
***கண்டாரைச் சிறுத்தொண்டர் மனைவினவிக் கடிதணைந்து***
***"தொண்டானார்க் கெந்நாளுஞ் சோறளிக்குந் திருத்தொண்டர்***
***வண்டார்பூந் தாரார்இம் மனைக்குள்ளா ரோ?",என்ன. 36***

(இ - ள்.) நீங்காத பசிவிருப்ப முடையவரைப்போல, தாமெதிரில்கண்டவர்களைச் சிறுத்தொண்டநாயனாரது திருமாளிகையை வினாவி விரைந்து வந்தருளி, எப்பொழுதும் அடியார்களுக்குத் திருவமுது படைக்குந் திருத்தொண்டராகிய வண்டுகள் மொய்க்கின்ற பூமாலையை யணிந்த சிறுத்தொண்ட நாயனார் இவ்வீட்டி லிருக்கின்றனரோ வென்று வினாவ. - எ - று.

***"வந்தணைந்து வினவுவார் மாதவரே யாம்"என்று***
***சந்தனமாம் தையலார் முன்வந்து தாள்வணங்கி***
***"அந்தமில்சீர் அடியாரைத் தேடிஅவர் புறத்தணைந்தார்;***
***எந்தமைஆ ளுடையவரே! அகத்துளெழுந் தருளும்" என. 37***

(இ - ள்.) இங்கு வந்து கேட்கின்றவர் மகத்தாகிய தவமுனிவரே யாகுமென்று சிந்தித்துச் சந்தனநங்கை யென்னுந் தாதியார் முன்னே வந்து திருவடிகளை வணங்கி, சுவாமீ! அவர் முடிவற்ற சிறப்பினையுடைய சிவனடியார்களைத் தேடிக் கொண்டு புறத்திற் சென்றனர்; எம்மை யடிமையாகவுடைய தவமுனிவரே! தேவரீர் இவ்வீட்டினுள்ளே யெழுந்தருளி யிருப்பீராக வென்று வேண்ட. - எ - று.

***மடவரலை முகநோக்கி "மாதரார் தாமிருந்த***
***இடவகையிற் றனிபுகுதோம்" என்றருள அதுகேட்டு***
***விடஅகல்வார் போலிருந்தார் எனவெருவி விரைந்துமனைக்***
***கடனுடைய திருவெண்காட் டம்மைகடைத் தலைஎய்தி. 38***

(இ - ள்.) (அதற்கு வைரவர்) சந்தனநங்கையாரது முகத்தைப் பார்த்து, பெண்கள் இருக்குமிடத்தில் நாம் தனியே வரோம் என்று கூறியருள, அதனைக் கேட்டு, இவர் போய் விடுவார் போலிருக்கின்றாரென்று பயந்து, இல்லற முறைமைக்குரிய (நாயனார் மனைவியாராகிய) திருவெண்காட்டு நங்கையார் விரைந்து தலைக்கடையில் வந்து. - எ - று.

***"அம்பலவர் அடியாரை அமுதுசெய்விப் பார்; இற்றைக்(கு)***
***எம்பெருமான் யாவரையுங் கண்டிலர்தே டிப்போனார்;***
***வம்பெனநீர் எழுந்தருளி வருந்திருவே டங்கண்டால்***
***தம்பெரிய பேறென்றே மிகமகிழ்வார்; இனித்தாழார்.*** **39**

(இ - ள்.) சுவாமீ! எனது நாயகர் எப்பொழுதும் சிவனடியார் களைத் திருவமுது செய்விப்பவர்; இன்றைக்கு ஒருவரையுங் காணாமல் தேடிச் சென்றார்; புதிதாகத் தேவரீர் எழுந்தருளிய திருவேடத்தைக் கண்டால், தமது பெரும்பேறென்று கருதி மிகவும் மகிழ்ச்சியடைவார்; இனிக் காலதாமசஞ் செய்யார். - எ - று.

***"இப்பொழுதே வந்தணைவர்; எழுந்தருளி இரும்" என்ன***
***"ஒப்பில்மனை யறம்புரப்பீர்! உத்தரா பதியுள்ளோம்***
***செப்பருஞ்சீர்ச் சிறுத்தொண்டர் தமக்காணச் சேர்ந்தனம்யாம்***
***எப்பரிசும் அவரொழிய இங்கிரோம்" என்றருளி.*** **40**

(இ - ள்.) இப்பொழுதே வந்து விடுவார்; தேவரீர் இவ்விடத்திலேயே எழுந்தருளியிருமென்று கூற, (அதற்கு வைரவர்) ஒப்பற்ற இல்லறத்தைக் குறைவற நடத்துகின்ற அம்மையாரே! நாம் வடதேசத்திலுள்ளோம், சொல்லுதற்கரிய சிறப்பினையுடைய சிறுத்தொண்ட நாயனாரைக் காணும்படி இங்கு வந்தோம்; எவ்வாறாயினும் அவர் இல்லாத போது நாம் இங்கு இரோம் என்று கூறியருளி. - எ - று.

***கண்ணுதலிற் காட்டாதார் "கணபதீச் சரத்தின்கண்***
***வண்ணமலர் ஆத்தியின்கீழ் இருக்கின்றோம்; மற்றவர்தாம்***
***நண்ணினால் நாமிருந்த பரிசுரைப்பீர்" என்றருளி***
***அண்ணலார் திருவாத்தி அணைந்தருளி அமர்ந்திருந்தார்.*** **41**

(இ - ள்.) நெற்றிக்கண்ணை மறைத்து வந்த சிவபெருமானாகிய வைரவர், நாம் கணபதீச் சரத்திலுள்ள அழகிய மலர்கள் நிறைந்த திருவாத்திவிருக்ஷத்தின் கீழிருக்கின்றோம்; அவர் இங்கு

வந்தால் நாம் இருக்குந் தன்மையை அவருக்குத் தெரிவியுங்க ளென்று கூறியருளிச் சிவபெருமான் திருவாத்திமரத்தை யடைந்து அதன்கீ ழெழுருந்தருளியிருந்தார். - எ - று.

**நீரார் சடையான் அடியாரை நேடி எங்குங் காணாது**
**சீரார் தவத்துச் சிறுத்தொண்டர் மீண்டுஞ் செல்வ மனைஎய்தி**
**ஆரா இன்ப மனைவியார்க் கியம்பி அழிவெய் திடஅவரும்**
**பாரா தரிக்கும் திருவேடத் தொருவர் வந்த படிபகர்ந்தார். 42**

(இ - ள்.) சிறப்புமிக்க தவத்தினையுடைய சிறுத்தொண்ட நாயனார், கங்கைநதி தங்கிய சடைமுடியை யுடைய சிவ பெருமானது அடியார்களைத் தேடி எங்குங் காணாமல், திரும்ப வுஞ் செல்வமிக்க தமது திருமாளிகைக்கு வந்து நீங்காத இன்பம் பொருந்திய மனைவியாருக்குச் சொல்லி மனம் வருந்த, அவ்வம் மையாரும், உலகத்தாரால் விரும்பத்தக்க (வைரவத்) திருவேடத் தையுடைய ஒரு தவமுனிவர் வந்தருளிய தன்மையைக் கூறினார். எ - று.

**"அடியேன் உய்ந்தேன்; எங்குற்றார் உரையாய்?" என்ன அவர் மொழிவார்;**
**"வடிசேர் சூல கபாலத்தார்; 'வடதே சத்தோம்' என்றார்; வண்,**
**துடிசேர் கரத்துப் பயிரவர்; யாஞ் சொல்ல இங்கும் இராதேபோய்க்,**
**கடிசேர் திருவாத் தியின்நிழற்கீழ் இருந்தார் கணப தீச்சரத்து". 43**

(இ - ள்.) (அதைக் கேட்ட நாயனார்) அடியேன் கடைத் தேறினேன்; அவர் எங்குச் சென்றனர் சொல்லென்று கேட்க, அவ்வம்மையார் கூறுவார்; அவர் வடித்த சூலத்தையுங் கபாலத்தையு முடையவர்; உடுக்கை பொருந்திய திருக்கரத்தினை யுடைய வைரவ வேடங் கொண்டவர். யாம் வடதேசத்தோ மென்று கூறினார்; நாங்கள் இங்கு இருக்கும்படி சொல்ல, இராமல்சென்று, கணபதீச்சரத்தில் மணம் பொருந்திய திருவாத்தி விருக்ஷத்தின் கீழிருக்கின்றார். - எ - று.

**என்று மனைவி யார்இயம்ப எழுந்த விருப்பால் விரைந்தெய்திச்**
**சென்று கண்டு திருப்பாதம் பணிந்து நின்றார் சிறுத்தொண்டர்**
**நின்ற தொண்டர் தமைநோக்கி "நீரோபெரிய சிறுத்தொண்டர்?"**
**என்று திருவாய் மலர்ந்தருள இறைவர் தம்மைத் தொழுதுரைப்பார். 44**

(இ - ள்.) என்று மனைவியார் கூற, அதுகேட்ட சிறுத் தொண்ட நாயனார் தமதுள்ளத்தெழுந்த பெருவிருப்பினால்

விரைந்து சென்று (வைரவரைத்) தரிசித்துத் திருவடிகளை வணங்கி நின்றனர்; அவ்வாறு நின்ற நாயனாரைப் பார்த்தருளி, பெரிய சிறுத் தொண்டர் நீரோ? என்று வினாவியருள, (நாயனார்) சிவபெருமானாகிய வைரவரை வணங்கிக் கூறுகின்றார். - எ - று.

**"பூதி அணிசா தனத்தவர்முன் போற்றப் போதேன் ஆயிடினும்**
**நாதன் அடியார் கருணையினால் அருளிச் செய்வர் நான்என்று**
**கோதில் அன்பர் தமைஅமுது செய்விப் பதற்குக் குலப்பதியில்**
**காத லாலே தேடியுமுன் காணேன் தவத்தால் உமைக்கண்டேன்" 45**

(இ - ள்.) விபூதி முதலிய சிவசாதனத்தை யணிந்த மெய் யடியார்களுக்கு முன்னே துதிக்கத்தக்க யோக்கியதை யில்லேன், ஆயினும், சிவபெருமானது அடியார்கள் தங்கள் கருணை மேலீட்டினால் அடியேன் சிறுத்தொண்டனென்று அருளிச் செய்வார்கள்; (அது நிற்க,) குற்றமற்ற சிவனடியார்களைத் திரு வமுது செய்விப்பதற்கு, சிறந்த இத்திருப்பதியில் விருப்பத்தோடு தேடியும் எதிரில் ஒருவரையுங் கண்டிலேன்; முன்செய்த தவத்தின்பலத்தினால் இங்குத் தேவரீரைத் தரிசித்தேன். - எ - று.

**"அடியேன் மனையில் எழுந்தருளி அமுது செய்ய வேண்டும்" என**
**நெடியோன் அறியா அடியார்தாம் "நிகழுந் தவத்தீர்! உமைக்காணும்**
**படியால் வந்தோம்; உத்தரா பதியோம்; எம்மைப் பரிந்தூட்ட**
**முடியாதுமக்குச் செய்கைஅரி தொண்ணா "தென்று மொழிந்தருள. 46**

(இ - ள்.) தேவரீர் அடியேன் வீட்டிற்கு எழுந்தருளித் திருவமுது செய்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்து, விஷ்ணுவினாலறியப்படாத திருவடியையுடைய சிவபெருமா னாகிய வைரவர் விளங்குகின்ற தவத்தினையுடைய சிறுத் தொண்டரோ? நாம் வடதேசத்திலுள்ளோம், இங்கு உம்மைக் காணும்படி வந்தோம்; எமக்கு விரும்பி அமுது செய்விப்பதற்கு உம்மால் முடியாது; அவ்வாறு செய்வித்தால் அரியது; மிகக்கஷ்டமென்று கூறியருள. - எ - று.

**என்னாதடியேன் மொழியேன்; நீர் அமுது செய்யும் இயல்பதனைக்**
**கண்ணார் வேடம் நிறைதவத்தீர்! அருளிச் செய்யுங் கடிதமைக்கத்**
**தண்ணார் இதழி முடியார்தம் அடியார் தலைப்பட் டால்தேட**
**ஒண்ணா தனவும் உளவாகும்; அருமை இல்லை" என உரைத்தார். 47**

(இ - ள்.) அடியேன் எண்ணாமல் ஒன்றுங் கூறேன்; கண்ணுக் கமைந்த வைரவ வேடநிறைந்த தவமுனிவரே! தேவரீர் திருவமுது

செய்தருளுமியல் பைக் கூறியருளும், குளிர்ந்த கொன்றைமலர் மாலையையணிந்த சிவபெருமானது அடியார்கள் விரைந்து அமைப்பதற்குத் தொடங்கினால் தேடுதற்கு அரியனவும் எளியனவாம்; அருமையில்லையென்று கூறினார். - எ - று.

***"அரிய தில்லை" எனக்கேட்ட பொழுதில் அழகு பொழிகின்ற***
***பெரிய பயிர வக்கோலப் பெருமான் அருளிச் செய்வார் "யாம்,***
***பரியுந் தொண்டீர்! மூவிருது கழித்தாற் பசுவீழ்த் திடஉண்ப(து),***
***உரிய நாளும் அதற்கின்றால்; ஊட்ட அரிதாம் உமக்"கென்றார். 48***

(இ - ள்.) அரியது ஒன்றுமில்லையென்று கூறக் கேட்ட பொழுது, அழகைச் சொரிகின்ற பெரிய வைரவத் திருவுருவங் கொண்டெழுந்தருருளிய சிவபெருமான் அருளிச் செய்வார்; விரும்பி யுபசரிக்கின்ற சிறுத்தொண்டரே! யாம் ஆறு மாதங் கழித்தால் பசுவைக் கொன்று உண்பது; அதற்கு ஊரிய நாளும் இந்நாளே யாம்; அப்படி உண்பிக்க உமக்கு அரிதாகுமென்று கூறியருளினார். - எ - று.

***"சால நன்று! முந்நிரையும் உடையேன்; தாழ்விங் கெனக்கில்லை***
***ஆலம் உண்டார் அன்பர்! உமக்கமுதாம் பசுத்தான் இன்னதென***
***ஏல அருளிச் செயப்பெற்றால் யான்போய் அமுது கடிதமைத்துக்***
***காலந் தப்பா மேவருவேன்" என்று மொழிந்து கைதொழுதார். 49***

(இ - ள்.) (அதற்குச் சிறுத்தொண்டநாயனார்) மிகநன்று; அடியேன் மூவகைப் பசுமந்தைகளையு முடையேன், எனக்குக் குறைவில்லை; விடத்தையுண்டருளிய சிவபெருமானுக்குரிய அன்பரே! உமக்குத் திருவமுதாகும் பசு இன்னது என்று அருளிச் செய்வீராயின், யான்போய்ச் சீக்கிரத்தில் பாகம் பண்ணுவித்துக் காலந்தப்பாமல் வருவேனென்று கூறிக் கைகூப்பி வணங்கினார்.- எ - று.

***பண்பு மிக்க சிறுத்தொண்டர் பரிவு கண்டு பயிரவரும்***
***"நண்பு மிக்கீர்! நாம்உண்ணப் படுக்கும் பசுவும் நரப்பசுவாம்***
***உண்ப தஞ்சு பிராயத்துள் உறுப்பில் மறுவின் றேல்இன்னம்***
***புண்செய் நோவில் வேலெறிந்தாற் போலும் புகல்வ தொன்"றென்றார். 50***

(இ - ள்.) நற்குண மிக்க சிறுத்தொண்டநாயனாரது அன்பை வைரவர் பார்த்து நண்பு மிக்க அன்பரே! நாம் உண்ணுதற்குத் கொல்லும் பசு நரப்பசுவாம்; அது ஐந்து பிராயத்ததாயும்

அவயவப்பழு தில்லாததாயு மிருந்தால் உண்பதாகும்; நோயைச் செய்கின்ற புண்ணில் வேலெறிந்தாற்போலச் சொல்ல வேண்டுவது இன்னம் ஒன்றுளதென்று கூறியருளினார். - எ - று.

**"யாதும் அரிய தில்லைஇனி ஈண்ட அருளிச் செய்யும்" என**
**நாதன் தானும் "ஒருகுடிக்கு நல்ல சிறுவன் ஒருமகனைத்**
**தாதை அரியத் தாய்பிடிக்கும் பொழுதில் தம்மில் மனமுவந்தே**
**ஏதம் இன்றி அமைத்தகறி யாம்இட் டுண்ப(து)" எனமொழிந்தார். 51**

(இ - ள்.) (அதற்குச் சிறுத்தொண்டநாயனார்) அரியது யாதுமில்லை; இனி இப்பொழுதே அருளிச் செய்யுமென்று கூற, சிவபெருமானும் ஒரு குடிக்கு நல்ல சிறுவனாகிய ஒரு மகனைத் தாய்பிடிக்கத் தந்தை யரியும்பொழுது தங்களுக்குள் மனமகிழ்ந்து சிறிதுங் குற்றமின்றிச் சமைக்கப்பட்ட கறியினையே யாம் வைத்துப் புசிப்பது என்று கூறியருளினார். - எ - று.

**அதுவும் முனைவர் மொழிந்தருளக் கேட்ட தொண்டர் "அடியேனுக்(கு),**
**இதுவும் அரிதன்(று) எம்பெருமான்! அமுது செய்யப் பெறில்" என்று,**
**கதுமென் விரைவில் அவர்இசையப் பெற்றுக் களிப்பாற் காதலொடு,**
**மதுமென் கமல மலர்ப்பாதம் பணிந்து மனையில் வந்தணைந்தார். 52**

(இ - ள்.) அதனையும் சிவபெருமானாகிய வைரவர் கூறியருளக் கேட்ட சிறுத்தொண்டநாயனார், எம்பெருமானே! தேவரீர் திருவமுது செய்யப் பெற்றால், அடியேனுக்கு இதுவும் அருமையல்லவென்று கூறி மிக்கவிரைவில் அவர் சம்மதம் பெற்று மனக்களிப்போடு தேன்பொருந்திய மெல்லிய தாமரை மலர் போன்ற திருவடிகளை அன்புடன் வணங்கி, தமது திருமாளிகைக்கு வந்து சேர்ந்தார். - எ - று.

**அன்பு மிக்க பெருங்கற்பின் அணங்கு திருவெண் காட்டம்மை**
**முன்பு வந்து சிறுத்தொண்டர் வரவு நோக்கி முன்னின்றே**
**இன்பம் பெருக மலர்ந்தமுகங் கண்டு பாத மிசைஇறைஞ்சிப்**
**பின்பு கணவர் முகநோக்கிப் பெருகுந் தவத்தோர் செயல்வினவ. 53**

(இ - ள்.) அன்பிற் சிறந்த பெரிய கற்பினையுடைய தெய்வப் பெண்ணை யொத்த (மனைவியாகிய) திருவெண்காட்டம்மையார் முன்பு வந்து சிறுத் தொண்டநாயனாரது வருகையை எதிர்நோக்கி முன்னே நின்று, இன்பமிகும்படி மலர்ந்த திருமுகத்தைப் பார்த்து, அவரது திருவடிகளில் வணங்கி, பின்பு தங்கணவனாரது திருமுகத்தைப் பார்த்து மிக்க தவத்தினை யுடைய வைரவரது செய்கையை வினாவ. - எ - று.

***வள்ள லாரும் மனையாரை நோக்கி "வந்த மாதவர்தாம்***
***உள்ளம் மகிழ அமுதுசெய இசைந்தார் குடிக்கோர் சிறுவனுமாய்க்***
***கொள்ளும் பிராயம் ஐந்துளனாய் உறுப்பிற் குறைபா டின்றித்தாய்***
***பிள்ளை பிடிக்க உவந்துபிதா அரிந்து சமைக்கப் பெறின்" என்றார். 54***

(இ - ள்.) சிறுத்தொண்டநாயனாரும் தமது மனைவியாரைப் பார்த்து, வந்த வைரவர் ஒரு குடிக்கு ஒரே சிறுவனாகி ஐந்து பிராயமுடையனாய்ச் சிறிதும் அவயவப் பழுதில்லாமல், தாய் பிள்ளையைப் பிடிக்க, தந்தை மனமகிழ்ந்து அரிந்து சமைக்கப் பெற்றால், மனமகிழும்படி திருவமுது செய்ய உடன்பட்டனர் என்று கூறினார். - எ - று.

***அரிய கற்பின் மனைவியார் அவரை நோக்கி உரை செய்வார்***
***"பெரிய பயிர வத்தொண்டர் அமுது செய்யப் பெறுவதற்கிங்(கு)***
***உரிய வகையால் அமுதமைப்போம்; ஒருவ னாகி ஒருகுடிக்கு***
***வருமச்சிறுவன் தனைப்பெறுமா றெவ்வா(று)?" என்று வணங்குதலும். 55***

(இ - ள்.) (அப்பொழுது) அருமையாகிய கற்பினையுடைய மனைவியார் அந்நாயனாரைப் பார்த்துக் கூறுவார்; சிறந்த வைரவவேடங்கொண்டு வந்து அடியவர் திருவமுது செய்யப் பெறுவதற்கு உரிய முறைமைப்படி திருவமுது சமைப்போம்; ஆனால், ஒரு குடிக்கு ஒருவனாகப் பிறந்த சிறுவனைப் பெறுவது எவ்வாறு என்று கூறி வணங்கவும். - எ - று.

***மனைவி யார்தம் முகநோக்கி "மற்றித் திறத்து மைந்தர்தமை***
***நினைவு நிரம்ப நிதிகொடுத்தால் தருவா ருளரே? நேர்நின்று***
***தனையன் தன்னைத் தந்தைதாய் அரிவார் இல்லைத் தாழர்தே***
***எனைஇங் குய்ய நீபயந்தான் தன்னை அழைப்போ மியாம்" என்றார். 56***

(இ - ள்.) அவ்வாறு கூறிய மனைவியாரது முகத்தை நாயனார் பார்த்து; இத்தன்மையாகிய சிறுவர்களை ஆசை நிரம்பத் திரவியங்கொடுத்தால் தருபவருளரோ? (அப்படி தரினும்) எதிரில் நின்று அச்சிறுவனை அரியத் துணியுந் தந்தை தாயரோ இல்லை; ஆதலால் இனிக் காலந் தாழ்க்காமல், இங்கு யானுய்யும்படி நீ பெற்ற சீராளனை நாம் அழைப்போமென்று கூறினார். - எ - று.

**என்று கணவர் கூறுதலும் அதனுக் கிசைந் "தெம் பிரான்தொண்டர்
இன்று தாழா தமுதுசெய்யப் பெற்றிங் கவர்தம் மலர்ந்தமுகம்
நன்று காண்ப" தென நயந்து "நம்மைக் காக்க வருமணியைச்
சென்று பள்ளி யினிற்கொண்டு வாரும்" என்றார் திருவனையார். 57**

(இ - ள்.) இவ்வாறு நாயகராகிய திருத்தொண்டநாயனார் சொல்லவும், அதற்கு இலட்சுமிபோலும் பேரழகினையுடைய திருவெண்காட்டு நங்கையார் உடன்பட்டு எமது சிவபெருமான் திருத்தொண்டராகிய வைரவர் இன்று தாழ்க்காமல் திருவமுது செய்யப் பெற்று இங்கு அவரது சந்தோஷமுகத்தை இனிது காண்பதே தக்கதென்று விரும்பி நம்மைக் காக்கும்பொருட்டு அவதரித்தபுதல்வனைப் பள்ளிக்கூடத்துக்குச் சென்று அழைத் துக் கொண்டு வாருமென்று கூறினார். - எ - று.

**காதல் மனையார் தாங்கூறக் கணவ னாருங் காதலனை
ஏதம் அகலப் பெற்றபே றெல்லாம்எய்தி னார்போல
நாதர் தமக்கங் கமுதாக்க நறுமென் குதலை மொழிப்புதலவன்
ஓத அணைந்த பள்ளியினில் உடன்கொண் டெய்தக் கடிதகன்றார். 58**

(இ - ள்.) இவ்வாறு விருப்பமிக்க மனைவியார் கூற, நாயகராகிய சிறுத்தொண்டநாயனாரும், பிறவித் துன்ப நீங்கப் புத்திரனைப் பெற்ற பேறனைத்தும் அடைந்தவர்போல, சிவபெருமானுக்கு அமுது சமைக்கும்படி நல்லமிருதுவாகிய மழலைச் சொல்லையுடைய புத்திரராகிய சீராளதேவர் வாசிக்கச் சென்ற பள்ளிக் கூடத்தினின்றும் உடனே அழைத்துக் கொண்டுவர, விரைந்து சென்றார். - எ - று.

**பள்ளி யினிற்சென் றெய்துதலும் பாதச் சதங்கை மணியொலிப்பப்
பிள்ளை ஓடி வந்தெதிரே தழுவ எடுத்துப் பியலின்மேல்
கொள்ள அணைத்துக் கொண்டுமீண் டில்லம் புகுதக் குலமாதர்
வள்ள லார்தம் முன்சென்று மைந்தன் தன்னை எதிர்வாங்கி. 59**

(இ - ள்.) (பியல்-பிடர்) (நாயனார்) பள்ளிக் கூடத்தில் சென்றடையவும், பாதசதங்கையிலுள்ள மணிகள் சப்திக்கும்படி புத்திரராகிய சீராளதேவர் எதிரே யோடி வந்து தழுவிக் கொள்ள, அவரை யெடுத்துத் தோள்மேல் வைத்ததணைத்துக் கொண்டு திரும்பித் தமது திருமாளிகைக்கு வர, திருவெண் காட்டு நங்கையார் சிறுத்தொண்டநாயனாருக்கு முன்சென்று தம்புதல்வரை எதிரில் வாங்கி. - எ - று.

**குஞ்சி திருத்தி முகந்துடைத்துக் கொட்டை அரைநாண் துகள்நீக்கி**
**மஞ்சள் அழிந்த அதற்கிரங்கி மையுங் கண்ணின் மருங்கொதுக்கிப்**
**பஞ்சி அஞ்சும் மெல்லடியார் பரிந்து திருமஞ் சனமாட்டி**
**எஞ்சல் இல்லாக் கோலஞ்செய் தெடுத்துக் கணவர் கைகொடுத்தார். 60**

(இ - ள்.) பஞ்சும் அஞ்சத்தக்க மிருதுவாகிய பாதங்களை யுடைய திருவெண்காட்டு நங்கையார், (அப் புதல்வரது) தலை மயிரைத் திருத்தி, முகத்தைத் துடைத்து, அரைச்சலங்கை கோத்த அரைஞாணிற் படிந்த துகளை நீக்கி, கலவைச்சேறு கரைந் தழிந்ததற்கு இரக்கமுற்று, மையையுங் கண்ணினோரத்தில் ஒதுக்கித் திருத்தி, விரும்பித் திருமஞ்சனமாட்டி, குறைவில்லாத கோலஞ்செய்து எடுத்துத்த மது கணவனார் கையில் கொடுத் தார்.- எ - று.

**அச்சம் எய்திக் கறியமுதாம் என்னும் அதனால் அரும்புதல்வன்**
**உச்சி மோவார் மார்பின்கண் அணைத்தே முத்தந் தாமுண்ணார்**
**பொச்சம் இல்லாத திருத்தொண்டர் புனிதர் தமக்குக் கறி அமைக்க**
**மெச்சு மனத்தால் அடுக்களையின் மேவார் வேறு கொண்டணைவார். 61**

(இ - ள்.) மெய்யன்புடைய சிறுத்தொண்டநாயனார் அச்சங்கொண்டு, இது கறியமுதாமென்னுங் கருத்தினால் அருமையாகிய புதல்வரது உச்சியை மோவார்; மார்பில் அணைத்து முத்தமுண்ணார்; சிவபெருமானாகிய வைரவருக் குக் கறியமைப்பதற்கு விரும்பிய மனதோடும் சமையல் வீட்டில் செல்லாமல் வேறிடத்திற் கொண்டு சென்றார். - எ - று.

**ஒன்று மனத்தார் இருவர்களும் 'உலகர் அறியார்' எனமறைவில்**
**சென்று புக்குப் பிள்ளைதனைப் பெற்ற தாயார் செழுங்கலங்கள்**
**நன்று கழுவிக் கொடுசெல்ல நல்ல மகனை எடுத்துலகை**
**வென்ற தாதை யார்தலையைப் பிடிக்க விரைந்து மெய்த்தாயர். 62**

(இ - ள்.) ஒற்றுமைப்பட்ட மனமுடைய தாய்தந்தையர்க ளிருவரும், உலகத்தவர்களறியாரென்று மறைவிடத்திற் சென்றடைந்து, புதல்வரைப் பெற்ற தாயாகிய திருவெண்காட்டு நங்கையார் செழிய பாத்திரங்களைக் கழுவிக் கொண்டுவர, உலகவாசையையொழிந்த தந்தையாராகிய சிறுத்தொண்ட நாயனார் தமது சிறந்த புதல்வரை யெடுத்து அவருடைய தலையைப் பிடிக்க, பெற்ற தாய் விரைந்து. - எ - று.

***இனிய மழலைக் கிண்கிணிக்கால் இரண்டும் மடியின் புடைஇடுக்கிக்***
***கனிவாய் மைந்தன் கையிரண்டும் கையாற் பிடிக்கக் காதலனும்***
***'நனிநீ டுவகை யுறுகின்றார்' என்று மகிழ்ந்து நகைசெய்யத்***
***தனிமா மகனைத் தாதையார் கருவி கொண்டு தலையரிவார். 63***

(இ - ள்.) இனிமையாகிய புதல்வரது சதங்கையணிந்த இரண்டு கால்களையும் தம்முடைய மடியில் இடுக்கி, கொவ்வைக்கனி போன்ற சிவந்த வாயினையுடைய அப்புதல்வரது இரண்டு கைகளையுந் தமது கைகளினாலே பிடிக்க, அப் புதல்வரும், (தம்முடைய தாய்தந்தையர்கள்) மிக்க மகிழ்வடைகின்றன ரென்று, மகிழ்ந்து நகைசெய்ய, ஒப்பற்ற சிறந்த தமது புதல்வரைத் தந்தையாராகிய சிறுத்தொண்டநாயனார் ஆயுதத்தை யெடுத்துத் தலையை யரிவாராயினார். - எ - று.

***'பொருவில் பெருமைப் புத்திரமெய்த் தன்மை அளித்தான்' எனப்பொலிந்து,***
***மருவு மகிழ்ச்சி எய்தஅவர் மனைவி யாருங் "கணவனார்,***
***அருமை உயிரை எனக்களித்தான்" என்று மிகவும் அகமலர இருவர்***
***மனமும் பேருவகை எய்தி அரிய வினைசெய்தார். 64***

(இ - ள்.) ஒப்பற்ற பெருமையையுடைய தமது புதல்வன் மெய்ம்மைத் தன்மையை யளித்தானென்று பூரித்து மிக்க மகிழ்ச்சியடைய, அவரது மனைவியாராகிய திருவெண்காட்டு நங்கையாருந் தங்கணவனாரது அருமையாகிய உயிரை எனக்குக் கொடுத்தானென்று மிகவும் மனமகிழ்ச்சியடைய, இவ்வாறு தாய்தந்தையர்களாகிய இருவரது மனமும் பெருங்களிப் படைந்து (தலையை யரிதலாகிய) அரிய செய்கையைச் செய்தார்கள். - எ - று.

***"அறுத்த தலையின் இறைச்சிதிரு வமுதுக் காகா" தெனக் கழித்து***
***மறைத்து நீக்கச் சந்தனத்தார் கையிற் கொடுத்து மற்றைஉறுப்(பு)***
***இறைச்சி எல்லாங் கொத்திஅறுத் தெலும்பு மூளை திறந்திட்டுக்***
***கறிக்கு வேண்டும் பலகாயம் அரைத்துக் கூட்டிக் கடிதமைப்பார். 65***

(இ - ள்.) (திருவெண்காட்டுநங்கையார்) அறுத்த தலை இறைச்சியானது திருவமுதுக்கு உதவாது என்று கழித்து, அதனை மறைத்து நீக்கும் பொருட்டுச் சந்தன நங்கையார் கையிற் கொடுத்து, மற்றைய உறுப்புக்களின் இறைச்சிகளெல்லாவற்றையும் அறுத்துக் கொத்தி எலும்புகளையும் மூளைகளையும் வெட்டித் திறந்து, கறிக்கு வேண்டிய பல காய்வர்க்கங்களை அரைத்துக் கூட்டி விரைவில் சமைப்பாரானார் - எ - று.

***மட்டு விரிபூங் குழல்மடவார் அடுப்பில் ஏற்றி மனமகிழ்ந்தே***
***அட்ட கறியின் பதம்அறிந்தங் கிழிச்சி வேறோர் அருங்கலத்துப்***
***பட்ட நறையால் தாளித்துப் பலவும் மற்றுங் கறிசமைத்துச்***
***சட்ட விரைந்து போனகமும் சமைத்துக் கணவர் தமக்குரைத்தார். 66***

(இ - ள்.) தேனொழுகுகின்ற (மலரையணிந்த) கூந்தலை யுடைய திருவெண்காட்டுநங்கையார் மனமகிழ்ந்து அடுப்பில் வைத்துச் சமைத்த கறியின் பாகமறிந்து இறக்கி, வேறொரு சிறந்த பாத்திரத்தில், பொருந்திய மணமாகத் தாளித்து, பலவகை யாகிய வெவ்வேறு கறிகளுஞ் சமைத்து, மிகவிரைந்து சோறுஞ் சமைத்துக் கொண்டு தமது கணவனாருக்குத் தெரிவித்தார். - எ - று.

***உடைய நாதர் அமுதுசெய உரைத்த படியே அமைத்தவதற்***
***கடையும் இன்பம் முன்னையிலும் ஆர்வம் பெருகிக் களிகூர***
***விடையில் வருவார் தொண்டர்தாம் விரைந்து சென்று மென்மலரின்***
***புடைவண் டறையும் ஆத்தியின் கீழ் இருந்த புனிதர் முன்சென்றார். 67***

(இ - ள்.) தம்மை அடிமையாகவுடைய வைரவமூர்த்தியார் அமுதுசெய்யும்படி யுரைத்த முறைமையாகவே சமைத்ததற் காகப் பொருந்திய இன்பமானது முன்னையினும் அதிகமாகப் பெருகிக் களிப்பு மிக, இடபவாகனத்தி லெழுந்தருளுஞ் சிவபெருமானது திருத்தொண்டராகிய சிறுத்தொண்டநாய னார் விரைவாகப் போய், மிருதுவாகிய மலர்களில் வண்டுகள் சப்திக்கின்ற திருவாத்தி விருட்சத்தின் கீழ் எழுந்தருளிய வைரவர்முன்னே யடைந்தார். - எ - று.

***அண்ணல் திருமுன்(பு) அணைந்திறைஞ்சி அன்பர் மொழிவார் "அடியேன்பால்,***
***நண்ணி நீரிங் கமுதுசெய வேண்டும் என்று நான் பரிவு,***
***பண்ணி னேனாய்ப் பசித்தருளத் தாழ்த்த தெனினும் பணி சமைத்தேன்;,***
***எண்ணம் வாய்ப்ப எழுந்தருள வேண்டும்" என்றங் கெடுத்துரைப்பார். 68***

(இ - ள்.) மெய்யன்பராகிய சிறுத்தொண்டநாயனார் வைரவமூர்த்தியினது திருமுன்னே யடைந்து வணங்கிக் கூறுவார், சுவாமீ! தேவரீர் அடியேனிடத்தில் எழுந்தருளித் திருவமுது செய்ய வேண்டுமென்று நான் உபசரித்தவனாய்த்

தேவரீர் பசித்தருளும்படி காலதாமதமாயிற்றெனினும் கட்டளைப்படி அமுது சமைத்தேன்; அடியேனது எண்ணம் முற்றுப் பெறும்படி (எனது வீட்டிற்கு) எழுந்தருள வேண்டு மென்று எடுத்துக் கூறினார். - எ - று.

**"இறையுந் தாழா தெழுந்தருளி அமுது செய்யும்" என்றிறைஞ்சக்,**
**கறையும் கண்டத் தினில்மறைத்துக் கண்ணும் நுதலிற் காட்டாதார்,**
**"நிறையும் பெருமைச் சிறுத்தொண்டீர்! போதும்" என்ன நிதி இரண்டும்,**
**குறைவன் ஒருவன் பெற்(று)உவந்தாற் போலக் கொண்டு**
**மனைபுகுந்தார். 69**

(இ - ள்.) சிறிதுங் காலந் தாழ்க்காமல் எனது வீட்டிற் கெழுந்தருளி அமுது செய்தருளுமென்று வணங்கி, விஷத்தைக் கண்டத்தில் மறைத்து நெற்றிக் கண்ணையு மறைத்து வந்தருளிய சிவபெருமானாகிய வைரவர், நிறைந்த பெருமையையுடைய சிறுத்தொண்டரே! வாரும் என்று கூறி யெழுந்தருள, (அந்நாயனார்) ஒரு தரித்திரன் இருவகை நிதிகளையும் பெற்று வருவது போல அவரை யழைத்துக் கொண்டு தமது திருமாளிகைக்கு வந்தனர். - எ - று.

**வந்து புகுந்து திருமனையில் மனைவி யார்தாம் மாதவரை**
**முந்த எதிர்சென் றடிவணங்கி முழுதும் அழகு செய்தமனைச்**
**சந்த மலர்மா லைகள்முத்தின் தாமம் நாற்றித் தவிசடுத்த**
**கந்த மலர்ஆ சனங்காட்டிக் கமழ்நீர்க் கரகம் எடுத்தேந்த. 70**

(இ - ள்.) இவ்வாறு தமது திருமாளிகைக்கு வந்து சேர, அவரது மனைவியாராகிய திருவெண்காட்டு நங்கையார் தவமுனிவராகிய வைரவரை முன்னே எதிர்கொண்டு சென்று திருவடிகளில் வணங்கி, முழுதும் அலங்கரித்த திருமாளிகையில் அழகிய மலர்மாலைகளும் முத்துமாலைகளுந் தொங்கவிட்டுத் தவிசின்மேலிட்ட மணம் பொருந்திய மலர்ப்பீடத்தி லெழுந் தருளச் செய்து, நறுமணங் கமழும் நீரையுடைய கலசத்தை எடுத்து ஏந்த. - எ - று.

**தூய நீரால் சிறுத்தொண்டர் சோதி யார்தங் கழல்விளங்கி**
**ஆய புனிதப் புனல்தங்கள் தலைமேல் ஆரத் தெளித்தின்பம்**
**மேய இல்லம் எம்மருங்கும் வீசி விரைமென் மலர்சாந்தம்**
**ஏயுந் தூப தீபங்கள் முதற்பூ சனைசெய் திறைஞ்சவார். 71**

(இ - ள்.) சிறுத்தொண்டநாயனார் தூய்மையாகிய அக் கலசநீரினால் சிவபெருமானாகிய வைரவரது திருவடிகளை விளக்கி, பரிசுத்தம் பொருந்திய அந்தத் தீர்த்தத்தைத் தங்கள் சிரசின்மேலே தெளித்து, இன்பமிக்க திருமாளிகை முழுதுந் தெளித்து, மணம் பொருந்திய மிருதுவாகிய மலரும், சந்தனமும், பொருந்திய தூப தீபங்களும் முதலாகிய பூசை செய்து வணங்குவாராயினார். - எ - று.

***பனிவெண் டிங்கள் சடைவிரித்த பயில்பூங் குஞ்சிப் பயிரவராம்***
***புனிதர் தம்மைப் போனகமும் கறியும் படைக்கும் படிபொற்பின்***
***வனிதை யாருங் கணவரும்முன் வணங்கிக் கேட்ப மற்றவர்தாம்***
***“இனிய அன்ன முடன்கறிகள் எல்லாம் ஒக்கப் படைக்க” என. 72***

(இ - ள்.) குளிர்ந்த வெண்பிறை யணிந்த சடையை விளங்குகின்ற தும்பை மலரை யணிந்த மயிர் முடியாக விரித்த வைரவராகிய சிவபெருமானை அழகிய திருவெண்காட்டு நங்கையாருஞ் சிறுத்தொண்ட நாயனாரும் வணங்கி, அன்னமுங் கறியும் படைக்கும் வகை எப்படியென்று கேட்க, அவ்வைரவர், இனிய அன்னத்துடன் கறிகளை யெல்லாம் ஒருங்கே படைக்க வேண்டுமென்று கூறியருள. - எ - று.

***பரிசு விளங்கப் பரிகலமும் திருத்திப் பாவா டையில் ஏற்றித்***
***தெரியும் வண்ணஞ் செஞ்சாலிச் செழும்போ னகமும் கறியமுதும்***
***வரிசை யினில்முன் படைத்தெடுத்து மன்னும் பரிக லக்கான்மேல்***
***விரிவெண் துகிலின் மிசைவைக்க விமலர் பார்த்தங் கருள்செய்வார். 73***

(இ - ள்.) (தங்களுடைய) அன்பின் தன்மை விளங்கப் பரிகலந்திருப் பாவாடையின் மேலிட்டு, விளங்கும்படி செந்நெலரிசிச் சாதமும் கறியமுதும் முன்னே வரிசையாகப் படைத்து, பொருந்திய பரிகலப்பீடத்தின்மேல் விரிந்த வெள்ளை வஸ்திரத்தின்மீது எடுத்து வைக்க வைரவர் அதனைப் பார்த்து அருளிச் செய்வார். - எ - று.

***“சொன்ன முறையிற் படுத்துபசுத் தொடர்ந்த உறுப்பெல் லாங் கொண்டு,***
***மன்னு சுவையிற் கறியாக்கி மாண அமைத்தீரே?”, என்ன***
***அன்னம் அனையார் “தலையிறைச்சி அமுதுக்காகா***
***தெனக்கழித்தோம்”,***
***என்ன “அதுவுங் கூடநாம் உண்ப” தென்றார் இடர்தீர்ப்பார். 74***

(இ - ள்.) நாம் சொன்ன முறைமைப்படியே கொன்ற பசுவினது தொடர்ந்த உறுப்புகளனைத்து மெடுத்து, பொருந்திய சுவையோடு சமைத்து மாட்சிமையாகப் படைத்தீரோ? வென்று வினாவ, அன்னம்போலு நடையினையுடைய திருவெண்காட்டு நங்கையார் தலையிறைச்சி மாத்திரம் திருவமுதுக்கு உதவா தென்று கழித்துவிட்டோமென்று கூற, இவர்களது பிறவித் துன்பத்தை யொழிக்க வந்தருளிய வைரவமூர்த்தியார் அதுவும் நாம் உண்பதுதான் என்று கூறியருளினார். - எ - று.

***சிந்தை கலங்கிச் சிறுத்தொண்டர் மனையா ரோடுந் திகைத்தயரச்***
***சந்த னத்தார் எனுந்தாதி யார்தாம் "அந்தந் தலையிறைச்சி***
***வந்த தொண்டர் அமுதுசெயும் பொழுது நினைக்க வரும்என்றே***
***முந்த அமைத்தேன் கறிஅமு(து)" என் றெடுத்துக் கொடுக்க முக***
***மலர்ந்தார். 75***

(இ - ள்.) (அதுகேட்டுச்) சிறுத்தொண்டநாயனார் தம் மனைவியாரோடும் மனங் கலங்கித் திகைத்துச் சோர்வடைய, (அப்பொழுது) சந்தனநங்கையாரென்னுந் தாதியார் அந்தத் தலையிறைச்சியை இங்கு வந்தருளிய வைரவர் திருவமுது செய்யும்பொழுது நினைக்கவேண்டி வருமென்று கருதி, முன்னமே சமைத்து வைத்தே னென்று அதனையெடுத்துக் கொடுக்க முகமலர்ச்சியடைந்தார்கள். - எ - று.

***வாங்கி மகிழ்ந்து படைத்ததற்பின் வணங்குஞ் சிறுத்தொண்டரை***
***நோக்கி,***
***"ஈங்கு நமக்குத் தனியுண்ண ஒண்ணா தீசன் அடியார்இப்,***
***பாங்கு நின்றார் தமைக்கொணர்வீர்" என்று பரமர் பணித்தருள,***
***ஏங்கிக் "கெட்டேன் அமுது செய்ய இடையூ றிதுவோ?" என***
***நினைவார். 76***

(இ - ள்.) அதனை வாங்கிச் சந்தோஷித்துப் படைத்தபின்பு, சிவபெருமானாகிய வைரவர் தம்மை வணங்குகின்ற சிறுத் தொண்டநாயனாரைப் பார்த்து, இங்கு நாம் தனியே உண்ணக் கூடாது; இப்பக்கங்களிலுள்ள சிவனடியார்களை யழைத்து வாருமென்று கூறியருள, (நாயனார் அதைக்கேட்டு) ஏக்கமுற்று, ஐயோ! கெட்டேன் (இவ்வடியவர்) திருவமுது செய்வதற்கு இதுதான் இடையூறுபோலுமென்று சிந்திப்பாராயினார். - எ - று.

***அகத்தின் புறத்துப் போய்அருளால் எங்குங் காணார் அழிந்தணைந்து***
***முகத்தில் வாட்டம் மிகப்பெருகப் பணிந்து முதல்வர்க் குரைசெய்வார்***
***"இகத்தும் பரத்தும் இனியாரைக் காணேன்; யானுந் திருநீறு***
***சகத்தில்இடுவர் தமைக்கண்டே இடுவேன்" என்று தாழ்ந்திறைஞ்ச. 77***

(இ - ள்.) தமது திருமாளிகையின் புறத்திலே சென்று, சிவபெருமான் திருவருளினால் அடியார்களை யெங்குங்காணா தவராய் மனம் வருந்தித் திரும்பி வந்து முகத்தில் மிக்க வாட்ட முண்டாக வைரவரை வணங்கிக் கூறுவார்; இம்மை மறுமை யென்னு மிரண்டிற்கும் நன்மையைத் தரத்தக்கவர்களாகிய சிவனடியார்களைக் காணேன்; உலகத்தில் திருவெண்ணீறு அணிபவர்களைக் கண்டு அடியேனும் அணிவேனென்று தாழ்ந்து வணங்கி விண்ணப்பஞ்செய்ய. - எ - று.

***"உம்மைப் போல நீறிட்டார் உளரோ? உண்பீர் நீர்" என்று***
***செம்மைக் கற்பில் திருவெண்காட் டம்மை தம்மைக் "கலந்திருத்தி***
***வெம்மை இறைச்சி சோறிதனில் மீட்டுப்படையும்" எனப்படைத்தார்***
***தம்மை ஊட்ட வேண்டிஅவர் உண்ணப் புகலுந் தடுத்தருளி. 78***

(இ - ள்.) (அதற்கு வைரவர் சிறுத்தொண்ட நாயனாரைப் பார்த்து) உம்மைப் போலத் திருநீறு தரித்தவர்கள் வேறுளரோ? நீரே உடனிருந்து உண்ணுவீரென்று கூறியருளி, சிறந்த கற்பினை யுடைய திருவெண்காட்டு நங்கையாரை நோக்கி, வேறு பரிகலந் திருத்திச் சூடாகிய இறைச்சியையும் அன்னத்தையும் (நமக்குப் படைத்த) இதனில் எடுத்துப் படையுமென் றருளிச் செய்ய, அவரும் அப்படியே எடுத்துப் படைத்தார்; நாயனார், வைரவரை ஊட்ட வேண்டித் தாம் முன்பு உண்ணத் தொடங்க வும் வைரவர் அதனைத் தடுத்தருளி. - எ - று.

***"ஆறு திங்கள் ஒழிந்துண்போம் உண்ணும் அளவுந் தரியாது***
***சோறு நாளும் உண்பீர்முன் உண்ப தென்?நம் முடன்துய்ப்ப***
***மாறின் மகவு பெற்றீரேல்மைந்தன் தன்னை அழையும்" என***
***ஈறும் முதலும் இல்லாதார்க்(கு) "இப்போதுதவான் அவன்" என்றார். 79***

(இ - ள்.) ஆறுமாதங் கழித்து ஒருமுறை உண்ணுகின்ற நாம் உண்ணும் வரையில் தரியாமல், தினந்தோறுஞ் சோறுண்ணு கின்ற நீர் முன்னே யுண்பது யாது காரணம்; நம்முடன் உண்ணும் பொருட்டுக் குற்றமற்ற புத்திரனைப் பெற்றிருப்பீராயின் அப்புதல்வனை யழையுமென்று கூறியருள, (நாயனார்) முதலு முடிவுமில்லாத சிவபெருமானாகிய வைரவரைப் பார்த்து, அவன் இப்போது உதவானென்று கூறினார். - எ - று.

***"நாமிங் குண்ப தவன்வந்தால் நாடி அழையும்" என நம்பர்***
***தாமங் கருளிச் செயத்தரியார் "தலைவர் அமுது செய்தருள***
***யாமிங் கென்செய் தாலாகும்?" என்பார் விரைவுற் றெழுந்தருளால்***
***பூமென் குழலார் தம்மோடு புறம்போய் அழைக்கப் புகும்பொழுது. 80***

(இ - ள்.) அதற்கு வைரவர், அவன் வந்தால்தான் நாம் இங்கு அமுதுண்பது, ஆதலால் அவனைத் தேடி யழையுமென்று கூறி யருள, நாயனார் மனந் தரியாமல், இவ் வைரவர் திருவமுது செய் தருளுதற்கு நாம் யாது செய்தால் ஆகுமென்று கருதினவராய் விரைந்தெழுந்து, திருவருளினால், மலர்களை யணிந்த மிருது வாகிய கூந்தலையுடைய தமது மனைவியாரோடுந் திருமாளிகை யின் புறத்தில் வந்து அழைக்கத் தொடங்கும் பொழுது. - எ - று.

***வையம் நிகழுஞ் சிறுத்தொண்டர் "மைந்தா! வருவாய்",***
***என அழைத்தார்; தையலாரும் தலைவர்பணி தலைநிற் பாராய்த்,***
***தாம் அழைப்பார்;, "செய்ய மணியே! சீராளா! வாராய் சிவனடியார் அடியார் யாம்,***
***உய்யும் வகையால் உடனுண்ண அழைக்கின்றார்" என் றோலமிட. 81***

(இ - ள்.) உலகத்தில் சிறந்து விளங்குகின்ற சிறுத்தொண்ட நாயனார், மைந்தனே! நீ வருவாயாக வென்று அழைத்தார்; மனைவியாரும் தமது நாயகனுடைய பணியில் முதன்மையாக நிற்பவராய் அழைக்கின்றாய்; சிவந்த மாணிக்கம் போல்பவனே! சீராளதேவா! சிவனடியவராகிய வைரவர் நாங்களுய்யும் பொருட்டு உடனுண்ணும்படி உன்னை யழைக்கின்றார்; நீ வருவாயாக, என்று ஓலமிட்டழைக்க. - எ - று.

***பரமர் அருளால் பள்ளியினின் றோடி வருவான்போல் வந்த,***
***தரமில் வனப்பில் தனிப்புதல்வன் தன்னை எடுத்துத் தழுவித்தங்,***
***கரமுன் அணைத்துக் கணவனார் கையிற் கொடுப்பக் களிகூர்ந்தார்,***
***"புரமூன் றெரித்தார் திருத்தொண்டர் உண்ணப் பெற்றோம்" எனும்பொலிவால். 82***

(இ - ள்.) (அப்பொழுது) சிவபெருமானது திருவருளினால் பள்ளிக்கூடத்தினின்றும் வருகின்றவர் போல ஓடிவந்த ஒப்பற்ற பேரழிகினையுடைய புதல்வரைத் தாயார் எடுத்துத் தழுவித் தமது திருக்கரத்தினால் முன்னே யணைத்துத் தங்கணவனாரது கையில் கொடுக்க, அவர், திரிபுர தகனராகிய சிவபெருமானது அடியவராகிய வைரவர் திருவமுது செய்தருளப் பெற்றோ மென்னுங் களிப்பினால் மனமகிழ்ச்சியடைந்தார். - எ - று

**வந்த மகனைக் கடிதிற்கொண் டமுது செய்விப் பான்வந்தார்**
**முந்த வேஅப் பயிரவராம் முதல்வர் அங்கண் மறைந்தருளச்**
**சிந்தை கலங்கிக் காணாது திகைத்தார் வீழ்ந்தார் தெருமந்தார்**
**வெந்த இறைஞ்சிக் கறியமுதும் கலத்திற் காணார் வெருவுற்றார். 83**

(இ - ள்.) அவ்வாறு வந்த புதல்வரை விரைந்தெடுத்துக் கொண்டு, வைரவரைத் திருவமுது செய்விக்கும் பொருட்டு உள்ளே வந்தனர்; அதற்கு முன்னமே அவ்வைரவராகிய சிவபெருமான் அங்கு மறைந்தருள, நாயனார் அவரைக் காணாமல் சிந்தை கலங்கித் திகைத்தார்; நிலமுற விழுந்தார். மனக் கலக்க முற்றார்; பரிகலத்தில் வெந்த இறைச்சிக் கறியமுதைக் காணாமல் அச்சங் கொண்டார். - எ - று.

**"செய்ய மேனிக் கருங்குஞ்சிச் செழுங்கஞ் சுகத்துப் பயிரவர்யாம்**
**உய்யஅமுது செய்யாதே ஒளித்ததெங்கே?" எனத்தேடி**
**மையல் கொண்டு புறத்தனைய மறைந்த அவர்தாம் மலைபயந்த**
**தைய லோடுஞ் சரவணத்துத் தனய ரோடுந் தாம் அனைவார். 84**

(இ - ள்.) சிவந்த திருமேனியையும் கரிய தலைமயிரையும் செழிய மேற்போர்வையையுடைய வைரவர் நாங்கள் உய்யும் பொருட்டு திருவமுது செய்யாமல், எங்கு ஒளித்தனரோ வென்று தேடி மயக்கங்கொண்டு வெளியில்வர, மறைந்தருளிய வைரவராகிய சிவபெருமான் பர்வதராஜபுத்திரியாகிய உமாதேவியாரோடும் சரவணப் பொய்கையில் அவதரித்தருளிய சுப்பிரமணியரோடும் எழுந்தருளுவாராயினார். - எ - று.

**தனிவெள் விடைமேல் நெடுவிசும்பில் தலைவர் பூத கணநாதர்**
**முனிவர் அமரர் விஞ்சையர்கள் முதலா யுள்ளோர் போற்றிசைப்ப**
**இனிய கறியும் திருவமுதும் அமைத்தார் காண எழுந்தருளிப்**
**பனிவெண் டிங்கள் முடிதுளங்கப் பரந்த கருணை நோக்களித்தார். 85**

(இ - ள்.) பூதகணநாதர்கள் முனிவர்கள் அரிபரமேந்திராதி தேவர்கள், வித்தியாதரர் முதலானவர்கள் சூழ்ந்து துதிக்க உயர்ந்த ஆகாயத்திலே ஒப்பற்ற வெள்ளிய இடபவாகனத்தின் மேல் இனிய கறியையும் திருவமுதையும் சமைத்த இவர்கள் தரிசிக்கும்படி எழுந்தருளிக் குளிர்ந்த வெண்பிறை யணிந்த திருமுடியசைய, பரவிய குருபா கடாட்சந் தந்தருளினார். - எ-று.

**அன்பின் வென்ற தொண்டரவர்க்(கு) அமைந்த மனைவி யார்மைந்தர்**
**முன்பு தோன்றும் பெருவாழ்வை முழுதுங் கண்டு பரவசமாய்**
**என்பும் மனமும் கரைந்துருக விழுந்தார் எழுந்தார் ஏத்தினார்**
**பின்பு பரமர் தகுதியினாற் பெரியோ ரவருக் கருள்புரிவார். 86**

(இ - ள்.) மெய்யன்பினால், பாசபந்தங்களை வென்ற சிறுத்தொண்ட நாயனாரும், அவருக்கமைந்த மனைவியாரும் புதல்வரும் (தாதியரும்) தங்களுக்கு முன்னே தோன்றுகின்ற சிவானந்தப் பெருவாழவை முழுதும் தரிசித்து எலும்பும் மனமும் கரைந்துருகும்படி நிலமுறவிழுந்து வணங்கி, எழுந்து, வணங்கிய கையராய் நின்று துதித்தார்கள்; பின்பு சிவபெருமான் அன்பிற் சிறந்தவர்களாகிய அந்நால்வருக்கும் திருவருள் புரிந்தார். - எ-று.

**கொன்றை வேணி யார்தாமும் பாகங் கொண்ட குலக்கொடியும்**
**வென்றி நெடுவேல் மைந்தருந்தம் விரைப்பூங் கமலச் சேவடிக்கீழ்**
**நின்ற தொண்டர் மனைவியார் நீடு மகனார் தாதியார்**
**என்றும் பிரியா தேயிறைஞ்சி இருக்க உடன்கொண் டேகினார். 87**

(இ - ள்.) கொன்றை மலர் மாலையை அணிந்த சடை முடியை உடைய சிவபெருமானும், அவரது இடப் பாகத்தில் வீற்றிருந்தருளும் உமாதேவியாம், வெற்றி பொருந்திய நீண்ட வேற்படையேந்திய சுப்பிரமணியக் கடவுளும் தங்கள் மணம் பொருந்திய தாமரை மலர் போன்ற திருவடிகளின் கீழே முன்னே நிற்கின்ற சிறுத்தொண்ட நாயனாரும் மனைவியாரும், சிறந்த புதல்வரும், தாதியாருமாகிய நால்வரும் எக்காலத்தும் நீங்காமல் வணங்கிப் பேரின்ப முற்றிருக்கும் பொருட்டு உடன் கொண்டு ஸ்ரீமகா கயிலாசத்தை அடைந்தார்கள். - எ - று.

**ஆறு முடிமேல் அணிந்தவருக் கடியார் என்று கறியமுதா**
**ஊறி லாத தனிப்புதல்வன் தன்னை அரிந்தங் கமுதூட்டப்**
**பேறு பெற்றார் சேவடிகள் தலைமேற் கொண்டு பிறஉயிர்கள்**
**வேறு கழற்றிற் றறிவார்தம் பெருமை தொழுது விளம்புவாம். 88**

(இ - ள்.) கங்கை நதியைத் திருமுடியிலணிந்தருளிய சிவபெருமானுக்கு அடியவரென்று கருதி, குற்றமற்ற ஒப்பற்ற புதல்வரைக் கறியமுதாக அரிந்து பாகம் செய்து திருவமுது ஊட்டத்தக்க பேற்றைப் பெற்றவராகிய சிறுத் தொண்ட நாயனாரது திருவடிகளைச் சிரமேற் கொண்டு, பிறவுயிர்கள் வேறாகப் பேசினவைகளை அறியவல்லவராகிய சேரமான் பெருமாணாயனாரது மேன்மையைத் துதித்துச் சொல்லத் தொடங்குவோம். - எ - று.

**சிறுத்தொண்டநாயனார் புராணம் முற்றிற்று.**

# ௩௭. கழறிற்றறிவார் நாயனார் புராணம்

***மாவீற் றிருந்த பெருஞ்சிறப்பின் மன்னுந் தொன்மை மலைநாட்டுப்
பாவீற் றிருந்த பல்புகழார் பயிலும் இயல்பிற் பழம்பதிதான்
சேவீற் றிருந்தார் திருவஞ்சைக் களமும் நிலவிச் சேரர்குலக்
கோவீற் றிருந்து முறைபுரியும் குலக்கோ மூதூர் கொடுங்கோளூர். 1***

(இ - ள்.) இலட்சுமியானவள் பொருந்தி வீற்றிருக்கின்ற பெருஞ்சிறப்பினால் நிலைபெற்ற பழமையாகிய மலை நாட்டிலே, பாக்களில் சொல்லப்பட்ட பல புகழையுடைய பெரியோர்கள் வாழுமியல்பினையுடைய பழையபதியாவது (யாதெனின்), இடபவாகனத்தில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானது திருவஞ்சைக்களமென்னுந் திருக்கோயிலும் விளங்கப் பெற்று, சேரர்குல அரசர்கள் வீற்றிருந்து செங்கோல்முறை செலுத்துகின்ற சிறந்த நகரமாகிய கொடுங்கோளூராகும். -எ-று.

***காலை எழும்பல் கலையினொலி களிற்றுக் கன்று வடிக்குமொலி
சோலை எழுமென் சுரும்பினொலி துரகச் செருக்காற் சுலவுமொலி
பாலை விபஞ்சி பயிலுமொலி பாட லாடல் முழவினொலி
வேலை யொலியை விழுங்கியெழ விளங்கி யோங்கும் வியப்பினதால். 2***

(இ - ள்.) (அந்நகரம்) காலையில் வேதியர்கள் ஓதுகின்ற பல சாஸ்திரங்களினொலியும், யானைக் கன்றுகளைப் பழக்கி வசமாக்குதலாலுண்டாகு மொலியும், சோலைகளினின்றுமெழுகின்ற மெல்லிய வண்டுகளினொலியும், குதிரைகளினது செருக்கினால் சூழ்ந்த ஒலியும், பாலை - விபஞ்சி முதலிய பண்களைப் பழகுதலாலுண்டாகு மொலியும், பாடல் ஆடல் செய்யுமிடங்களிலுண்டாகும் முழவி னொலியு மாகிய விவைகள் சமுத்திரத்தின் பேரொலியை யடக்கி மேலெழும்படி சிறந்தோங்குகின்ற வியப்பினை யுடையது. - எ - று.

***மிக்க செல்வம் மனைகள்தொறும் விளையும் இன்பம் விளங்குவன
பக்கம் நெருங்கு சாலைதொறும் பயில்சட் டறங்கள் பல்குவன
தக்க அணிகொள் மடங்கள்தொறும் சைவ மேன்மை சாற்றுவன
தொக்க வளங்கொள் இடங்கள் தொறும் அடங்க நிதியந்துவன்றுவன. 3***

(இ - ள்.) செல்வங்கள் நிறைந்த வீடுகடோறும் விரும்பத்தக்க இன்பங்கள் விளங்குவன; அருகில் நெருங்கிய சாலைகடோறும் செய்கின்ற மிக்க தருமங்கள் விருத்தியடைவன; தகுந்த

பேரழகினையுடைய திருமடங்கடோறும் சைவசமயத்தின் மேன்மைகள் சொல்லப்படுவன; வளப்புமிக்க மற்ற இடங்க டோறும் பலவகைத் திரவியங்கள் நிரம்பப் பொருந்துவனவாம்.- எ - று.

**வேத நெறியின் முறைபிறழா மிக்க ஒழுக்கந் தலைநின்ற**
**சாதி நான்கு நிலைதழைக்குந் தன்மைத் தாகித் தடமதில்சூழ்**
**சூத வகுள சரளநிரை துதையுஞ் சோலை வளநகர்தான்**
**கோதை அரசர் மகோதைஎனக் குலவு பெயரும் உடைத்துலகில். 4**

(இ - ள்.) வேதமார்க்கத்தின் முறைமை சிறிதுந் தவறுதலில் லாத சிறந்த ஒழுக்கத்தில் முதன்மையாக நின்ற பிரம சத்திரிய வைசிய சூத்திரரென்னும் நால்வகைச் சாதியாரும் நிலையாகச் செழித்து வாழுந் தன்மையையுடைய தாய், விசாலமாகிய மதிலைச் சூழ்ந்த மா-மகிழ்-சரளம் முதலிய மரவரிசைகள் நெருங் கிய சோலைகளையுடைய வளப்பமிக்க அக்கொடுங்கோளூரா னது, சேரராசாக்கள் அரசாட்சி செய்யும் மகோதையென்னும் பெயரையும் இந்நிலவுலகத்தில் பெற்று விளங்கும். - எ - று.

**முருகு விரியும் மலர்ச்சோலை மூதூ ரதன்கண் முறைமரபின்**
**அருகி அழியுங் கலிநீக்கி அறங்கொள் சைவத் திறந்தழைப்பத்**
**திருகு சினவெங் களியானைச் சேரர் குலமும் உலகுஞ்செய்**
**பெருகு தவத்தால் அரனருளால் பிறந்தார் பெருமாக் கோதையார். 5**

(இ - ள்.) வாசனை வீசுகின்ற மலர்களையுடைய சோலை சூழ்ந்த பழமையாகிய அக்கொடுங்கோளூரிலே முறைமைப் படியே சுருங்கி யழிகின்ற கலியையொழித்து, நல்ல தருமம் பொருந்திய சைவசமயந் தழைத்தோங்கும் பொருட்டு, மாறு பாட்டையுங் கோபத்தையுமுடைய வெவ்விய மதக்களிப்புப் பொருந்திய யானைப் படையையுடைய சேரர் குலத்தினரும் உலகத்தாருஞ் செய்த பெருந்தவத்தினால் சிவபெருமான் திருவருளினால் பெருமாக்கோதையாரென்னும் ஒரு சற்புத்திரர் அவதரித்தார். - எ - று.

**திருமா நகரந் திருஅவதா ரஞ்செய் விழவின் சிறப்பினால்**
**வருமா களிகூர் நெய்யாடல் எடுப்ப வான மலர்மாரி**
**தருமா விசும்பின் மிகநெருங்கத் தழங்கும் ஒலிமங் கலந்தழைப்பப்**
**பெருமா நிலத்தில் எவ்வுயிரும் பெருகு மகிழ்ச்சி பிறங்கினவால். 6**

(இ - ள்.) செல்வங்கள் நிறைந்த கொடுங்கோளூரிலுள்ள வர்கள், அந்தப் பெருமாக்கோதையார் திருவவதாரஞ் செய் தருளிய திருவிழாச்சிறப்பினால் களிப்புமிக்க நெய்யாட்டு விழாவைச் செய்யத் தொடங்கவும், சிறந்த கற்பகமலர் மழை யானது பெரிய ஆகாயத்தில் மிகுதியாக நெருங்க, சப்திக்கின்ற மங்கலவாத்தியவொலிகள் தழைக்க, பெரிய இந்நிலவுலகத்தில் எல்லாவுயிர்களும் மிக்க மகிழ்வோடும் விளங்கின. - எ - று.

***மணமேற் சைவ நெறிவாழ வளர்ந்து முன்னை வழிஅன்பாற்***
***கண்மேல் விளங்கு நெற்றியினார் கழலே பேணுங் கருத்தினராய்***
***உண்மே வியஅன் பினராகி உரிமை அரசர் தொழில்புரியார்***
***தெண்ணீர் முடியார் திருவஞ்சைக் களத்தில் திருத்தொண்டே புரிவார். 7***

(இ - ள்.) உலகத்தில் சைவசமயநெறியானது பெருகி வாழும் பொருட்டு வளர்ந்து பூர்வசென்மத்திற்செய்த பேரன்பினால், நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமானது திருவடிகளைச் சிந்திக்குங் கருத்தினையுடையவரா யிருப்பதுடன், திருவுள்ளத் திற் பொருந்திய பேரன்பினை யுடையவராய், இராசபுத்திரருக் குரிய தொழிலைச் செய்யாமல், தெளிவாகிய கங்கைநதியை யணிந்த திருமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருவஞ்சைக்களமென்னும் ஆலயத்தில் திருத்தொண்டு களையே செய்வாராயினார். - எ - று.

***'உலகின் இயல்பும் அரசியல்பும் உறுதி யல்ல' என உணர்வார்***
***புலரி எழுந்து புனல்மூழ்கிப் புனித வெண்ணீற் றினும்மூழ்கி***
***நிலவு திருநந் தனவனத்து நீடும் பணிகள் பலசெய்து***
***மலரு முகையும் கொணர்ந்துதிரு மாலை சாத்த மகிழ்ந்தமைத்து. 8***

(இ - ள்.) உலகத்தினியல்பும் அரசாட்சியினியல்பும் உறுதி யல்லவென்றுணர்ந்து, பிராதக் காலத்திலெழுந்து நீரில் ஸ்நானஞ் செய்து, பரிசுத்தம் பொருந்திய திருவெண்ணீறணிந்து, விளங்கு கின்ற திருநந்தனவனத்தில் சிறந்த பல திருப்பணிகளைச் செய்து, மலர்களையும் அரும்புகளையுங் கொண்டு வந்து திருமாலை சாத்தும்படி மகிழ்ந்து தொடுத்து. - எ - று.

***திருமஞ் சனமும் கொணர்ந்துதிரு வலகும் இட்டுத் திரு மெழுக்கு***
***வரும்அன் புடன்இன் புறச்சாத்தி மற்றும் உள்ள திருப்பணிகள்***
***பெருமை பிறங்கச் செய்தமைத்துப் பேணும் விருப்பில் திருப்பாட்டும்***
***ஒருமை நெறியின் உணர்வுவர ஓதிப் பணிந்தே ஒழுகுநாள். 9***

(இ - ள்.) திருமஞ்சனங் கொண்டு வந்து திருவலகிட்டு, மிகுதியாக வருகின்ற அன்புடன் இன்பம் பொருந்தத் திருமெழுக்கிட்டு, மற்றுள்ள பல திருப்பணிகளையும் பெருமை விளங்கச் செய்து மிக்க விருப்பத்தோடு திருப்பாடல்களையும் ஒருமைப் பட்ட மனதோடும் நல்லுணர்ச்சி வர வோதி வணங்கி யொழுகும் நாள்களில். - எ - று.

***நீரின் மலிந்த கடலகழி நெடுமால் வரையின் கொடிமதில்சூழ்***
***சீரின்மலிந்த திருநகர மதனிற் செங்கோற் பொறையனெனும் காரின்***
***மலிந்த கொடைநிழல்மேற் கவிக்குங் கொற்றக் குடைநிழற்கீழ்த்***
***தாரின் மலிந்த புயத்தரசன் தரணி நீத்துத் தவஞ்சார்ந்தான். 10***

(இ - ள்.) நீர் நிறைந்த கடல் போன்ற அகழியும், நெடிய சக்கரவாளகிரி போன்ற கொடிகள் கட்டிய மதிலுஞ் சூழ்ந்த சிறப்புமிக்க அக்கொடுங்கோளூரில் மேகம்போலும் நிறைந்த கொடையினையும், நிழலை மேலே கவிக்கப்பட்ட வெண் கொற்றக் குடைநிழலின் கீழிருந் தரசு செய்யும் மாலையணிந்த புயத்தையுமுடைய செங்கோற் பொறையனென்னுஞ் சேரராஜன் உலக வாசையை யொழித்துத் தவஞ் செய்யச் சென்றான். -எ-று.

***வந்த மரபின் அரசளிப்பான் வனஞ்சார் தவத்தின் மருவியபின்***
***சிந்தை மதிநூல் தேரமைச்சர் சிலநாள் ஆய்ந்து தெளிந்தநெறி***
***முந்தை மரபில் முதல்வர்திருத் தொண்டு முயல்வார் முதற்றாக***
***இந்து முடியார் திருவஞ்சைக் களத்தில் அவர்பால் எய்தினார். 11***

(இ - ள்.) சேரர்குலத்தில் வந்த முறைமைப்படியே அரசாட்சி செய்தவனாகிய செங்கோற்பொறையனென்னும் அரசன் வனத்திற் சென்று செய்யுந் தவத்திற்குச் சென்றபின்பு, சாஸ்திரங் களையுணர்ந்த சிந்தையினையுடைய மதிமந்திரிகள் சிலநாள் ஆலோசித்துத் தெளிந்த முறைமையினால், பூர்வ புண்ணிய விசேஷத்தினால் சிவபெருமானது திருத்தொண்டு செய்யும் பெருமாக்கோதையார் அவ்வரசுக்கு முதன்மையான உரிமை யுள்ளவரென்று கருதி, சந்திரசேகரராகிய சிவபெருமான் வீற் றிருந்தருளுந் திருவஞ்சைக்களத்தில் அவரிடத்தில் வந்தார்கள். - எ-று.

***எய்தி அவர்தம் எதிரிறைஞ்சி "இருந்தண் சாரல் மலைநாட்டுச்***
***செய்தி முறைமை யால்உரிமைச் செங்கோல் அரசு புரிவதற்கு***
***மைதீர் நெறியின் முடிசூடி அருளும் மரபால் வந்ததெனப்***
***பொய்தீர் வாய்மை மந்திரிகள் போற்றப் புகன்ற பொழுதின்கண். 12***

(இ - ள்.) குற்றமற்ற மெய்ம்மையையுடைய மந்திரிகள் திருவஞ்சைக் களத்தை யடைந்து அவருக்கு எதிரில் வணங்கி, மிகக் குளிர்ந்த சாரலையுடைய மலைநாட்டு அரசாட்சியை முறைமைப்படி உரிமையாகிய செங்கோல் செலுத்தி அரசாள் வதற்குக் குற்றமற்ற முறைமையினால் தேவரீர் மகுடந் தரித்தருள வேண்டி நாங்கள் வந்தோமென்று துதித்துச் சொன்னபொழுது.- எ - று.

**"இன்பம் பெருகுந் திருதொண்டுக் கிடையூறாக இவர்மொழிந்தார்**
**அன்புநிலைமை வழுவாமை அரசு புரக்க அருளுண்டேல்**
**என்பும் அரவும் புனைந்தாரை இடைபெற் றறிவேன்" எனப்புக்கு**
**முன்பு தொழுது விண்ணப்பஞ் செய்தார் முதல்வர் அருளினால். 13**

(இ - ள்.) (அதுகேட்டுப் பெருமாக்கோதையார்) இவர்கள் இன்ப மிகுகின்ற திருத்தொண்டுக்கு இடையூறாகச் சொன்னார்கள், அன்பு நிலைமை சிறிதுந் தவறாமல் அரசாட்சி செய்வதற்குத் திருவருள் உளதாயின், எலும்பு மாலையையும் பாம்பையு மணிந்த சிவபெருமானிடத்து விண்ணப்பஞ்செய்து அறிவேனென்று திருக்கோயிலிலுள்ளே புகுந்து திருமுன்னின்று வணங்கி விண்ணப்பஞ்செய்ய அப்பொழுது அவ்வெம்பெருமானது திருவருளினால். - எ - று.

**மேவும் உரிமை அரசளித்தே விரும்பு காதல் வழிபாடும்**
**யாவும் யாரும் கழறினவும் அறியும் உணர்வும் ஈறில்லாத்**
**தாவில் விறலும் தண்டாத கொடையும் படைவா கனமுதலாம்**
**காவல் மன்னர்க் குரியனவும் எல்லாங் கைவந் துறப்பெற்றார். 14**

(இ - ள்.) பொருந்திய அரசுரிமையைக் கொடுத்தருளி, விரும்புகின்ற அன்பின் வழிபாடும், யாவும், யாவரும், வசனித்தவைகளனைத்தையும் அறியும் அறிவையும், முடிவல்லாத கெடாத வல்லமையையும், தடைசெய்யப்படாத பெருங் கொடையையும், காத்தலையுடைய அரசர்க்குரியனவாகிய படைவாகன முதலிய எல்லாப் பொருள்களையுங் கைவரப் பெற்றுக் கொண்டார். - எ - று.

**ஆன அருள்கொண் டஞ்சலிசெய் திறைஞ்சிப் புறம்போந் தரசளித்தல்,**
**ஊனம் ஆகுந் திருத்தொண்டுக் கெனினும் உடையான் அருளாலே,**
**மேன்மை மகுடந் தாங்குதற்கு வேண்டும் அமைச்சர்க் குடன்படலும்,**
**மான அமைச்சர் தான் பணிந்தவ் வினைமேற் கொண்டு**
**மகிழ்ந்தெழுந்தார். 15**

(இ - ள்.) இவ்வாறாகிய இனிய திருவருளைப் பெற்று அஞ்சலி செய்து வணங்கிப் புறத்திற்சென்று, தாம் அரசாட்சி செய்தல் திருத்தொண்டுக்குப் பழுதாமெனினும், சிவபெருமானது திருவருளினால், சிறந்த கிரீடந்தரித்து அரசாட்சி செய்யும் பொருட்டு வேண்டுகின்ற மந்திரிமார்களுக்கு உடன்படவும், பெருமை பொருந்திய அம்மந்திரிகள் அவரை வணங்கி, அத் தொழிலை மேற்கொண்டு களிப்புற்றெழுந்தார்கள். - எ - று.

**உரிமை நாளில் ஓரைநலன் எய்த மிக்க உபகரணம்**
**பெருமை சிறக்க வேண்டுவன எல்லாம் பிறங்க மங்கலஞ்செய்(து)**
**இருமை உலகுக் கொருமைமுடி கவித்தார்; எல்லா உயிரும்மகிழ்**
**தரும நிலைமை அறிந்துபுவி தாங்குங் கழறிற் றறிவார்தாம். 16**

(இ - ள்.) முடிதரித்தற்குரிய சுபதினத்திலே நல்ல சுபலக்கினம் வர, பெருமை மிகும்படி வேண்டுவனவாகிய உபகரணங்களனைத்தையும் மங்கலகரம் விளங்க வமைத்து, பெரிய இந்நிலவுலகத்தை யரசாட்சி செய்வதற்கு ஒப்பற்ற மணிமுடி தரித்தார்கள்; பின் எல்லா வுயிர்களும் மகிழ்வடையத்தக்க அழகிய அரசாட்சி நிலைமையை யுணர்ந்து உலகத்தைப் பாதுகாக்கும் கழறிற்றறிவாராகிய அப் பெருமாக்கோதையார். - எ - று.

**தம்பி ரானார் கோயில்வலங் கொண்டு திருமுன் தாழ்ந்தெழுந்து,**
**கும்ப யானை மேல்கொண்டு கொற்றக் குடையுஞ் சாமரையும்,**
**நம்பும் உரிமை யவர்தாங்க நலங்கொள் நகர்சூழ் வலங்கொள்வார்,**
**மொய்ம்பில் உவரின் பொதிசுமந்தோர் வண்ணான் முன்னே வரக் கண்டார். 17**

(இ - ள்.) சிவபெருமானது திருக்கோயிலைப் பிரதக்ஷணஞ் செய்து சந்நிதியில் நமஸ்கரித்து எழுந்து, மத்தகத்தையுடைய பட்டத்துயானைமே லேறிக் கொண்டு வெண்கொற்றக்குடையும் வெண்சாமரையும் தம்மை நம்பியிருக்கும் உரியவர்கள் பிடித்துவர, நன்மைமிக்க அந்நகரத்தைச் சூழ்ந்து வலம் வருகின்றவர், ஒரு வண்ணான் தோளில் உவர்மண் மூட்டையைச் சுமந்து கொண்டு தமக்கு எதிரே வரப்பார்த்தார். - எ - று.

**மழையிற் கரைந்தங் குவர்ஊறி மேனி வெளுத்த வடிவினால்,**
**"உழையிற் பொலிந்த திருக்கரத்தார் அடியார் வேடம்" என்று ணர்ந்தே,**
**இழையிற் சிறந்த ஓடைநுதல் யானைக் கழுத்தின் நின்றிழிந்து,**
**விழைவிற் பெருகுங் காதலினால் விரைந்து சென்று கைதொழுதார். 18**

(இ - ள்.) அம்மூட்டை மழையினால் கரைந்து உவர் ஊறப் பெற்று உடம்பு வெளுத்திருக்கின்ற வுருவத்தினால், மான் கன்றோடு விளங்குகின்ற திருக்கரத்தையுடைய சிவபெருமான் அடியார்களது திருவேடம் போலுமென்று உணர்ந்து, ஆபரணங்களிற் சிறந்த நெற்றிப்பட்டத்தை யுடைய யானையின் பிடரினின்று மிறங்கி விருப்போடு அதிகரிக்கின்ற பேரன்பினால் விரைந்து போய்க் கைகூப்பி வணங்கினார். - எ - று.

***சேரர் பெருமான் தொழக்கண்டு சிந்தை கலங்கி முன்வணங்கி***
***"யாரென் றடியே னைக்கொண்ட தடியேன் அடிவண் ணான்" என்னச்***
***சேரர் பிரானும் "அடிச்சேரன் அடியேன்" என்று "திருநீற்றின்***
***வார வேடம் நினைப்பித்தீர்; வருந்தா தேகும்" எனமொழிந்தார். 19***

(இ - ள்.) (இவ்வாறு பெருமாக்கோதையா ரென்னும்) சேரமான் பெருமாணயனார் வணங்க, அதனை வண்ணான் கண்டு மனங்கலங்கி முன்னே வீழ்ந்து வணங்கி அடியேனை யார் என்று கொண்டது; அடியேன் அடி வண்ணான் என்று சொல்ல, அதற்குச் சேரமான் பெருமாணாயனாரும் அடியேன் அடிச் சேரன் என்று கூறி, தேவரீர் திருவெண்ணீறணிந்த அன்பின் திருவேடத்தை நினைப்பித்தீர்; மனம் வருந்தாமற் செல்லு மென்று கூறினார். - எ - று.

***மன்னர் பெருமான் திருத்தொண்டு கண்டுமதிநீ டமைச்சரெல்லாம்***
***சென்னி மிசைஅஞ் சலிசெய்து போற்றச் சினமால் களிறேறி***
***மின்னு மணிப்பூண் கொடிமாட வீதி மூதூர் வலங்கொண்டு***
***பொன்னின் மணிமா ளிகைவாயில் புக்கார் புனைமங் கலம்பொலிய. 20***

(இ - ள்.) பேரறிவினையுடைய மந்திரிகளனைவரும் சேரமான் பெருமாணாயனாரது அடியார் பத்தியைக்கண்டு சிரசில்கைகளை யஞ்சலியாகக் குவித்துத் துதிக்க, நாயனார், கோபத்தையும் மதமயக்கத்தையுமுடைய யானைமேலேறி, இரத்தினாபரணங்கள் விளங்குங் கொடிகள் கட்டிய மாடவீதி யையுடைய பழைமையாகிய நகரத்தை வலம் வந்து, பொன்னி னாலும் மணிகளினாலும் அமைக்கப்பட்ட திருமாளிகைத் திருவாயிலிலே பலவகை மங்கலவாத்தியங்க ளொலிக்கப் புகுந்தருளினார். - எ - று.

***யானை மிசைநின் றிழிந்தருளி இலங்கும் மணிமண் டபத்தின்கண்***
***மேன்மை அரியா சனத்தேறி விளங்குங் கொற்றக் குடைநிழற்றப்***
***பானல் விழியார் சாமரைமுன் பணிமா றப்பன் மலர்தூவி***
***மான அரசர் போற்றிடவீற் றிருந்தார் மன்னர் பெருமானார். 21***

(இ - ள்.) யானையினின்றுங் கீழேயிரங்கி, விளங்குகின்ற அழகிய மண்டபத்தில் சிறப்புமிக்க இரத்தின சிங்காசனத்தில் ஏறி, விளங்குகின்ற வெண்கொற்றக்குடைநிழற்றவும், நிலோற்பல மலர்போலும் விழிகளைடைய மாதர்கள் முன்னே வெண் சாமரைவீசவும், பெருமைமிக்க அரசர்கள் பலவகை மலர் களைத் தூவித் துதிக்கவும் சேரமான் பெருமாணாயனார் வீற்றிருந்தருளினார். - எ - று.

**உலகு புரக்குங் கொடைவளவர் உரிமைச் செழியர் உடன்கூட**
**நிலவு பெருமுக் கோக்களாய் நீதி மனுநூல் நெறிநடத்தி**
**அலகில் அரசர் திறைகொணர அகத்தும் புறத்தும் பகையறுத்து**
**மலருந் திருநீற் றொளிவளர மறைகள் வளர மண்ணளிப்பார். 22**

(இ - ள்.) உலகத்தைப் பாதுகாக்கின்ற ஈகைத் தன்மையை யுடைய பாண்டியர் பெருமானும், அரசுரிமையையுடைய சோழர் பெருமானுமாகிய விருவருடன் சேர்ந்து, விளங்குகின்ற பெருமை மிக்க சேர சோழ பாண்டியரென்னும் மூவரசர்களாய், மநுநீதி முறைமைப்படி அரசாட்சியை நடத்தி, அளவற்ற அரசர்கள் திறைகொணர்ந்து செலுத்த அகப்பகை புறப்பகை களை யறுத்து, விளங்குகின்ற திருவெண்ணீற்றினொளி வளரவும், வைதிகமார்க்கம் வளரவும் நிலவுலகத்தை அரசாள் வாராயினார். - எ - று.

**"நீடும் உரிமைப் பேரரசால் நிகழும் பயனும் நிறைதவமும்**
**தேடும் பொருளும் பெருந்துணையும் தில்லைத் திருச்சிற் றம்பலத்துள்**
**ஆடுங் கழலே" எனத்தெளிந்த அறிவால் எடுத்த திருப்பாதம்**
**கூடும் அன்பில் அர்ச்சனைமேற் கொண்டார் சேரார் குலப்பெருமாள். 23**

(இ - ள்.) மிக்க உரிமையையுடைய அரசியற்றுதலினா லுண்டாகும் பயனும், நிறைந்த தவமும் தாம் தேடிய பொருளும், தமக்குரிய பெருந்துணையும் தில்லைப்பதியிலுள்ள திருச்சிற்றம் பலத்திலே ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளும் சிவபெருமா னது திருவடிகளே யென்று தெளிந்த மெய்யறிவினால் தூக்கிய குஞ்சிதபாதத்தைப் பொருந்திய அன்போடும் பூசனை செய்த லைச் சேரமான் பெருமாணாயனார் மேற்கொண்டருளினார். - எ - று.

**வாசத் திருமஞ் சனம்பள்ளித் தாமஞ் சாந்தம் மணித்தூபம்**
**தேசிற் பெருகுஞ் செழுந்தீபம் முதலா யினவும் திருவமுதும்**
**ஈசர்க் கேற்ற பரிசினால் அருச்சித் தருள எந்நாளும்**
**பூசைக் கமர்ந்த பெருங்கூத்தர் பொற்பார் சிலம்பின் ஒலிஅளித்தார். 24**

(இ - ள்.) நறுமணங் கமழுந் திருமஞ்சனம் திருப்பள்ளித் தாமம், சந்தனம், அழகிய தூபம், அழகோடு விளங்குஞ் செழிய தீபம் முதலியனவும், திருவமுதும், சிவபெருமானுக்கு ஏற்ற முறைமையினால் நாடோறும் பூசித்துவர, அப்பூசையை ஏற்றருளுதற்கமர்ந்த ஸ்ரீ நடராசப் பெருமான் அழகு மிக்க தமது திருவடிச் சிலம்பின் ஓசையைக் கேட்பித்தருளினார். - எ - று.

***நம்பர் தாளின் வழிபாட்டால் நாளும் இன்புற் றமர்கின்றார்***
***இம்பர் உலகில் இரவலர்க்கும் வறியோர் எவர்க்கும் ஈகையினால்***
***செம்பொன் மழையாம் எனப்பொழிந்து திருந்து வென்றி யுடன் பொருந்தி,***
***உம்பர் போற்றத் தம்பெருமாற் குரிய வேள்வி பலசெய்தார். 25***

(இ - ள்.) இவ்வாறு சிவபெருமானது திருவடிகளிற் செய்யும் வழிபாட்டினால் நாடோறும் பேரின்பமுற்று வாழ்கின்ற இந் நாயனார், இந்நிலவுலகத்தில் சிவனடியார்களுக்கும், தரித்திரர் களுக்கும் கொடையினால் செம்பொன்னை மழைபோலச் சொரிந்து, திருத்தமாகிய வெற்றியோடு பொருந்தி, தேவர்கள் துதிக்கும்படி சிவபெருமானுக்குரிய பல யாகங்களைச் செய் தருளினார். - எ - று.

***இன்ன வண்ணம் இவரொழுக எழில்கொள் பாண்டி நன்னாட்டு***
***மன்னும் மதுரைத் திருவால வாயில் இறைவர் வரும்அன்பால்***
***பன்னும் இசைப்பா டலிற்பரவும் பாண னார்பத் திரனார்க்கு***
***நன்மை நீடு பெருஞ்செல்வம் நல்க வேண்டி அருள்புரிவார். 26***

(இ - ள்.) இவர் இவ்வாறொழுகும் நாள்களில், அழகு மிக்க பாண்டிவள நாட்டிலே பொருந்திய மதுராபுரியில் திருவால வாய் என்னுந் திருக்கோயிலிலெழுந்தருளிய ஸ்ரீ சோமசுந்தரக் கடவுள், உள்ளத்துதித்த பேரன்பினால் தம்மை இசைப்பாட் டினால் துதிக்கின்ற பாணபத்திரருக்கு நன்மைமிக்க பெருஞ் செல்வங் கொடுத்தருளத் திருவுள்ளங்கொண்டு அருள் செய்வாராயினார். - எ - று.

***"இரவு கனவில் எழுந்தருளி என்பால் அன்பால் எப்பொழுதும்***
***பரவு சேரர் தனக்குனக்குப் பைம்பொற் காணம் பட்டாடை***
***விரவு கதிர்செய் நவமணிப்பூண் வேண்டிற் றெல்லாங் குறைவின்றித்***
***தரநம் ஓலை தருகின்றோம் தாழா தேகி வரு"கென்று- 27***

(இ - ள்.) இரவு அப்பாணபத்திரருக்குச் சொப்பனத்தி லெழுந்தருளி, உனக்குப் பொற்காணம் - பட்டாடை - ஒளி

வீசுகின்ற நவரத்தினா பரணங்கள் இன்னம் வேண்டியவைக ளனைத்துங் குறைவின்றிக் கொடுக்கும் பொருட்டு, எம்மிடத்து அன்பினால் எப்பொழுதுந் துதிக்கின்ற சேரமானுக்கு ஓலை யைத் தருகின்றோம், காலந் தாழ்க்காமல் போய்வருவாய் என்று அருளிச் செய்து. - எ - று.

**அதிர்கழல் உதியர் வேந்தற் கருள்செய்த பெருமை யாலே**
**"எதிரில்செல் வத்துக்கேற்ற இருநிதி கொடுக்க" என்று**
**"மதிமலி புரிசை" என்னும் வாசகம் வரைந்த வாய்மைக்**
**கதிரொளி விரிந்த தோட்டுத் திருமுகங் கொடுத்தார் காண. 28**

(இ - ள்.) சப்திக்கின்ற வீரக் கழலையணிந்த சேரமான் பெருமா ணாயனாருக்குத் திருவருள் புரிந்த மேன்மையினால், ஒப்பற்ற உனது செல்வத்திற்குத்தக்க பெருந்திரவியத்தைக் கொடுக்கக் கடவை யென்று, "மதிமலிபுரிசை" என்னு முதலை யுடைய திருப்பாசுரமெழுதிய மெய்ம்மையாகிய பேரொளி வீசுந்திருவேடாகிய திருமுகத்தை அவர்காணும்படி கொடுத் தருளினார். - எ று.

**சங்கப் புலவர் திருமுகத்தைத் தலைமேற் கொண்டு பத்திரனார்**
**அங்கப் பொழுதே புறப்பட்டு மலைநா டணைய வந்தெய்தித்**
**துங்கப் புரிசைக் கொடுங்கோளூர் தன்னிற் புகுந்து துன்னுகொடி**
**மங்குல் தொடக்கும் மாளிகைமுன் வந்து மன்னர்க் கறிவித்தார். 29**

(இ - ள்.) பாணபத்திரர், (முதலிடை கடையென்னும்) முச்சங்கத்திற்குந் தலைமைப் புலவராய் வீற்றிருந்தருளிய சிவபெருமான் கொடுத்தருளிய அத்திருமுகத்தைத் தமது சிரமேற்கொண்டு, அப்பொழுதே புறப்பட்டு மலைநாட்டை வந்தடைந்து உயர்ந்த மதிலையுடைய கொடுங்கோளூரில் சென்று, பொருந்திய கொடிகள் மேகமண்டலத்தைத் தொடு கின்ற திருமாளிகையின் முன்னே வந்து சேரமான் பெருமாணாய னாருக்குத் தெரிவித்தார். - எ - று.

**கேட்ட பொழுதே கைதலைமேற் கொண்டு கிளர்ந்த பேரன்பால்**
**நாட்டம் பொழிநீர் வழிந்திழிய எழுந்து நடுக்கம் மிகஎய்தி**
**ஓட்டந் தம்பொன் மாளிகையின் புறத்தில் உருகுஞ் சிந்தையுடன்**
**பாட்டின் தலைமைப் பாணனார் பாதம் பலகால் பணிகின்றார். 30**

(இ - ள்.) (நாயனார்) அதைக் கேட்டவுடனே சிரமேல் கைகளைக் குவித்து, அதிகப்பட்டெழுந்த பேரன்பினால்

கண்களினின்று மொழுகுகின்ற ஆனந்தக் கண்ணீரானது வழிந்து ஓட, நடுக்க மிகும்படி எழுந்து ஓட்டத்துடன் அழகிய பொன்மயமாகிய திருமாளிகையின் புறத்தில் வந்து, உருகுகின்ற திருவுள்ளத்தோடும் இசைப்பாட்டில் தலைமை பெற்ற பாணபத்திரருடைய பாதங்களில் பலமுறை வணங்குகின்றவ ராயினார். - எ - று.

**"அடியேன் பொருளாத் திருமுகங்கொண் டணைந்த"தென்ன அவர் தாமும்,**
**கொடிசேர் விடையார் திருமுகங்கைக் கொடுத்து வணங்கக் கொற்றவனார்,**
**முடிமேற் கொண்டு கூத்தாடி மொழியுங் குழறிப் பொழிகண்ணீர்,**
**பொடியார் மார்பிற் பரந்துவிழப் புவிமேற் பலகால் வீழ்ந்தெழுந்தார். 31**

(இ - ள்.) (தேவரீர்) அடியேனை ஒரு பொருளாக மதித்துத் திருமுகங்கொண்டு வந்தருளினீர் என்றுகூற, அப்பாணபத் திரரும் இடபக் கொடியையுடைய சிவபெருமான் கொடுத் தருளிய திருமுகத்தை அவர் கையில் கொடுத்து நமஸ்கரிக்க, சேரமான் பெருமாணாயனார் அதனைச் சிரமேற்கொண்டு கூத்தாடி, வார்த்தை குழறி, ஒழுகுகின்ற ஆனந்தக் கண்ணீரானது விபூதியையணிந்த திருமார்பில் பரவிச் சிந்தப் பூமியில் பலமுறை வீழ்ந்து வணங்கி யெழுந்தார். - எ - று.

**பரிவிற் போற்றித் திருமுகத்தைப் பலகால் தொழுது படிஎடுக்க**
**உரிய வகையால் எடுத்தோதி உம்பர் பெருமான் அருள்போற்றி**
**விரிபொற் சுடர்மா ளிகைபுக்கு மேவும் உரிமைச் சுற்றமெலாம்**
**பெரிதுவிரைவிற் கொடுபோந்து பேணும் அமைச்சர்க் கருள்செய்வார். 32**

(இ - ள்.) அன்புடன் துதித்துத் திருமுகத்தைப் பலதரம் வணங்கி எடுக்க வேண்டிய முறைமைப்படி யெடுத்து, தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது திருவருளைத் துதித்து, பொன் னொளி விரிந்த திருமாளிகையிற் புகுந்து உரிமையாகிய உறவின ரனைவரையும் மிக விரைந்து,அழைத்து வந்து, விரும்பிச் சூழ்ந் திருக்கின்ற மந்திரிகளைப் பார்த்துக் கூறுவாராயினார். - எ - று.

**"நாங்கள் குலமா ளிகையிதனுள் நலத்தின் மிக்க நிதிக்குவையாய்ப்**
**பொங்கி நிறைந்த பலவேறு வகையிற் பொலிந்த பண்டாரம்**
**அங்கண் ஒன்றும் ஒழியாமை அடையக் கொண்டு புறப்பட்டுத்**
**தங்கும் பொதிசெய் தாளின்மேற் சமைய ஏற்றிக்கொணரும்" என. 33**

(இ - ள்.) நமது சிறப்புப் பொருந்திய இத்திரு மாளிகையில் நன்மைமிக்க பொருட் குவைகளாய் அதிகப்பட்டு நிறையப் பெற்றுள்ள பல வேறு வகையாக விளங்குகின்ற பொக்கிஷத்தை அங்கு ஒன்றுந் தவறாமல் முழுதுமெடுத்துக் கொண்டு புறப் பட்டுச் சுமையாகக் கட்டி ஆட்களின்மேல் பொருந்த ஏற்றிக் கொண்டு வாருங்களென்று கட்டளையிட்டருள. - எ - று.

***சேரர் பெருமான் அருள்செய்யத் திருநது மதிநூல் மந்திரிகள்***
***சாரு மணிமா ளிகையுள்ளால் தனங்க ளெல்லாம் நிறைந்தபெருஞ்***
***சீர்கொள் நிதியும் எண்ணிறந்த எல்லாம் பொதிசெய் தாளின்மேல்***
***பாரில் நெருங்க மிசைஏற்றிக் கொண்டு வந்து பணிந்தார்கள். 34***

(இ - ள்.) இவ்வாறு சேரமான் பெருமாணாயனார் கட்டளை யிட்டருளவும், திருத்தமாகிய சாஸ்திர வுணர்ச்சியை யுடைய மந்திரிகள் அழகு பொருந்திய திருமாளிகையினுள்ளே யிருக்கின்ற தனங்களையும், நிறைந்த பெருஞ்சிறப்பினையுடைய (நவரத்தினங்கள் ஆபரணங்கள் முதலிய) அளவற்ற பொருள் களையும் சுமையாகக் கட்டிப் பூமியில் நெருங்க ஆளின் மேலேற் றிக் கொண்டு வந்து வணங்கினார்கள். - எ - று.

***பரந்த நிதியின் பரப்பெல்லாம் பாண னார்ப்பத் திரனார்க்கு***
***நிரந்த தனங்கள் வெவ்வேறு நிரைத்துக் காட்டி "மற்றிவையும்***
***உரந்தங் கியவெங் கரிபரிகள் முதலாம் உயிருள் ளனதனமும்***
***புரந்த அரசும் கொள்ளும்" என மொழிந்தார் பொறையர் புரவலனார். 35***

(இ - ள்.) சேரமான் பெருமாணாயனார் பரந்தபொருட் டொகைகளனைத்தையும் வரிசையாக வைத்து, நிறைந்த அவ் வத்தனங்களைத் தனித்தனியே பாணபத்திரருக்குக் காட்டி, இப் பொருளையும் அடியேன் பாதுகாத்து வந்த அரசாட்சியையும் தேவரீர் கைக்கொள்வீராகவென்று வேண்டிக் கொண்டனர். - எ - று.

***பாண னார்பத் திரனாரும் பைம்பொன் மௌலிச் சேரலனார்***
***காணக் கொடுத்த நிதிஎல்லாங் கண்டு மகிழ்வுற் றதிசயித்துப்***
***"பேண எனக்கு வேண்டுவன அடியேன் கொள்ளப் பிஞ்ஞகனார்***
***ஆணை அரசும் அரசுறுப்புங் கைக்கொண் டருளும்" எனஇறைஞ்ச. 36***

(இ - ள்.) அப்பொழுது பாணபத்திரர் தாம் காணும்படி பசும்பொன்னாலாகிய மணிமுடியையுடைய சேரமான் பெரு மாணாயனார் கொடுத்தருளிய இப்பொருள்களனைத்தையுங்

கண்டுமகிழ்ந்து அதிசயமடைந்து, சுவாமீ! விரும்ப அடியேன் எனக்கு வேண்டுவனவற்றை மாத்திரம் பெற்றுக் கொள்ளும்படி சிவபெருமானது கட்டளை; ஆதலால், தேவரீர் அரசையும், அரசுறுப்புகளையுங் கைகொள்ள வேண்டுமென்று கூறி வணங்க. - எ - று.

**இறைவர் ஆணை மறுப்பதனுக் கஞ்சி இசைந்தார் இகல்வேந்தர்;**
**நிறையுந் நிதியின் பரப்பெல்லாம் நிலத்தை நெறிய உடன்கொண்டே,**
**உறைமும் மதத்துக் களிறுபரி உள்ளிட் டனவேண் டுவகொண்டோர்,**
**பிறைவெண் கோட்டுக் களிற்றுமேல் கொண்டு போந்தார்**
**பெரும்பாணர். 37**

(இ - ள்.) வலிமை தங்கிய சேரமான் பெருமாணாயனார் சிவபெருமானது கட்டளையை மறுப்பதற்கு அஞ்சி அதற்குடன் பட்டிருந்தனர்; சிறந்த பாணபத்திரர் நிறைந்த தனங்களனைத்தை யும் பூமிநெறியும்படி தம்முடனெடுத்துக் கொண்டு மும்மதத் தினையுடைய யானை குதிரை முதலியவற்றுள் தமக்கு வேண்டு வனவற்றையுங் கொண்டு, பிறைபோலும் வெண்மையாகிய கொம்பினையுடைய ஒருயானை மேலேறிக் கொண்டு போயி னார். - எ - று.

**பண்பு பெருகும் பெருமாளும் பாண னார்பத் திரனார்பின்**
**கண்கள் பொழிந்த காதல்நீர் வழியக் கையால் தொழுதணைய**
**நண்பு சிறக்கும் அவர்தம்மை நகரின் புறத்து விடைகொண்டு**
**திண்பொற் புரிசைத் திருமதுரை புக்கார் திருந்தும் இசைப்பாணர். 38**

(இ - ள்.) நற்குணமிக்க சேரமான் பெருமாணாயனாரும் பாணபத்திரருக்குப்பின்னே கண்களினின்றுஞ் சிந்துகின்ற ஆனந்தக் கண்ணீர் வழியக் கைகளால் தொழுது கொண்டு செல்ல, திருத்தமாகிய இசைப் பாட்டினையுடைய பரணபத்திரர் நட்புமிக்க அந்நாயனரை நகர்ப்புறத்திலே விடைபெற்றுக் கொண்டு வலிய பொன்மயமாகிய மதிலையுடைய அழகிய மதுராபுரியை யடைந்தார். - எ - று.

**வான வரம்பர் குலம்பெருக்கும் மன்ன னாரும் மறித்தேகிக்**
**கூனல் இளவெண் பிறைக்கண்ணி முடியார் அடிமை கொண்டருளும்**
**பான்மை அருளின் பெருமையினை நினைந்து பலகால் பணிந்தேத்தி**
**மேன்மை விளங்கு மாளிகைமண் டபத்துள் அரசு வீற்றிருந்தார். 39**

(இ - ள்.) சேரர் குலத்தை விருத்தி செய்கின்றவராகிய சேரமான் பெருமாணாயனாரும் திரும்பிச் சென்று வளைந்த இளைய வெண்பிறை யாகிய மாலையை யணிந்த திருமுடியை யுடைய சிவபெருமான் (பாணபத்திரரை) அடிமை கொண் டருளிய திருவருட்பகுதியின் மேன்மையைச் சிந்தித்துப் பல முறை வணங்கித் துதித்துப் பெருமை மிகுந்த திருமாளிகை மண்டபத்திலே அரசு செய்தருளினார். - எ - று.

***அளவில் பெருமை அகிலயோ னிகளும் கழறிற் றறிந்த வற்றின்***
***உளமன் னியமெய் யுறுதுயரம் ஒன்றும் ஒழியா வகைஅகற்றிக்***
***களவு கொலைகள் முதலான கடிந்து கழற்றி றறிவார்தாம்***
***வளவர் பெருமானுடன்செழியர் மகிழுங் கலப்பில் வைகுநாள். 40***

(இ - ள்.) அளவற்ற பெருமையோடும் எல்லாவுயிர்களுங் கழறி னவை களையறிந்து அவற்றின் உள்ளத்திற் பொருந்திய மெய்ம்மையாகிய துன்பங்கள் சிறிதுங் தங்காமலொழித்து, களவு கொலை முதலிய தீமைகளை நீக்கிச் சோழன் பாண்டிய னென்னு மிருதிறத்தரசரும் மகிழத்தக்க உறவோடு வாழும் நாள்களில். - எ - று.

***வானக் கங்கை நதிபொதிந்த மல்கு சடையார் வழிபாட்டுத்***
***தூநற் சிறப்பின் அர்ச்சனையாம் தொண்டு புரிவார் தமக்கொருநாள்***
***தேனக் கலந்த கொன்றையினார் ஆடற் சிலம்பின் ஒலிமுன்போல்***
***மானப் பூசை முடிவின்கட் கேளா தொழிய மதிமயங்கி. 41***

(இ - ள்.) ஆகாய கங்கை தங்கி விளங்குகின்ற சடைமுடியை யுடைய சிவபெருமானது வழிபாட்டில் தூய்மையாகிய நல்ல சிறப்பினையுடைய பூசையாகிய திருத்தொண்டு செய்கின்றவ ராகிய சேரமான் பெருமாணாயனாருக்கு ஒரு நாள், தேன் விளங்கி மலர்ந்த கொன்றை மாலையை யணிந்த சிவபெருமா னது திருச்சிலம்பின் ஓசை முன்போலச் சிவபூசையின் முடிவிலே கேளாதொழிய அதனால் புத்திமயங்கி. - எ - று.

***பூசை கடிது முடித்(து) "அடியேன் என்னோ பிழைத்த(து)?"***
***எனப்பொருமி,***
***"ஆசை உடம்பால் மற்றினிவே றடையும் இன்பம் யா"தென்று***
***தேசின் விளங்கும் உடைவாளை உருவித் திருமார் பினில்நாட்ட***
***ஈசர் விரைந்து திருச்சிலம்பின் ஓசை மிகவும் இசைப்பித்தார். 42***

(இ - ள்.) சிவபூசையை விரைவில் முடித்து, அடியேன் யாது பிழைசெய்தேனோவென்று துயரடைந்து, விரும்புகின்ற இந்தத் தேகத்தினால் இனியடையத்தக்க வேறு இன்பம் யாதென்று ஒளிவிட்டு விளங்குகின்ற உடைவாளை யுருவித் தமது திருமார்பில் நாட்ட, உடனே ஸ்ரீ நடராசப் பெருமான் விரைந்து திருச்சிலம் போசையை மிகவுங் கேட்பித்தருளினார். - எ - று.

**ஆடற் சிலம்பின் ஒலிகேளா உடைவாள் அகற்றி அங்கைமலர்**
**கூடத் தலைமேற் குவித்தருளிக் கொண்டு விழுந்து தொழுதெழுந்து**
**நீடப் பரவி மொழிகின்றார் "நெடுமால் பிரமன் அருமறைமுன்**
**தேடற் கரியாய்! திருவருள்முன் செய்யா தொழிந்த தென்?" என்றார். 43**

(இ - ள்.) திருநடனச் சிலம்போசையைக் கேட்டு உடைவாளை யொழித்துத் தாமரை மலர் போன்ற அழகிய திருக்கரங்களைச் சிறமேற் குவித்துக் கொண்டு நிலமுற விழுந்து நமஸ்கரித்தெழுந்து மிகவுந் துதித்துக் கூறுகின்றார்; திருமாலும் பிரமனும் அருமையாகிய வேதங்களும் தேடியறிதற்கரிய எம்பெருமானே! தேவரீர் இத்திருவருளை முன்பு செய்யாதொழிந்தது யாது காரணமென்று வினாவினார். - எ - று.

**என்ற பொழுதில் இறைவர்தாம் எதிர்நின் றருளா தெழும்ஒலியால்**
**"மன்றி னிடைநம் கூத்தாடல் வந்து வணங்கி வன்றொண்டன்**
**ஒன்றும் உணர்வால் நமைப்போற்றி உரைசேர் பதிகம் பாடுதலால்**
**நின்று கேட்டு வரத்தாழ்த்தோம்" என்றார் அவரை நினைப்பிப்பார். 44**

(இ - ள்.) இவ்வாறு வினாவியபோது, சிவபெருமான் ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளை நினைப்பிக்கும் பொருட்டு எதிரில் நின்று அருளிச் செய்யாமல் அசரீரியாக, வன்றொண்டன் வந்து கனகசபையில் நமது ஆனந்தத் தாண்டவத்தை வணங்கி, ஒருமைப் பட்ட மெய்யுணர்வினால் நம்மைத் துதித்து நல்ல சொற்க ளமைந்த திருப்பதிகம் பாடுதலால், அதனை நாம் நின்று கேட்டு இங்குவரத் தாழ்ந்தோமென்று திருவாக்கை யருளிச் செய்தார். - எ - று.

**"என்னே! அடியார்க் கிவர்அருளுங் கருணை இருந்த வா"றென்று**
**பொன்னேர் சடையார் திருநடஞ்செய் புலியூர்ப் பொன்னம் பலம் இறைஞ்சித்,**
**தன்நே ரில்லா வன்றொண்டர் தமையுங் காண்பன்" எனவிரும்பி,**
**நன்னீர் நாட்டுச் செலநயந்தார் நாமச் சேரர் கோமானார். 45**

(இ - ள்.) புகழையுடைய சேரமான் பெருமாணாயனார், அடியார்களுக்கு இவ்வெம்பெருமான் திருவருள் புரியுங் கருணையிருந்தவாறு என்னை யென்று வியந்து, பொன்போலும் அழகிய சடைமுடியையுடைய சிவபெருமான் திருநடனஞ் செய்யும் திருப்புலியூரிலுள்ள கனகசபையை வணங்கி, தமக் கொருவருமொப்பில்லாத வன்றொண்டரையுந் தரிசிப்பே னென்று விருப்பங்கொண்டு, நல் நீர்வளம் பொருந்திய சோழ நாட்டிற்குச் செல்லும்படி எண்ணங் கொண்டருளினார். - எ-று.

***பொன்னார் மௌலிச் சேரலனார் போற்றும் அமைச்சர்க் கஃதியம்பி,***
***"நன்னாட் கொண்டு பெரும்பயணம் எழுக" என்று நலம்சாற்ற***
***மின்னார் அயில்வேற் குலமறவர் வென்றி நிலவுஞ் சிலைவீரர்***
***அந்நாட்டுள்ளார் அடையநிரந் தணைந்தார் வஞ்சி அகல்நகர்வாய். 46***

(இ - ள்.) பொன்னாலாகிய மணிமுடியையுடைய சேரமான் பெருமாணாயனார் தம்மைப் போற்றுகின்ற மந்திரிமார்களுக்கு இதனையுரைத்து, நல்ல நாள்கொண்டு பெரும்பயண மெழுங்க ளென்று நன்மை பொருந்தக் கூறியருள, மின்போல் விளங்கு கின்ற கூர்மையாகிய வேலையுடைய மறவர்களும், வெற்றி பொருந்திய வில்லைப் பிடித்த வீரர்களும், அந்நாட்டிலுள்ளவர் களனைவரும் வஞ்சியென்னும் பெயரையுடைய கொடுங் கோளூரில் நிறைந்து வந்தார்கள். - எ - று.

***இட்ட நன்னாள் ஓரையினில் இறைவர் திருவஞ் சைக்களத்து,***
***மட்டு விரிபூங் கொன்றையினார் தம்மை வலங்கொண் டிறைஞ்சிப்போய்ப்***
***பட்ட நுதல்வெங் கரியானைப் பிடர்மேற் கொண்டு பனிமதியம்***
***தொட்ட கொடிமா ளிகைமூதூர் கடந்தார் உதியர் தோன்றலார். 47***

(இ - ள்.) சேரமான் பெருமாணாயனார் பிரயாணத்திற்குக் குறித்த நல்ல நாளில் சுபலக்கினத்திலே பெருமானது திருவஞ் சைக் களத்தில் தேன் விரிந்த கொன்றை மலர் மாலையை யணிந்த சிவபெருமானைப் பிரதட்சணஞ் செய்து வணங்கிப் புறத்திற் சென்று, நெற்றிப்பட்டத்தையுடைய வெவ்விய மதக்களிப் பமைந்த பட்டத்துயானையின் பிடர்மீதேறிக் கொண்டு, குளிர்ந்த சந்திரனைத் தொடுகின்ற கொடிகள் கட்டிய திரு மாளிகைகள் பொருந்திய பழைமையாகிய கொடுங்கோளூரைக் கடந்தருளினார். - எ - று.

***யானை அணிகள் பரந்துவழி எங்கும் நிரந்து செல்லுவன***
***மான மலைநாட் டினில்மலிந்த மலைக ளுடன்போ துவபோன்ற***
***சேனை வீரர் புடைபரந்து செல்வ தங்கண் மலைசூழ்ந்த***
***கானம் அடைய உடன்படர்வ போலுங் காட்சி மேவினதால்.*** 48

(இ - ள்.) யானைப் படைகள் பரவி வழியெங்கும் நிறைந்து செல்லுதல் பெருமை பொருந்திய மலைநாட்டில் அதிகப்பட் டிருக்கின்றமலைகள் தம்முடன் வருதலை யொத்திருந்தன; சேனாவீரர்கள் பக்கங்களில் பரவிச் செல்லுதல் அங்கு அம் மலைகளைச் சூழ்ந்த காடு முழுதும் உடன் செல்லுதல் போலுங் காட்சியடைந்திருந்தது. - எ - று.

***புரவித் திரள்கள் ஆயோகப் பொலிவின் அசைவிற் போதுவன***
***அரவச் சேனைக் கடல்தரங்கம் மடுத்து மேன்மேல் அடர்வனபோல்***
***விரவிப் பரந்து சென்றனவால் மிசையும் அவலும் ஒன்றாக***
***நிரவிப் பரந்த நெடுஞ்சேனை நேமி நெறியச் சென்றனவால்.*** 49

(இ - ள்.) குதிரைக் கூட்டங்கள் சேனைப் பொலிவோடும் அசைந்து கொண்டு செல்லுதல், பாம்பின் கூட்டங்கள் அலை களையுடைய கடலையடுத்து மேலுமேலும் நெருங்குவன போலக் கலந்து பரவிச் சென்றன; மேடும் பள்ளமுஞ் சமமாகும்படி நிரவிச் சென்ற பெருஞ் சேனைகள் பூமி நெளியும்படி சென்றன. - எ - று.

***அந்நாட் டெல்லை கடந்தணைய அமைச்சர்க் கெல்லாம் விடையருளி***
***மின்னார் மணிப்பூண் மன்னவனார் வேண்டு வாரை உடன்கொண்டு***
***கொன்னார் அயில்வேல் மறவர்பயில் கொங்கர் நாடு கடந்தருளிப்***
***பொன்னாட் டவரும் அணைந்தாடும் பொன்னிநீர் நாட்டிடைப்***
***போவார்.*** 50

(இ - ள்.) மின்போல் விளங்கும் இரத்தினா பரணங்களை யணிந்த சேரமான் பெருமாணாயனார் அம்மலை நாட்டின் எல்லையைக் கடந்துவர, பின் மந்திரிமார்களுக்கெல்லாம் விடை கொடுத்தருளி வேண்டியவர்களை உடனழைத்துக் கொண்டு, அச்சந்தருகின்ற கூரிய வேற்படையையுடைய மறவர்கள் வாழும் கொங்கு நாட்டைக் கடந்து, பொன்னுலகவாசிகளாகிய தேவர் களும் அடைந்து மூழ்குகின்ற (புண்ணிய தீர்த்தமாகிய) காவிரி நதி சூழ்ந்த சோழநாட்டின் கண் செல்வாராயினார். - எ - று.

**சென்ற திசையிற் சிவனடியார் சிறப்பி னோடும் எதிர்கொள்ளக்**
**குன்றுங் காணும் உடைக்குறும்பர் இடங்கள் தோறும் குறைவறுப்பத்**
**துன்று முரம்பும் கான்யாறும் துறுகற் சுரமும் பலகடந்து**
**வென்றி விடையார் இடம்பலவும் மேவிப் பணிந்து செல்கின்றார். 51**

(இ - ள்.) தாம் செல்லுந்திசைகளிலுள்ள சிவனடியார்கள் சிறப்போடும் எதிர்கொள்ளவும், குன்றுகளையுங் காடுகளையுமுடைய குறுநில மன்னர்கள் அவ்வவ் விடங்கடோறும் தங்களுக்கு நேர்ந்த குறைவை யொழிக்கவும் பொருந்திய மேட்டுப் பூமிகளும், கானாறுகளும் துறுகற்களையுடைய பாலை நிலங்களுமாகிய பலவற்றையுங் கடந்து, வெற்றி பொருந்திய இடபவாகனத்தையுடைய சிவபெருமானது திருப்பதிகள் பலவற்றையுமடைந்து வணங்கிச் செல்வாராயினார். - எ - று.

**பொருவில் பொன்னித் திருநதியின் கரைவந் தெய்திப் புனிதநீர்**
**மருவுந் தீர்த்தம் மகிழ்ந்தாடி மருங்கு வடபாற் கரைஏறித்**
**திருவிற் பொலியுந் திருப்புலியூர்ச் செம்பொன் மன்றுள் நடம்போற்ற**
**உருகு மனத்தி னுடன்சென்றார் ஒழியா அன்பின் வழிவந்தார். 52**

(இ - ள்.) ஒப்பற்ற காவிரிநதிக் கரையில் வந்தடைந்து தூய்மையாகிய நீர் பொருந்திய அத்தீர்த்தத்தில் மகிழ்ந்து ஸ்நானஞ்செய்து அருகிலுள்ள வட திசைக் கரையிலேறி பலவகைச் செல்வங்களினால் சிறந்தோங்குகின்ற திருப்புலியூரிலுள்ள கனகசபையிற் சிவபெருமான் செய்தருளும் ஆனந்தத் தாண்டவத்தை வணங்கித் துதிக்கும் பொருட்டு நீங்காத அன்பின் வழியே வந்தருளிய சேரமான் பெருமாணாயனார், கசிந்துருகுகின்ற திருவுள்ளத்துடன் சென்றருளினார். - எ - று.

**வந்து தில்லை மூதூரின் எல்லை வணங்கி மகிழ்ச்சியினால்**
**அந்த ணாளர் தொண்டர்குழாம் அணைந்த போதில் எதிர்வணங்கிச்**
**சந்த விரைப்பூந் திருவீதி இறைஞ்சித் தலைமேற் கரம்முகிழ்ப்பச்**
**சிந்தை மகிழ எழுநிலைக்கோ புரத்தை அணைந்தார் சேரலனார். 53**

(இ - ள்.) பழமையாகிய திருத்தில்லைப் பதியில் வந்து திருவெல்லையை வணங்கி தில்லை வாழந்தணர்களும் அடியார் திருக்கூட்டங்களும் மகிழ்வோடு எதிர்கொண்டபொழுது அவர்களை யெதிரே வணங்கி, நறுமணங் கமழும் மலர்களையுடைய அழகிய திருவீதியை வணங்கிச் சிரமேற் கரங்களைக் குவித்து மனமகிழும்படி ஏழுநிலைகளையுடைய திருக்கோபுரத்தைச் சேரமான் பெருமாணா யனாரடைந்தருளினார். - எ - று.

***நிலவும் பெருமை எழுநிலைக்கோ புரத்தின் முன்னர் நிலத்திறைஞ்சி,***
***மலருங் கண்ணீர்த் துளிததும்பப் புகுந்து மணிமா ளிகைவலங்***
***கொண்(டு),***
***உலகு விளக்குந் திருப்பேரம் பலத்தை வணங்கி உள்ள ணைந்தார்***
***அலகில் அண்டம் அளித்தவர்நின் றாடுந் திருச்சிற் றம்பலமுன். 54***

(இ - ள்.) மேன்மை விளங்குகின்ற ஏழுநிலைத் திருக் கோபுரத்தின் முன்னே பூமியில் விழுந்து வணங்கி, மலர்ந்த திருக்கண்களினின்றும் ஆனந்தக் கண்ணீர் ததும்பும்படி உள்ளே புகுந்து அழகிய திருக்கோயிற் றிருமாளிகையைப் பிரதட்சணஞ் செய்து, உலகத்திலுள்ள ஆன்மகோடிகளைத் தெளிவிக்கின்ற திருப்பேரம்பலத்தை வணங்கி, எண்ணிறந்த அண்டகோடிகளை யளித்தருளிய ஸ்ரீ நடராசப் பெருமான் உள்ளே நின்று ஆனந்தத் தாண்டவம் புரிந்தருளுந் திருச்சிற்றம்பலத்தின் முன்னடைந் தருளினார். - எ - று.

***அளவில் இன்பப் பெருங்கூத்தர் ஆட எடுத்த கழல்காட்ட***
***உளமும் புலனும் ஒருவழிச்சென் றுருகப் போற்றி உய்கின்றார்***
***களனில் விடம்வைத் தளித்தஅமு தன்றி மன்றில் கழல்வைத்து***
***வளருந் திருக்கூத் தமுதுலகுக் களித்த கருணை வழுத்தினார். 55***

(இ - ள்.) அளவற்ற பேரின்பவடிவினராகிய ஸ்ரீ நடராசப் பெருமான் திருநடனஞ் செய்யும் பொருட்டுத் தூக்கியருளிய குஞ்சிதபாதத்தைத் தரிசிப்பித்தருள, மனமும் ஐம்புலன்களும் ஒருமைப்படச் சென்று மனமுருகத் துதிக்கின்றவராகிய சேரமான் பெருமாணாயனார், திருமிடற்றில் விடத்தைத் தரித்துத் (தேவர்களுக்குக்) கொடுத்தருளிய அமுதமேயன்றி கனகசபையில் திருவடியை வைத்துத் திருவருள் வளருந் திருநடனமாகிய அமுதத்தை உலகத்திற்கு அளித்தருளிய திருவருட்டிறத்தைத் துதித்தருளினார். - எ - று.

***ஆரா ஆசை ஆனந்தக் கடலுள் திளைத்தே அமர்ந்தருளால்***
***சீரார் வண்ணப் பொன்வண்ணத் திருவந் தாதி திருப்படிக்கீழ்ப்***
***பாரா தரிக்க எடுத்தேத்திப் பணிந்தார் பருவ மழைபொழியும்***
***காரால் நிகர்க்க அரியகொடைக் கையார் கழறிற் றறிவார்தாம். 56***

(இ - ள்.) கார்ப்பருவத்தில் பெருமழையைப் பொழியு மேகத்தினாலும் நிகர்த்தற்கரிய ஈகைத் தன்மை பொருந்திய திருக்கரத்தினையுடைய சேரமான் பெருமாணாயனார், நீங்காத

பெருவிருப்பினையுடைய சிவானந்தப் பெருங்கடலில் மூழ்கிப் பொருந்திய ஸ்ரீ நடராசப் பெருமான் றிருவருளினால், சிறப்பு மிக்க அழகிய பொன்வண்ணத் தந்தாதியைத் திருப்படிக்கீழ் நின்று உலகத்தார் விருப்புறும்படி பாடித் துதித்து வணங்கி யருளினார். - எ - று.

**தம்பி ரானார்க் கெதிர்நின்று தமிழ்ச்சொன் மாலை கேட்பிக்க**
**உம்பர் வாழ நடமாடும் ஒருவர் அதற்குப் பரிசிலெனச்**
**செம்பொன் மணிமன் றினிலெடுத்த செய்ய பாதத் திருச்சிலம்பின்**
**இம்பர் நீட எழுந்த ஒலி தாமும் எதிரே கேட்பித்தார். 57**

(இ - ள்.) (நாயனார்) சிவபெருமான் திருமுன்னின்று, தமிழ்ச் சொற்களாலாகிய பிரபந்தமாலையைக் கேட்பிக்க, தேவர்கள் சிவானந்தப் பெருவாழ்வடையும் பொருட்டுத் திருநடனஞ் செய்தருளும் ஸ்ரீ நடராசப் பெருமான் அதற்குப் பரிசிலாக, செம்பொன்னாலாகிய திருச்சிற்றம்பலத்திற் குஞ்சித பாதத் தினது திருச்சிலம்பினின்றும் இவ்வுலகமோங்கும்படி எழுந்த ஓசையை எதிரே தாமுங் கேட்பித்தருளினார். - எ - று.

**ஆடற் சிலம்பின் ஒலிகேட்பார் அளவில் இன்ப ஆனந்தம்**
**கூடப் பெற்ற பெரும்பேற்றின் கொள்கை வாய்ப்பக் கும்பிடுவார்**
**நீடப் பணியுங் காலமெலாம் நின்று தொழுது புறம்போந்து**
**மாடத் திருமா ளிகைவீதி வணங்கிப் புறத்து வைகினார். 58**

(இ - ள்.) திருநடனச் சிலம்போசையைக் கேட்பவராகிய சேரமான் பெருமாணாயனார் அளவில்லாத பேரின்பத்தைத் தருகின்ற சிவானந்தமானது கைவரப் பெற்ற பெரும்பேற்றின் தன்மையமையத் தொழுகின்றவராய், வணங்க வேண்டிய பூசாகாலங்கடோறும் கால நீட்டித்து நின்று வணங்கி வெளியில் வந்து, மேல் மாடங்களையுடைய திருமாளிகைத் திருவீதியை வணங்கிப் புறத்தில் வசித்தருளினார். - எ - று.

**பரவுந் தில்லை வட்டத்துப் பயில்வார் பைம்பொன் அம்பலத்துள்**
**அரவும் புனலும் சடையாட ஆடு வார்கூத் தாராமை**
**விரவுங் காதல் மிக்கோங்க வேதம் படியுந் திருப்படிக்கீழ்**
**இரவும் பகலும் பணிந்தேத்தி இன்பஞ் சிறக்கும் அந்நாளில். 59**

(இ - ள்.) பரந்ததில்லைப் பதியின் எல்லையில் வசிக்கின்ற நாயனார், கனக சபையில் பாம்பும் கங்கையும் திருச்சடையி லாடும்படி திருநடனஞ் செய்கின்றவராகிய சிவபெருமானது

திருக்கூத்தை ஆராமையாய்த் தோன்றிய பேரன்பு அதிகப்பட் டோங்க, வேதங்கள் வணங்குகின்ற திருக்களிற்றுப் படியின் கீழே இரவும் பகலும் வணங்கித் துதித்துப் பேரின்புற்றிருக்கின்ற நாள்களில். - எ - று.

***ஆடும் பெருமான் பாடல்கேட் டருளித் தாழ்த்த படிதமக்குக்***
***கூடும் பரிசால் முன்பருளிச் செய்த நாவ லூர்கோவை***
***நீடும் பெருங்காதலிற்காண நிறைந்த நினைவு நிரம்பமால்***
***தேடும் பாதர் அருளினால் திருவா ரூர்மேற் செலஎழுந்தார். 60***

(இ - ள்.) ஸ்ரீ நடராசப் பெருமான் திருப்பாடல் கேட்டருளித் (தமக்குத் திருச்சிலம்போசை கேட்பித் தருளத்) தாழ்ந்த தன்மையைப் பொருந்திய வகையினால் தமக்கு முன்பு அருளிச் செய்யப் பெற்ற திருநாவலூரராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமி களை மிக்க பெருவிருப்பாடு தரிசிக்கும்படி நிறைந்த எண்ண மானது நிரம்பும் பொருட்டு, விஷ்ணுவினால் தேடப்பட்ட திருவடியை யுடைய சிவபெருமானது திருவருளினால் திருவா ரூருக்குச் செல்லும்படி யெழுந்தருள்வாராயினார். - எ - று.

***அறிவின் எல்லை யாயதிருத் தில்லை எல்லை அமர்ந்திறைஞ்சிப்***
***பிறிவி லாத திருவடியைப் பெருகும் உள்ளத் தினிற்பெற்றுச்***
***செறியும் ஞான போனகர்வந் தருளும் புகலி சென்றிறைஞ்சி***
***மறிசேர் கரத்தார் கோயில்பல வணங்கி மகிழ்ந்து வழிக்கொள்வார். 61***

(இ - ள்.) மெய்ஞ்ஞானத்தின் றிருவெல்லையாக விளங்கும் திருத்தில்லையின் திருவெல்லையை விரும்பி வணங்கி, நீங்காத திருவடியை அன்பு பெருகுகின்ற திருவுள்ளத்திற் சிந்தித்து, திருவருள் நிறைந்த திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அவதரித்தருளிய சீகாழித் திருப்பதியை யடைந்து வணங்கி, மான் கன்றை யேந்திய திருக்கரத்தினையுடைய சிவபெருமான் வீற்றிருந் தருளும் பல திருக்கோயில்களை வணங்கி மகிழ்வுற்றுச் செல்வா ராயினார். - எ - று.

***வழியிற் குழியிற் செழுவயலின் மதகின் மலர்வா விகளின்மடுச்***
***சுழியிற் றரளந் திரைசொரியுந் துறைநீர்ப் பொன்னி கடந்தேறி***
***விழியிற் றிகழுந் திருநுதலார் விரும்பும் இடங்கள் இறைஞ்சியுகக்***
***கழிவிற் பெருவெள் ளமுங்கொள்ளாக் கழனி ஆரூர் கண்ணுற்றார். 62***

(இ - ள்.) வழிகளிலும், பள்ளங்களிலும், செழுமையாகிய வயல்களிலும், மதகினையடுத்த தாமரைத் தடாகங்களிலும்

மடுச்சுழிகளிலும் அலைகள் முத்துக்களைச் சொரிகின்ற நீர்த் துறையையுடைய காவிரிநதியைக் கடந்து சென்று, விளங்குகின்ற நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான் விரும்பி வீற்றிருந் தருளும் பல திருப்பதிகளையும் வணங்கி, யுகாந்தத்திலுண் டாகும் பெருவெள்ளமுங் கொள்ளப் பெறாத கழனி சூழ்ந்த திருவாரூர்த் திருப்பதியை யடைந்தருளினார். - எ - று.

**நம்பி தாமும் அந்நாட்போய் நாகைக் காரோ ணம்பாடி**
**அம்பொன் மணிப்பூண் நவமணிகள் ஆடை சாந்தம் அடற்பரிமா**
**பைம்பொற் சுரிகை முதலான பெற்று மற்றும் பலபதியில்**
**தம்பி ரானைப் பணிந்தேத்தித் திருவா ரூரிற் சார்ந்திருந்தார். 63**

(இ - ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளும் அதற்கு முன் னாளிற் சென்று திருநாகைக் காரோணமென்னுந் திருப்பதியின் கண் ஆதிபுராணருக்குத் திருப்பதிகம் பாடியருளி, பசும்பொன் னாலாகிய இரத்தினாபரணங்களும், நவரத்தினங்களும், பசும் பொன்னாலாகிய சுரிகையும் முதலிய பலபொருள்களைப் பெற்று, வேறுபல திருப்பதிகளிலும் சிவபெருமானை வணங்கித் துதித்துத் திருவாரூரிற் சேர்ந்திருந்தருளினார். - எ - று.

**வந்து சேரர் பெருமானார் மன்னுந் திருவா ரூரெய்த**
**அந்த ணாளர் பெருமானும் அரசர் பெருமான் வரபெற்றுச்**
**சிந்தை மகிழ எதிர்கொண்டு சென்று கிடைத்தார் சேரலானார்**
**சந்த விரைத்தார் வன்றொண்டர் முன்பு விருப்பி னுடன்தாழ்ந்தார். 64**

(இ - ள்.) அப்பொழுது சேரமான் பெருமாணாயனாரும் நிலைபெற்ற திருவாரூரை வந்துசேர, வேதியர் தலைவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளும் அரசர் தலைவராகிய சேரமான் பெருமாணாயனார் வரப்பெற்று, மனமகிழும்படி யெதிர் கொண்டு சென்றடைந்தார்; சேரமான் பெருமாணாயனார் நறுமணங் கமழும் அழகிய மாலையை யணிந்த ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருமுன்னே விருப்பத்தோடும் வீழ்ந்து வணங்கி. - எ - று.

**முன்பு பணிந்த பெருமாளைத் தாமும் பணிந்து முகந்தெடுத்தே**
**அன்பு பெருகத் தழுவவிரைந் தவரும் ஆர்வத் தொடுதழுவ**
**இன்ப வெள்ளத் திடைநீந்தி ஏற மாட்டா தலைவார்போல்**
**என்பும் உருக உயிர்ஒன்றி உடம்பும் ஒன்றாம் எனஇசைந்தார். 65**

**கழறிற் றறியுந் திருவடியுங் கலைநா வலர்தம் பெருமானாம்**
**முழவிற்பொலியுந் திருநெடுந்தோள் முனைவர் தம்மை உடன்கொண்டு**
**விழவிற் பொலியும் மாளிகையில் விளங்கு சிங்கா சனத்தின்மிசை,**
**நிழல்திக் கொளிரும் பூணாரை இருத்தித் தாமும் நேர்நின்று. 150**

(இ - ள்.) சேரமான் பெருமாணாயனாரும், சாஸ்திரங்களை யுணர்ந்த திருநாவலூரரர் தலைவராகிய மத்தளம் போன்று விளங்கும் நீண்ட திருத்தோள்களையுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் தம்முடனழைத்துக் கொண்டு மங்களகரமாக விளங்குகின்ற திருமாளிகையில் ஒளியமைந்த சிங்காசனத்தின் மேல் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளை யெழுந்தருளச் செய்து தாமும் எதிரில் நின்று. - எ - று.

**செம்பொற் கரக வாசநீர் தேவி மார்கள் எடுத்தேந்த**
**அம்பெற் பாதந் தாம்விளக்கி அருளப் புகலும் ஆரூரர்**
**தம்பொற்றாளை வாங்கி 'இது தகா'தென் றருளத் தரணியில் வீழ்ந்து**
**"எம்பெற் றிமையால் செய்தனஇங் கெல்லாம் இசையவேண்டும்" என. 151**

(இ - ள்.) செம்பொன்னாலாகிய கரகத்தில் நறுமணங் கமழும் நன்னீரைத் தமது பத்தினிமார்களெடுத்து ஏந்த, (நாயனார்) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளது அழகிய பொன்மய மாகிய திருவடிகளை யலம்பத் தொடங்கவும், அந்நம்பியாரூரர் தமது பொன்மயமாகிய திருவடிகளை வாங்கிக் கொண்டு, நீர் செய்யு மிக்காரியந் தகாதென்று கூறியருள, அவர் பூமியில் விழ்ந்து வணங்கி, (சுவமிகளே!) அடியேங்களுடைய விருப்பத்தி னால் இங்குச் செய்தனவாகிய எல்லாப் பூசனைகளுக்குந் தேவரீர் திருவுள்ள மிசையவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய. - எ-று.

**பெருமாள் வேண்ட எதிர்மறுக்க மாட்டார் அன்பிற் பெருந்தகையார்,**
**திருமா நெடுந்தோள் உதியர்பிரான் செய்த எல்லாங் கண்டிருந்தார்;**
**அருமா னங்கெள் பூசனைகள் அடைவே எல்லாம் அளித்ததற்பின்,**
**ஒருமா மதிவெண் குடைவேந்த ருடனே அமுது செய்து வந்தார். 152**

(இ - ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம்மைச் சேரமான் பெருமாணாயனார் வேண்டிக் கொள்ள, அதனை எதிரே மறுக்க மாட்டாதவராய், விஜயலட்சுமி பொருந்திய பெரிய திருத்தோள்களையுடைய சேரர் பெருமான் செய்த பூசனைக ளனைத்தும் முறைப்படி செய்தானபின்பு, ஒப்பற்ற பூரண சந்திரன் போலும் வெண்கொற்றருக்குடையினையுடைய

அவ்வரசர் பெருமான், அச்சுந்தரமூர்த்தி சுவாமிகளுடன் திருவமுது செய்து மகிழ்ச்சியடைந்தருளினார். - எ - று.

**சேர ருடனே திருவமுது செய்த பின்பு கைகோட்டி**
**ஆரம் நறுமென் கலவைமான் மரச்சாந் தாடை அணிமணிப்பூண்**
**ஈர விரைமென் மலர்ப்பணிகள் இனைய முதலாயின வருக்கம்**
**சார எடுத்து வன்றொண்டர் சாத்தி மிக்க தமக்காக்கி. 153**

(இ - ள்.) சேரமான் பெருமாணாயனாரோடு திருவமுது செய்தருளிய பின்பு கைகளை யலம்பிக் கொண்டு சந்தனத்தினது நறுமணங் கமழும் மெல்லிய மலர்மாலைகளும் இவைமுதலாகிய பல பொருள்களையும் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குப் பொருந்த வெடுத்தணிந்து மிகுந்தவைகளைத் தாமணிந்து கொண்டு. - எ - று.

**பாடல் ஆடல் இன்னியங்கள் பயிறல் முதலாம் பண்ணையினில்**
**நீடும் இனிய விநோதங்கள் நெருங்கு காலந் தொறுநிகழ**
**மாடு விரைப்பூந் தருமணஞ்செய் ஆரா மங்கள் வைகுவித்துக்**
**கூட முனைப்பா டியர்கோவைக் கொண்டு மகிழ்ந்தார் கோதையார். 154**

(இ - ள்.) பாடுதல்-ஆடுதல்-இனிய வாத்தியங்கள் வாசித்தல் முதலாகிய கூட்டங்களில் இனிமை மிக்க வேடிக்கைகள் இவர்களடையுங் காலங்கடோறும் நடக்க, பக்கங்களில் நறுமணங் கமழும் மலர்களையுடைய விருட்சங்கள் நற்கந்தம் வீசுகின்ற சோலைகளில் வசிக்கச் செய்து, சேரமான் பெருமாணாயனார் ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளைத் தம்முடன் கொண்டு மகிழ்வடைந்தருளினார். - எ - று.

**செண்டாடுந் தொழில்மகிழ்வுஞ் சிறுசோற்றுப் பெருஞ்சிறப்பும்**
**வண்டாடு மலர்வாவி மருவியநீர் விளையாட்டும்**
**தண்டாமும் மதகும்பத் தடமாலைப்போர் சலமற்போர்**
**கண்டாரா விருப்பெய்தக் காவலனார் காதல்செய்நாள். 155**

(இ - ள்.) செண்டாடுந் தொழிலா லுண்டாகின்ற மகிழ்ச்சியும், சிறு சோறிடுகின்ற பெருஞ் சிறப்புக்களும், வண்டுகள் சுழல்கின்ற தாமரைத் தடாகங்களில் பொருந்திய நீர்விளையாடல்களும், தடுக்கப்படாத மும்மதங்களையுடைய மத்தகம் பொருந்திய யானைப் போர்களும், கோபத்தோடு செய்கின்ற மல்ல யுத்தங்களும், பார்த்து நீங்காத பெருவிருப் புண்டாகச் சேரமான் பெருமாணாயனார் விருப்பஞ் செய்து கொண்டிருக்கு நாள்களில். - எ - று.

***நாவலர்தம் பெருமானும் திருவாரூர் நகராளும்***
***தேவர்பிரான் கழலொருநாள் மிகநினைந்த சிந்தையராய்***
***ஆவியை "ஆரூரானை மறக்கலுமா மே" என்னும்***
***மேவியசொற் றிருப்பதிகம் பாடியே வெருவுற்றார்.*** **156**

(இ - ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளும் திருவாரூர்த் திருப்பதியை யாண்டருளும் தேவர்கள் நாயகராகிய ஸ்ரீ தியாகராசப் பெருமானது திருவடிகளை ஒருதினம் மிகவும் நினைந்த திருவுள்ள முடையவராய், என துயிர் போன்றவரை, "ஆரூரானை மறக்கலுமாமே" என்னு மிறுதியை யுடைய பொருந்திய சொற்க ளமைந்த திருப்பதிகத்தைப் பாடி யச்சமுற் றருளினர். - எ - று.

***திருவாரூர் தனைநினைந்து "சென்றுதொழு வேன்" என்று***
***மருஆர்வத் தொண்டருடன் வழிக்கொண்டு செல்பொழுதில்***
***ஒருவாநண் புள்ளுருக உடனெழுந்து கைதொழுது***
***பெருவான வரம்பனார் பிரிவாற்றார் பின்செல்வார்.*** **157**

(இ - ள்.) திருவாரூரைச் சிந்தித்து நான் அதனைச் சென்று வணங்குவே னென்று அன்பு பொருந்திய திருத்தொண்டர் களுடன் புறப்பட்டுப் போகும் பொழுது, சிறந்த சேரமான் பெருமாணாயனார் நீங்காத நண்பானது உள்ளேயுருக அவருட னெழுந்து கைகுவித்து வணங்கிப் பிரிவாற்றாதவராய்ப் பின் செல்வாராயினார். - எ - று.

***வன்றொண்டர் முன்னெய்தி மனமழிந்த உணர்வினராய்***
***"இன்றுமது பிரிவாற்றேன்; என்செய்கேன் யான்" என்ன***
***"ஒன்றுநீர் வருந்தாதே உமதுபதி யின்கணிருந்(து)***
***அன்றினார் முனைமுருக்கி அரசாளும்" எனமொழிந்தார்.*** **158**

(இ - ள்.) (நாயனார்) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு முன்னே வந்து, மனமகிழ்ந்த பேருணர்ச்சியுடையவராய், அடியேன் இன்று தேவரீரது பிரிவினையாற்றகில்லேன்; யாது செய்வேனென்று கூற, (அதற்கு ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள்) நீர் சிறிதும் வருந்தாமல் உமது இராச்சியத்திலிருந்து பகைவர் களைப் போர் செய்து வென்று அரசாள்வீராக வென்று கூறி யருளினார். - எ - று.

***ஆரூரர் மொழிந்தருள அதுகேட்ட அருட்சேரர்***
***"பாரோடு விசும்பாட்சி எனக்(கு) உமது பாதமலர்***
***தேரூரும் நெடுவீதித் திருவாரூர்க் கெழுந்தருள***
***நேரூரும் மனக்காதல் நீக்கவும்அஞ் சுவன்" என்றார். 159***

(இ - ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் இவ்வாறு கூறியருள, அதனைக் கேட்ட அருட்செல்வராகிய சேரமான்பெருமாணா யனார் (சுவாமிகளே!) தேவரீருடைய திருவடித்தாமரைகளின் சேவையே அடியேனுக்கு மண்ணுலகத்தோடு விண்ணுலகத்தை யும் அரசாட்சி செய்வதாகும்; (அத்தகையதேவரீர்) தேரோடுந் திருவீதியையுடைய திருவாரூருக்கு எழுந்தருளும் பொருட்டு நேரே கொண்டருளிய மனவிருப்பத்தைத் தடைசெய்வதற்கும் அஞ்சுகின்றேனென்று கூறினார். - எ - று.

***மன்னவனார் அதுமொழிய வன்றொண்டர் எதிர்மொழிவார்***
***"என்னுயிருக் கின்னுயிராம் எழிலாரூர்ப் பெருமானை***
***வன்நெஞ்சக் கள்வனேன் மறந்திரேன் மதியணிந்தார்***
***இன்னருளால் அரசளிப்பீர் நீர்இருப்பீர்" எனஇறைஞ்ச. 160***

(இ - ள்.) சேரமான் பெருமாணாயனார் அவ்வார்த்தை கூற, ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அதற்கு எதிர்வார்த்தை கூறியருளு வார், அழகிய திருவாரூரிலெழுந்தருளிய எனதுயிர்க்குயிராகிய ஸ்ரீ தியாகராசப் பெருமானைக் கல்நெஞ்சனாகிய அடியேன் மறந்திருக்கமாட்டேன்; சந்திரசேகரராகிய பெருமானது திருவருளினால் அரசாட்சி செய்கின்ற நண்பரே! நீரிவ்விடத் திலேயே இருந்து அரசாள்வீராகவென்று வணங்கியருள. -எ-று.

***மற்றவரும் பணிந்திசைந்தே மந்திரிகள் தமைஅழைத்துப்***
***"பொற்புநிறை தொன்னகரில் இற்றைக்கு முன்புகுந்த***
***நற்பெரும்பண் டாரநா னாவருக்க மானவெலாம்***
***பற்பலவாம் ஆளின்மிசை ஏற்றிவரப் பண்ணும்" என. 161***

(இ - ள்.) சேரமான் பெருமாணாயனாரும் வணங்கி அதற் குடன்பட்டு, மந்திரிமார்களையழைத்து, அழகு பொருந்திய பழைய நகரத்தினின்றும் நேற்றுவரையிற் கொண்டுவரப்பட்ட பலவகையாகிய நமது பெருந்திரவியங்களனைத்தையும், பல பல ஆள்களில் சுமையேற்றிக் கொண்டு வரும்படி செய்வீர்க ளென்று கட்டளையிட்டருள. - எ - று.

**ஆங்கவரும் அன்றுவரை ஆயமா கியதனங்கள்**
**ஓங்கியபொன் நவமணிகள் ஒளிர்மணிப்பூண் துகில்வருக்கம்**
**ஞாங்கர்நிறை விரையுறுப்பு வருக்கமுதல் நலஞ்சிறப்பத்**
**தாங்குபொதி வினைஞர்மேல் தலமலியக் கொண்டணைந்தார். 162**

(இ - ள்.) அம்மந்திரிமார்களும் அன்றுவரையிற் சேர்ந்திருந்த திரவியங்களையும், விலை யுயர்ந்த பொற்குவைகளையும், நவரத்தினங்களையும், விளங்குகின்ற இரத்தினாபரணங்களையும், ஆடைவருக்கங்களையும், பக்கத்தில் நிறைந்த கந்தவருக்கங்களையும், இவை முதலியமற்றப் பொருள்களையும் நன்மை மிகும்படி சுமை தூக்கும் ஆள்களின்மேல் அவ்வூர் நிறையக் கொண்டு வந்தார்கள். - எ - று.

**மற்றவற்றின் பரப்பெல்லாம் வன்றொண்டர் பரிசனத்தின்**
**முற்படவே செலவிட்டு முனைப்பாடித் திருநாடர்**
**பொற்பதங்கள் பணிந்தவரைத் தொழுதெடுத்துப் புனைஅலங்கல்**
**வெற்புயர்தோ ளுறத்தழுவி விடைஅளித்தார் வன்றொண்டர். 163**

(இ - ள்.) பலவகையாகிய இப்பொருள்களனைத்தையும் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளது பரிசனத்தடியார்களுக்கு முன்னே போகும்படி யனுப்பிவிட்டு, அவரது பொன்மயமாகிய திருவடிகளை வீழ்ந்து வணங்கிய சேரமான் பெருமாணாயனாரை ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் வணங்கியெடுத்து, மாலையை யணிந்த மலை போன்ற தோளில் பொருந்தத் தழுவி அவருக்கு விடை கொடுத்தருளினார். - எ - று.

**ஆரூரர் அவர்தமக்கு விடைஅருளி அங்ககன்று**
**காரூரு மலைநாடு கடந்தருளிக் கற்சுரமும்**
**நீரூருங் கான்யாறும் நெடுங்கானும் பலகழியச்**
**சீரூருந் திருமுருகன் பூண்டிவழிச் செல்கின்றார். 164**

(இ - ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் சேரமான் பெருமாணாயனாருக்கு விடை கொடுத்தருளி, அவ்விடத்தினின்று நீங்கி, மேகங்கள் தவழும் மலைகளை யுடைய சேரநாட்டைக் கடந்து, பருக்கைக் கற்களையுடைய பாலை நிலமும், நீரோடுகின்ற கானாறுகளும் பெரிய காடுகளும் பலகடந்து, சிறப்புமிக்க திருமுருகன் பூண்டி யென்னுந் திருப்பதியின் வழியே செல்வதற்குத் திருவுள்ளங்கொண்டு போயினார். - எ - று.

**திருமுருகன் பூண்டிஅயற் செல்கின்ற போழ்தின்கண்**
**பொருவிடையார் நம்பிக்குத் தாமேபொன் கொடுப்பதால்**
**ஒருவர்கொடுப் பக்கொள்ள ஒண்ணாமைக் கதுவாங்கிப்**
**பெருகருளால் தாங்கொடுக்கப் பெறுவதற்கோ? அதுஅறியோம். 165**

(இ - ள்.) திருமுருகன் பூண்டிப்பதிக்குச் சமீபத்திற் செல்லும் பொழுது, போர்செய்கின்ற இடபவாகனத்தையுடைய சிவ பெருமான் தாமே ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு வேண்டிய பொன்னைக் கொடுப்பதல்லாமல் வேறொருவர் கொடுக்க அதனை இவர் பெறக்கூடாமை பொருட்டு அதனை வாங்கி, மிக்க திருவருளினால், பின்பு தாம்கொடுத்தருள அவர் பெறுதற் பொருட்டோ? அத்னை இன்னதென்றறியோம். - எ - று.

**வென்றிமிகு பூதங்கள் வேடர்வடி வாய்ச்சென்று**
**வன்றொண்டர் பண்டாரம் கவரஅருள் வைத்தருள**
**அன்றினார் புரமெரித்தார் அருளால்வேட் டுவப்படையாய்ச்**
**சென்றவர்தாம் வரும்வழியில் இருபாலுஞ் செயிர்த்தெழுந்து. 166**

(இ - ள்.) (சிவபெருமான்) வெற்றி பொருந்திய பூதங்கள் வேடுவர் உருவங் கொண்டு போய் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் கொண்டு வருந் திரவியங்களைப் பிடுங்கிக் கொள்ளும்படி திருவருள் வைத்தருள, பகைவர்களது முப்புரங்களைச் சிரித் தெரித்தருளிய அவ்வெம்பெருமானது திருவருளினால் பூதங்கள் வேடுவப் படையாக வுருவங் கொண்டு சென்ற, ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் வருகின்ற வழியில் இருபுறங்களிலும் கோபித் தெழுந்து நின்று. - எ - று.

**வில்வாங்கி அலகம்பு விசைநாணிற் சந்தித்துக்**
**"கொல்வோம்இங் கிட்டுப்போம்" எனக்கோபத் தாற்குத்தி**
**எல்லையில்பண் டாரமெலாங் கவர்ந்துகொள இரிந்தோடி**
**அல்லலுடன் பறியுண்டார் ஆரூரர் மருங்கணைந்தார். 167**

(இ - ள்.) வில்லை வளைத்துக் கூர்மை பொருந்திய அம்புகளை விசையோடு நாணில் தொடுத்து, உங்களைக் கொன்று போடுவோம் அத்திரவியங்களனைத்தையும் இங்குப் போட்டு விட்டுப் போய் விடுங்களென்று கோபத்தினால் குத்தி, அளவற்ற திரவியங்களையும் பிடுங்கிக்கொள்ள, பறிகொடுத்த சுமையாள்கள் வருத்தத்தோடும் பல வழியாகச் சிதறியோடி ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளருகிலடைந்தார்கள். - எ - று.

***ஆரூரர் தம்பால்அவ் வேடுவர்சென் றணையாதே***
***நீரூருஞ் செஞ்சடையார் அருளினால் நீங்கஅவர்***
***சேரூராம் திருமுருகன் பூண்டியினிற் சென்றெய்திப்***
***போரூரு மழவிடையார் கோயிலைநா டிப்புக்கார். 168***

(இ - ள்.) கங்கை நதி தங்கிய சிவந்த சடைமுடியை யுடைய சிவபெருமானது ஆஞ்ஞையினாலே அவ்வேடுகள் ஸ்ரீ சுந்தர மூர்த்தி சுவாமிகளிடத்திலே செல்லாமல் நீங்கிவிட, அவ்வேடு வர்கள் சென்ற ஊராகிய திருமுருகன் பூண்டியில் சென் றடைந்து, போர்த்தொழிலைச் செய்கின்ற இளைய இடப வாகனத்தையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக் கோயிலை விரும்பியடைந்தருளினார். - எ - று.

***அங்கணர்தங் கோயிலினை அஞ்சலிகூப் பித்தொழுது***
***மங்குலுற நீண்டதிரு வாயிலினை வந்திறைஞ்சிப்***
***பொங்குவிருப் புடன்புக்கு வலங்கொண்டு புனிதநதி***
***திங்கள்முடிக் கணிந்தவர்தந் திருமுன்பு சென்றணைந்தார். 169***

(இ - ள்.) சிவபெருமானது திருக்கோயிலைக் கைகளை யஞ்சலியாகக் குவித்து வணங்கி, மேகமண்டலத்தை பொருந்த வுயர்ந்த திருவாயிலை யடைந்து வணங்கி, மிக்க விருப்பத் தோடும் உள்ளே புகுந்து பிரதட்சணஞ் செய்து, தூய்மையாகிய கங்கை நதியையும் இளம்பிறையையுந் திருமுடியி லணிந்த சிவபெருமானது திருமுன்னே சென்றடைந்தருளினார். - எ - று.

***உருகியஅன் பொடுகைகள் குவித்துவிழுந் துமைபாகம்***
***மருவியதம் பெருமான்முன் வன்றொண்டர் பாடினார்***
***"வெருவுறவே டுவர்பறிக்கும் வெஞ்சுரத்தில் எத்துக்கிங்(கு)***
***அருகிருந்தீர்?" எனக் 'கொடுகு வெஞ்சிலை' அஞ்சொற்பதிகம். 170***

(இ - ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் மனமுருகுகின்ற பேரன்போடுந் திருக்கரங்கள் குவித்து விழுந்து வணங்கிப் பார்வதிபாகராகிய சிவபெருமான் திருமுன்னே, யாவரு மஞ்சும்படி வேடுவர்கள் பறிக்கின்ற வெவ்விய காட்டினிடத் திலே, "எத்துக் கிங்கிருந்தீ ரெம்பீரானீரே" என்று திருப்பாட்டி னிறுதி தோறுமமைத்து, "கொடுகு வெஞ்சிலை" என்னு முதலை யுடைய அழகிய சொற்களமைந்த திருப்பதிகத்தைப் பாடியருளி னார். - எ - று.

**பாடி'வர் பரவுதலும் பரம்பொருளாம் அவரருளால்**
**வேடுவர்தாம் பறித்தபொரு ளவையெல்லாம் விண்ணொருங்க**
**நீடுதிரு வாயிலின்முன் குவித்திடலும் நேரிறைஞ்சி**
**ஆடுமவர் திருவருளால் அப்படியே கைக்கொண்டார். 171**

(இ - ள்.) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருப்பதிகம்பாடித் துதிக்கவும் மெய்ப்பரம்பொருளாகிய சிவபெருமானுடைய திருவருளினால் வேடுவர்கள் தாங்கள் பறித்துக் கொண்டுபோன திரவியங்க ளெல்லாவற்றையும், உயர்ந்த திருவாயிலின் முன்னே ஆகாயத்தை யளாவும்படி குவிக்கவும், (ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள்) எதிரே வணங்கி நடன மூர்த்தியாகிய சிவபெருமா னது திருவருளால், முன்னிருந்தபடியே பெற்றுக் கொண்டார். - எ - று.

**கைக்கொண்டு கொடுபோம்அக் கைவினைஞர் தமைஏவி**
**மைக்கொண்ட மிடற்றாரை வணங்கிப்போய்க் கொங்ககன்று**
**மெய்க்கொண்ட காதலினால் விரைந்தேகி மென்கரும்புஞ்**
**செய்க்கொண்ட சாலியுஞ்சூழ் திருவாரூர் சென்றணைந்தார். 172**

(இ - ள்.) அப்பொருள்களைப் பெற்றுக் கொண்டு, அவற்றை யெடுத்துக் கொண்டு செல்கின்ற சுமையாட்களை யனுப்பி விட்டு, காளகண்டத்தையுடைய சிவபெருமானை வணங்கிச் சென்று கொங்குதேசத்தினின்று நீங்கி, மெய்ம்மை பொருந்திய பேரன்பினால் விரைந்து சென்று, மெல்லிய கருப்பஞ்சோலை களும், வயல்களிற் பொருந்திய செந்நெற்பயிர்களுஞ் சூழ்ந்துள்ள திருவாரூர்த் திருப்பதியைச் சென்று சேர்ந்தருளினார். - எ - று.

**நாவலர்மன் னவர்அருளால் விடைகொண்ட நரபதியார்**
**ஆவியின்ஒன் றாநண்பின் ஆரூரர் தமைநினைந்து**
**மாவலரு மலர்ச்சோலை மகோதையினில் மன்னிமலைப்**
**பூவலயம் பொதுநீக்கி அரசுரிமை புரிந்திருந்தார். 173**

(இ - ள்.) திருநாவலூர் தலைவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளது திருவருளினால் விடைபெற்றுச் சென்ற சேரமான் பெருமாணாயனார் உயிர் போன்றொற்றுமையுள்ள நண்பினை யுடைய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளைச் சிந்தித்து, மாவிருட் சங்கள் பூக்கின்ற மலர்களையுடைய சோலைசூழ்ந்த மகோதைப் பதியையடைந்து, மலைகள் சூழ்ந்த சேரதேசத்தைப் பொதுவற அரசாட்சி செய்திருந்தனர். - எ - று.

***இந்நிலைமை உதியர்பிரான் எம்பிரான் வன்றொண்டர்***
***பொன்னிவள நாடகன்று மாகோதையினில் மேற்புகுந்து***
***மன்னுதிருக் கயிலையினில் மதவரைமேல் எழுந்தருள***
***முன்னவர்வயப் பரிஉகைக்குந் திருத்தொழில்பின் மொழிகின்றாம். 174***

(இ - ள்.) இவ்வாறாகிய பெருந்தன்மையினையுடைய சேரமான் பெருமாணாயனார், எமது முதல்வராகிய ஸ்ரீ சுந்தர மூர்த்தி சுவாமிகள் தாம் வசித்தருளிய சோழ நாட்டினின்று நீங்கி, மகோதையென்னுந் திருப்பதியையடைந்து (ஊழி தோறூழிமுற்றுமுயர்ந்தோங்குகின்ற) நிலைபெற்ற திருக் கயிலாயமலைக்கு மதம் பொருந்திய வெள்ளானையின்மேல் (அரிபிரமேந்திராதி தேவர்கள் எதிர்கொள்ளும்படி) எழுந் தருளுதலும், அவருக்கு முன்னே வெற்றி பொருந்திய குதிரை யேறிச் செலுத்தியருளிய திருத்தொண்டின் மேன்மையினைப் பின்னாற் சொல்லுகின்றோம். - எ - று.

***மலைமலிந்த திருநாட்டு மன்னவனார் மாகடல்போல்***
***சிலைமலிந்த கொடித்தானைச் சேரலனார் கழல்போற்றி***
***நிலைமலிந்த மணிமாட நீள்மறுகு நான்மறைசூழ்***
***கலைமலிந்த புகழ்க்காழிக் கணநாதர் திறமுரைப்பாம். 175***

(இ - ள்.) மலைகள் (மிகுதியாக) நெருங்கப் பெற்றுள்ள சேரநாட்டுத் தலைவராகிய பெரிய கடலைப் போலும் வில்லைப் பிடித்த கொடிப்படைகளை யுடைய சேரமான் பெருமா ணாயனாரது திருவடிகளைத் துதித்து, மேனிலைகள் நிறைந்த அழகிய மாளிகைகளையுடைய பெரிய திருவீதிகளில் நான்கு வேதவோசைகளும் சூழ்ந்துள்ள சாஸ்திரப் பயிற்சிகள் நிரம்பிய புகழையுடைய சீகாழிப்பதியிலவதரித்தருளிய கணநாதநாயனா ரது அன்பின் திறத்தைச் சொல்லுகின்றோம். - எ - று.

# 38. கணநாத நாயனார் புராணம்

***ஆழி மாநிலத் தகிலமீன் றளித்தவள் திருமுலை அமுதுண்ட***
***வாழி ஞானசம் பந்தர்வந் தருளிய வளப்பின தளப்பில்லா***
***ஊழி மாகடல் வெள்ளத்து மிதந்துல கினுக்கொரு முதலாய***
***காழி மாநகர்த் திருமறை யவர்குலக் காவலர் கணநாதர். 1***

(இ - ள்.) சமுத்திரஞ் சூழ்ந்த பெரிய நிலவுலகத்தில் எல்லா வுயிர்களையு மீன்றளித்தருளிய உமாதேவயிாரது திருமுலைப் பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவவ

தாரஞ் செய்தருளிய பேரழகினை யுடையதும், அளவிடப்படாத யுகாந்தகாலத்துண்டாகிய பெரிய கடல் வெள்ளத்தில் மிதந்து உலகத்திற்கு ஒரு முதன்மையானதுமாகிய சீகாழிப்பதியில் சிறந்த வேதியர் குலத் தலைவராாக அவதரித்தவர்; (அவர் யாரெனின்) கணநாதநாயனா ரென்னுந் திருநாமமுடையவர். - எ - று.

**ஆய அன்பர்தாம் அணிமதிற் சண்பையின் அமர்பெருந் திருத்தோணி,**
**நாய னார்க்குநற் றிருப்பணியாயின நாளும்அன் பொடுசெய்து,**
**மேய அத்திருத் தொண்டினில் விளங்குவார் விரும்பிவந்**
**தணைவார்க்குத்,**
**தூய கைத்திருத் தொண்டினில் அவர்தமைத் துறைதொறும்**
**பயில்விப்பார். 2**

(இ - ள்.) அத்தன்மையாகிய கணநாதநாயனார் அழகிய மதிலையுடைய சீகாழிப்பதியில் நிலைபெற்ற பெரிய திருத் தோணியென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமா னுக்கு அன்போடு தினந்தோறும் நல்ல திருப்பணிகளைச் செய்து பொருந்திய அத்திருத்தொண்டிலேயே விளங்குகின்றவர் தம்மை விரும்பி வந்தடைபவர்களுக்குத் தூய்மையாகிய கைத் திருத்தொண்டில் அவர்களை அவ்வத்துறைகள் தோறும் பயில் விக்கின்றவர். - எ - று.

**நல்ல நந்தன வனப்பணி செய்பவர் நறுந்துணர் மலர்கொய்வோர்,**
**பல்ப ணித்தொடை புனைபவர் கொணர்திரு மஞ்சனப் பணிக்குள்ளோர்,**
**அல்லும் நண்பக லுந்திரு அலகிட்டுத் திருமெழுக்கமைப் போர்கள்,**
**எல்லை யில்விளக் கெரிப்பவர் திருமுறை எழுதுவோர் வாசிப்போர். 3**

(இ - ள்.) சிறந்த திருநந்தனவனத் திருப்பணி செய்பவர்கள்; நறுமணங்கமழும் பூந்துணர்களைப் பறிப்பவர்கள்; பலவகை யாகிய மலர்மாலை கட்டுபவர்கள்; திருமஞ்சனங் கொண்டு வந்து கொடுக்குந் திருப்பணிசெய்பவர்கள்; இரவிலும் நடுப் பகலிலுந் திருவலகிட்டுத் திருமெழுக்கிடுபவர்கள்; அளவற்ற திருவிளக்கேற்றுபவர்கள்; திருமுறை யெழுதுபவர்கள்; அத்திரு முறைகளை வாசிப்பவர்கள். - எ - று.

**இளைய பஃறிருப் பணிகளில் அணைந்தவர்க் கேற்றஅத்**
**திருத்தொண்டின்,**
**விளைவி ளங்கிட வேண்டிய குறைஎலாம் முடித்துமே விடச்செய்தே,**
**அளைய அத்திறம் புரிதலில் தொண்டரை ஆக்கிஅன் புறுவாய்மை,**
**மனைய றம்புரிந் தடியவர்க் கின்புறவழிபடுந் தொழில்மிக்கார். 4**

(இ - ள்.) இத்தன்மையனவாகிய பலவகைத் திருத்தொண்டுகளில் தம்மை விரும்பியடைந்தவர்களுக்கு, அவரவர்களுக்கேற்ற அவ்வத்திருத்தொண்டுகளின் தொழில் நன்குவிளங்கும்படி அவர்களுக்கு வேண்டிய குறைகளனைத்தையும் முடித்துப் பொருந்தச்செய்து, அத்தகைய திருத்தொண்டுகளை விரும்பிச் செய்தலால் சிவனடியார்களாக்கி, அன்பு பொருந்திய மெய்ம்மையாகிய இல்லறத்தைக் குறைவற நடத்தி, சிவனடியார்களுக்கு இன்பமுண்டாகும்படி அவர்களை வழிபாடுசெய்யுந் திருத்தொண்டிற் சிறந்தவர். - எ - று.

**இப்பெ ருஞ்சிறப் பெய்திய தொண்டர்தாம் ஏறுசீர் வளர்காழி**
**மெய்ப்பெ ருந்திரு ஞானபோ னகர்கழல் மேவிய விருப்பாலே**
**முப்பெ ரும்பொழு தருச்சனை வழிபாடு மூளும்அன் பொடுநாளும்**
**ஒப்பில் காதல்கூர் உளங்களி சிறந்திட ஒழுகினார் வழுவாமல். 5**

(இ - ள்.) இத்தன்மையாகிய பெருஞ்சிறப்பினையடைந்த கணநாதநாயனார் மிகுந்த மேன்மை வளர்கின்ற சீகாழித் திருப்பதியில் வீற்றிருந்தருளும் மெய்ம்மையாகிய சிறந்த சிவஞானப் பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருவடிகளைப் பொருந்திய பெருவிருப்பினால் முக்காலமும் பூசனை வழிபாடுகளை மிகுதியாகிய பேரன்புடன் தினந்தோறும் ஒப்பற்ற விருப்பமிக்க மனத்தில் மகிழ்ச்சி சிறந்தோங்கும்படி தவறாமல் செய்து கொண்டு வந்தார். - எ - று.

**ஆன தொண்டினில் அமர்ந்தபே ரன்பரும் அகலிடத் தினிலென்றும்**
**ஞான முண்டவர் புண்டரீ கக்கழல் அருச்சனை நலம்பெற்றுத்**
**தூந றுங்கொன்றை முடியவர் கூடர்நெடுங் கயிலைமால் வரைஎய்தி**
**மான நற்பெருங் கணங்கட்கு நாதராம் வழித்தொண்டின்**
**நிலைபெற்றார். 6**

(இ - ள்.) அவ்வாறாகிய திருத்தொண்டிற் சிறந்து விளங்குகின்ற பெரிய கணநாதநாயனார் உலகத்தில் எந்நாளும் சிவஞானப் பாலமுதுண்டருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரது தாமரைமலர் போன்ற திருவடிகளைப் பூசனை செய்தலாகிய நன்மையை யடைந்து, தூய்மையாகிய நறிய கொன்றை மலர் மாலையை யணிந்த திருமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் ஒளிவிளங்குகின்ற திருக்கைலாசமலையை யடைந்து பெருமைமிக்க நல்ல சிவகணங்களுக்குத் தலைவராயிருக்கும் வழித் திருத்தொண்டின் மேன்மையையடைந்தார். - எ - று.

***உலக முய்யநஞ் சுண்டவர் தொண்டினில் உறுதிமெய் யுணர்வெய்தி***
***அலகில் தொண்டருக் கறிவளித் தவர்திறம் அவனியின் மிசையாக்கும்***
***மலர்பெ ரும்புகழ்ப் புகலியில் வருங்கண நாதனார் கழல்வாழ்த்திக்***
***குலவு நீற்றுவண் கூற்றுவ னார்திறங் கொள்கையின் மொழிகின்றாம். 7***

(இ - ள்.) சர்வலோகங்களும் உயிர் பெற்றுய்யும் பொருட்டு ஆலகால விஷத்தையுண்டருளிய சிவபெருமானுடைய திருத் தொண்டினுறுதியில் மெய்ம்மையாகிய பேருணர்ச்சியடைந்து அளவற்ற திருத்தொண்டர்களுக்கு மெய்ஞ்ஞானத்தையூட்டி அவர்களது திருத்தொண்டின் திறத்தை உலகத்தில் விருத்தி செய்தருளிய பரந்த பெரும்புகழையுடய சீகாழிப்பதியில் லவதரித்தருயி கணநாதநாயனாரது திருவடிகளைத் துதித்து, விளங்குகின்ற திருவெண்ணீற்றை யணிந்த சிறந்த கூற்றுவ நாயனாரது திருத்தொண்டின் நிலைமையை முறைப்படி சொல்லுகின்றோம். - எ - று.

# 39. கூற்றுவ நாயனார் புராணம்

***துன்னார் முனைகள் தோள்வலியால் வென்று சூலப் படையார்தம்***
***நன்னா மந்தந் திருநாவில் நாளும் நவிலும் நலமிக்கார்***
***பன்னாள் ஈசர் அடியார்தம் பாதம்பரவிப் பணிந்தேத்தி***
***முன்னாகியநற் றிருத்தொண்டின் முயன்றார் களந்தை முதல்வனார்.1***

(இ - ள்.) பகைவர்களது போரை புஜபலத்தினால் செயித்து, சூலாயுதத்தை யேந்திய சிவபெருமானது சிறந்த திருநாமத்தை தமது திருநாவினால் எந்நாளும் உச்சரிக்கின்ற சிறப்பின்மிக்கவர்; அநேகநாள்கள் சிவனடியார்களது திருவடிகளை வணங்கித் துதிக்க முதன்மையாகிய நல்ல திருத்தொண்டில் முயன்று செய்தவர்; (அவர் யாரெனின்) களந்தைப் பதியின் தலைவ ராகிய கூற்றுவநாயனார் என்பவர். - எ - று.

***அருளின் வலியால் அரசொதுங்க அவனி எல்லாம் அடிப்படுப்பார்***
***பொருளின் முடிவுங் காண்பரிய வகையால் பொலிவித் திகல்சிறக்க***
***மருளுங் களிறு பாய்புரவி மணித்தேர் படைஞர் முதல்மாற்றார்***
***வெருளுங் கருவி நான்குநிறை வீரச் செருக்கின் மேலானார். 2***

(இ - ள்.) திருவருளின் வல்லமையினால் பகையரசர்கள் (தோல்வியடைந்து) ஒதுங்க, உலக முழுதுந் தனது அரசாட்சி யின் கீழ்ச் செலுத்துகின்றவராகிய கூற்றுவ நாயனார்

திரவியங்களின் முடிவு இவ்வளவினவென்று கண்டறிதற்கரிய முறைமையினால் விருத்தி செய்து, வலிமை மிகும்படி மதத்தால் மயங்குகின்ற யானையும், தாவிச் செல்லுங்குதிரையும், மணிகளையுடைய தேரும், காலாள்களும் முதலாகிய பகைவர்களஞ்சத்தக்க சதுரங்கசேனைகளும் நிறைந்த வீரபராக்கிரமத்தில் சிறப்புற்று விளங்கினார். - எ - று.

***வென்றி வினையின் மீக்கூர வேந்தர் முனைகள் பலமுருக்கிச்***
***சென்று தும்பைத் துறைமுடித்துச் செருவில் வாகைத் திறங்கெழுமி***
***மன்றல் மாலை மிலைந்தவர்தம் வளநா டெல்லாங் கவர்ந்துமுடி***
***ஒன்றும் ஒழிய அரசர்திரு வெல்லாம் உடைய ராயினார். 3***

(இ - ள்.) வெற்றித் தொழிலிற் சிறப்புமிகும்படி பகையரசர்களது பல பேரைச் செயித்துச் சென்று தும்பை மாலையைச் சூடியும், போரில் வெற்றி பொருந்திய நறுமணங்கமழும் வாகை மாலைசூடி, அப்பகையரசர்களது செழிப்பாகிய இராச்சியங்களனைத்துங் கவர்ந்து, கிரீடம் ஒன்றுதவிர, அரசர் செல்வங்களனைத்து முடையவராயினார். - எ - று.

***மல்லல் ஞாலம் புரக்கின்றார் மணிமா மவுலி புனைவதற்குத்***
***தில்லை வாழந் தணர்தம்மை வேண்ட அவரும் "செம்பியர்தம்***
***தொல்லை நீடுங் குலமுதலோர்க் கன்றிச் சூட்டோம் முடி"என்று***
***நல்கா ராகிச் சேரலன்றன் மலைநா டணைய நண்ணுவார். 4***

(இ - ள்.) வளப்பமிக்க நிலவுலகத்தையரசாட்சி செய்கின்றவராகிய கூற்றுவநாயனார் தமக்கு நவரத்தினங்களிழைத்த முடிசூட்டும் பொருட்டுத் தில்லை வாழந்தணர்களை வேண்ட, அவர்களும் பழைமையாகச் சிறந்த சோழகுலத் தரசர்களுக்கேயன்றி மற்றவர்களுக்கு முடிசூட்டோமென்று மறுத்து, அவருக்கு முடிசூட்டச் சம்மதியாதவர்களாய்ச் சேரராசனது மலை நாட்டையடையச் சேர்வாராயினார். - எ - று.

***ஒருமை உரிமைத் தில்லைவாழந் தணர்கள் தம்மில் ஒருகுடியைப்***
***பெருமை முடியை அருமைபுரி காவல் பேணும் படிஇருத்தி***
***இருமை மரபுந் தூயவர்தாஞ் சேர் நாட்டில் எய்தியபின்***
***வரும்ஐ யுறவால் மனந்தளர்ந்து மன்றுள் ஆடும் கழல்பணிவார். 5***

(இ - ள்.) (ஸ்ரீ நடராசப் பெருமானுக்கு) ஒருமைப்பட்ட அன்பினுரிமையையுடைய தில்லை வாழந்தணர்கள் தங்களில் ஒருகுடியைப் பெருமை பொருந்திய மணிமுடியை அருமையாகக்

காவல் செய்யும்படி யிருத்தி, இருவகை மரபிலுந் தூய்மை யுடையவர்களாகிய தில்லைவாழந்தணர்கள் சேரமண்டலத்தை யடைந்த பின்பு, (கூற்றுவநாயனார் தமதுள்ளத்தில்) தோன்றிய ஐயுறவினால் மனஞ் சோர்ந்து கனகசபையில் திருநடனஞ் செய்தருளும் சிவபெருமானது திருவடிகளை வணங்குவா ராயினார். - எ - று.

***அற்றை நாளில் இரவின்கண் "அடியேன் தனக்கு முடியாகப்***
***பெற்ற பேறு மலர்ப்பாதம் பெறவே வேண்டும்" எனப்பரவும்***
***பற்று விடாது துயில்வோர்க்குக் கனவில் பாத மலரளிக்க***
***உற்ற அருளால் அவைதாங்கி உலகம் எல்லாந் தனிப்புரந்தார். 6***

(இ - ள்.) அன்று நாளிரவிலே எம்பெருமானே! அடியே னுக்கு மணிமுடியாக அடைதற்குரிய பேறானது தேவரீரது திருவடிகளையே பெறவேண்டுமென்று துதிக்கின்ற பேரன்பு நீங்காமல் நித்திரை செய்யுங் கூற்றுவநாயனாருக்குச் சொப்பனத் திலே தோன்றி ஸ்ரீ நடராசப் பெருமான் தமது திருவடித் தாமரைகளைத் திருமுடியாகச் சூட்டியருள, (நாயனார்) பொருந்திய திருவருளினால் அத்திருவடிகளையே மணிமுடி யாகச் சூடி உலகமுழுவதையும் பொது நீக்கி யரசாண்டருளி னார். - எ - று.

***அம்பொன் நீடும் அம்பலத்துள்ஆரா அமுதத் திருநடஞ்செய்***
***தம்பி ரானார் புவியில்மகிழ் கோவில் எல்லாந் தனித்தனியே***
***இம்பர் ஞாலம் களிகூர எய்தும் பெரும்பூ சனைஇயற்றி***
***உம்பர் மகிழ அரசளித்தே உமையாள் கணவன் அடிசேர்ந்தார். 7***

(இ - ள்.) அழகிய பொன்னினால் சிறந்து விளங்குகின்ற திருச்சிற்றம்பலத்திலே நீங்காத அமுதம்போலுந் திருநடனஞ் செய்தருளுகின்ற சிவபெருமான் இந்நிலவுலகத்தில் மகிழ்ந் தெழுந்தருளுந் திருக்கோயில்களிலெல்லாம் தனித்தனியே இவ்வுலகத்தார் களிப்படையும்படி சிறந்த பெரிய பூசனையைச் செய்து, தேவர்கள் மகிழும்படி அரசாட்சி செலுத்திப் பார்வதி பாகராகிய சிவபெருமானது திருவடிகளை யடைந்தருளினார். - எ - று.

***காதற் பெருமைத் தொண்டின்நிலைக் கடல்சூழ் வையங் காத்தளித்துக்,***
***கோதங் தகல முயல்களந்தைக் கூற்றனார்தங் கழல்வணங்கி***
***நாத மறைதந் தளித்தாரை நடைநூற் பாவில் நவின்றேத்தும்,***
***போத மருவிப் பொய்யடிமை இல்லாப் புலவர் செயல்புகல்வாம். 8***

(இ - ள்.) விருப்பமிகுகின்ற பெருமையினையுடைய திருத்தொண்டின் றன்மையமைந்த சமுத்திரஞ் சூழ்ந்த நிலவுலகத்தை யாளுகை செய்து, குற்ற நீங்கும்படி முயற்சி செய்தவராகிய களந்தைப் பதியிலவதரித்தருளிய கூற்றுவ நாயனாரது திருவடிகளை வணங்கி, ஒலிவடிவாகிய வேதங்களைச் செய்தருளிய சிவபெருமானை நல்ல நடையினையுடைய நூற்பாவினால் பாடித் துதித்தருளுகின்ற மெய்ஞ்ஞான முற்றுப் பொய்யடிமையில்லாத புலவர்கள் செய்த திருத்தொண்டைச் சொல்லுகின்றோம்.- எ - று.

***தேனும் குழலும் பிழைத்ததிரு மொழியாள் புலவி தீர்க்கமதி***
***தானும் பணியும் பகைதீர்க்குஞ் சடையார் தூது தருந்திருநாள்***
***கூனுங் குருடுந் தீர்த்தேவல் கொள்வார் குலவு மலர்ப்பாதம்***
***யானும் பரவித் தீர்க்கின்றேன் ஏழு பிறப்பின் முடங்குகூன்.*** 9

(இ - ள்.) தேனையும் வேய்ங்குழலையும் வென்ற சிறந்த சொல்லினையுடைய பரவை நாச்சியாரடைந்த பிணக்கைத் தீர்க்கும்படி, சந்திரனும் பாம்பும் பகை தீரும்படி யணிந்த சடைமுடியையுடய சிவபெருமான் தூது சென்றருளிய நன்னாளில், கூனையுங் குருடையுந் தீர்த்து அடிமை கொண்டருளிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது விளங்குகின்ற தாமரை மலர் போன்ற திருவடிகளை அடியேனுந் துதித்து என் எழுவகைப் பிறப்பினும் முடங்கலாக வருகின்ற வினைக்கூனை யொழிக்கின்றேன். - எ - று.

# 40. பொய்யடிமையில்லாத புலவர் புராணம்

***"செய்யுள்நிகழ் சொற்றெளிவும் செவ்வியநூல் பலநோக்கும்***
***மெய்யுணர்வின் பயன்இதுவே" எனத்துணிந்து விளங்கியொளிர்***
***மையணியுங் கண்டத்தார் மலரடிக்கே ஆளானார்***
***பொய்யடிமை யில்லாத புலவர்எனப் புகழ்மிக்கார்.*** 1

(இ - ள்.) (பாண்டிவள நாட்டிலே துவாதசாந்த சேத்திரமாகிய மதுராபுரியிலே கடைச்சங்கப் புலவர்களாகிய கபிலர் - பரணர் - நக்கீரர் முதலிய நாற்பத்தொன்பதின் மரும்) செய்யுள் செய்வதில் விளங்குகின்ற சொற்றெளிவும், சிறந்த (அகத்தியந் தொல்காப்பிய முதலிய) பல நூலாராச்சியும், மெய்யுணர்ச்சியின் பயனிதுவேயென்று துணிந்து, சிறந்து விளங்குகின்ற நீலகண்டராகிய சிவபெருமானது தாமரை மலர் போன்ற

சீபாதங்களுக்கே யடிமையானவர்கள் அவர்களே பொய்யடிமை யில்லாத புலவர்களென்று கூறும் பேரறிவினை யுடையோர். - எ - று.

***பொற்பமைந்த அரவாரும் புரிசடையார் தமையல்லால்***
***சொற்பதங்கள் வாய்திறவாத் தொண்டுநெறித் தலைநின்ற***
***பெற்றியினில் மெய்யடிமை யுடையாராம் பெரும்புலவர்***
***மற்றவர்தம் பெருமையார் அறிந்துரைக்க வல்லார்கள். 2***

(இ - ள்.) அழகு பொருந்திய சர்ப்பங்கள் விளங்குகின்ற முறுக்காகிய சடைமுடியையுடைய சிவபெருமானையன்றி ஒரு பதங்களையும் வாய் திறந்து (வீணாகப்) பாடாத திருத்தொண் டினுறைப்பில் முதன்மையாக நின்ற தன்மையினால் மெய் யடிமையுடையவர்களாகின்ற சிறந்த புலவர்கள்; அப் பொய் யடிமையில்லாத புலவர்களது மேன்மையை யார் இவ்வளவின வென்று தெரிந்து கூறவல்லவர்கள். (ஒருவருமில்லை.) - எ - று.

***ஆங்கவர்தம் அடியிணைகள் தலைமேற்கொண் டவனிஎலாம்***
***தாங்கியவெண் குடைவளவர் குலஞ்செய்த தவமனையார்***
***ஓங்கிவளர் திருத்தொண்டின் உண்மையுணர் செயல்புரிந்த***
***பூங்கழலார் புகழ்ச்சோழர் திருத்தொண்டு புகல்கின்றோம். 3***

(இ - ள்.) அந்தப் பொய்யடிமை யில்லாத புலவர்களது இரண்டு திருவடிகளையுஞ் சிரமேற் கொண்டு வணங்கி, உலக முழுவதையும் ஆளுகை செய்த வெண் கொற்றக்குடையினை யுடைய சோழர்குலஞ் செய்த தவப்பயன் போல்பவரும், சிறந்து வளர்கின்ற திருத்தொண்டினது உண்மையை யுணரத்தக்க நற்செய்கையைச் செய்தருளிய அழகிய வீரக்கழலை யுடையவரு மாகிய புகழ்ச் சோழநாயனாரது திருத்தொண்டின் தன்மையைச் சொல்லத் தொடங்குகின்றோம். - எ - று.

# 41. புகழ்ச்சோழ நாயனார் புராணம்

***குலகிரியின் கொடுமுடிமேல் கொடிவேங்கைக் குறியெழுதி***
***நிலவுதரு மதிக்குடைக்கீழ் நெடுநிலங்காத் தினிதளிக்கும்***
***மலர்புகழ்வண் டமிழ்ச்சோழர் வளநாட்டு மாமூதூர்***
***உலகில்வளர் அணிக்கெல்லாம் உள்ளுறையு ராம்உறையூர். 1***

(இ - ள்.) சிறப்புப் பொருந்திய இமயமலைச் சிகரத்தில் புலிக்கொடியினடையாளத்தை யெழுதி, நிலவை வீசுகின்ற

சந்திரவட்டக் குடையின் கீழிருந்து பெரிய நிலவுலகத்தைப் பாதுகாத்து அரசாண்டு வருகின்ற பரந்த புகழையுடைய தமிழ் வளம் பொருந்திய சோழவள நாட்டிலே, உலகத்தில் வளர்கின்ற அழகுக்கெல்லாம் இருப்பிடமாகவுள்ள பழைய ஊரானது உறையூராகும். - எ - று.

***அளவில்பெரும் புகழ்நகரம் அதனல்அணி மணிவிளக்கும்***
***இளவெயிலின் சுடர்ப்படலை இரவொழிய எறிப்பனவாய்க்***
***கிளரொளிசேர் நெடுவானப் பேர்யாற்றுக் கொடிகெழுவும்***
***வளரொளிமா ளிகைநிரைகள் மருங்குடைய மறுகெல்லாம்.*** 2

(இ - ள்.) அளவற்ற பெரும்புகழையுடைய அவ்வுறையூரி லுள்ள அழகிய மணிவிளக்குகளும் இளஞ்சூரியன் போலுஞ் சுடர்ப்பரப்பினை இரவொழிய விளக்குகின்றனவராய், மிக்க வொளி பொருந்திய ஆகாய கங்கை யினிடத்துக் கொடிக ளுயர்ந்து விளங்குகின்ற ஒளிவளருந் திருமாளிகை வரிசைகள் வீதிகளின் பக்கங்க ளெங்கு முள்ளன. - எ - று.

***நாகதலத் தும்பிலத்தும் நானிலத்தும் நலஞ்சிறந்த***
***போகம்அனைத் தினுக்குறுப்பாம் பொருவிறந்த வளத்தினவாய்***
***மாகநிறைந் திடமலிந்த வரம்பில்பல பொருள்பிறங்கும்***
***ஆகரமொத் துளஅளவில் ஆவணவீ திகளெல்லாம்.*** 3

(இ - ள்.) அளவற்ற கடைவீதிகளனைத்தும் விண்ணுலகத்தி லும், பாதலத்திலும், இந்நிலவுலகத்திலும் நன்மை சிறந்து விளங்குகின்ற பலவகைப் போகங்களுக்கும் உறுப்பாகிய அள வற்ற பெருவளமுடையனவாய், ஆகாயமளாவும்படி நிறைந்த அளவற்ற பல பொருள்கள் விளங்குகின்ற இருப்பிடத்தை யொத் துள்ளன. - எ - று.

***பார்நனைய மதம்பொழிந்து பனிவிசும்பு கொளமுழங்கும்***
***போர்முகவெங் கறையடியும் புடையினமென் றடையவரும்***
***சோர்மழையின் விடுமதத்துச் சுடருநெடு மின்னோடைக்***
***கார்முகிலும் பலதெரியா களிற்றுநிரைக் களமெல்லாம்.*** 4

(இ - ள்.) யானை வரிசைகளையுடைய களமெங்கும், பூமி நனையும்படி மதத்தைப் பொழிந்து குளிர்ந்த விண்ணுலக மளாவும்படி பிளிறுகின்ற போர்த் தொழிலையுடைய வெவ்விய யானைகளும், அவ்வியானைகளிடத்துத் தம்மினமென்று கருதிச் சேரவருகின்ற பெய்யும் மழையாகிய மதத்தையும், விளங்குகின்ற

நெடிய மின்னலாகிய நெற்றிப் படத்தையு முடைய கரிய பல மேகங்களும் வேறுபாடு தெரியவாம். - எ - று.

**படுமணியும் பரிச்செருக்கும் ஒலிகிளரப் பயில்புரவி**
**நெடுநிரைமுன் புல்லுண்வாய் நீர்த்தரங்க நுரைநிவப்ப**
**விடுசுடர்மெய் யுறையடுக்கல் முகில்படிய விளங்குதலால்**
**தொடுகடல்கள் அனையபல துரங்கசா லைகளெல்லாம். 5**

(இ - ள்.) ஒன்றோடொன்று தாக்குகின்ற மணிகளும், குதிரைச் செருக்காலுண்டாகின்ற கனைப்புமாகிய ஓசை யுண்டா கலானும், கட்டப்பட்டுள்ள நெடிய குதிரைப் பந்திகள் முன்னே புல்லையுண்ணப்பட்ட வாயினின்று, நீரினலையோடு நுரைகள் பொங்குதலாலும், ஒளி வீசுகின்ற கவச வரிசைகளாகிய மேகங்கள் படிந்து விளங்குதலாலும், பல அசுவசாலைக ளனைத் தும், சகரர்களால் தோண்டப்பட்ட கடல்களை யொத்துள்ளன.- எ - று.

**துளைக்கைஐரா வதக்களிறுந் துரங்கஅர சுந்திருவும்**
**விளைத்தஅமு துந்தருவும் விழுமணியுங் கொடுபோத**
**உளைத்தகடல் இவற்றொன்று பெறவேண்டி உம்பரூர்**
**வளைத்ததுபோன் றுளதங்கண் மதில்சூழ்ந்த மலர்க்கிடங்கு. 6**

(இ - ள்.) அந்நகரத்தின் புறமதிலைச் சூழ்ந்திருக்கின்ற மலர்களையுடைய அகழியானது துளைபொருந்திய கையினை யுடைய ஐராவதமென்னும் யானையையும், உச்சை சிரவமென் னுங் குதிரையையும், இலட்சுமியையும், மதுரம் பொருந்திய அமுதத்தையும், கற்பகத் தருவையும், சிறந்த கவுத்துவ மணியையும், இந்திராதியர் அபகரித்துச் செல்ல, இவைகளை வருந்திப் பெற்ற கடலானது இப்பொருளில் யாதேனும் மொரு பொருளை யடைய விருப்புற்று, விண்ணுலகத்தை வளைத்தது போன்றுள்ளது. - எ - று.

**காரேறுங் கோபுரங்கள் கதிரேறும் மலர்ச்சோலை**
**தேரேறும் அணிவீதி திசையேறும் வசையிலணி**
**வாரேறும் முலைமடவார் மருங்கேறும் மலர்க்கணையோன்**
**பாரேறும் புகழ்உறந்தைப் பதியின்வளம் பகர்வரிதால். 7**

(இ - ள்.) மேகங்க ளேறிச் செல்லுங் கோபுரங்களும், சந்திர சூரியர்கள் தவழ்ந்து செல்லும் மலர்களையுடைய சோலைகளும், தேரோடுந் திருவீதிகளும் திக்குகள் தோறும் நிறைந்த குற்றமற்ற

பேரழகும், கச்சணிந்த ஸ்தனங்களை யுடைய மாதர்களிடத்துச் செல்லும் புஷ்ப பாணங்களும், சிறந்த நிலவுலகத்தில் நிறைந்த பெரும்புகழும் (நிலை பெற்று விளங்குகின்ற) உறையூர் என்னு நகரத்தின் வளப்பத்தைச் சொல்லுதற் கரிதாகும். - எ - று.

***அந்நகரில் பாரளிக்கும் அடலரச ராகின்றார்***
***மன்னுதிருத் தில்லைநகர் மணிவீதி அணிவிளக்கும்***
***சென்னிநீ டனபாயன் திருக்குலத்து வழிமுதலோர்***
***பொன்னிநதிப் புரவலனார்புகழ்ச் சோழர் எனப் பொலிவார். 8***

(இ - ள்.) அத்தகைய சிறப்பினையுடைய உறையூரில் இந்நில வுலகத்தை யாளுகை செய்கின்ற வலிமை தங்கிய அரசாயுள்வர் (யாரெனின்) நிலைபெற்ற திருத்தில்லைப்பதியின்கண் அழகிய திருவீதியைச் சிறப்பாக விளங்கச் செய்த அநபாயசோழ மகா ராஜாவினுடைய சிறந்த குலத் தலைவராயுள்ளவரும், காவிரிநதி சூழ்ந்த சோழ நாட்டரசருமாகிய புகழ்ச் சோழநாயனாரென்று விளங்குந் திருநாமத்தை யுடையவர். - எ - று.

***ஒருகுடைக்கீழ் மண்மகளை உரிமையினில் மணம்புணர்ந்து***
***பருவரைத்தோள் வென்றியினால் பார்மன்னர் பணிகேட்பத்***
***திருமலர்த்தும் பேருலகுஞ் செங்கோலின் முறைநிற்ப***
***அருமறைச்சை வந்தழைப்ப அரசளிகும் அந்நாளில். 9***

(இ - ள்.) ஒரு குடைக் கீழிருந்து நிலமகளை உரிமையாக மணம் புரிந்து பருத்த மலைபோலும் புயத்தின் வெற்றியினால், உலகத்துள்ள வேற்றரசர்கள் ஏவல் கேட்கவும், பலவஃச் செல்வங்களும் விளங்கச் செய்கின்ற பெரிய நிலவுலகமும் செங்கோல் முறைப்படி நடக்கவும், பரம்பரையாக வருகின்ற வேதசம்பந்தமாகிய சித்தாந்தசைவமானது தழைத்தோங்கவும் அரசாட்சி செய்யும் நாள்களில். - எ - று.

***பிறைவளருஞ் செஞ்சடையார் பேணுசிவா லயமெல்லாம்***
***நிறைபெரும்பூ சனைவிளங்க நீடுதிருத் தொண்டர்தமைக்***
***குறையிரந்து வேண்டுவன குறிப்பின்வழி கொடுத்தருளி***
***முறைபுரிந்து திருநீற்று முதல்நெறியே பாலிப்பார். 10***

(இ - ள்.) இளம்பிறைவளருஞ் சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளுஞ் சிவாலயங்கடோறும் நிறைந்த பெரிய பூசனையை விளங்கவமைத்து, சிறந்த சிவ னடியார்களைக் குறையிரந்து அவர்களுக்கு வேண்டியவை

களைக் குறிப்பின்வழி யுணர்ந்து கொடுத்தருளிச் செங்கோல் செலுத்தித் திருவெண்ணீற்றுச் சார்பாயுள்ள முதன்மை பொருந்திய சைவநெறியையே விருத்தி செய்வாராயினார். - எ - று.

***அங்கண்இனி துறையுநாள் அரசிறைஞ்ச வீற்றிருந்து***
***கொங்கரொடு குடபுலத்துக் கோமன்னர் திறைகொணரத்***
***தங்கள்குல மரபின்முதற் றனிநகராங் கருவூரில்***
***மங்கலநாள் அரசுரிமைச் சுற்றமுடன் வந்தணைந்தார்.*** 11

(இ - ள்.) அவ்வுறையூரில் இனிமையோடு அரசு செய்யும் நாளிலே வேற்றரசர்கள் வணங்கும்படி வீற்றிருந்து, கொங்க தேசத்தரசருங் குடகதேசத்தரசருந் திறைகொண்டு வர, தங்கள் குலமரபிற்குரிய முதன்மை பொருந்திய ஒப்பற்ற நகரமாகிய கருவூர் என்னும் இராசதானியிலே சுபதினத்திலே அரசுரிமையினையுடைய சுற்றத்தாருடன் வந்தடைந்தார். - எ - று.

***வந்துமணி மதிற்கரூவூர் மருங்கணைவார் வானவர்சூழ்***
***இந்திரன்வந் தமரர்புரி எய்துவான் எனஎய்திச்***
***சிந்தைகளி கூர்ந்தரனார் மகிழ்திருவா னிலைக்கோயில்***
***முந்துறவந் தணைந்திறைஞ்சி மொய்யொளிமா ளிகைபுகுந்தார்.*** 12

(இ - ள்.) அவ்வாறு வந்து பலவகை மணிகள் பதித்த மதிலையுடைய கருவூரினருகில் வருகின்ற புகழ்ச்சோழ நாயனார் இந்திரனானவன் தேவர்கள் சூழும்படி வந்து அமராபதி நகரத்தை யடைந்த தன்மைபோல வந்தடைந்து மனமகிழ்வுற்று, சிவபெருமான் மகிழ்ந்தெழுந்தருளுந் திருவாநிலையென்னுந் திருக்கோயிலை முற்பட்டு வந்து வணங்கி மிக்க ஒளிபொருந்திய திருமாளிகையினுள்ளே புகுந்தார். - எ - று.

***மாளிகைமுன் அத்தாணி மண்டபத்தின் மணிபுனைபொற்***
***கோளரிஆ சனத்திருந்து குடபுலமன் னவர்கொணர்ந்த***
***ஒளிநெடுங் களிற்றின்அணி உலப்பில்பரி துலைக்கனகம்***
***நீளிடைவில் விலகுமணி முதல்நிறையுந் திறைகண்டார்.*** 13

(இ - ள்.) திருமாளிகைக்கு முன்னேயுள்ள அத்தாணி மண்டபத்திலே இரத்தினங்களிழைத்த பொன்னாலாகிய சிங்காசனத்தில் வீற்றிருந்து குடகு தேசத்தரசர்கள் கொண்டு வந்த பெரிய யானை யணிகளும், கெடாத குதிரைகளும், துலா நிறையாகக் கொண்டு வந்த பொற் குவைகளும், நெடுந்தூரம் ஒளி விளங்குகின்ற நவரத்தினங்களும் இவை முதலான நிறைந்திருக்கின்ற திறை பொருளைப் பார்த்தருளினார். - எ - று.

***திறைகொணர்ந்த அரசர்க்குச் செயலுரிமைத் தொழிலருளி***
***"முறைபுரியுந் தனித்திகிரி முறைநில்லா முரண்அரசர்***
***உறைஅரணம் உளவாகில் தெரிந்துரைப்பீர்" என உணர்வு***
***நிறைமதி நீ டமைச்சர்க்கு மொழிந் தருளி நிகழுநாள். 14***

(இ - ள்.) திறைப் பொருள் கொண்டு வந்த அரசர்களுக்கு அரசுரிமைக்குரிய தொழிலை யருள் புரிந்து, பேரறிவு நிறைந்த சிறந்த மந்திரிகளைப் பார்த்து, செங்கோல் முறைமைப்படி நீதி செலுத்துகின்ற நமது ஒப்பற்ற ஆஞ்ஞாசக்கரத்தின் முறையே நில்லாத பகையரசர் வசிக்கின்ற அரணங்களுளவாகில் தெரிந்து சொல்லுங்களென்று கூறியருளி நிகழும் நாள்களில். - எ - று.

***சென்றுசிவ காமியார் கொணர்திருப்பள் ளித்தாமம்***
***அன்றுசித றுங்களிற்றை அறஎறிந்து பாகரையும்***
***கொன்றஎறி பத்தர்எதிர் "என்னையுங்கொன் றருளும்"என***
***வென்றிவடி வாள்கொடுத்துத் திருத்தொண்டில் மிகச்சிறந்தார். 15***

(இ - ள்.) சிவகாமியாண்டார் கொண்டு வந்த திருப்பள்ளித் தாமத்துக் குரிய மலர்களை மகாநவமியின் முதனாளிற் சிதறிய பட்டவர்த்தன யானையை இறக்கும்படி வெட்டி யானைப் பாகர் களையுங் கொன்றருளிய எறிபத்த நாயனாருக் கெதிரில் சென்று அடியேனையுங் கொன்றருளுமென்று வெற்றி பொருந்திய வடித்தவாளைக் கொடுத்துத் திருத்தொண்டில் மிகவுஞ் சிறப்புற் றிருந்தனர். - எ - று.

***விளங்குதிரு மதிக்குடைக்கீழ் வீற்றிருந்து பாரளிக்கும்***
***துளங்கொளிநீள் முடியார்க்குத் தொன்முறைமை நெறிஅமைச்சர்***
***"அளந்ததிறை முறைகொணரா அரசன்உளன் ஒருவன்"என***
***உளங்கொள்ளும் வகைஉரைப்ப உறுவியப்பால் முறுவலிப்பார். 16***

(இ - ள்.) பிரகாசிக்கின்ற அழகிய சந்திர வட்டக் குடையின் கீழே வீற்றிருந்து நிலவுலகத்தை அரசாளுகின்ற ஒளிவிளங்கும் நீண்ட மணிமுடியை யுடைய புகழ்ச் சோழ நாயனாருக்கு பழைய முறைமை வழியே ஒழுகுகின்ற மந்திரிகள், அளக்கப்பட்ட திறைப் பொருளை முறைப்படி கொண்டுவராததொரு அரசனிருக் கின்றானென்று, திருவுள்ளத்திற் கொள்ளும்படி கூற, (புகழ் சோழநாயனார்) பொருந்திய வியப்பினாலே புன்சிரிப் படைவா ராயினார். - எ - று.

**"ஆங்கவன்யார்?" என்றருள "அதிகன்அவன்; அணித்தாக**
**ஓங்கெயில்சூழ் மலைஅரணத் துள்ளுறைவான்" எனஉரைப்ப**
**"ஈங்குநுமக் கெதிர்நிற்கும் அரணுளதோ? படைஎழுந்தப்**
**பாங்கரணந் துகளாகப் பற்றறுப்பீர்" எனப்பகர்ந்தார். 17**

(இ - ள்.) (புகழ்ச் சோழ நாயனார்) அவன் யாவனென்று வினாவியருள, மந்திரிகள் அவன் அதிகனென்பவன்; அவன் சமீபத்திலே உயர்ந்த மதில் சூழ்ந்த மலையரணத்துள்ளே வசிக்கின்றானென்று சொல்ல, (அது கேட்ட புகழ்ச் சோழர்) இவ்வுலகத்தில் உங்களுக்கெதிரில் பகைத்து நிற்கும் அரணுள்ளதோ? நீங்கள் படையெடுத்துச் சென்று, அருகிலுள்ள அவ்வரணத்தைத் துகளாகும்படி பற்றறுத்து வாருங்களென்று கூறியருளினார். - எ - று.

**அடல்வளவர் ஆணையினால் அமைச்சர்களும் புறம்போந்து**
**கடலனைய நெடும்படையைக் கைவகுத்து மேற்செல்வார்**
**படர்வனமும் நெடுங்கிரியும் பயில்அரணும் பொடியாக**
**மிடலுடைநாற் கருவியுற வெஞ்சமரம் மிகவிளைத்தார். 18**

(இ - ள்.) வலிய புகழ்ச் சோழ நாயனாரது ஆஞ்ஞையினாலே மந்திரிகளும் வெளியிலே வந்து கடல் போலதிகப்பட்டுள்ள பெருஞ் சேனையை அணிவகுத்துப் போர் மேற் செல்பவர்களாய்ப் படர்ந்த காடும் உயர்ந்த மலையும், மலையரணும் பொடியாகும்படி வலிமை பொருந்திய நால்வகைச் சேனைகளும் பொருந்தக் கொடிய போரை அதிகமாக விளைத்தார்கள். -எ-று.

**வளவனார் பெருஞ்சேனை வஞ்சிமலர் மிலைந்தேற**
**அளவில்அர ணக்குறும்பில் அதிகர்கோன் அடற்படையும்**
**உளநிறைவெஞ் சினந்திருகி உயர்காஞ்சி மிலைந்தேறக்**
**கிளர்கடல்கள் இரண்டென்ன இருபடையும் கிடைத்தனவால். 19**

(இ - ள்.) புகழ்ச் சோழ நாயனாரது பெரிய சேனைகள் வஞ்சி மலர் மாலையை யணிந்து போர் செய்யும்படி யெதிர்க்க, மிக்க வுறுதி பொருந்திய குறும்பரசனாகிய அதிகனென்பவனது வலிய சேனைகளும் மனத்தில் நிறைந்த கடுங்கோபமுற்று உயர்ந்த காஞ்சி மாலையை யணிந்தெதிர்க்க, இவ் விருபடைகளும் விளங்குகின்ற இரண்டு கடல்போல ஒன்றோடொன் றெதிர்த்தன. - எ - று.

***கயமொடு கயமெதிர் குத்தின***
***அயமுடன் அயமுனை முட்டின***
***வயவரும் வயவரு முற்றனர்***
***வியனமர் வியலிட மிக்கதே.*** 20

(இ - ள்.) யானைகளோடு யானைகள் (ஒன்றுக்கொன்று) தாக்கின; வீரர்களோடு வீரர்கள் எதிர்த்துப் போர் செய்தார்கள்; விசாலமாகிய போர்க்களமானது பெரும்போரினால் சிறந்து விளங்கியது. - எ - று.

***மலையொடு மலைகள் மலைந்தென***
***அலைமத அருவி கொழிப்பொடு***
***சிலையினர் விசையின் மிசைத்தெறு***
***கொலைமத கரிகொலை யுற்றவே.*** 21

(இ - ள்.) மலைகளோடு மலைக ளெதிர்த்தாற்போல, அலைகின்ற மதமாகிய அருவி பொழியும் யானையோடு வில்வீரர்கள் வேகமாக அவ்யானையின்மேல் விடுகின்ற கொலைத் தொழிலினால் மதயானையானது கொல்லப்பட்டது. - எ - று.

***சூறை மாருதம் ஒத்தெதிர்***
***ஏறு பாய்பரி வித்தகர்***
***வேறு வேறு தலைப்பெய்து***
***சீறி ஆவி செகுத்தனர்.*** 22

(இ - ள்.) எதிரேறிச் செலுத்தும் பாய்கின்ற குதிரை வீரர்கள் சுழல் காற்றுக் கொப்பாகச் சுழன்று வெவ்வேறிடங்களில் தனித் தனி சென்று, பகைவர்களுயிரைக் கோபித்துக் கொன்றார்கள். - எ - று.

***மண்டு போரின் மலைப்பவர்***
***துண்ட மாயிட உற்றெதிர்***
***கண்டர் ஆவி கழித்தனர்***
***உண்ட சோறு கழிக்கவே.*** 23

(இ - ள்.) நெருங்கிய போரில் எதிர்த்துச் சண்டை செய்யும் வீரர்கள் துண்டமாகும்படி யெதிரிலடைந்து அவர்களுண்ட சோற்றை யொழிக்கும் பொருட்டு அவ்வீரர்களுடைய உயிரைக் கொன்று நீக்கினார்கள். - எ - று.

*வீடி னார்உட லிற்பொழி*
*நீடு வார்குரு திப்புனல்*
*ஓடும்யாறென ஒத்தது*
*கோடு போல்வ பிணக்குவை.* **24**

(இ - ள்.) போர் செய்து இறந்த வீரர்களுடைய உடம்பினின்றும் பெருகுகின்ற மிக்க உதிரவெள்ளமானது (புரண்டோடுகின்ற) ஆறு போன்றிருந்தது; பிணக்குப் பல்கள் பெரிய மலை போன்றிருந்தன. - எ - று.

*வானி லாவு கருங்கொடி*
*மேனி லாவு பருந்தினம்*
*ஏனை நீள்கழு கின்குலம்*
*ஆன ஊணொ டெழுந்தவே.* **25**

(இ - ள்.) ஆகாயத்தில் பறக்கின்ற கரிய காக்கைகளும், அவற்றிற்கு மேல் சுழல்கின்ற பருந்தின் கூட்டங்களும், மற்றப் பெரிய கழுகு முதலியவற்றின் கூட்டங்களும் சிறந்த உணவோடும் மேலெழுந்து பறந்தன. - எ - று.

*வரிவிற் கதைசக் கரமுற் கரம்வாள்*
*சுரிகைப் படைசத் திகழுக் கடைவேல்*
*எரிமுத் தலைகப் பணமெற் பயில்கோல்*
*முரிவுற் றனதுற் றனமொய்க் களமே.* **26**

(இ - ள்.) கட்டமைந்த வில்லும், கதையும், முற்கரமும், வாளும், உடை வாளும், கைவேலும், ஈட்டியும், வேலும், விளங்குகின்ற முத்தலைச் சூலமும், ஒளி விளங்குகின்ற அம்பும் அழிவினையுடைய நெருங்கிய யுத்தகளத்தில் முரிந்து போயின.- எ - று.

*வடிவே லதிகன் படைமா ளவரைக்*
*கடிசூழ் அரணக் கணவாய் நிரவிக்*
*கொடிமா மதில்நீ டுகுறும் பொறையூர்*
*முடிநே ரியனார் படைமுற் றியதே.* **27**

(இ - ள்.) வடித்த வேற்படையையுடைய அதிகனென்பவனது சேனைகளழிந்து போகவும், மலைக் காவல் சூழ்ந்த அரணமாகிய கணவாயை யிடித்து நிரவி, கொடிகளும் பெரிய மதில்களுமுயர்ந்த அம்மலை நாட்டூரைக் கிரீடத்தை யணிந்த புகழ்ச் சோழ நாயனாரது சேனையடைந்தது. - எ - று.

**முற்றும் பொருசே னைமுனைத் தலையில்**
**கற்றின் புரிசைப் பதிகட் டழியப்**
**பற்றுந் துறைநொச் சிபரிந் துடையச்**
**சுற்றும் படைவி ரர்துணித் தனரே.** 28

(இ - ள்.) போர் முற்றிய சேனைகள் செய்யும் போர் முகத்தில் கற்களாலாகிய வலியமதில் சூழ்ந்த மலையரணானது அழகு கெடவும், எல்லையாகக் கட்டப்பட்ட மதிலானது கெட்டழியவும் சுழற்றுகின்ற ஆயுதத்தையுடைய வீரர்கள் அழித்தார்கள். - எ - று.

**மாறுற் றவிறற் படைவா ளதிகன்**
**நூறுற் றபெரும் படைநூ ழில்படப்**
**பாறுற் றஎயிற் பதிபற் றறவிட்(டு)**
**ஏறுற் றனன்ஓ டிஇருஞ் சுரமே.** 29

(இ - ள்.) பகைகையுடைய வலிய சேனைகளையும் வாளையுமுடைய அதிகனென்னுங் குறும்பரசன் அழிக்கப்பட்ட தனது பேரிய சேனைகள் இறந்து குவியவும், அழிந்த மதிலையுடைய மலைக் கோட்டையை அறவே யொழித்து ஓடிப் போய் பெரிய காட்டையடைந்தான். - எ - று.

**அதிகன் படைபோர் பொருதற் றதலைப்**
**பொதியின் குவைஎண் ணிலபோ யினபின்**
**நிதியின் குவைமங் கையர்நீள் பரிமா**
**எதிருங் கரிபற் றினர்எண் ணிலரே.** 30

(இ - ள்.) அதிகனுடைய சேனைகள் போர் செய்த அறுபட்ட அளவற்ற தலைப் பொதியின் குவைகள் முன்னே சென்றபின்பு, அளவற்ற போர் வீரர்கள் நிதிக் குவைகளையும், மாதர்களையும், உயர்ந்த குதிரைகளையும், எதிர்ந்து போர் செய்யும் யானைகளையுங் கைக்கொண்டார்கள். - எ - று.

**அரண் முற்றிஎறிந்த அமைச் சர்கள்தாம்**
**இரணத் தொழில்விட் டெயில்சூழ் கருவூர்**
**முரணுற் றசிறப் பொடுமுன் னினர்நீள்**
**தரணித் தலைவன் கழல்சார் வுறவே.** 31

(இ - ள்.) மலையரணையடைந்து போர் செய்த மந்திரிமார்கள் போர்த் தொழிலை விட்டு பெரிய நிலவுலகத்திற் கரசராகிய புகழ்ச் சோழநாயனாரது திருவடிகளை யடையும்

பொருட்டு மதில் சூழ்ந்த கருவூர் இராஜதானியை வலிய பெருஞ் சிறப்போடும் அடைந்தார்கள். - எ - று.

***மன்னுங் கருவூர் நகர்வா யிலின்வாய்***
***முன்வந் தகருந் தலைமொய் குவைதான்***
***மின்னுஞ் சுடர்மா முடிவேல் வளவன்***
***தன்முன் புகொணர்ந் தனர்தா னையுளோர்.*** ***32***

(இ - ள்.) சேனை வீரர்கள் நிலைபெற்ற கருவூர் இராஜதானி யின் திருவாயிலில் முன்னே வந்த கரிய தலைக்குவையை ஒளி விளங்குகின்ற பெரிய மணிமுடியை யணிந்த வேற்படையுடைய புகழ்ச் சோழநாயனாருக்கு முன்னே கொண்டு வந்தார்கள். - எ - று.

***மண்ணுக் குயிரா மெனும்மன் னவனார்***
***எண்ணிற் பெருகுந் தலையா வையினும்***
***நண்ணிக் கொணருந் தலையொன் றினடுக்***
***கண்ணுற்ற தொர்புன் சடைகண் டனரே.*** ***33***

(இ - ள்.) உலகத்திற்கு உயிர் போல் விளங்கும் புகழ்ச் சோழ நாயனார் தமக்கு முன்னே கொண்டு வந்தடைந்த கணக்கில் அதிகரித்திருக்குந் தலைக்குவைகளில் ஒரு தலையின் நடுவிலே பொருந்திய ஒரு புன்சடையைப் பார்த்தருளினார். - எ - று.

***கண்டபொழு தேநடுங்கி மனங்கலங்கிக் கைதொழுது***
***கொண்டபெரும் பயத்துடனும் குறித்தெதிர்சென் றதுகொணர்ந்த***
***திண்டிறலோன் கைத்தலையில் சடைதெரியப் பார்த்தருளிப்***
***புண்டரிகத் திருக்கண்ணீர் பொழிந்திழியப் புரவலனார்.*** ***34***

(இ - ள்.) அப்புன்சடையைப் பார்த்த பொழுதே நடுக்கங் கொண்டு திருவுள்ளங்கலங்கிக் கைகூப்பி வணங்கி அடைந்த பெரும் பயத்தோடுஞ் சிந்தித்து எதிரே போய் அதனைக் கொண்டு வந்த மிக்கவல்லமை பொருந்திய வீரனது கையிலுள்ள தலையின் புன்சடை தெரியப்பார்த்துத் தாமரை மலர் போன்ற திருக்கண்களினின் றுங் கண்ணீர் பெருகி யொழுகப் புகழ்ச் சோழ நாயனார். - எ - று.

***"முரசுடைத்திண் படைகொடுபோய் முதலமைச்சர் முனைமுருக்கி***
***உரைசிறக்கும் புகழ்வென்றி ஒன்றொழிய ஒன்றாமல்***
***திரைசரித்த கடலுலகில் திருநீற்றின் நெறிபுரந்தியான்***
***அரசளித்த படிசால அழகி!"தென அழிந்தயர்வார்.*** ***35***

(இ - ள்.) முதன்மை பொருந்திய மந்திரிமார்கள் வெற்றி முரசினையுடைய வலிய சேனைகளை யழைத்துப் போய்ப் (பகைவர்களது) போரை யழித்துச் சொல்லாற் சிறந்திருக்கின்ற புகழையுடைய வெற்றியானது ஒன்றொழிய வொன்றாக நேர்ந்தது; யான் கடல் சூழ்ந்த இந்நிலவுலகத்தில் திருநீற்றுச் சார்பாயுள்ள சைவநெறியைப் பரிபாலித்து அரசாட்சி செய்தபடி மிகவுமழகாயிருக்கின்ற தென்று வருந்திச் சோர்வா ராயினார். - எ - று.

***"தார்தாங்கிக் கடன்முடித்த சடைதாங்குந் திருமுடியார்***
***நீர்தாங்குஞ் சடைப்பெருமான் நெறிதாங்கண் டவரானார்***
***சீர்தாங்கும் இவர்வேணிச் சிரந்தாங்கி வரக்கண்டும்***
***பார்தாங்க இருந்தேனோ பழிதாங்கு வேன்"என்றார்.*** 36

(இ - ள்.) போர்க்குரிய மாலையைச் சூடித் தமது செஞ்சோற்றுக்கடனை முடித்த சடையைத் தாங்கிய திருமுடியையுடையவர் கங்கைநதியை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானருளிச் செய்த மெய்ந்நெறியைக் கண்டவராயினார்; சிறப்புப் பொருந்திய இவ்வடியவரது சடைத் தலையைத் தாங்கி வரப் பார்த்தும் பெரும்பழியைத் தாங்கிய பாதகனாகிய யான் பூமியைத் தாங்குவதற்கு இருந்தேனோ? என்று வருந்திக் கூறினார். - எ - று.

***என்றருளிச் செய்தருளி இதற்கிசையும் படிதுணிவார்***
***நின்றநெறி அமைச்சர்க்கு "நீள்நிலங்காத் தரசளித்து***
***மன்றில்நடம் புரிவார்தம் வழித்தொண்டின் வழிநிற்ப***
***வென்றிமுடி என்குமரன் தனைப்புனைவீர்" என விதித்தார்.*** 37

(இ - ள்.) இவ்வாறு வருந்திக் கூறியருளி, இது செய்தற் கிசையும்படி துணிவு கொண்டவராய், தம்முன்னே நின்ற நன்னெறியையுடைய மந்திரிமாரைப் பார்த்து, பெரிய நிலவுலகத்தைக் காத்து அரசாட்சி செய்து கனகசபையில் திருநடனஞ் செய்தருளுஞ் சிவபெருமானது வழித் தொண்டின் முறையே நிற்கும் பொருட்டு என்னுடைய புத்திரனுக்கு வெற்றி பொருந்திய மணிமுடி சூட்டுங்களென்று கட்டளையிட்டருளினார். - எ - று.

***அம்மாற்றங் கேட்டழியும் அமைச்சரையும் இடரகற்றிக்***
***கைம்மாற்றுஞ் செயல்தாமே கடனாற்றுங் கருத்துடையார்***
***செம்மார்க்கந் தலைநின்று செந்தீமுன் வளர்ப்பித்துப்***
***பொய்ம்மாற்றுந் திருநீற்றுப் புனைகோலத் தினிற்பொலிந்தார்.*** 38

(இ - ள்.) (உயிர்க்குயிர் கொடுத்தலாகிய) கைமாற்று செயற் கடனைத்தாமே செய்யுங் கருத்தினையுடைய புகழ்ச் சோழ நாயனார் அந்த வார்த்தையைக் கேட்டு மனம் வருந்துகின்ற மந்திரிமார்களையுந் தேற்றி, நன்மார்க்கத்தில் முதன்மையாக நின்று சிவந்த அக்கினியை முன்னே வளர்ப்பித்து, அஞ் ஞானத்தை யொழிக்குந் திருவெண்ணீறணிந்த திருக்கோலத் தோடும் விளங்கினார். - எ - று.

***கண்டசடைச் சிரத்தினையோர் கனகமணிக் கலத்தேந்திக்***
***கொண்டுதிரு முடிதாங்கிக் குலவும்எரி வலங்கொள்வார்***
***அண்டர்பிரான் திருநாமத் தஞ்செழுத்தும் எடுத்தோதி***
***மண்டுதழற் பிழம்பினிடை மகிழ்ந்தருளி உள்புக்கார்.*** **39**

(இ - ள்.) தாம் பார்த்தருளிய சடைத்தலையை ஒரு பொன் மயமாகிய இரத்தினகலசத்தி லேந்திக் கொண்டு தம்முடைய திருமுடியிலே தாங்கிக் கொழுந்துவிட்டெரிகின்ற அக்கினியை வலஞ்செய்து தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் றிருநாம மாகிய ஸ்ரீ பஞ்சாட்சரத்தை எடுத்து உச்சரித்துக் கொண்டு பற்றியெரிகின்ற தீக்கொழுந்தினிடத்தில் பெருமகிழ்வுற்று அதனுள்ளே புகுந்தருளினார். - எ - று.

***புக்கபொழு தலர்மாரி புவிநிறையப் பொழிந்திழிய***
***மிக்கபெரு மங்கலதூ ரியம்விசும்பின் முழக்கெடுப்பச்***
***செக்கர்நெடுஞ் சடைமுடியார் சிலம்பலம்பு சேவடியின்***
***அக்கருணைத் திருநிழற்கீழ் ஆராமை அமர்ந்திருந்தார்.*** **40**

(இ - ள்.) அவ்வாறு அக்கினியினுள்ளே புகுந்த பொழுது (தேவர்கள் பொழியும்) கற்பக மலர் மழையானது பூமி நிறையும் படி பொழிந்து சிந்தவும், சிறந்த பெரிய மங்கலவாத்தியங்கள் ஆகாயத்தில் முழக்கெடுத்தொலிக்கவும், செவ்வானம் போலும் நீண்ட சடைமுடியையுடய சிவபெருமானது (வேதமாகிய) திருச்சிலம்பொலிக்குந் திருவடியின் கருணைத் திருவுருவாக வுள்ள நீழலின் கீழே நீங்காதெழுந்தருளியிருந்தனர். - எ - று.

***முரசங்கொள் கடற்றானை மூவேந்தர் தங்களின்முன்***
***பிரசங்கொள் நறுந்தொடையல் புகழ்ச்சோழர் பெருமையினைப்***
***பரசுங்குற் றேவலினால் அவர்பாதம் பணிந்தேத்தி***
***நரசிங்க முனையர்திறம் நாமறிந்த படிஉரைப்பாம்.*** **41**

(இ - ள்.) வெற்றி முரசைக் கொண்ட கடல்போலும் பெருஞ் சேனைகளை யுடைய (சேர சோழ பாண்டியரென்னும்) மூவேந்தர்களிலே முதன்மையாகிய தேன் பொருந்திய நறுமணங் கமழும் ஆத்திமாலையை யணிந்த புகழ்ச் சோழ நாயனாரது திருத்தொண்டின் மேன்மையைத் துதிக்கின்ற குற்றேவலினால் அவருடைய திருவடிகளை வணங்கித் துதித்து, இனி நரசிங்க முனையரைய நாயனாரது திருத்தொண்டின் றிறத்தை நாம் அறிந்தவாறு சொல்லுகின்றோம். - எ - று.

# 42.நரசிங்கமுனையரைய நாயனார் புராணம்

***கோடாத நெறிவிளங்கும் குலமரபின் அரசளித்து***
***மாடாக மணிகண்டர் திருநீறே மனங்கொள்வார்***
***தேடாத பெருவளத்தில் சிறந்ததிரு முனைப்பாடி***
***நாடாளுங் காவலனார் நரசிங்க முனையரையர்.*** 1

(இ - ள்.) நீதி தவறாத நன்னெறியில் விளங்குகின்ற சிறந்த குறுநில மன்னர் மரபில் அவதரித்து அரசாட்சி செய்து, காள கண்டராகிய சிவபெருமானது திருவெண்ணீறே தமக்குரிய பெருஞ்செல்வமாக மனத்திற்கொள்பவர்; தேடுதற்கரிய பெரிய வளப்பத்தினால் சிறப்புற்றிருக்குந் திருமுனைப்பாடி நாட்டை யாளுகை செய்யும் அரசா யுள்ளவர்: (அவர் யாரெனின்) நரசிங்க முனையரையநாயனா ரென்னுந் திருநாம முடைவர். - எ - று.

***இம்முனையர் பெருந்தகையார் இருந்தரசு புரந்துபோய்த்***
***தெம்முனைகள் பலகடந்து தீங்குநெறிப் பாங்ககல***
***மும்முனைநீள் இலைச்சூல முதற்படையார் தொண்டுபுரி***
***அம்முனைவர் அடிஅடைவே அரும்பெரும்பே றெனஅடைவார்.*** 2

(இ - ள்.) இந் நரசிங்கமுனையரைய நாயனர் வீற்றிருந்து அரசு புரிந்து சென்று பகைவர்களது பல போரைச் செயித்துத் துன்மார்க்கங்கள் தூரத்தில் நீங்க நீண்ட இலைவடிவாகிய முதன்மை பொருந்திய முத்தலைச் சூலப்படையினையுடைய சிவபெருமானத திருத்தொண்டைச் செய்கின்ற மெய்யடியார் களுடைய திருவடிச் சார்பே தமக்குரிய அரிய பெரும்பேறென்று (அதனையே உறுதியாக) அடைகின்றவர். - எ - று.

***சினவிடையார் கோயில்தொறுந் திருச்செல்வம் பெருக்குநெறி***
***யனஇடைஆர் உயிர்துறக்க வருமெனினும் அவைகாத்து***
***மனவிடைஆ மைத்தொடையல் அணிமார்பர் வழித்தொண்டு***
***கனவிடையா கிலும்வழுவாக் கடனாற்றிச் செல்கின்றார்.*** 3

(இ - ள்.) கோபிக்கின்ற இடபவாகனத்தையுடைய சிவபெருமானது திருக்கோயில்கடோறுஞ் சிறந்த பெருஞ் செல்வத்தை விருத்திசெய்யும் நன்னெறிகளில் தமது உயிரைத் துறக்க நேர்ந்தாலும் பின்வாங்காதவராய் அவைகளைக் காத்து, எலும்பு மணியி னிடையில் ஆமையோட்டைக் கோத்த மாலையை யணிந்த திருமார்பினை யுடைய சிவபெருமானது வழித்தொண்டைச் சொப்பனத்திலும் வழுவாத முறைமைப்படி நடத்தி வருகின்றவர். - எ - று.

***ஆறணிந்த சடைமுடியார்க் காதிரைநா டொறுமென்றும்***
***வேறுநிறை வழிபாடு விளங்கியபூ சனைமேவி***
***நீறணியும் தொண்டர்அணைந் தார்க்கெல்லாம் நிகழ்பசும்பொன்***
***நூறுகுறை யாமல்அளித் தின்னமுது நுகர்விப்பார்.*** **4**

(இ - ள்.) கங்கை நதியை யணிந்த சடைமுடியை யுடைய சிவ பெருமானுக்கு திருவாதிரை நட்சத்திரந்தோறும் எப்பொழுதும் வேறாகிய விசேட வழிபாட்டுடோடு விளங்குகின்ற பெரும்பூசை செய்வித்து, தம்மிடத்தில் எழுந்தருளி வருந் திருவெண்ணீ றணிந்த திருத்தொண்டர்களனைவருக்கும் விளங்குகின்ற நூறு பசும் பொன் குறையாமற் கொடுத்துத் திருவமுது செய்விப்பவர்.- எ - று.

***ஆனசெயல் முறைபுரிவார் ஒருதிருவா திரைநாளில்***
***மேன்மைநெறித் தொண்டர்க்கு விளங்கியபொன் னிடும்பொழுதில்***
***மானநிலை அழிதன்மை வருங்காமக் குறிமலர்ந்த***
***ஊனநிகழ் மேனியராய் ஒருவர்நீ றணிந்தணைந்தார்.*** **5**

(இ - ள்.) இவ்வாறாகிய திருத்தொண்டை முறைமைப்படி செய்கின்ற நாயனார் ஒரு திருவாதிரை நட்சத்திரத்தில் மேன்மை யாகிய நன்னெறியை யுடைய திருத்தொண்டர்களுக்கு விளங்கு கின்ற பொன்னைத் தனித்தனி கொடுக்கும்பொழுது பெருமை நிலையை யழிக்கத் தக்க தன்மை வாய்ந்த காமக்குறி தோன்றுங் குற்றம் பொருந்திய தூர்த்தவேட முடையவராய் ஒருவர் திருநீ றணிந்து கொண்டு வந்தனர். - எ - று.

***மற்றவர்தம் வடிவிருந்த படிகண்டு மருங்குள்ளார்***
***உற்றஇகழ்ச் சியராகி ஒதுங்குவார் தமைக்கண்டு***
***கொற்றவனார் எதிர்சென்று கைகுவித்துக் கொடுபோந்தப்***
***பெற்றியினார் தமைமிகவுங் கொண்டாடிப் பேணுவார்.*** **6**

***மறவாமை யான்அமைத்த மனக்கோயில் உள்ளிருத்தி***
***உறவாதி தனையுணரும் ஒளிவிளக்குச் சுடரேற்றி***
***இறவாத ஆனந்தம் எனுந்திருமஞ் சனம்ஆட்டி***
***அறவாணர்க் கன்பென்னும் அமுதமைத்தர்ச் சனைசெய்வார்.*** ***8***

(இ - ள்.) (அவர் சிவபெருமானை) மறவாமையால் சமைத்த மனமாகிய ஆலயத்தில் எழுந்தருளுவித்து, உறவாதிகளை யுணரத்தக்க ஞானமாகிய சுடர் விளக்கேற்றி, கெடாத பேரானந்தமென்னுந் திருமஞ்சனங்கொண்டு அபிஷேகஞ் செய்து, அவ்வெமது சிவபெருமானுக்கு அன்பாகிய திருவமுதை நிவேதித்துப் பூசை செய்வாராயினார். - எ - று.

***அகமலர்ந்த அர்ச்சனையில் அண்ணலார் தமைநாளும்***
***நிகழவரும் அன்பினால் நிறைவழிபா டொழியாமே***
***திகழநெடு நாட்செய்து சிவபெருமான் அடிநிழற்கீழ்ப்***
***புகலமைத்துத் தொழுதிருந்தார் புண்ணியமெய்த் தொண்டனார்.*** ***9***

(இ - ள்.) மனகிழ்ந்து செய்கின்ற ஞானபூசையில் சிவபெருமானை நாடோறும் விளங்கவருகின்ற பேரன்பினால் நிறைந்த வழிபாடு நீங்காமல் அநேககாலம் விளங்கச் செய்து, புண்ணியத்தை யுடைய மெய்யன்பராகிய அவ்வாயிலார் நாயனார் சிவபெருமானது திருவடி நிழலையடைந்து வணங்கி யிருந்தார். - எ - று.

***நீராருஞ் சடையாரை நீடுமன ஆலயத்துள்***
***ஆராத அன்பினால் அருச்சனைசெய் தடியவர்பால்***
***பேராத நெறிபெற்ற பெருந்தகையார் தமைப்போற்றிச்***
***சீராருந் திருநீடூர் முனையடுவார் திறமுரைப்பாம்.*** ***10***

(இ - ள்.) கங்கை நீர் தங்கிய சடைமுடியையுடைய சிவபெருமானைச் சிறந்த மனமாகிய திருக்கோயிலிலே நீங்காத பேரன்பினால் பூசனைசெய்து மெய்யடியார்களிடத்தினின்றும் நீங்காத முத்திநெறியைப் பெற்ற வாயிலார் நாயனாரைத் துதித்து, சிறப்புமிக்க திருநீடூரில் அவதரித்த முனையடுவார் நாயனாரது திருத்தொண்டின் றிறத்தைக் கூறுவோம். - எ - று.

# 52. முனையடுவார் நாயனார் புராணம்

***மாறு கடிந்து மண்காத்த வளவர் பொன்னித் திருநாட்டு***
***நாறு விரைப்பூஞ் சோலைகளின் நனைவாய் திறந்து பொழிசெழுந்தேன்***
***ஆறு பெருகி வெள்ளமிடும் அள்ளல் வயலின் மள்ளர்உழுஞ்***
***சேறு நறுவா சங்கமழுஞ் செல்வ நீடூர் திருநீடூர். 1***

(இ - ள்.) (வேற்றரசர்களது) பகைமையை யொழித்து இந்நிலவுலகத்தைப் பாதுகாத்த சோழராஜாக்களது காவிரி நாட்டிலே வாசனை வீசுகின்ற மலர்ச் சோலைகளிலுள்ள அரும்புகள் வாய்விண்டு பொழிகின்ற செழிய தேனானது ஆறு போலப் பெருகி வெள்ளமிடுகின்ற சேற்றினையுடைய வயல் களில் உழவர்கள் உழுகின்ற சேறானது நறுமணங்கமழத்தக்க செல்வங்கள் நிறைந்த ஊரானது திருநீடூராகும். - எ - று.

***விளங்கும் வண்மை மிக்குள்ள வேளாண் தலைமைக் குடிமுதல்வர்,***
***களங்கொள் மிடற்றுக் கண்ணுதலார் கழலிற் செறிந்த காதல்மிகும்***
***உளங்கொள் திருத்தொண் டுரிமையினில் உள்ளார் நள்ளார் முனைஎறிந்த,***
***வளங்கொ டிறைவர் அடியார்க்கு மாறா தளிக்கும் வாய்மையார். 2***

(இ - ள்.) சிறந்து விளங்குகின்ற வளப்பத்தையுடைய அத்திருநீடூரிலே முதன்மையாகிய வேளாளர்குலத் தலைவரா யுள்ளவர்; காளகண்டராகிய சிவபெருமானது திருவடிகளிற் பொருந்திய பேரன்புமிக்க திருவுள்ளத்திற் கொண்ட திருத் தொண்டுரிமையிலுள்ளவர்; பகைவர்களது போரை வென்று கிடைத்த பொருளைக் கொண்டு சிவபெருமானடியார்களுக்கு நீங்காது கொடுக்கும் மெய்யன்பினையுடையவர். - எ - று.

***மாற்றார்க் கமரில் அழிந்துள்ளோர் வந்து தம்பால் மாநிதியம்***
***ஆற்றும் பரிசு பேசினால் அதனை நடுவு நிலைவைத்துக்***
***கூற்றும் ஒதுங்கும் ஆள்வினையால் கூலி ஏற்றுச் சென்றெறிந்து***
***போற்றும் வென்றி கொண்டிசைந்த பொன்னுங் கொண்டு மன்னுவார். 3***

(இ - ள்.) போர் முனையில் பகைவர்களுக்குத் தோற்றவர்கள் தம்மிடத்தில் வந்து பெரும்பொருள் கொடுக்கும்படி பேசினால், அதனை நடுவுநிலைமையாக வைத்து, இயமனும் அஞ்சி யொதுங்கத்தக்க போர்த் தொழிலினால் கூலி பெற்றுச் சென்று போர் செய்து, துதிக்கத்தக்க வெற்றிபெற்று, அதனால் கிடைத்த பொருளையுங் கொண்டு வாழ்கின்றவர். - எ - று.

***இன்ன வகையால் பெற்றநிதி எல்லாம் ஈசன் அடியார்கள்***
***சொன்ன சொன்ன படிநிரம்பக் கொடுத்துத் தூய போனகமும்***
***கன்னல் நறுநெய் கறிதயிர்பால் கனியுள்ளுறுத்த கலந்தளித்து***
***மன்னும் அன்பின் நெறிபிறழா வழித்தொண் டாற்றி வைகினார். 4***

(இ - ள்.) இவ்வகையாகக் கிடைத்த திரவியங்களையெல்லம் சிவபெருமானடியார்கள் சொன்ன சொன்னபடியே நிரம்பக் கொடுத்துத் தூய்மையாகிய அன்னமும், வெல்லம், நல்லநெய், பதார்த்தம், தயிர், பால், பழம் முதலியவைகளையுங் கலந்து கொடுத்து நிலைபெற்ற அன்பின் முறைமை தவறாவண்ணந் திருத்தொண்டு செய்து வசித்தருளினார். - எ - று.

***மற்றிந் நிலைமை பன்னெடுநாள் வையம் நிகழச் செய்துவழி***
***உற்ற அன்பின் செந்நெறியால் உமையாள் கணவன் திருவருளால்***
***பெற்ற சிவலோ கத்தமர்ந்து பிரியா உரிமை மருவினார்***
***முற்ற உழந்த முனையடுவார் என்னும் நாமம் முன்னுடையார். 5***

(இ - ள்.) மிக்க பேரன்பு செய்த முனையாடுவாரென்னுந் திருநாமத்தை முதன்மையாகப் பெற்ற அந்நாயனார் இவ்வா றாகிய திருத்தொண்டினிலைமையை உலகத்தில் அநேகநாள்கள் விளங்கச் செய்து, அத்திருத் தொண்டின் வழியாகக் கிடைத்த அன்பின் நன்னெறியினால் பார்வதிபாகராகிய சிவபெருமா னது திருவருளினால் கிடைத்த சிவலோகத்தில் அமர்ந்து வசித்து என்றும் நீங்காத உரிமையை யடைந்தருளினார். - எ - று.

***யாவ ரெனினும் இகலெறிந்தே ஈசன் அடியார் தமக்கின்பம்***
***மேவ அளிக்கும் முனையடுவார் விரைப்பூங் கமலக் கழல்வணங்கித்***
***தேவர் பெருமான் சைவநெறி விளங்கச் செங்கோல் முறைபுரியும்***
***காவல் பூண்ட கழற்சிங்கர் தொண்டின் நிலைமை கட்டுரைப்பாம். 6***

(இ - ள்.) எத்தன்மையராயினும் போரில் வென்று, சிவனடியார்களுக்கு இன்பம் பொருந்தக் கொடுத்தருளிய

முனையடுவார் நாயனாரது நறுமணங்கமழுந் தாமரை மலர் போன்ற திருவடிகளை வணங்கி, தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது சைவ சமயம் உலகத்தில் சிறந்தோங்கும் பொருட்டுச் செங்கோன்முறைமையைச் செலுத்தும் அரசாட்சியை மேற்கொண்ட கழற்சிங்கநாயனாரது திருத்தொண்டின் நிலைமையைக் கூறுவோம். - எ - று.

***செறிவுண் டென்று திருத்தொண்டிற் சிந்தை செல்லும் பயனுக்கும்,***
***குறியுண் டொன்றா கிலுங்குறையொன் றில்லோம் நிறையுங் கருணையினால்,***
***வெறியுண் சோலைத் திருமுருகன் பூண்டி வேடர்வழி பறிக்கப்,***
***பறியுண் டவர்எம் பழவினைவேர் பறிப்பார் என்னும் பற்றாலே.*** 7

(இ - ள்.) மேன்மை யுண்டென்று கருதித் திருத்தொண்டில் சிந்தனை செல்லுகின்ற மெய்ப்பயனை விரும்புகின்ற குறிப்பு உண்டு; அஃது இல்லையாயினும், (சிவபெருமானது) நிறைந்த பெருங்கருணையினால் வாசனை பொருந்திய சோலை சூழ்ந்த திருமுருகன் பூண்டி யென்னுந் திருப்பதியிலே வேடர்கள் வழியில் பறிக்க, அவர்களால் பறிக்கப்பட்டவராகிய ஸ்ரீ சுந்தர மூர்த்தி சுவாமிகள் எமது பழைமையாகிய இருவினையின் வேரையும் பறித்தருளுவாரென்னுந் தொடர்பினால் சிறிதுங் குறையில்லோ மாயினோம். - எ - று.

# 53. கழற்சிங்க நாயனார் புராணம்

***படிமிசை நிகழ்ந்த தொல்லைப் பல்லவர் குலத்து வந்தார்***
***கடிமதில் மூன்றுஞ் செற்ற கங்கைவார் சடையார் செய்ய***
***அடிமலர் அன்றி வேறொன் றறிவினிற் குறியா நீர்மைக்***
***கொடிநெடுந் தானை மன்னர் கோக்கழற் சிங்கர் என்பார்.*** 1

(இ - ள்.) உலகத்தில் விளங்குகின்ற பழைமையாகிய பல்லவர் குலத்தில் அவதரித்தவர்; (அவர் யாரெனின்,) காவலையுடைய முப்புரங்களையு மெரித்தருளிய கங்கைநதி தவழுஞ் சடை முடியையுடைய சிவபெருமானது சிவந்த திருவடித் தாமரைகளை யன்றி வேறொன்றையும் அறிவில் சிந்தியாத பெருங்குணமமைந்த நெடிய கொடிப்படையையுடைய அரசர் பெருமானாகிய கறழ்சிங்க நாயனாரென்பவர். - எ - று.

***காடவர் குரிசி லாராங் கழற்பெருஞ் சிங்க னார்தாம்***
***ஆடக மேரு வில்லார் அருளினால் அமரிற் சென்று***
***கூடலர் முனைகள் சாய வடபுலங் கவர்ந்து கொண்டு***
***நாடற நெறியில் வைக நன்னெறி வளர்க்கு நாளில். 2***

(இ - ள்.) காடவர் தலைவராகிய பெரிய அந்த கழற்சிங்க நாயனார், பொன்மயமாகிய மேருமலையை வில்லாகவுடைய சிவபெருமான்றிருவருளினால் போருக்குச் சென்று பகைவர் களது போர்கெடும்படி வென்று வடபுலத்தைக் கவர்ந்து கொண்டு, உலக முழுதும் தருமநெறியில் வாழும்பொருட்டு நன்மார்க்கத்தை விருத்தி செய்யும் நாள்களில். - எ - று.

***குவலயத்(து) அரனார் மேவுங் கோயில்கள் பலவுஞ் சென்று***
***தவலரும் அன்பில் தாழ்ந்து தக்கமெய்த் தொண்டு செய்வார்***
***சிவபுரி என்ன மன்னும் தென்திரு வாரூர் எய்திப்***
***பவமறுத் தாட்கொள் வார்தங் கோயிலுட் பணியப் புக்கார். 3***

(இ - ள்.) நிலவுலகத்தில் சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருக்கோயில்களையுமடைந்து நீங்காத பேரன்புடன் வணங்கித் தகுந்த மெய்ம்மையாகிய திருத்தொண்டு செய்கின்றவராகிய அந்நாயனார், (பூலோக) சிவலோகமென்று சொல்லும்படி நிலைபெற்றிருக்கின்ற அழகிய திருவாரூரையடைந்து (ஆன்மாக் களது) பாவங்களை யொழித்து அதடிமைகொண்டருளுஞ் சிவபெருமானது திருக்கோயிலினுள்ளே வணங்கப் புகுந்தருளி னார். - எ - று.

***அரசியல் ஆயத் தோடும் அங்கணர் கோயி லுள்ளால்***
***முரசுடைத் தானை மன்னர் முதல்வரை வணங்கும் போதில்***
***விரைசெறி மலர்மென் கூந்தல் உரிமைமெல் லியலார் தம்முள்***
***உரைசிறந் துயர்ந்த பட்டத் தொருதனித் தேவி மேவி. 4***

(இ - ள்.) சிவபெருமானது திருக்கோயிலினுள்ளே, வெற்றி முரசையுடைய சேனைகள் பொருந்திய கழற்சிங்க நாயனார் தமது அரசுரிமைச் சுற்றத்தாரோடுஞ் சிவபெருமானை வணங் கும் பொழுது, நறுமணங்கமழும் மலரை யணிந்த கூந்தலை யுடைய இராஜபத்தினிமார்களில் புகழ் சிறந்தோங்கிய ஒப்பற்ற பட்டத்து மனைவியாரடைந்து. - எ - று.

***கோயிலை வலங்கொண் டங்கண் குலவிய பெருமை எல்லாம்***
***சாயல்மா மயிலே போல்வாள் தனித்தனி கண்டு வந்து***
***தூயமென் பள்ளித் தாமம் தொடுக்குமண் டபத்தின் பாங்கர்***
***மேயதோர் புதுப்பூ அங்கு விழுந்ததொன் றெடுத்து மோந்தாள்.*** 5

(இ - ள்.) திருக்கோயிலைப் பிரதட்சணஞ் செய்து அங்கு விளங்குகின்ற சிறப்புமிக்க ளெல்லாவற்றையும், சாயலையுடைய சிறந்த மயில் போல் பவராகிய தேவியார் தனித்தனியே பார்த்துக் கொண்டு வந்து தூய்மையாகிய மெல்லிய திருமாலை கட்டுந் திருமண்டபத்தினருகிலே அங்கு விழுந்து கிடந்த ஒரு புதுப் பூவை எடுத்த மோந்தார். - எ - று.

***புதுமலர் மோந்த போதிற் செருத்துணைப் புனிதத் தொண்டர்***
***"இதுமலர் திருமுற் றத்துள் எடுத்துமோந் தனளாம்" என்று***
***கதுமென ஓடிச் சென்று கருவிகைக் கொண்டு பற்றி***
***மதுமலர்த் திருவொப் பாள்தன் மூக்கினைப் பிடித்து வார்ந்தார்.*** 6

(இ - ள்.) அந்தப் புதுப்பூவை யெடுத்து மோந்தபொழுது, தூய்மையாகிய திருத்தொண்டராகிய செருத்துணைநாயனார் இம்மலரைப் புஷ்பமண்டபத்துள் எடுத்து மோந்தனளென்று கருதி விரைந்தோடி வந்து பிடித்துக் கையில் கத்தியைக் கொண்டு, தேன் பொருந்திய தாமரை மலரில் வாழுந் திருமகளை யொத்த அப்பட்டத்து மனைவியாரது மூக்கைப் பிடித்து அரிந்தார். - எ - று.

***வார்ந்திழி குருதி சோர மலர்க்கருங் குழலுஞ் சோரச்***
***சோர்ந்துவீழ்ந் தரற்றுந் தோகை மயிலெனத் துளங்கி மண்ணில்***
***சேர்ந்தயர்ந் துரிமைத் தேவி புலம்பிடச் செம்பொற் புற்றுள்***
***ஆர்ந்தபே ரொளியைக் கும்பிட் டரசரும் அணைய வந்தார்.*** 7

(இ - ள்.) பட்டத்துத் தேவியார் ஒழுகியோடுகின்ற உதிர மொழுகவும், மலரை யணிந்த கரிய கூந்தல் சோரவும், சோர்ந்து விழுந்து அழுகின்ற கலாபத்யையுடைய மயிலைப்போல நடுங்கிப் பூமியில் விழுந்து அயர்ந்து புலம்ப, அப்பொழுது கழற்சிங்க நாயனாரும் செம்பொன்மயமாகிய புற்றினிடத்தில் வீற்றிருந் தருளும் பேரொளிப் பிழம்பாகிய ஸ்ரீவன்மீகநாதரை வணங்கிச் சமீபமாக வந்தனர். - எ - று.

***வந்தணை வுற்ற மன்னர் மலர்ந்தகற் பகத்தின் வாசப்***
***பைந்தளிர்ப் பூங்கொம் பொன்று பார்மிசை வீழ்ந்ததென்ன***
***நொந்தழிந் தரற்று வாளை நோக்கி "இவ் வண்டத் துள்ளோர்***
***இந்தவெவ் வினைஅஞ் சாதே யார்செய்தார்?" என்னும் எல்லை. 8***

(இ - ள்.) வந்து சேர்ந்த கழற்சிங்கநாயனார், மலர்ந்த கற்பத்தினது நறுமணங்கமழும் பசிய தளிர்களையுடைய ஒரு பூங்கொம்பானது பூமியில் விழுந்தாற்போல மனம்வருந்திப் புலம்புகின்ற தேவியாரைப் பார்த்து, இக்கொடுஞ் செய்கையை இவ்வண்டத்துள்ளவர்களில் அஞ்சாமல் செய்தவர்கள் யாவ ரென்று வினாவும்பொழுது. - எ - று.

***அந்நிலை அணைய வந்து செருத்துணை யாராம் அன்பர்***
***முன்னுறு நிலைமை அங்குப் புகுந்தது மொழிந்தபோது***
***மன்னரும் அவரை நோக்கி "மற்றிதற் குற்ற தண்டம்***
***தன்னைஅவ் வடைவே யன்றோ தடிந்திடத் தகுவ"தென்று. 9***

(இ - ள்.) அப்பொழுது செருத்துணை நாயனார் அவருக்குச் சமீபத்தில் வந்து அங்கு முன்பு நடந்த சங்கதியைச் சொன்ன பொழுது, கழற்சிங்க நாயனாரும் அச்செருத்துணை நாயனா ரைப் பார்த்து, இதற்குச் செய்யவேண்டிய தண்டனையை அவ்வரிசையாகவே யன்றோ துணிக்கத் தகுவதென்று கூறி. -எ-று.

***கட்டிய உடைவாள் தன்னை உருவி "அக் கமழ்வா சப்பூத்***
***தொட்டுமுன் னெடுத்த கையாம் முற்படத் துணிப்ப"தென்று***
***பட்டமும் அணிந்து காதல் பயில்பெருந் தேவி யான***
***மட்டவிழ் குழலாள் செங்கை வளையொடும் துணிந்தா ரன்றே. 10***

(இ - ள்.) இடையிற் கட்டிய உடைவாளை யுருவி, அந்த நறுமணங்கமழும் புதுப்பூவை முதலில் தொட்டு எடுத்த கையினையே முன்னே துணிக்கத்தக்க தென்று, பட்டத்தை யணிந்து அன்பு மிகுத்திருக்கின்ற மாதேவியாகிய தேன் சிந்துங் கூந்தலையுடைய அம்மனைவியாரது (புஷ்பமெடுத்து) சிவந்த கையை வளையலோடும் வெட்டித் துணித்தார். - எ - று.

***ஒருதனித் தேவி செங்கை உடைவாளால் துணித்த போது***
***பெருகிய தொண்டர் ஆர்ப்பின் பிறங்கொலி புவிமேற் பொங்க***
***இருவிசும் படைய ஓங்கும் இமையவர் ஆர்ப்பும் விம்மி***
***மருவிய தெய்வ வாச மலர்மழை பொழிந்த தன்றே. 11.***

(இ - ள்.) ஒப்பற்ற பட்டத்துத் தேவியாரது சிவந்த கையை உடைவாளினால் தடித்த பொழுது, மிக்க திருத்தொண்டர்கள் செய்யும் ஆரவாரத்தின் பேரொலியானது உலகத்தில் மிகுத்து ஓங்க, பெரிய ஆகாய முழுதும் நிறைந்த தேவர்களது ஆரவாரமும் அதிகரித்து நிலைபெற்ற தெய்வமணங்கமழும் கற்பக மலர்மாரி பொழிந்தது. - எ - று.

**அரியஅத் திருதொண் டாற்றும் அரசனார் அளவில் காலம்**
**மருவிய உரிமை தாங்கி மாலயற் கரியார் மன்னும்**
**திருவருட் சிறப்பி னாலே செய்யசே வடியின் நீழற்**
**பெருகிய உரிமை யாகும் பேரருள் எய்தி னாரே. 12**

(இ - ள்.) செய்தற்கரிய அத்தகைய திருத்தொண்டைச் செய்த கழற்சிங்க நாயனார் அநேக காலம் நிலைபெற்ற அரசுரிமையைத் தாங்கி, அரிபிரமர்களால் காணுதற்கரிய சிவபெருமானது பொருந்திய திருவருட்சிறப்பினால் சிவந்த திருவடி நிழலில் நிறைந்த பேரின்புற்றிருக்கும் மிக்க திருவருளடைந்தார். - எ - று.

**வையகம் நிகழக் காதல் மாதேவி தனது செய்ய**
**கையினைத் தடிந்த சிங்கர் கழலிணை தொழுது போற்றி**
**எய்திய பெருமை அன்பர் இடங்கழி யார்என் றேத்தும்**
**மெய்யரு ளுடைய தொண்டர் செய்வினை விளம்ப லுற்றாம். 13**

(இ - ள்.) உலகத்தில் சிறந்தோங்கும்படி பெருவிருப்பினையுடைய பட்டத்து மனைவியாரது சிறந்த கையை வெட்டிய கழற்சிங்கநாயனாருடைய இரண்டு திருவடிகளையும் வணங்கித் துதித்து, நிலைபெற்ற பெருமையினையுடைய மெய்யன்பராகிய இடங்கழி நாயனாரென்று (உலகத்தார்) துதிக்கின்ற மெய்யருளுடைய திருத்தொண்டரது திருத்தொண்டின் சிறப்பைச் சொல்லத் தொடங்குவோம். - எ - று.

# 54. இடங்கழி நாயனார் புராணம்

**எழுந்திரைமா கடலாடை இருநிலமா மகள்மார்பில்**
**அழுந்துபட எழுதும்இலைத் தொல்தொய்யில் அணியினவாம்**
**செழுந்தளிரின் புடைமறைந்த பெடைகளிப்பத் தேமாவின்**
**கொழுந்துணர்கோ திக்கொண்டு குயில்நாடு கோனாடு. 1**

(இ - ள்.) செழித்த துளிர்களி னிடையில் மறைந்த பெண் குயில்கள் மகிழும்படி தேமாமரத்தினது நல்ல துளிர்களைக் கோதிக் கடித்துக் கொண்டு ஆண்குயில்கள் கூவித் தேடுகின்ற கோனாடானது, அலைகளெழுந்து மோதுகின்ற பெரிய கடலாகிய ஆடையையுடைய பெரிய நிலவுலகமாகிய பெண்ணி னது மார்பிலே அழுந்தும்படி எழுதிய திருத்தமாகிய சித்திரத் தின் அழகினை யொத்திருக்கும். - எ - று.

***முருகுறுசெங் கமலமது மலர்துதைந்த மொய்யளிகள்***
***பருகுறுதெண் டிரைவாவிப் பயில்பெடையோ டிரையருந்தி***
***வருகுறுதண் டுளிவாடை மறையமா தவிச்சூழல்***
***குருகுறங்குங் கோனாட்டுக் கொடிநகரங் கொடும்பாளூர். 2***

(இ - ள்.) நறுமணங்கமழுஞ் செந்தாமரையின் தேனினை மலரில் நெருங்கிய வண்டுகள் உண்ணுகின்ற தெள்ளிய அலை களையுடைய தடாகத்தில், பொருந்திய பெண் பறவைகளோடு இரையையுண்டு, மோதிக்கொண்டு வருகின்ற குளிர்ந்த துளி களையுடைய வாடைக்காற்றானது மறையும்படி குருக்கத்திச் சோலையில் ஆண் பறவைகள் உறங்குகின்ற கோனாட்டிலே கொடிகளையுடைய நகரமாகவுள்ளது கொடும்பாளூராகும். - எ - று.

***அந்நகரத் தினிலிருக்கும் வேளிர்குலத் தரசளித்து***
***மன்னியபொன் னலம்பத்து மணிமுகட்டில் பாக்கொங்கின்***
***பன்னுதுலைப் பசும்பொன்னாற் பயில்பிழம்பாம் மிசையணிந்த***
***பொன்னெடுந்தோள் ஆதித்தன் புகழ்மரபிற் குடிமுதலோர். 3***

(இ - ள்.) அந்தக் கொடும்பாளூரில் வாழ்கின்ற சிற்றரசர் களது வமிசத்திலரசாட்சி செய்து, நிலைபெற்ற பொன்னம்பலத் திலே இரத்தினமயமாகிய சிகரத்தில் அழகிய கோங்கமலர் போன்ற ஒரு துலாம் பசும்பொன்னினால் ஒளிமயமாக மேலே வேய்ந்த விஜயலட்சுமி தங்கிய நீண்ட தோள்களையுடைய ஆதித் தச் சோழனது புகழினையுடைய மரபில் குடிக்கு முதல்வரா யுள்ளவர். - எ - று.

***இடங்கழியார் எனவுலகில் ஏறுபெரு நாமத்தார்***
***அடங்கலர்முப் புரமெரித்தார் அடித்தொண்டின் நெறியன்றி***
***முடங்குநெறி கனவினிலும் முன்னாதார் எந்நாளும்***
***தொடர்ந்தபெருங் காதலினால் தொண்டர்வேண் டியசெய்வார். 4***

(இ - ள்.) இடங்கழிநாயனா ரென்று உலகத்தில் சிறந்தோங்குகின்ற பெரிய திருநாமத்தையுடையவர்; பகையசுரர்களது முப்புரங்களையுமெரித்தருளிய சிவபெருமானது திருவடித் தொண்டு செய்யும் நன்னெறியேயன்றி, முடங்கலாகிய புறச் சமயநெறியைச் சொப்பனத்திலுங் கருதாதவர்; எப்பொழுதுந் தொடர்ந்து வருகின்ற பேரன்பினால் சிவனடியார்கள் வேண்டுவனவற்றைச் செய்கின்றவர். - எ - று.

***சைவநெறி வைதிகத்தின் தருமநெறி யொடுந்தழைப்ப***
***மைவளருந் திருமிடற்றார் மன்னியகோ யில்களெங்கும்***
***மெய்வழிபாட் டர்ச்சனைகள் விதிவழிமேன் மேல்விளங்க***
***மொய்வளர்வண் புகழ்பெருக முறைபுரியும் அந்நாளில். 5***

(இ - ள்.) சைவமார்க்கமும் வைதிக தருமமார்க்கங்களுந் தழைக்கும் பொருட்டுக் கருநிறம் வளருங் கண்டத்தினையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கோயில்கடோறும் மெய்ம்மையாகிய வழிபாட்டோடு பூசனைகள் வேதாகம விதிப்படி மேன்மேலும் விருத்தியாகவும், நெருங்கிய பெரும் புகழ் பெருகவும் செங்கோல் செலுத்துகின்ற நாள்களில். - எ - று.

***சங்கரன்றன் அடியாருக் கமுதளிக்குந் தவமுடையார்***
***அங்கொருவர் அடியவருக் கமுதொருநாள் ஆக்கவுடன்***
***எங்கும்ஒரு செயல்காணா தெய்தியசெய் தொழில்முட்டப்***
***பொங்கிஎழும் பெருவிருப்பால் புரியும்வினை தெரியாது. 6***

(இ - ள்.) அந்நகரத்தில், சிவனடியார்களுக்குத் திருவமுது செய்விக்கும் ஒரு அடியவர் சிவனடியார்களுக்கு ஒருநாள் திருவமுது செய்விக்கப் பொருள் சேகரிக்க எங்கும் வழி காணாமல், தாம் செய்து வந்த திருத்தொண்டு தவற, மிகுத்தெழுகின்ற பெருவிருப்பினால் பொருள் சம்பாதிக்குந் தொழில் இது என்பது தெரியாமல். - எ - று.

***அரசரவர் பண்டாரத் தந்நாட்டின் நெற்கூட்டின்***
***நிரைசெறிந்த புரிபலவா நிலைக்கொட்ட காரத்தில்***
***புனைசெறிநள் ளிருளின்கண் புக்குமுகந் தெடுப்பவரை***
***முரசெறிகா வலர்கண்டு பிடித்தரசன் முன்கொணர்ந்தார். 7***

(இ - ள்.) அரசராகிய இடங்கழி நாயனாருடைய பல பொருட்சாலையிலே, அந்நாட்டினது நெற்கூட்டுவரிசைகள்

நெருங்கிய பல போர்களிருக்கின்ற கொட்டகாரத்திலே குற்ற மிக்க அர்த்தராத்திரியில் புகுந்து (நெற்களை) முகந்தெடுக்கின்ற வரை வெற்றிமுரசடிக்கின்ற காவலாளர்கள் பார்த்துப் பிடித்து, இடங்கழிநாயனாருக்கு முன்னே கொண்டு வந்தார்கள். - எ - று.

***மெய்த்தவரைக் கண்டிருக்கும் வேல்மன்னர் வினவுதலும்***
***"அத்தனடி யாரையான் அமுதுசெய்விப் பதுமுட்ட***
***இத்தகைமை செய்தேன்" என் றியம்புதலும் மிகஇரங்கிப்***
***பத்தரைவிட்(டு) "இவரன்றோ பண்டாரம் எனக்(கு)" என்பார். 8***

(இ - ள்.) மெய்த்தவத்தினையுடைய அவ்வடியவரைப் பார்த்திருந்த வேற்படையையுடைய இடங்கழிநாயனார் (நீர் நம்முடைய நெல் அம்பாரத்தை ஏன் கவர்ந்தீர் என்று) வினாவவும், அவர் அடியேன் சிவனடியார்களைத் திருவமுது செய்விக்குந் திருப்பணியானது (பொருளில்லாமல்) முட்டுப்பட, (அது காரணமாக) இவ்வாறு செய்தேனென்று கூறவும், (அது கேட்டு) மிகவும் மனமிரங்கி அவரை இவ்வடியவரன்றோ? எனக்குப் பெரும்பொருளாயுள்ளவரென்பவராய். - எ - று.

***நிறையழிந்த உள்ளத்தால் "நெற்பண்டா ரமும்அன்றிக்***
***குறைவில்நிதிப் பண்டார மானஎலாங் கொள்ளைமுகந்(து)***
***இறைவனடி யார்கவர்ந்து கொள்க" என எம்மருங்கும்***
***பறையறையப் பண்ணுவித்தார் படைத்தநிதிப் பயன்கொள்வார். 9***

(இ - ள்.) தாமடைந்த பொருளினாலாகிய பயனைப் பெறுகின்றவராகிய அந்நாயனார் உறுதி யழிந்த திருவுள்ளத் தோடும் நெற்பண்டார மாத்திரமே யன்றிக் குறைவற்ற மற்ற நிதிப்பண்டாரங்க ளனைத்தையும் சிவனடியார்கள் கொள்ளை கொண்டு வாரிச் செல்லக் கடவரென்று எவ்விடங்களிலும் பறையறையச் செய்வித்தார். - எ - று.

***எண்ணில்பெரும் பண்டாரம் ஈசனடி யார்கொள்ள***
***உண்ணிறைந்த அன்பினால் உறுகொள்ளை மிகஊட்டித்***
***தண்ணளியால் நெடுங்காலந் திருநீற்றின் நெறிதழைப்ப***
***மண்ணிலருள் புரிந்திறைவர் மலரடியின் நிழல்சேர்ந்தார். 10***

(இ - ள்.) அளவற்ற பெரும்பொருள்களைச் சிவனடியார்கள் கொண்டு செல்லும்படி தமதுள்ளத்தில் நிறைந்த பேரன்பினால் பெருங்கொள்ளையாக விட்டு, குளிர்ந்த பேரருளோட அநேக

காலம் திருநீற்றுச் சார்பாயுள்ள சைவசமயந் தழைத்தோங்கும் படி நிலவுலகத்தில் செங்கோல் செலுத்திச் சிவபெருமானது திருவடி நிழலை யடைந்தருளினார். - எ - று.

***மைதழையும் மணிமிடற்றார் வழித்தொண்டின் வழிபாட்டில்***
***எய்துபெருஞ் சிறப்புடைய இடங்கழியார் கழல்வணங்கி***
***மெய்தருவார் நெறியன்றி வேறொன்றும் மேலறியாச்***
***செய்தவராஞ் செருத்துணையார் திருத்தொண்டின் செயல்மொழிவாம். 11***

(இ - ள்.) கருநிறம் விளங்குங் கண்டத்தினையுடைய சிவபெருமானது பரம்பரைத் திருத்தொண்டின் வழிபாட்டினால் அடைந்த பெருஞ் சிறப்பினையுடைய இடங்கழிநாயனாரது திருவடிகளை வணங்கி, மெய்ஞ்ஞானத்தைத் தருகின்ற சிவபெருமானது சைவநெறியேயன்றி வேறொன்றையும் மறியாத தவமுனிவராகிய செருத்துணை நாயனாரது திருத்தொண்டின் செயலை இனிச் சொல்லுவோம். - எ - று.

## 55. செருத்துணை நாயனார் புராணம்

***உள்ளும் புறம்புங் குலமரபில் ஒழுக்கம் வழுக்கா ஒருமைநெறி***
***கொள்ளும் இயல்பிற் குடிமுதலோர் மலிந்த செல்வக் குலப்பதியாம்***
***தெள்ளுந் திரைகள் மதகுதொறுஞ் சேலுங் கயலுஞ் செழுமணியும்***
***தள்ளும் பொன்னி நீர்நாட்டு மருகல் நாட்டுத் தஞ்சாவூர். 1***

(இ - ள்.) அகம் புறம் என்னு மிரண்டிடத்துந் தங்குலமரபி னொழுக்கத்தினின்றுஞ் சிறிதுந் தவறாத ஒருமைப்பட்ட நன்னெறியினை மேற்கொண்டொழுகு மியல்பினையுடைய அவ்வக்குடித் தலைவர்கள் நெருங்கியிருக்குஞ் செல்வம் பொருந்திய சிறந்த நகரமாகவுள்ளது (யதெனின்,) தெளிவாகிய அலைகள் மதகுகள் தோறும் சேல்மீன்களையுங் கயல்மீன்களை யுஞ் செழிய முத்துக்களையு மொதுக்குகின்ற காவிரிநதியை யுடைய சோழநாட்டின் கண்ணுள்ள மருகனாட்டிலே தஞ்சாவூ ராகும். - எ - று.

***சீரின் விளங்கும் அப்பதியில் திருந்து வேளாண் குடிமுதல்வர்***
***நீரின் மலிந்த செய்யசடை நீற்றர் கூற்றின் நெஞ்சிடித்த***
***வேரி மலர்ந்த பூங்கழல்சூழ் மெய்யன் புடைய சைவரெனப்***
***பாரில் நிகழ்ந்த செருத்துணையார் பரவுந் தொண்டின் நெறிநின்றார். 2***

(இ - ள்.) சிறப்போடு விளங்குகின்ற அத்தஞ்சாவூரிலே உயர்ந்த வேளாளர் குடித்தலைவராயுள்ளவர்; கங்கை நீர் விளங் குஞ் சிவந்த சடைமுடியை யுடைய சிவபெருமானது இயமனு டைய மார்பொடியும்படி யுதைத்தருளிய நறுமணங்கமழுந் தாமரை மலர் போன்ற திருவடிகளில் பொருந்திய மெய்யன் புடைய சைவரென்று உலகத்தில் விளங்குஞ் செருத்துணைய நாயனார், யாவருந் துதிக்கத்தக்க திருத்தொண்டின் நெறியிலே நின்றவர். - எ - று.

***ஆன அன்பர் திருவாரூர் ஆழித் தேர்வித் தகர்கோயில்***
***ஞான முனிவர் இமையவர்கள் நெருங்கு நலஞ்சேர் முன்றிலினுள்***
***மான நிலவு திருப்பணிகள் செய்து காலங் களின்வணங்கிக்***
***கூனல் இளவெண் பிறைமுடியார் தொண்டு பொலியக் குலவுநாள். 3***

(இ - ள்.) அவ்வாறாகிய செருத்துணைநாயனார் திருவாரூர்த் திருப்பதியில் சக்கரமமைந்த (பூமியாகிய) இரதத் திரனையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கோயிலில் மெய்ஞ்ஞானத்தையுடைய முனிவர்களும் தேவர்களும் நெருங்கிய நன்மைமிக்க திருமுற்றத்தில் பெருமை பொருந்திய பல திருப்பணிகள் செய்து காலங்கடோறும் வணங்கி, கூனலாகிய இளைய வெண்பிறையை யணிந்த திருமுடியை யுடைய சிவபெருமானது திருத்தொண்டு விளங்கும்படி வாழும் நாள்களில். - எ - று.

***உலகு நிகழ்ந்த பல்லவர்கோச் சிங்கர் உரிமைப் பெருந்தேவி***
***நிலவு திருப்பூ மண்டபத்து மருங்கு நீங்கிக் கிடந்ததொரு***
***மலரை எடுத்து மோந்ததற்கு வந்து பொறாமை வழித்தொண்டர்***
***இலகு சுடர்வாய்க் கருவிஎடுத் தெழுந்த வேகத் தாலெய்தி. 4***

(இ - ள்.) உலகத்தில் விளங்குகின்ற பல்லவர் குலத் தலைவராகிய கழற்சிங்கநாயனாரது பட்டத்து மாதேவியார் விளங்குகின்ற பூமாலை கட்டும் மண்டபத்தினருகில் விழுந்து கிடந்த ஒரு புதுப்பூவையெடுத்து மோந்ததற்கு, அத்தனைப் பொறாமல் வழித் தொண்டராகிய அச் செருத்துணைநாய கனார் ஒளிவிளங்குங் கத்தியையெடுத்து எழுந்த வேகத்தோடு வந்தடைந்து. - எ - று.

***கடிது முற்றி மற்றவள்தன் கருமென் கூந்தல் பிடித்தீர்த்துப்***
***படியில் வீழ்த்தி மணிமூக்கைப் பற்றிப் "பரமர் செய்யசடை***
***முடியில் ஏறுந் திருப்பூமண் டபத்து மலர்மோந் திடும்மூக்கைத்***
***தடிவன்" என்று கருவியினால் அரிந்தார் தலைமைத்***
***தனித்தொண்டர். 5***

(இ - ள்.) ஒப்பற்ற செருத்துணைநாயனார் விரைந்து நெருங்கி அப்பட்டத்துத் தேவியாரது கருமையாகிய மெல்லிய கூந்தலைப் பிடித்திழுத்துப் பூமியில் தள்ளி, இரத்தினாபரணமணிந்த மூக்கைப் பிடித்து, சிவபெருமானது சிவந்த சடைமுடியில் சூடும் புஷ்பமண்டபத்திலுள்ள மலரை யெடுத்து மோந்த மூக்கைத் தறிப்பேனென்று கத்தியினாலரிந்தார். - எ - று.

***அடுத்த திருத்தொண் டுலகறியச் செய்த அடலே றனையவர்தாம்***
***தொடுத்த தாம மலரிதழி முடியார் அடிமைத் தொண்டுகடல்***
***உடுத்த உலகில் நிகழச்செய் துய்யச் செய்ய பொன் மன்றுள்***
***எடுத்த பாத நிழலடைந்தே இறவா இன்பம் எய்தினார். 6***

(இ - ள்.) பொருந்திய திருத்தொண்டை உலகத்தாரறியும்படி செய்த வலிய ஆண்சிங்கம் போன்றவராகிய செருத்துணை நாயனார் தொடுக்கப்பட்ட கொன்றை மலர்மாலையை யணிந்த சடைமுடியை யுடைய சிவபெருமானது அடிமைத் திருத்தொண் டைச் சமுத்திரஞ் சூழ்ந்த நிலவுலகத்தில் விளங்கச் செய்து தாமுய்யும் பொருட்டுச் செம்பொன்னாலாகிய திருச்சிற்றம்பலத் தில் (ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளும்படி) தூக்கிய குஞ்சித பாத நிழலை யடைந்து ஓர் காலத்துங் கெடாத பேரின்படைந் தருளினார். - எ - று.

***செங்கண் விடையார் திருமுன்றில் விழுந்த திருப்பள் ளித்தாமம்***
***அங்கண் எடுத்து மோந்தஅதற் கரசன் உரிமைப் பெருந்தேவி***
***துங்க மணிமூக் கரிந்தசெருத் துணையார் தூய கழலிறைஞ்சி***
***எங்கும் நிகழ்ந்த புகழ்த்துணையார் உரிமை அடிமை எடுத்துரைப்பாம். 7***

(இ - ள்.) சிவந்த கண்களையுடைய இடபத்தை வாகனமாக வூர்ந்தருளிய சிவபெருமான் றிருக்கோயிலின் திருமுற்றத்திலே விழுந்துகிடந்த புதுமலரை அங்கு எடுத்து மோந்ததற்காகக் கழற்சிங்கநாயனாரது அரசுரிமைக்குரிய பட்டத்து மாதேவி யாரது உயர்ந்த இரத்தினாபரணமணிந்த மூக்கை யரிந்த செருத் துணை நாயனாரது தூய்மையாகிய திருவடிகளை வணங்கி, எங்கும் விளங்கிய புகழ்த்துணை நாயனாருடைய உரிமையாகிய அடிமைத் திருத்தொண்டை யெடுத்துச் சொல்லுவோம். - எ-று.

# 56. புகழ்த்துணை நாயனார் புராணம்

*செருவிலிபுத் தூர்மன்னுஞ் சிவமறையோர் திருக்குலத்தார்*
*அருவரைவில் லாளிதனக்(கு) அகத்தடிமை யாமதனுக்(கு)*
*ஒருவர்தமை நிகரில்லார் உலகத்துப் பரந்தோங்கிப்*
*பொருவரிய புகழ்நீடு புகழ்த்துணையார் எனும் பெயரார்.* 1

(இ - ள்.) செருவிலிபுத்தூரிலே நிலைபெற்று வாழும் ஆதி சைவவேதியர் குலத்தில் அவதரித்தவர், அரிய மேருமலையை வில்லாகவுடைய சிவபெருமானுக்கு அகத்தடிமை செய்வதில் தமக்கு ஒருவரும் நிகரில்லாதவர், நிலவுலகத்திற் பரவி யோங்கி ஒப்பற்ற பெரும்புகழ் நீடித்திருக்கின்ற புகழ்த்துணை நாயனா ரென்னுந் திருநாமமுடையவர். - எ - று.

*தங்கோனைத் தவத்தாலே தத்துவத்தின் வழிபடுநாள்*
*பொங்கோத ஞாலத்து வற்கடமாய்ப் பசிபுரந்தும்*
*"எங்கோமான் தனைவிடுவேன் அல்லேன்" என் றிராப்பகலும்*
*கொங்கார்பன் மலர்கொண்டு குளிர்புனல்கொண் டருச்சிப்பார்.* 2

(இ - ள்.) தமது சிவபெருமானை மெய்த்தவத்தினால் உண்மையாகிய சிவாகமவிதிப்படி அருச்சனை செய்து வரும் நாள்களில், பொங்குகின்ற கடல் சூழ்ந்த நிலவுலகத்தில் பஞ்சம் நேர்ந்து பசியால் வருந்தியும், எமது சிவபெருமா னருச்சனையை விடுவேனல்லேனென்று இரவும் பகலும், நறுமணங்கமழும் பல மலர்களைக் கொண்டு குளிர்ந்த நீரினால் பூசிப்பாராயினார். - எ - று.

*மாலயனுக் கரியானை மஞ்சனம்ஆட் டும்பொழுது*
*சாலவுறு பசிப்பிணியால் வருந்திநிலை தளர்வெய்திக்*
*கோலநிறை புனல்தாங்கு குடந்தாங்க மாட்டாமை*
*ஆலமணி கண்டத்தார் முடிமீது வீழ்த்தயர்வார்.* 3

(இ - ள்.) அரிபிரமர்களால் காணப்படாதவராகிய சிவ பெருமானைத் திருமஞ்சனமாட்டும்பொழுது, மிகப் பொருந்திய பசிநோயினால் வருந்திச் சரீரநிலை தளர்ந்து அழகிய நீர்நிறைந்த திருமஞ்சனக்குடத்தைத் தாங்கமாட்டாமையால் விடத்தை யணிந்த கண்டத்தையுடைய சிவபெருமானது திருமுடியின் மேல் தவறி வீழ்த்துச் சோர்வாராயினார். - எ - று.

**சங்கரன்தன் அருளாலோர் துயில்வந்து தமையடைய**
**அங்கணனுங் கனவின்கண் அருள்புரிவான் "அருந்துணவு**
**மங்கியநாட் கழிவளவும் வைப்பதுநித் தமும்ஒருகா(சு)**
**இங்குனக்கு நாம்" என்ன இடர்நீங்கி எழுந்திருந்தார். 4**

(இ - ள்.) அப்பொழுது சிவபெருமானுடைய திருவருளினால் ஒரு சிறு துயில் அவரை வந்தடைய, சிவபெருமான் சொப்பனத்திலெழுந்தருளியருள் செய்வார், (அன்பனே!) அருந்துகின்ற உணவு குறைந்த இப்பஞ்சகாலம் நீங்கும் வரையிலும் நாம் உனக்கு இங்கு நித்தமும் ஒரு காசுவைப்போம், என்று அருளிச்செய்ய, புகழ்த்துணைநாயனார் துன்பம் நீங்கியெழுந்திருந்தார். - எ - று.

**பெற்றம்உகந் தேறுவார் பீடத்தின் கீழ்ஒருகா(சு)**
**அற்றம்அடங் கிடஅளிப்ப அன்பரும்மற் றதுகைக்கொண்(டு)**
**உற்றபெரும் பசியதனால் உணங்கும்உடம் புடன்உவந்து**
**முற்றுணர்வு தலைநிரம்ப முகமலர்ந்து களிகூர்ந்தார். 5**

(இ - ள்.) இடபத்தை விரும்பியேறியருளும் சிவபெருமான் தமது பீடத்தின்கீழே ஒருகாசை அவரது சோர்வு நீங்கும்படியளித்தருள, புகழ்த்துணை நாயனாரும் அக்காசினைக் கையிற்கொண்டு, பொருந்திய பெரும்பசியினால் மெலிந்திருக்குமுடம்போடு சந்தோஷித்துப் பேருணர்ச்சி யுண்டாக முகமலர்ந்து மகிழ்கூர்ந்தருளினார். - எ - று.

**அந்நாள்போல் எந்நாளும் அளித்தகா சதுகொண்டே**
**இன்னாத பசிப்பிணிவந் திறுத்தநாள் நீங்கியபின்**
**மின்னார்செஞ் சடையார்க்கு மெய்யடிமைத் தொழில்செய்து**
**பொன்னாட்டின் அமரர்தொழப் புனிதரடி நிழல்சேர்ந்தார். 6**

(இ - ள்.) அந்நாள் போலவே எந்நாளுங் கொடுத்தருளும் ஒவ்வொரு காசைப் பெற்று கொடிய பசி நோய் வந்து வருந்திய பஞ்சகாலம் நீங்கினபின்பு, மின்போல் விளங்குஞ் சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமானுக்கு மெய்ம்மையாகிய அகத்தடிமைத் தொழில் செய்து விண்ணுலகத்துள்ள தேவர்கள் வணங்கும்படி சிவபெருமானது திருவடி நிழலை யடைந்தருளினார். - எ - று.

***பந்தணையு மெல்விரலாள் பாகத்தார் திருப்பாதம்***
***வந்தணையு மனத்துணையார் புகழ்த்துணையார் கழல்வாழ்த்திச்***
***சந்தணியு மணிப்புயத்துத் தனிவீர ராந்தலைவர்***
***கொந்தணையும் மலரலங்கல் கோட்புலியார் செயலுரைப்பாம்.*** 7

(இ - ள்.) பந்து பொருந்திய மெல்லிய திருவிரலையுடைய உமாதேவியாரை வாமபாகத்திலுடைய சிவபெருமான் திருவடியை வந்தடைந்த மனத்துணையாக வுள்ளவராகிய புகழ்த்துணை நாயனாரது திருவடிகளைத் துதித்து, சந்தன மணிந்த அழகிய தோள்களையுடைய ஒப்பற்ற வீரர்கள் தலைவ ராகிய கொத்தாகப் பொருந்திய மலர்மாலையையணிந்த கோட் புலிநாயனாரது திருத்தொண்டின் செயலைச் சொல்லுவோம். - எ - று.

# 57. கோட்புலி நாயனார் புராணம்

***நலம்பெருகுஞ் சோணாட்டு நாட்டியத்தான் குடிவேளாண்***
***குலம்பெருக வந்துதித்தார் கோட்புலியார் எனும்பெயரார்***
***தலம் பெருகும் புகழ்வளவர் தந்திரியா ராய்வேற்றுப்***
***புலம்பெருகத் துயர்விளைப்பப் போர்விளைத்துப் புகழ்விளைபபார்.*** 1

(இ - ள்.) நன்மைமிக்க சோழ வளநாட்டிலே திருநாட்டியத் தான் குடியென்னுந் திருப்பதியில் வேளாளர்குலம் விளங்கும்படி வந்து அவதரித்தவர்; கோட்புலி நாயனாரென்னுந் திருநாம முடையவர்; உலகத்திற் சிறந்த புகழையுடைய சோழராஜா விடத்தில் சேனாதிபதித் தொழிலுடையவராய்ப் பகைவர்களது தேசங்கள் மிக்க துயர் விளையும்படி போர் செய்து கீர்த்தியை விளைவிக்கின்றவர். - எ - று.

***மன்னவன்பால் பெறுஞ்சிறப்பின் வளமெல்லாம் மதியணியும்***
***பிஞ்ஞகர்தங் கோயில்தொறுந் திருவமுதின் படிபெருகச்***
***செந்நெல்மலைக் குவடாகச் செய்துவருந் திருப்பணியே***
***பன்நெடுநாள் செய்தொழுகும் பாங்குபுரிந் தோங்குநாள்.*** 2

(இ - ள்.) சோழ ராஜாவினிடத்துப் பெறுகின்ற சிறப்பினை யுடைய வளங்களனைத்தையும், சந்திரசேகரராகிய சிவபெருமா னது திருக்கோயில்கடோறுந் திருவமுதின் கட்டளை விருத்தி யாகும்படி சம்பாநெல்லை மலைச் சிகரம் போலக் கட்டி, வருகின்ற திருப்பணியைப் பலநாள் செய்தொழுகின்ற தன்மையைச் செய்து சிறந்திருக்கும் நாள்களில். - எ - று.

***வேந்தனே வலிற்பகைஞர் வெம்முனைமேல் செல்கின்றார்***
***பாந்தள்பூ ணெனஅணிந்தார் தமக்கமுது படியாக***
***ஏந்தலார் தாமெய்து மௌவும்வேண் டுஞ்செந்நெல்***
***வாய்ந்தகூ டவைகட்டி வழிக்கொள்வார் மொழிகின்றார். 3***

(இ - ள்.) சோழராஜனது ஏவலினால் பகைவர்களது வெவ்விய போர்முனைமேற் செல்கின்றவராகிய கோட்புலி நாயனார், பாம்பை யாபரணமாக வணிந்த சிவபெருமானுக்கு அமுதுபடியாகும் பொருட்டுத் தாம் திரும்பி வருமளவும் வேண்டிய சம்பாநெற்கள் பொருந்திய கூடுகளைக் கட்டி வைத்துச் செல்லும் நாயனார் சொல்லுகின்றார். - எ - று.

***தந்தமர்க ளாயினார் தமக்கெல்லாந் தனித்தனியே***
***"எந்தையார்க் கமுதுபடிக் கேற்றியநெல் லிவைஅழிக்கச்***
***சிந்தைஆற் றாநினைவார் திருவிரையாக் கலி" என்று***
***வந்தனையால் உரைத்தகன்றார் மன்னவன்மாற் றார்முனைமேல். 4***

(இ - ள்.) தம்முடைய சுற்றத்தார்களா யுள்ளவர்களனை வருக்கும் தனித்தனியே எமது சிவபெருமானுக்கு அமுதுபடிக்குக் கட்டிய இந்நெற் கூடுகளை அழிக்கும்படி மனத்தினால் நினைக்கின்றவர்கள் "திருவிரையாக்கலி" என்று வந்தனையுடன் ஆணையிட்டுச் சோழராஜனது பகைவர்களுடைய போருக்குப் போயினார். - எ - று.

***மற்றவர்தாம் போயினபின் சிலநாளில் வற்சாலம்***
***உற்றலும்அச் சுற்றத்தார் உணவின்றி "இறப்பதனில்***
***பெற்றம்உயர்த் தவர்அமுது படிகொண்டா கிலும்பிழைத்துக்***
***குற்றமறப் பின்கொடுப்போம்" எனக்கூடு குலைத்தழித்தார். 5***

(இ - ள்.) கோட்புலி நாயனார் போயின பின்பு சிலநாளில் பஞ்சம் வரவும், அந்தச் சுற்றத்தார்கள் போசனமின்றியிருப் பதைப் பார்க்கிலும் இடபத்தைக் கொடியாக வுயர்த்திய சிவபெருமானுக்குக் கட்டிவைத்த அமுதுபடியை யெடுத்தாகி லும் (உண்டு) பிழைத்து, குற்றம் நீங்கப் (பஞ்சம் நீங்கின) பின் கொடுப்போமென்று அந்நெற் கூட்டைக் குலைத்து எடுத்துச் செலவழித்தார்கள். - எ - று.

***மன்னவன்றன் தெம்முனையில் வினைவாய்த்து மற்றவன்பால்***
***நன்னிதியின் குவைபெற்ற நாட்டியத்தான் குடித்தலைவர்***
***அந்நகரில் தமர்செய்த பிழையறிந்த தறியாமே***
***துன்னினார் "சுற்றமெலாம் துணிப்பன்" எனுந் துணிவினராய். 6***

(இ - ள்.) சோழராஜனுடைய போர்முனையில் வெற்றி பெற்று, அவ்வரசனிடததில் நல்ல பொருட் குவைகளைப் பெற்ற கோட்புலி நாயனார் அந்நகரத்தில் தமது சுற்றத்தார்கள் செய்த குற்றத்தை யறிந்த தறியாமுன்னமே, அச்சுற்றத்தாரையெல்லாம் வெட்டுவேனென்னுந் துணிவுள்ளவராய் வந்தடைந்தார்.

***எதிர்கொண்ட தமர்க்கெல்லாம் இனியமொழி பலமொழிந்து***
***மதிதங்கு சுடர்மணிமா ளிகையின்கண் வந்தணைந்து***
***"பதிகொண்ட சுற்றத்தார்க் கெல்லாம்பைந் துகில்நிதியம்***
***அதிகந்தந் தளிப்பதனுக் கழைமின்கள்" என்றுரைத்து.*** 7

(இ - ள்.) தம்மையெதிர் கொண்டு வந்த சுற்றத்தாருக் கெல்லாம் பல இனிய வசனங்கூறி, சந்திரன் தங்குகின்ற விளங்கும் அழகிய திருமாளிகையில் வந்தடைந்து ஊரிலுள்ள தமது சுற்றத்தாரனைவருக்கும் பசிய வஸ்திரங்களையுந் திரவியங் களையும் மிகுதியாகக் கொடுப்பதற்கு அழையுங்களென்று சொல்லி. - எ - று.

***எல்லோரும் புகுந்ததற்பின் இருநிதியம் அளிப்பார்போல்***
***"நல்லார்தம் பேரோன்முன் கடைகாக்க நாதன்றன்***
***வல்லாணை மறுத்தமுது படிஅழித்த மறக்கிளையைக்***
***கொல்லாதே விடுவேனோ" எனக்கனன்று கொலைபுரிவார்.*** 8

(இ - ள்.) (அவ்வாறே) எல்லாரும் வந்தபின்பு நல்லவராகிய கோட்புலி நாயனார் பெருந்திரவியத்தைக் கொடுப்பவர்போல, கோட்புலி யென்னுந் தமது பெயருள்ள காவலாளனைத் தலைவாயிலைக் காக்கும்படி வைத்து, சிவபெருமானது (திருவிரையாக்கலி என்னும்) வலிய ஆணையை மறுத்து அமுதுபடியை யெடுத்துச் செலவழித்து அதிபாதகத்தையுடைய சுற்றத்தாரைக் கொல்லாமல் விடுவனோவென்று கோபித்துக் கொலை செய்வாராயினார். - எ - று.

***தந்தையார் தாயார்மற் றுடன்பிறந்தார் தாரங்கள்***
***பந்தமார் சுற்றத்தார் பதியடியார் மதியணியும்***
***எந்தையார் திருப்படிமற் றுண்ணஇசைந் தார்களையும்***
***சிந்தவாள் கொடுதுணித்தார் தீயவினைப் பவந்துணிப்பார்.*** 9

(இ - ள்.) தந்தையார், தாயார், உடன்பிறந்தார், மனைவிமார்கள், பந்தத்தையுடைய உறவினர்கள், அவ்வூரி லுள்ள தமது பணிவிடைக்கார்கள், சந்திரசேகரராகிய எமது சிவபெருமானது திருப்படியை உண்ண இசைந்தவர்கள் ஆகிய

அனைவர்களையும் தீவினை சம்பந்தமாகிய பிறவியை துணிக்க வல்லவராகிய கோட்புலி நாயனார் வாளைக் கொண்டு உயிர் சிந்தும்படி வெட்டினார். - எ - று.

**பின்னங்குப் பிழைத்ததொரு பிள்ளையைத்தம் பெயரோன் "அவ்**
**வன்னந்துய்த் திலதுகுடிக் கொருபுதல்வன் அருளும்" என**
**இந்நெல்லுண் டாள்முலைப்பால் உண்டதென எடுத்தெறிந்து**
**மின்னல்ல வடிவாளால் இருதுணியாய் விழவேற்றார். 10**

(இ - ள்.) பின்பு அவ்விடத்துப் பிழைத்திருந்த ஒரு குழந்தை யைக் கோட்புலி யென்னுங் காவலாளன் (வெட்டாமல் தடுத்து, சுவாமிகளே! இக்குழந்தை அவ்வன்னத்தை யுண்டதன்று, (அன்றியும்) ஒரு குடிக்கு ஒரே புதல்வனாதலால் வெட்டாதருளு மென்று வேண்ட, (நாயனார்) இக்குழந்தை இந்நெல்லரிசிச் சோற்றை யுண்டவளது முலைப்பாலை யுண்டதென்று கூறி, எடுத்துமேலெறிந்து மின்போல் விளங்கும் நல்ல வடித்த வாளினால் இருதுண்டாய் விழும்படி துணிந்தார். - எ - று.

**அந்நிலையே சிவபெருமான் அன்பரெதிர் வெளியேநின்(று)**
**"உன்னுடைய கைவாளால் உறுபாசம் அறுத்தகிளை**
**பொன்னுலகின் மேலுலகம் புக்கணையப் புகழோய்நீ**
**இந்நிலைநம் முடன்அணை" கென் றேவிஎழுந் தருளினார். 11**

(இ - ள்.) அப்பொழுதே சிவபெருமான் கோட்புலி நாயனாருக்கெதிரில் ஆகாயத்தில் நின்று, பெரும்புகழையுடைய அன்பனே! உன்னுடைய கைவாளினால் பொருந்திய பாசங் களை யறுத்த உன் சுற்றத்தார்கள் விண்ணுலகிற்கு மேலுலக மாகிய சிவலோகத்தில் அடைய, நீ இவ்வண்ணமே நம்முடன் வரக்கடவை யென்று கட்டளையிட்டு எழுந்தருளினார். - எ - று.

**அத்தனாய் அன்னையாய் ஆருயிராய் அமிர்தாகி**
**முத்தனாம் முதல்வன்தாள் அடைந்துகிளை முதல்தடிந்த**
**கொத்தலர் தார்க் கோட்புலியார் அடிவணங்கிக் கூட்டத்தில்**
**பத்தராய்ப் பணிவார்தம் பரிசினையாம் பகருவாம். 12**

(இ - ள்.) தந்தையாகியும், தாயாகியும், அரிய உயிராகியும், அமுதமாகியும், முத்தனாகியுமுள்ள சிவபெருமானது திருவடி களையடைந்து சுற்றத்தாருடைய வினைமுதலை யறுத்த கொத் தாகிய மலர்மாலையை யணிந்த கோட்புலி நாயனாரது திருவடி களை வணங்கி, திருக் கூட்டத்தவர்களில் பத்தராய்ப் பணிவார் களுடைய அன்பின் தன்மையை யாம் சொல்லுவோம். - எ - று.

***மேவரிய பெருந்தவம்யான் முன்புவிளைத்தனஎன்னோ?***
***யாவதுமோர் பொருளல்லா என்மனத்தும் அன்றியே***
***நாவலர்கா வலர்பெருகு நதிகிழிய வழிநடந்த***
***சேவடிப்போ தெப்போதுஞ் சென்னியினும் மலர்ந்தனவால். 13***

(இ - ள்.) வெள்ளம் பெருகி யோடிய காவிரி நதியானது விலகும்படி (திருவையாற்று) வழியே நடந்தருளிய ஸ்ரீ சுந்தர மூர்த்தி சுவாமிகளுடைய திருவடித் தாமரைகள் யாது மோர் பொருளல்லாத அடியேனுடைய மனத்துமன்றிச் சிரசின் மேலும் மலர்ந்தன; ஆதலால், அடியேன் அடைதற்கரிய பெருந்தவம் முன்பு யாது செய்தனவோ? (அறியேன்.) - எ - று.

# 58. பத்தராய்ப் பணிவார் புராணம்

***ஈசருக்கே அன்பானார் யாவரையுந் தாம்கண்டால்***
***கூசிமிகக் குதுகுதுத்துக் கொண்டாடி மனமகிழ்வுற்(று)***
***ஆசையினால் ஆவின்பின் கன்றணைந்தாற் போலணைந்து***
***பேசுவன பணிந்தமொழி இனியனவே பேசுவார். 1***

(இ - ள்.) சிவபெருமானுக்கே அன்பராயுள்ளவர்கள், எக்குலத்தாராயினுமவர்களைக் கண்டால் அச்சங்கொண்டு மிகுதியாகக் குதுகலிப்படைந்து கொண்டாடி மனமகிழ்ந்து அத்தியந்த ஆசையுடன் பசுவுக்குப் பின்னே கன்றுதொடர்ந் தணைவது போல அணைந்து, அவர்களுடன் பேசும் வார்த் தைகள் பணிவான மொழியால் இனியவற்றையே பேசுவார்கள்.- எ - று.

***தாவரிய அன்பினாற் சம்புவினை எவ்விடத்தும்***
***யாவர்களும் அர்ச்சிக்கும் படிகண்டால் இனிதுவந்து***
***பாவனையால் நோக்கினால் பலர்காணப் பயன்பெறுவார்***
***மேவரிய அன்பினால் மேலவர்க்கும் மேலானார். 2***

(இ - ள்.) எவ்விடத்துஞ் சிவபெருமானை யாவர்களும் கெடாத பேரன்புடன் அருச்சித்தலைக் கண்டால், மனமகிழ்ந்து, பாவனையினாலும் தரிசனத்தினாலும் பலருங்காணும்படி பிறவிப்பயனை யடைவார்கள்; அடைதற்கரிய பேரன்பினால் சிறந்தவர்களுக்குஞ் சிறந்தவர்களாயுள்ளவர்கள். - எ - று.

***அங்கணனை அடியாரை ஆராத காதலினால்***
***பொங்கிவரும் உவகையுடன் தாம்விரும்பிப் பூசிப்பார்***
***பங்கயமா மலர்மேலான் பாம்பணையான் என்றிவர்கள்***
***தங்களுக்குஞ் சார்வரிய சரண்சாருந் தவமுடையார். 3***

(இ - ள்.) சிவபெருமானையும் சிவனடியார்களையும் நீங்காத அன்பினால் அதிகரித்தெழுகின்ற பெருமகிழ்வோடும் விரும்பிப் பூசிப்பவர்கள்; சிறந்த தாமரை மலரல் வாழும் பிரமனும், சேஷசயனத்தையுடைய விஷ்ணுவுமென்று கூறுமிருவராலு மடைதற்கரிய திருவடியைச் சார்ந்திருக்கும் பெருந்தவமுடைய வர்கள். - எ - று.

***யாதானும் இவ்வுடம்பாற் செய்வினைகள் ஏறுயர்த்தார்***
***பாதார விந்தத்தின் பாலாக எனும்பரிவால்***
***காதார்வெண் குழையவர்க்காம் பணிசெய்வார் கருக்குழியில்***
***போதார்கள் அவர்புகழ்க்குப் புவனமெலாம் போதாவால். 4***

(இ - ள்.) யாதேனும் இவ்வுடம்பினால் செய்யும் புண்ணியங் களனைத்தும் இடபத்தைக் கொடியாகவுயர்த்திய சிவபெருமா னது திருவடித் தாமரைகளுக்கே பிரீதியாகக் கடவன வென்னும் அன்பினால், வெள்ளிய சங்கக் குழையை யணிந்த திருச்செவி யினையுடைய சிவபெருமானுக்கிசைந்த திருப்பணியைச் செய்கின்றவர்கள்; ஜனனமாகிய குழியில் செல்லாதவர்கள்; அத்தகைய பத்தர்களுடைய புகழுக்கு இவ்வுலகமனைத்தும் இடம்போதாவாம். - எ - று.

***சங்கரனைச் சார்ந்தகதை தான்கேட்குந் தன்மையராய்***
***அங்கணனை மிகவிரும்பி அயலறியா அன்பினால்***
***கங்கைநதி மதிஇதழி காதலிக்குந் திருமுடியார்***
***செங்கமல மலர்ப்பாதஞ் சேர்வதனுக் குரியார்கள். 5***

(இ - ள்.) சிவசம்பந்தமாகிய சரித்திரங்களையே விரும்பிக் கேட்குங் குணமுடையவர்களாய்ச் சிவபெருமானை விரும்பி அயலறியாத பேரன்பினால், கங்கைநதியையும் இளம்பிறையை யுங் கொன்றை மலர் மாலையையும் விரும்பியணிந்தருளுந் திருமுடியையுடைய அச்சிவபெருமானது செந்தாமரை மலர் போன்ற திருவடிகளையே யடைதற்குரியவர்கள். - எ - று.

***ஈசனையே பணிந்துருகி இன்பமிகக் களிப்பெய்திப்***
***பேசினவாய் தழுதழுப்பக் கண்ணீரின் பெருந்தாரை***
***மாசிலா நீறழித்தங் கருவிதர மயிர்சிலிர்ப்பக்***
***கூசியே உடல்கம்பித் திடுவார்மெய்க் குணமிக்கார். 6***

(இ - ள்.) சிவபெருமானையே வணங்கி மனமுருகி இன்ப மிகும்படி களிப்புற்றுப் பேசும் நாவானது தழுதழுக்கும்படி ஆனந்தக் கண்ணீரின் பெருந்தாரையானது குற்றமற்ற திருவெண் ணீற்றை யழித்து அருவிபோலொழுக, மயிர்க் கூச் செறிய கூச்சத்துடன் உடலந் தம்பிப்பார்கள்; மெய்ம்மையாகிய நற்குண மிக்க பத்தர்களாயுள்ளவர்கள். - எ - று.

***நின்றாலும் இருந்தாலும் கிடந்தாலும் நடந்தாலும்***
***மென்றாலும் துயின்றாலும் விழித்தாலும் இமைத்தாலும்***
***மன்றாடும் மலர்ப்பாதம் ஒருகாலம் மறவாமை***
***குன்றாத உணர்வுடையார் தொண்டராம் குணமிக்கார். 7***

(இ - ள்.) நிலத்தில் நின்றிருந்தாலும், உட்கார்ந்திருந்தாலும், படுத்திருந்தாலும், நடந்து சென்றாலும், மென்றாலும், நித்திரை செய்தாலும், விழித்திருந்தாலும், கண்ணிமைத்தாலும், கனக சபையில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளுஞ் சிவபெருமானது தாமரை மலர் போன்ற திருவடிகளை ஒருபொழுதும் மறவாமை யாகிய குறையாத பேரறிவுடையவர்கள்; பத்தர்களாகிய நற்குணமிக்கவர்கள். - எ - று.

***சங்கரனுக் காளான தவங்காட்டித் தாமதனால்***
***பங்கமறப் பயன்துய்ப்பார் படிவிளக்கும் பெருமையினார்***
***அங்கணனைத் திருவாரூர் ஆள்வானை அடிவணங்கிப்***
***பொங்கிஎழுஞ் சித்தமுடன் பத்தராய்ப் போற்றுவார். 8***

(இ. - ள்.) தாங்கள் சிவபெருமானுக் கடிமையான தவவேடத் தைக் காட்டி, அதனால் வருகின்ற பயனைப் பழுது நீங்க சீவனஞ் செய்யார்கள்; உலகத்தை விளக்கும் மேன்மையினையுடைய வர்கள்; அருட்கண்ணராகிய திருவாரூரில் வீற்றிருந்தரசு செய்யுஞ் சிவபெருமானைத் திருவடிகளில் வணங்கி, அன்பு அதிகரித்தெழுகின்ற திருவுள்ளத்தோடும் பத்தராய்த்துதிப் பார்கள். - எ - று.

## 59. பரமனையே பாடுவார் புராணம்

***புரமூன்றுஞ் செற்றானைப் பூணாகம் அணிந்தானை***
***உரனில்வரும் ஒருபொருளை உலகனைத்தும் ஆனானைக்***
***கரணங்கள் காணாமல் கண்ணார்ந்து நிறைந்தானைப்***
***பரமனையே பாடுவார் தம்பெருமை பாடுவாம். 1***

(இ - ள்.) திரிபுரங்களையுமெரித்தழித்தவரும், பாம்பை யாபரணமாகவணிந்தவரும், ஞானத்தில் தோன்றி விளங்கும் ஒப்பற்ற பெரும் பொருளாயுள்ளவரும், சர்வலோகங்களுந் தாமேயாக வுள்ளவரும், புறக்கரணங்களாற் காணப்படாமல் அகக்கண்ணில் நிறைந்து நின்றவருமாகிய சிவபெருமனைப் பாடும் மெய்யடியார்களுடைய பெருமையை பாடத் தொடங்குவோம். - எ - று.

***தென்றமிழும் வடகலையும் தேசிகமும் பேசுவன***
***மன்றினிடை நடம்புரியும் வள்ளலையே பொருளாக***
***ஒன்றியமெய் யுணர்வோடும் உள்ளுருகிப் பாடுவார்***
***பன்றியுடன் புட்காணாப் பரமனையே பாடுவார். 2***

(இ - ள்.) பன்றியுருவங்கொண்டு தேடிய விஷ்ணுவினாலும், அன்னவுருவங் கொண்டு தேடிய பிரமனாலுங் காணப்படாத சிவபெருமானைப்பாடும் மெய்யடியார்கள் தமிழும், சமஸ்கிருதமும், மற்றும் அவ்வந்நாட்டுப் பாஷைகளும் பேசப்படுவனவாகிய கனகசபையில் ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளுஞ் சிவபெருமானையே மெய்ப்பொருளாகக் கருதி ஒருமைப்பட்ட மெய் யுணர்ச்சியுடன் திருவுள்ளமுருகிப் பாடுவார்கள். - எ - று.

## 60. சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் புராணம்

***காரணபங் கயம்ஐந்தின் கடவுளர்தம் பதங்கடந்து***
***பூரணமெய்ப் பரஞ்சோதி பொலிந்திலங்கு நாதாந்தத்***
***தாரணையாற் சிவத்தடைந்த சித்தத்தார் தனிமன்றுள்***
***ஆரணகா ரணக்கூத்தர் அடித்தொண்டின் வழியடைந்தார். 1***

(இ - ள்.) ஆதாரகரமாகவுள்ள ஐந்து தாமரைகளிலும் வீற்றிருந்தருளும் (பிரமன் முதலிய) பஞ்சகர்த்தாக்களுடைய ஸ்தானங்களைக் கடந்து வியாபகமான மெய்ம்மையாகிய சிவபரஞ்சுடர் ஓங்கி விளங்கும் நாதாந்தத்தாரணையினாலே சிவத்தை யடைந்த திருவுள்ளமுடையவர்கள்; ஒப்பற்ற கனகசபையிலே வேதசம்பந்தமாகிய பஞ்சகிருத்தியத் தாண்டவஞ் செய்தருளுஞ் சிவபெருமானது திருவடித் தொண்டு செய்யும் நன்னெறியை யடைந்தவர்கள். - எ - று.

# 61. திருவாரூர்ப் பிறந்தார் புராணம்

**அருவாகி உருவாகி அனைத்துமாய் நின்றபிரான்**
**மருவாருங் குழலுமையாள் மணவாளன் மகிழ்ந்தருளும்**
**திருவாரூர்ப் பிறந்தார்கள் திருத்தொண்டு தெரிந்துணர**
**ஒருவாயால் சிறியேனால் உரைக்கலாந் தகைமையதோ.** 1

(இ - ள்.) அருவமாகியும், உருவமாகியும், அனைத்துந் தாமாகியும், (அல்லவாகியும்) நின்றருளும் பெருமானும் (இயற்கை) மணங்கமழுங் கூந்தலையுடைய உமாதேவி நாயகரு மாகிய சிவபெருமான் மகிழ்ந்து வீற்றிருந்தருளுந் திருவாரூர்த் திருப்பதியில் பிறந்தவர்களுடைய திருத்தொண்டின் சிறப்பை அறிந்துணரும்படி, ஒருவாயினாலே அடியேனால் சொல்லத் தகுந் தன்மையை யுடையதோ? (அன்று.) - எ - று.

**திருக்கயிலை வீற்றிருந்த சிவபெருமான் திருக்கணத்தார்**
**பெருக்கியசீர்த் திருவாரூர்ப் பிறந்தார்கள் ஆதலினால்**
**தருக்கியஐம் பொறிஅடக்கி மற்றவர்தந் தாள்வணங்கி**
**ஒருக்கியநெஞ் சுடையவர்க்கே அணித்தாகம் உயர்நெறியே.** 2

(இ - ள்.) திருக்கயிலாசத்தில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமா னது கணங்களே மிக்க சிறப்பினையுடைய திருவாரூரிற் பிறந்தவர்களாதலால் தருக்குற்றிருக்கும் ஐம்பொறிகளையும் (புறத்திற் செல்லவொட்டாது) அடக்கி, அத்திருவாரூர்ப் பிறந்தார்களுடைய திருவடிகளை வணங்கி, (அது காரணமாக) ஒருமைப்படுத்திய திருவுள்ளமுடைய அன்பர்களுக்கே (அவர் களைச் சிறப்பித்துக் கூறும்) உயர்ந்த நன்னெறியானது சமீப மாகும். - எ - று.

# 62. முப்போதும் திருமேனி தீண்டுவார் புராணம்

**எப்போதும் இனியபிரான் இன்னருளால் அதிகரித்து**
**மெய்ப்போத நெறிவந்த விதிமுறைமை வழுவாமே**
**அப்போதைக் கப்போதும் ஆர்வமிகும் அன்பினராய்**
**முப்போதும் அர்ச்சிப்பார் முதற்சைவ ராம்முனிவர்.** 1

(இ - ள்.) (சர்வான்மாக்களுக்கும்) எக்காலத்து மினியவராக வுள்ள சிவபெருமானது இனிய திருவருளினால் அதிகரித்து,

மெய்ஞ்ஞானத்தை யுணர்த்தும் சிவாகமநெறிப்படி வந்த விதிமுறைகள் வழுவாமல் அவ்வப்பொழுதிலும் விருப்பமிக்க பேரன்புடையவர்களாய்க் (காலை - உச்சி - மாலை யென்னும்) முக்காலத்தும் அருச்சிப்பார்கள்; ஆதிசைவர்களாகிய (முப் போதுந் திருமேனி தீண்டுவாரென்னுந்) தவமுனிவர்கள். - எ - று.

***தெரிந்துணரின் முப்போதுஞ் செல்காலம் நிகழ்காலம்***
***வருங்கால மானவற்றின் வழிவழியே திருத்தொண்டின்***
***விரும்பியஅர்ச் சனைகள்சிவ வேதியர்க்கே உரியனஅப்***
***பெருந்தகையார் குலப்பெருமை யாம்புகழும் பெற்றியதோ? 2***

(இ - ள்.) தெரிந்துணருமிடத்து முப்பொழுதும், இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்னும் இக்காலங்களில் பரம்பரைப்படியே (செய்து வருகின்ற) திருத்தொண்டினது விருப்பமிக்க அர்ச்சனைகள் ஆதிசைவ வேதியர்களுக்கே யுரியன வாகும் அத்தன்மையாகிய மேலோர்களது குலத்தின் மேன்மை எம்மால் புகழ்ந்து கூறுந் தன்மையையுடையதோ? - எ - று.

***நாரணற்கும் நான்முகற்கும் அறிய ஒண்ணா நாதனை எம்பெருமானை ஞான மான,***
***ஆரணத்தின் உட்பொருள்கள் அனைத்து மாகும் அண்ணலைஎண் ணியகாலம் மூன்றும் அன்பின்,***
***காரணத்தால் அர்ச்சிக்கும் மறையோர் தங்கள் கமலமலர்க் கழல்வணங்கிக் கசிந்து சிந்தைப்,***
***பூரணத்தால் முழுநீறு பூசி வாழும் புனிதர்செயல் அறிந்தவர் புகலலுற்றேன். 3***

(இ - ள்.) திருமால் பிரமனென்னுமிருவராலு மறிதற்கரிய வரும், எமது முதல்வரும், மெய்ஞ்ஞான சொரூபமாகிய வேதத் தினுட் பொருள்களனைத்துமாக வுள்ளவருமாகிய சிவ பெருமானை நினைக்கத்தக்க முக்காலத்தும் அன்பு காரணமாக அருச்சிக்கும் ஆதிசைவ வேதியர்களது தாமரை மலர் போன்ற திருவடிகளை வணங்கி மனமுருகி, திருவுள்ளத்தின் நிறைவினால் திருமேனி முழுவதுந் திருநீறுபூசிவாழும் பரிசுத்தர்களாகிய அடியார்களது செயலை யானறிந்த வண்ணஞ் சொல்லத் தொடங்கினேன். - எ - று.

# ௬௩. முழுநீறு பூசிய முனிவர் புராணம்

**ஆதார மாயனைத்தும் ஆகி நின்ற அங்கணனெம் பெருமான்நீர் அணிந்த வேணிக்,**
**காதார்வெண் திருக்குழையான் அருளிச் செய்த கற்பம்அநு கற்பம்உப கற்பந் தானும்,**
**ஆகாதென் றங்குரைத்த அகற்பம் நீக்கி ஆமென்று முன்மொழிந்த மூன்று பேதம்,**
**மோகாதி குற்றங்கள் அறுக்கும் நீற்றை மொழிவதுநம் இருவினைகள் கழிவ தாக. 1**

(இ - ள்.) (எல்லாப் பொருள்களுக்கும்) ஆதாரமாகியும் அனைத்துந்தாமேயாகியும் நின்றருளிய அருட்கண்ணராகிய எமது ஆண்டவரும், கங்கை நதியை யணிந்த சடைமுடியுடன், வெள்ளிய சங்கக் குழையை யணிந்த திருச்செவியையுடைய வருமாகிய சிவபெருமான் (சிவாகமத்தில்) அருளிச் செய்த கற்பம் அநுகற்பம் - உபகற்பமென்னும் பேதங்களும், ஆகாதென்று அவ்வாகமத்திற் கூறிய அகற்பத்தை நீக்கி, ஆகுமென்று முன்பு கூறிய மூவகைப் பேதங்களையுடையதாகிய மோக முதலிய அறுவகைக் குற்றங்களையு மொழிக்கத்தக்க திருவெண்ணீற்றின் மேன்மையை நமது இருவினைகளும் நீங்கும் பொருட்டுச் சொல்லப்படுவதாகும். - எ - று.

**அம்பலத்தே உலகுய்ய ஆடும் அண்ணல் உவந்தாடும் அஞ்சினையும் அளித்த ஆக்கள்,**
**இம்பர்மிசை அநாமயமாய் இருந்த போதில் ஈன்றணிய கோமயமந் திரத்தினால்ஏற்(று),**
**உம்பர்தொழ எழுஞ்சிவமந்திரஓ மத்தால் உற்பவித்த சிவாங்கிதனில் உணர்வுக்கெட்டா,**
**எம்பெருமான் கழல்நினைத்தங் கிட்ட தூநீ றிதுகற்பம் என்றெடுத்திங் கேத்த லாகும். 2**

(இ - ள்.) உலகத்தாருய்யும் பொருட்டுக் கனகசபையிலே திருநடனஞ் செய்தருளும் ஸ்ரீ நடராஜப் பெருமான் மகிழ்ந்து அபிஷேகம் கொண்டருளும் பஞ்ச கவ்வியங்களையும் கொடுக்கின்ற பசுக்கள் கன்றை ஈன்ற சமீபகாலத்திலிடுகின்ற கோமயத்தை வாமதேவமந்திரத்தினால் ஏற்று, தேவர்கள் தொழும்படி யெழுகின்ற சிவமந்திரங் கொண்டு செய்யும் யாகத்தில் தோன்றிய சிவாக்கினியில், பாசவுணர்வுக் கெட்டாத எமது சிவபெருமானுடைய திருவடிகளைச் சிந்தித்து அங்குச்

சமைத்தெடுத்த தூய்மையாகிய திருவெண்ணீற்றினைக் கற்ப மென்று இங்கு எடுத்துக் கூறலாகும். - எ - று.

***ஆரணியத் துலர்ந்தகோ மயத்தைக் கைக்கொண் டழகுறநுண்***
***பொடியாக்கி ஆவின் சுத்த,***
***நீரணிவித் தத்திரமந் திரத்தி னாலே நிசயமுறப் பிடித்தோம நெருப்பில் இட்டுச்,***
***சீரணியும் படிவெந்து கொண்ட செல்வத் திருநீறாம் அநுகற்பம் தில்லை மன்றுள்,***
***வாரணியும் முலையுமையாள் காண ஆடும் மாணிக்கக் கூத்தர் மொழி வாய்மையாலே. 3***

(இ - ள்.) வனத்திலுலர்ந்த கோமயத்தைக் கொண்டு வந்து அழகு பொருந்திய நுண்ணிய பொடியாகச் செது பசுவினது தூய்மையாகிய நீர் விட்டு அத்திருமந்திரத்தினால் உருண்டை யாகப் பிடித்து யாகாக்கினியிலிட்டுச் சிறப்போடு வெந்து எடுத்துக்கொண்ட திருநீறு, திருத்தில்லைத் திருச்சிற்றம் பலத்துள் கச்சணிந்த ஸ்தனங்களையுடைய உமாதேவியார் காணும்படி திருநடனஞ் செய்தருளும் மாணிக்கக் கூத்தராகிய சிவபெருமான் ஆகமத்தி லருளிச் செய்த உண்மையினால் இது அநுகற்பமாகும். - எ - று.

***அடவிபடும் அங்கியினால் வெந்த நீறும் ஆனிலைகள் அனல்தொடக்க வெந்த நீறும்,***
***இடவகைகள் எரிகொளுவ வெந்த நீறும் இட்டிகைகள் சுட்டஎரி பட்ட நீறும்,***
***உடனன்றி வெவ்வேறே ஆவின் நீரால் உரைதிகழு***
***மந்திரங்கொண்(டு) உண்டையாக்கி,***
***மடமதனில் பொலிந்திருந்த சிவாங்கி தன்னால் வெந்ததுமற்(று) உபகற்பம் மரபின் ஆகும். 4***

(இ - ள்.) வனத்தில் (மரத்தோடு மரம் இணைந்து) தானே யுண்டாகிய அக்கினியினால் வெந்த சாம்பலும், பசுக் கோட்டங்கள் தீப்பற்றி யெரிந்ததனால் வெந்த சாம்பலும், வேறிடங்கள் தீப்பற்றியெரிய வெந்த சாம்பலும், செங்கற்கள் சுட்டவிடத்து எரிந்த சாம்பலும், ஒன்றாகச் சேர்க்காமல் வெவ்வேறே கோசலத்தினால், சொற்கள் விளங்கும் வாமதேவ மந்திரத்தினாலே உருண்டையாகச் செய்து, திருமடங்களில் சிறந் தெரியும் சிவாக்கினியினால் வெந்தது உபகற்ப விபூதியின் முறைமையாம். - எ - று.

**இந்தவகை யால்அமைத்த நீறுகொண்டே இருதிறமுஞ் சுத்திவரத் தெறித்த பின்னர்,**
**அந்தமிலா அரன்அங்கி ஆறு மெய்ம்மை அறிவித்த குருநன்மை அல்லாப் பூமி,**
**முந்தஎதிர் அணியாதே அணியும்போது முழுவதும்மெய்ப் பண்டரஞ்சந் திரனிற் பாதி,**
**நந்திஎரி தீபநிகழ் வட்ட மாக நாதரடி யார்அணிவர் நன்மை யாலே. 5**

(இ - ள்.) இந்த மூவகைக் கற்பவிதியினால் அமைத்த திரு வெண்ணீற்றை யெடுத்து இருபக்கத்திலுஞ் சுத்தியுண்டாகும்படி தெளித்தபின்பு, முடிவில்லாத சிவபெருமானுக்கெதிரிலும், அக்கினிக்கெதிரிலும், நடக்கும் வழியிலும், மெய்ஞ்ஞானத்தை யுபதேசித்த குருவுக்கெதிரிலும், அசுத்தமான நிலத்திலுமிருந் தணியாமல், (சுத்தபூமியிலிருந்து) அணியும்பொழுது தேக முழுதுமாகவும், திரிபுண்டரமாகவும், அர்த்தசந்திரரூபமாகவும் ஒளிவிட்டெரிகின்ற தீபம் போன்றும், விளங்கு வட்டவடிவமாக வும் சிவனடியார்கள் நம்மையோடு மணிவார்கள். - எ - று.

**சாதியினில் தலையான தரும சீலர் தத்துவத்தின் நெறியுணர்ந்தோர் தங்கள் கொள்கை,**
**நீதியினிற் பிழையாது நெறியில் நிற்போர் நித்தநிய மத்துநிகழ் அங்கி தன்னில்,**
**பூதியினைப் புதியபா சனத்துக் கொண்டு புலியதளின் உடையானைப் போற்றி நீற்றை,**
**ஆதிவரு மும்மலமும் அறுத்த வாய்மை அருமுனிவர் முழுவதும்மெய் அணிவரன்றே. 6**

(இ - ள்.) தலைமையான குலத்தினையுடைய தருமகுண முடையவர்களும், தத்துவமார்க்கத்தை யுணர்ந்தவர்களும், தங்களுக்குரிய கொள்கைகளில் தவறாமல் நன்மார்க்கதி லொழுகுபவர்களுமாகிய வேதியர்கள் வளர்க்கும் நித்தியாக் கினியில் விளைந்த விபூதியைப் புதுப் பாண்டத்தில் வைத்துச் கொண்டு, புலித்தோலை யாடையாகவுள்ள சிவபெருமானைத் துதித்து, திருவெண்ணீற்றைப் பழைமையாக வருகின்ற மும்மலங் களையு மறுத்த மெய்ம்மையையுடைய அரிய தவமுனிவர்கள் திருமேனி முழுவதுந் தரித்துக் கொள்வார்கள்.

# 64. அப்பாலும் அடிச்சார்ந்தார் புராணம்

***மூவேந்தர் தமிழ்வழங்கு நாட்டுக் கப்பால் முதல்வனார் அடிச்சார்ந்த முறைமை யோரும்,***
***நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையிற் கூறும் நற்றொண்டர் காலத்து முன்னும் பின்னும்,***
***பூவேய்ந்த நெடுஞ்சடை மேல் அடம்பு தும்பை புதியமதி நதிஇதழி பொருந்த வைத்த,***
***சேவேந்து வெல்கொடியான் அடிச்சார்ந் தார்கள் செப்பியஅப் பாலும்அடிச் சார்ந்தார் தாமே. 1***

(இ - ள்.) (சேரசோழ பாண்டியர்களென்னும்) மூவேந்தருக்கு முரிய தமிழ்நாட்டிற்கு அப்புறத்திலே சிவபெருமானுடைய திருவடிகளையடைந்த அடியார்களு, (ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள்) தமது திருநாவினால் அருளிச் செய்த திருத் தொண்டத் தொகையிற் சொல்லப்பட்ட சிறந்த திருத்தொண் டர்களுடைய காலத்துக்கு முற்காலத்தும் பிற்காலத்தும் பொலி வினையுடைய நீண்ட சடைமுடியின்மேல் அடம்பமலரையும், இளம்பிறையையும், கங்கை நதியையும், கொன்றை மாலையையும் பொருந்தவணிந்தருளிய வெற்றி பொருந்திய இடபக் கொடியை யுயர்த்திய சிவ பெருமானது திருவடியிலடைந்த வர்கள் முற்கூறிய அப்பாலுமடி சார்ந்தார்களென்று சொல்லப் படுவார்கள். - எ - று.

***செற்றார்தம் புரமெரித்த சிலையார் செல்வத் திருமுருகன் பூண்டியின்றி செல்லும்போதில்,***
***கற்றாருஞ் சிலைவேடர் கவர்ந்து கொண்ட தொகுநிதியின் பரப்பெல்லாஞ் சுமந்து கொண்டு,***
***முற்றாத முலையுமையாள் பாகன் பூத முதற்கணமே உடன்செல்ல முடியாப்பேறு,***
***பெற்றார்தங் கழல்பரவ அடியேன் முன்னைப் பிறவியினிற் செய்தத்தவம் பெரிய வாறே. 2***

(இ - ள்.) பகைவர்களது முப்புரங்களையு மெரித்தருளிய மேருவில்லையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் செல்வங்கணிறைந்த திருமுருகன் பூண்டியென்னுந் திருப்பதியின் வழியாகச் செல்லும்பொழுது, சூழ்ந்து வளைந்தவில்லையுடைய வேடர்கள் கவர்ந்து சென்ற மிக்க நிதிப்பரப்புகளனைத்தையும் சுமந்து கொண்டு, இளமையாகிய ஸ்தனங்களையுடைய பார்வதிபாகராகிய சிவபெருமானது முதன்மை பொருந்திய பூதகணங்கள் தம்முடன் செல்லத்தக்க முடியாத பேறுபெற்றருளிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளது திருவடிகளைத் துதிக்கும்படி அடியேன் முற்சனனத்தில் செய்ததவம் மிகப் பெரியனவாம். - எ - று.

சிவபெருமானது திருக்கோயிலைப் பிரதட்சிணஞ் செய்து உள்ளே யெழுந்தருளிச் சிவபெருமானுடைய தாமரை மலர் போன்ற இரண்டு திருவடிகளையுந் துதித்து, அருமையாகிய செய்கையோடும் பூமியில் விழுந்து நமஸ்கரித்தெழுந்து, அலைச்சலைத் தருகின்ற இல்லற வாழ்க்கையானது நீங்கும் பொருட்டு "தலைக்குத் தலைமாலை" என்று தமிழ்த் திருப்பதிக முதலெடுத்துப் பாடியருளினார். - எ - று.

***எடுத்த அத்திரு பதிகத்தின் உட்குறிப்(பு) இவ்வுல கினிற்பாசம்,***
***அடுத்த வாழ்க்கையை அறுத்திட வேண்டும் என்(று) அன்பர்அன் பினிற்பாடக்,***
***கடுத்த தும்பிய கண்டர்தங் கயிலையிற் கணத்தவ ருடன்கூடத்,***
***தடுத்த செய்கைதான் முடிந்திடத் தங்கழற் சார்புதந் தளிக்கின்றார். 30***

(இ - ள்) ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் தாம் தொடங்கிய திருப்பதிகத்தினுட் குறிப்பினால், இந்நிலவுலகத்தில் பாசசம்பந்த மாக நேர்ந்த இல்வாழ்க்கையை நீக்கியருளவேண்டுமென்று அன்புடன் பாடியருள, ஆலாகலவிஷம் விளங்கப் பெற்ற கண்டத்தினையுடைய சிவபெருமான் தமது ஸ்ரீமகாகயிலாசத் தில் சிவகணத்தவர்களுடன் கூடத் தடுத்தருளிய செய்கை யானது முடிவெய்தத் தமது திருவடிச் சார்பைக் கொடுத்தருள் வாராயினார். - எ - று.

***மன்ற லந்தரு மிடைந்தபூங் கயிலையில் மலைவல்லி யுடன்கூட***
***வென்றி வெள்விடைப் பாகர்தாம் வீற்றிருந் தருளிய பொழுதின்கண்***
***"ஒன்று சிந்தைநம் மூரனை உம்பர்வெள் ளானையின் உடனேற்றிச்***
***செய்து கொண்டிங்கு வாரும்" என்றயன் முதற்றேவர்க் கருள்செய்தார். 31***

(இ - ள்.) நறுமணங் கமழும் அழகிய விருட்சங்கள் நெருங்கிய சிறந்த திருக்கயிலாசமலையில் பர்வதராஜபுத்திரி யாகிய உமாதேவியாருடன் வெற்றி பொருந்திய வெள்ளிய இடப வாகனத்தையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளிய பொழுது, ஒருமைப்பட்ட மனத்தினையுடைய நமது சுந்தரனை உயர்ந்த வெள்ளானையின் மேலேற்றி, போய்க் கொண்டு வாருங்களென்று பிரமன் முதலிய தேவர்களுக்குக் கட்டளை யிட்டருளினார். - எ - று.

***வான நாடர்கள் அரிஅயன் முதலினோர் வணங்கிமுன் விடை கொண்டு,***
***தூந லந்திகழ் சோதிவெள் ளானையுங் கொண்டுவன் றொண்டர்க்குத்,***
***தேன லம்புதண் சோலைசூழ் மகோதையில் திருவஞ்சைக் களஞ்சேரக்,***
***கானி லங்கொள வலங்கொண்டு மேவினார் கடிமதில் திருவாயில். 32***

(இ - ள்.) விண்ணுலக வாசிகளாகிய தேவர்கள் - திருமால் - பிரமன் முதலானவர்கள் திருமுன்னே வணங்கி விடைபெற்றுக் கொண்டு, ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் தூய்மையாகிய நன்மைமிக்க பிராகாசத்தையுடைய வெள்ளானையையு முடன்கொண்டு, தேன் ததும்புகின்ற குளிர்ந்த சோலை சூழ்ந்த மகோதை நகரத்தில் திருவஞ்சைக் களத்தை யடைந்து பாதங்கள் பூமியிற் பொருந்தப் பிரதக்ஷிணஞ் செய்து காவலையுடைய மதில் சூழ்ந்த திருக்கோயிற்றிருவாயிலை யடைந்தார்கள். - எ-று.

***தேவர் தங்குழாம் நெருங்கிய வாய்தனில் திருநாவ லூரர்தம்,***
***காவல் மன்னரும் புறப்பட எதிர்கொண்டு "கயிலை வீற்றிருக்கின்ற,***
***பூவ லம்புதண் புனற்சடைமுடி யவர்அருளிப்பா(டு)" எனப்போற்றி,***
***"ஏவல்" என்ற பின் செய்வதொன் றிலாதவர் பணிந்தெழுந் தெதிரேற்றார். 33***

(இ - ள்.) தேவர் கூட்டங்கள் நெருங்கிய திருவாயிலில் திருநாவலூர் தலைவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் புறப்பட, அத்தேவர்கள் எதிர்கொண்டு, திருக்கைலாசமலையில் வீற்றிருந்தருளும் பூக்களலம்புகின்ற குளிர்ந்த கங்கை நதியை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானது அருளிப் பாடென்று துதித்து அவ்வெம்பெருமானுடைய ஏவலென்று கூறியபின்பு, செய்வது சிறிதுமில்லாதவராய் நமஸ்கரித் தெழுந்து எதிரேற்றருளினார். - எ - று.

***ஏற்ற தொண்டரை அண்டர்வெள் ளானையின் எதிர்வலங் கொண்டேற்ற,***
***நாற்ற டங்கடல் முழக்கென ஐவகை நாதமீ தெழுந்தார்ப்பப்***
***போற்றி வானவர் பூமழை பொழிந்திடப் போதுவார் உயிரெல்லாம்***
***சாற்று மாற்றங்கள் உணர்பெருந் துணைவரை மனத்தினிற் கொடு சார்ந்தார். 34***

(இ - ள்.) தேவர்கள், அவ்வாறு ஏற்றுக் கொண்ட ஸ்ரீசுந்தர மூர்த்தி சுவாமிகளை வெள்ளானையினெதிரே வலஞ்செய்து

எழுந்தருளிவிக்க, விசாலமாகிய நாற்றிசைக் கடலின் பெரு முழக்கம் போலப் பஞ்சவாத்தியங்களும் ஆகாயத்தில் தோன்றி யாரவாரிக்கவும், தேவர்கள் துதித்துப் பூமழை பொழியவும் எழுந்தருளுகின்ற ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள், எல்லாவுயிர் களும் சொல்லும் வார்த்தைகளை யுணர்கின்ற சிறந்த திருத் தோழராகிய சேரமான் பெருமாணாயனாரைத் தமது திருவுள்ளத்திற் சிந்தித்துக் கொண்டு சென்றருளினார். - எ - று.

***சேரர் தம்பிரான் தோழர்தஞ் செயலறிந் தப்போதே,***
***சார நின்றதொர் பரியினை மிசைக்கொண்டு திருவஞ்சைக்***
***களஞ்சார்வார்***
***வீர வெண்களி றுகைத்துவின் மேற்செலும் மெய்த்தொண்டர்***
***தமைக்கிண்டார்,***
***பாரில் நின்றிலர் சென்றதம் மனத்தொடு பரியும்முன் செலவிட்டார். 35***

(இ - ள்.) சேரமான் பெருமாணாயனார் ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய திருவுள்ளக் கருத்தை யுணர்ந்து அப்பொழுதே அருகில் நின்ற ஓர் குதிரையின் மேலேறிக் கொண்டு திருவஞ்சைக் களத்தினையடைந்து, வீரத் தன்மை பொருந்திய வெள்ளானை யைச் செலுத்திக் கொண்டு ஆகாசமார்க்கத்திற் சென்றருளும் ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளைக் கண்டு, பூமியில் நில்லாதவராய் அவர் பின் சென்ற தமது மனசுடனே (அதிவேகமாக) குதிரையும் முன்னே செல்லும்படி செலுத்தினார். - எ - று.

***விட்ட வெம்பரிச் செவியினிற் புவிமுதல் வேந்தர்தாம் விதியாலே,***
***இட்ட மாஞ்சிவ மந்திரம் ஓதலின் இருவிசும் பெழப்பாய்ந்து,***
***மட்ட லர்ந்தபைந் தெரியல்வன் றொண்டர் மேல் கொண்டமா***
***தங்கத்தை,***
***முட்ட எய்திமுன் வலங்கொண்ட சென்றது மற்றதன் முன்னாக. 36***

(இ - ள்.) இந்நிலவுலகத்திற்கு முதல்வேந்தராகிய சேரமான் பெருமாணாயனார் அவ்வாறு செலுத்திய வெவ்விய குதிரை யின் செவியிலே விதிப்படி இஷ்டசித்தியைத் தரத்தக்கதாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை யோதியருளவும், உடனே பெரிய ஆகாயத்தில் பாய்ந்தெழுந்து, தேன் ததும்புகின்ற பசிய மலர்மாலையை யணிந்த ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் ஏறிச் செல்லும் வெள்ளா னையைப் பொருந்தவடைந்து முன்னே வலஞ்செய்து அதற்கு முன்னாகச் சென்றது. - எ - று.

**உதியர் மன்னவர் தம்பெருஞ் சேனையின் உடன்சென்ற படைவீரர்**
**கதிகொள் வாசியிற் செல்பவர் தம்மைத்தங்கட் புலப் படுமெல்லை**
**எதிர்வி சும்பினிற் கண்டுபின் கண்டிலர்ஆதலின் எல்லாருந்**
**முதிரும் அன்பினில் உருவில் சுரிகையால் முறைமுறை வீழ்த்தார். 37**

(இ - ள்.) சேரமான் பெருமாணாயனாருடைய பெரிய சேனைகளுடனே சென்ற படைவீரர் நால்வரைக் கத்தியினை யுடைய குதிரையின்மேலேறிச் செல்லும் சேரமான் பெருமாணா யனாரைத் தங்கள் கண்களுக்குப் புலப்படும் வரையிலும் ஆகாயத்தில் எதிரே பார்த்துப் பின்பு காணாமையால், எல்லாரும் முதிர்ந்த திட்பத்தினாலே உருவிய உடைவாளினால் வரிசை வரிசையாகத் தங்கள் தேகத்தை(ச் சேதித்து) வீழ்த்தி னார்கள். - எ - று.

**வீர யாக்கையை மேல்கொண்டு சென்றுபோய் வில்லவர் பெருமானைச்**
**சார முன்சென்று சேவக மேற்றனர் தனித்தொண்டர் மேல்கொண்ட**
**வாரும் மும்மதத் தருவிவெள் ளானைக்கு வயப்பரி முன்வைத்துச்**
**சேரர் வீரருஞ் சென்றனர் மன்றவர் திருமலைத் திசைநோக்கி. 38**

(இ - ள்.) வீரயாக்கையைப் பெற்றுச் சென்று சேரமான் பெருமாணாயனாரை நெருங்கி முற்பட்டுச் சென்று சேவித்துப் போனார்கள்; ஒப்பற்ற மெய்த் தொண்டராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் ஏறிச் செல்லும் மும்மதமாகிய அருவியைச் சொரியும் வெள்ளானைக்கு முன்னே வெற்றி பொருந்திய குதிரையைச் செலுத்திச் சேரமான் பெருமாணாயனாரும் சிவபெருமானுடைய திருக்கயிலாசத் திருடாலையின் திசையை நோக்கிச் சென்றருளினார். - எ - று.

**யானை மேல்கொண்டு செல்கின்ற பொழுதினில் இமையவர் குழாமென்னும்,**
**தானை முன்செலத் "தானெனை முன்படைத் தான்" எனுந் தமிழ்மாலை,**
**மான வன்றொண்டர் பாடிமுன் னணைந்தனர் மதிநதி பொதிவேணித்**
**தேன லம்புதண் கொன்றையார் திருமலைத் தென்றிசைத் திருவாயில். 39**

(இ - ள்.) பெருமை மிக்க ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் வெள்ளானையின் மேல் ஆரோகணித்துக் கொண்டு செல்லும்

பொழுது தேவர் கூட்டங்களென்னுஞ் சேனைகள் முன்னே செல்ல, "தானெனை முன்படைத்தான்" என்னு முதலையுடைய தமிழ்த் திருப்பதிகத்தை யருளிச் செய்து, இளம்பிறையுங் கங்கை நதியுந் தங்கிய சடைமுடியில் தேன்றதும்புகின்ற குளிர்ந்த கொன்றை மாலையைத் தரித்த சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கயிலாசத் திருமலையின் தென்றிசைத் திருவாயிலின் முன்னே யடைந்தருளினார். - எ - று.

***மாசில் வெண்மைசேர் பேரொளி உலகெலாம் மலர்ந்திட வளர் மெய்ம்மை,***
***ஆசில் அன்பர்தஞ் சிந்தைபோல் விளங்கிய அணிகிளர் மணிவாயில்,***
***தேசு தங்கிய யானையும் புரவியும் இழிந்துசே ணிடைச் செல்வார்,***
***ஈசர் வெள்ளிமா மலைத்தடம் பலகடந் தெய்தினர் மணிவாயில். 40***

(இ - ள்.) தூய்மையாகிய வெண்மை பொருந்திய பேரொளி யானது உலகமெங்கும் விளங்க, மெய்ம்மை வளர்கின்ற குற்றமற்ற அன்பர்களது திருவுள்ளம் போல விளங்குகின்ற அழகு மிக்க தென்றிசைத் திருவாயிலில் பிரகாசந் தங்கிய வெள்ளானையி னின்றுங் குதிரையினின்று மிறங்கித் தூரத்திற் செல்கின்றவர்கள் சிவபெருமானது வெள்ளிமலையின் பல வாயிலிடங்களையுங் கடந்து அழகிய திருவணுக்கன் றிருவாயிலை யடைந்தார்கள். - எ - று.

***அங்கண் எய்திய திருஅணுக் கன்திரு வாயிலின் அடற்சேரர்,***
***தங்கள் காவலர் தடையுண்டு நின்றனர் தம்பிரான் அருளாலே,***
***பொங்கு மாமதம் பொழிந்தவெள் ளானையின் உம்பர்போற் றிடப்போந்த,***
***நங்கள் நாவலூர் காவலர் நண்ணினார் அண்ணலார் திருமுன்பு. 41***

(இ - ள்.) அங்குப் பொருந்திய திருவணுக்கன் றிருவாயிலி னிடத்தில் வலிய சேரமான் பெருமாணாயனார் தடைப்பட்டு நின்றார்; சிவபெருமானுடைய திருவருளினால் மிக்க மதம் பொழிகின்ற வெள்ளானையிலேறித் தேவர்கள் துதிக்கும்படி சென்றருளிய நமது திருநாவலூர் தலைவராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவபெருமான் திருமுன்னே யடைந்தருளினார். - எ - று.

***சென்று கண்ணுதல் திருமுன்பு தாழ்ந்துவீழ்ந் தெழுந்துசே***
***ணிடைவிட்ட,***
***கன்று கோவினைக் கண்டணைந் ததுஎனக் காதலின் விரைந்தெய்தி,***
***நின்று போற்றிய தனிப்பெருந் தொண்டரை நேரிழை வலப்பாகத்,***
***தொன்றும் மேனியர் "ஊரனே! வந்தனை" என்றனர் உலகுய்ய. 42***

(இ - ள்.) அவ்வாறு சென்று சிவபெருமானுடைய சந்நிதியிலே வீழ்ந்து வணங்கி யெழுந்து, தூரத்திலே விடுபட்ட இளங்கன்றானது தாய்ப்பசுவைக் கண்டணைந்தாற் போலப் பெருவிருப்போடும் விரைந்து அடைந்து நின்று ஸ்தோத்திரஞ் செய்த ஒப்பற்ற பெருந்தொண்டராகிய ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளைப் பார்வதிபாகராகிய சிவபெருமான் உலகத்தாருய்யும்படி (பார்த்தருளி) சுந்தரனே! வந்தனையோ? என்று திருவாய்மலர்ந்தருளினார். - எ - று.

***"அடிய னேன்பிழை பொறுத்தெனை ஆண்டுகொண் டத்தொடக்***
***கினைநீக்கி,***
***முடிவி லாநெறி தரும்பெருங் கருணைஎன் தரத்ததோ?"***
***எனமுன்னர்ப்,***
***படியும் நெஞ்சொடு பன்முறை பணிந்தெழும் பரம்பரை ஆனந்த,***
***வடிவு நின்றது போன்றின்ப வெள்ளத்து மலர்ந்தனர் வன்றொண்டர். 43***

(இ - ள்.) (அதைக் கேட்ட) ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் (எம்பெருமானே! தேவரீர்) அடியேன் செய்த குற்றங்களைப் பொறுத்து என்னை யடிமை கொண்டருளி, கொடிய பந்தத்தினின்று நீக்கி முடிவில்லாத முத்திநெறியைத் தந்தருளிய பெருங் கருணை அடியேன் தரத்ததோ? என்று கூறி, தாழ்ந்த சிந்தனையோடும் சந்நிதியில் பலமுறை நமஸ்கரித்தெழுகின்ற தொன்று தொட்டு வருகின்ற பேரானந்தத் திருவுருவம் நிற்பது போன்று பேரின்ப வெள்ளத்தில் விளங்கினார். - எ - று.

***நின்ற வன்றொண்டர் "நீரணி வேணிய! நின்மலர்க் கழல்சாரச்,***
***சென்று சேரலன் திருமணி வாயிலின் புறத்தினன்" எனச்செப்பக்***
***குன்ற வில்லியார் பெரியதே வரைச்சென்று கொணர்கென அவரெய்தி***
***வென்றி வானவர்க்(கு) "அருளிப்பா(டு)" எனஅவர் கழல்தொழ***
***விரைந்தெய்தி. 44***

(இ - ள்.) திருமுன்னே வணங்கி நின்ற ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள், கங்கை நதியை யணிந்த சடைமுடியையுடைய எம்பெருமானே! தேவரீருடைய திருவடிகளையடையும் பொருட்டுச் சேரமான் பெருமாள் வந்து திருவணுக்கன்றிருவாயிலின்

புறத்திலே தடைபட்டு நிற்கின்றாரென்று விண்ணப்பஞ்செய்ய, (அதைக் கேட்ட) மேருமலையாகிய வில்லையுடைய சிவ பெருமான் பெரிய தேவரை யழைத்து நீபோய் அழைத்துவரக் கடவையென்று கட்டளையிட்டருள, அவர்சென்று, வெற்றி பொருந்திய சேரமான் பெருமாணாயனாருக்கு (சிவபெருமா னுடைய) அருளிப்பாடு இன்னதென்று கூற, (நாயனார்) அப்பெரிய தேவருடைய திருவடிகளில் வீழ்ந்து நமஸ்கரித்து விரைந்து வந்து. - எ - று.

***மங்கை பாகர்தந் திருமுன்பு சேய்த்தாக வந்தித்து மகிழ்வெய்திப்***
***பொங்கும் அன்பினிற் சேரலர் போற்றிடப் புதுமதி அலைகின்ற***
***கங்கை வார்சடைக் கயிலைநா யகர்திரு முறுவலின் கதிர்காட்டி***
***"இங்கு நாம்அழை யாமைநீ எய்திய தென்!" என அருள்செய்தார். 45***

(இ - ள்.) சேரமான் பெருமாணாயனார் பார்வதி பாகராகிய சிவபெருமான் திருமுன்னே தூரமாக நின்று வந்தனைசெய்து அதிகரித்தெழுகின்ற பேரன்போடு துதிக்க, இளம்பிறையலையுங் கங்கை நதியை யணிந்த நீண்ட சடைமுடியையுடைய சிவ பெருமான் புன்சிரிப்பி னொளியைக் காட்டி நாம் இங்கு அழையாதிருக்க, நீ இங்கு அடைந்தது யாதுகாரணமென்று வினாவியருளினார். - எ - று.

***அரசர் அஞ்சலி கூப்பிநின்(று)" அடியனேன் ஆரூரர் கழல்போற்றிப்***
***புரசை யானைமுன் சேவித்து வந்தனன் பொழியுநின் கருணைத்தெண்,***
***டிரைசெய் வெள்ளமுன் கொடுவந்து புகுதலின் திருமுன்பு வரப்பெற்றேன்,***
***விரைசெய் கொன்றைசேர் வேணியாய்! இனியொரு விண்ணப்பம் உள(து)" என்று. 46***

(இ - ள்.) (அதற்குச்) சேரமான் பெருமாணாயனார் கைகூப்பி வணங்கி நின்று, (எம் பெருமானே!) அடியேன் ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய திருவடிகளைத் துதித்து (அவரேறிவந்த) கழுத்தணி கயிற்றையுடைய வெள்ளானையின் முன்னே சேவித்துக் கொண்டு வந்தேன்; பெருகுகின்ற தேவரீரது பெருங் கருணையாகிய தெள்ளிய அலைகளையுடைய வெள்ளமானது முன்னே கொண்டு வந்து சேர்த்தலினால் தேவரீருடைய திருமுன்னே வரத்தக்க பாக்கியம் பெற்றேன்; நறுமணங்கமழுங் கொன்றைமலர் மாலையை யணிந்த எம்பெருமானே! இனி, (அடியேன் கூறும்) ஒருவிண்ணப்பமுள்ளதென்று. - எ - று.

***"பெருகு வேதமும் முனிவரும் துதிப்பரும் பெருமையாய்!***
***உனைஅன்பால்,***
***திருஉ லாப்புறம் பாடினேன் திருச்செவி சாத்திடப் பெறவேண்டும்,***
***மருவு பாசத்தை அகன்றிட வன்றொண்டர் கூட்டம் வைத்தாய்" என்ன,***
***அருளும் ஈசருஞ் "சொல்லுக" என்றனர் அன்பருங் கேட்பித்தார். 47***

(இ - ள்.) சிறந்த வேதங்களாலும் முனிவர்களாலுந் துதித்தற்கரிய மேன்மையினையுடைய எம்பெருமானே! தேவரீர் மேலே அன்பினால் திருவுலாப் பிரபந்தத்தைப் புறத்திற் பாடியிருக்கின்றேன்; அதனைத் தேவரீர் திருச்செவி சாத்தல் வேண்டும்; பொருந்திய பந்த நீங்கும் பொருட்டு ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய திருக் கூட்டத்தில் சேர்த்தருளிய பெருங் கருணாநிதியே! என்று விண்ணப்பஞ் செய்ய, பேரருள் புரியுஞ் சிவபெருமானும் அவ்வுலாவைச் சொல்லென்று திருவாய்மலர்ந் தருளினார். உடனே, சேரமான் பெருமாணாயனாரும் அதனைக் கேட்பித்தார். - எ - று.

***சேரர் காவலர் பரிவுடன் கேட்பித்த திருஉலாப் புறங்கொண்டு***
***நாரி பாகரும் நலம்மிகு திருவருள் நயப்புடன் அருள்செய்வார்***
***"ஊர னாகிய ஆலால சுந்தர னுடனமர்ந் திருவீரும்***
***சார நங்கண நாதராம் தலைமையில் தங்கும்"என் றருள்செய்தார். 48***

(இ - ள்.) சேரமான் பெருமாணாயனார் அன்புடன் கேட்பித்த திருவுரைப் பிரபந்தத்தையேற்றுப் பார்வதி பாக ராகிய சிவபெருமானும் நன்மைமிக்க திருவருளை விருப்புடன் அருளுவார்; நம்பியாரூரனாகிய ஆலால சுந்தரனுடன் நீயும் அமர்ந்து நீங்களிருவரும் நமது சிவகணத்தலைவராயிருக்குந் தன்மையிலிருங்களென்று திருவாய் மலர்ந்தருளினார். - எ - று.

***அன்ன தன்மையில் இருவரும் பணிந்தெழுந் தருள்தலை***
***மேற்கொண்டு,***
***மன்னும் வன்றொண்டர் ஆலால சுந்தரர் ஆகித்தாம் வழுவாத,***
***முன்னை நல்வினைத் தொழில்தலை நின்றனர் முதற்சேரர்***
***பெருமானும்,***
***நன்மை சேர்கண நாதராய் அவர் செயும் நயப்புறு தொழில் பூண்டார். 49***

(இ - ள்.) அவ்வாறாகிய தன்மையினால் இருவரும் நமஸ்கரித்து எழுந்து திருவருளைச் சிரமேற்கொண்டு நிலை பெற்ற ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆலால சுந்தரராகித் தாம் முன்பு வழுவாமல் செய்திருந்த நல்ல திருத்தொண்டில் எழுந் தருளினார்; முதன்மை பொருந்திய சேரமான் பெருமாணாய னாரும் பொருந்திய சிவகணநாதராகி அவர்கள் செய்யும் நன்மைமிக்க செயல்களை மேற்கொண்டார். - எ - று.

***தலத்து வந்துமுன் னுதயஞ்செய் பரவையார் சங்கிலி யாரென்னும்***
***நலத்தின் மிக்கவர் வல்வினைத் தொடக்கற நாயகி அருளாலே***
***அலத்த மெல்லடிக் கமலினி யாருடன் அனிந்திதை யாராகி***
***மலைத்த னிப்பெரு மான்மகள் கோயிலில் தந்தொழில் வழிநின்றார். 50***

(இ-ள்) இவ்வுலகில் முன்பு வந்து பிறந்த பரவையார், சங்கிலியார் என்பவர், மிகுந்த நல்வினைப் பயனால், பழைய வினைகட்டு அறவும் உமையம்மையின் திருவருளால் செம்பஞ்சு குழம்பு மிளிரும் திருவடிகளையுடைய கமலினியாராகவும், அநிந்திதையாராகவும் இறைவியின் கோயிலில் முன் தாம் செய்த திருத்தொண்டின் வழியையே பின்பற்றினார்கள். (எ - று)

***வாழி மாதவர் ஆலால சுந்தரர் வழியிடை அருள்செய்த,***
***ஏழி சைத்திருப் பதிகம்இவ் வுலகினில் ஏற்றிட எறிமுந்நீர்,***
***ஆழி வேந்தனாம் வருணனுக்(கு) அளித்திட அவனும்அவ் வருள்சூடி,***
***ஊழி யிற்றனி யொருவர்தம் திருவஞ்சைக் களத்திலுய்த்***
***துணர்வித்தான். 51***

(இ-ள்) உலகை உய்விக்கத் தோன்றிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருக்கயிலைக்கு வரும் வழியில் அருளிய ஏழிசைத் திருப்பதிகம் நிலவுலகில் வழங்கி மூந்நீர்க் கடலின் அரசனான வருணனுக்கு அளித்திட அவன், இறைவனின் ஆணையைத் தலைமேற் கொண்டு ஊழிக்காலத்தில் தான் ஒருவனாகவே விளங்கும் சிவபிரான் வீற்றிருக்கும் திருவஞ்சைக் களத்தில் கொண்டு போய்ச் சேர்த்தனன். (எ - று)

***சேரர் காவலர் விண்ணப்பஞ் செய்தஅத் திருவுலாப் புறம்அன்று***
***சாரல் வெள்ளியங் கயிலையிற் கேட்ட மா சாத்தனார் தரித்திந்தப்***
***பாரில் வேதியர் திருப்பிட வூர்தனில் வெளிப்படப் பகர்ந்தெங்கும்***
***நார வேலைசூழ் உலகினில் விளங்கிட நாட்டினர் நலத்தாலே. 52***

(இ - ள்.) சேரமான் பெருமாணாயனார் (சிவபெருமான் திருமுன்னே) விண்ணப்பஞ் செய்தருளிய அத்திருவுலாப் பிரபந்தத்தை அந்நாளில் சாரலையுடைய திருக்கயிலாசத் திருமலையிற் கேட்ட மாசாத்தரானவர் அதனைத் தரித்து, இந்த நிலவுலகத்திலே வேதியர்கள் வாழுந் திருப்பிடவூரில் வெளிப்படச் சொல்லி, நீரையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த உலமெங்கும் விளங்க நன்மையோடு நாட்டியருளினார்.- எ - று.

***என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்***<br>
***ஒன்று காதலித் துள்ளமும் ஓங்கிட***<br>
***மன்று ளாரடி யாரவர் வான்புகழ்***<br>
***நின்ற தெங்கும் நிலவி உலகெலாம்.*** ***53***

(இ - ள்.) எக்காலத்தும் பேரின்பமானது அதிகரிக்குமியல்பினால், நிலை பேரன்புற்றுத் திருவுள்ளஞ் சிறந்தோங்கும்படி, ஸ்ரீ நடராஜப் பெருமான் மெய்யடியார்களாகிய சிவஞானிகளது பெரும்புகழானது உலகமெங்கும் நிலைபெற்றது. - எ - று.

**சருக்கம் பதின்மூன்றுக்குத் திருவிருத்தம் 4 286**

***இரண்டாம் காண்டம் முற்றிற்று.***

***திருத்தொண்டர் புராணம் முற்றுப் பெற்றது.***

**திருச்சிற்றம்பலம்.**

❑ ❑ ❑

# பெரியபுராணம் முதற் மற்றும் இரண்டாம் பாகத்தின் பாட்டு குறிப்பகராதி

★ குறிப்பு: 'இ' என்று குறிப்பிட்டுள்ளவை இரண்டாம் பாகத்தின் பாடல்கள். குறிப்பிடாதவை முதல் பாகத்தின் பாடல்கள்.

**எண்: பக்க எண்**

❑ ❑ ❑

